Registered No. M. 2330.

"SIDDHANTHAM"
Vol. 3—No. 5, 6.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

சைவசித்தாந்த மகாசமாஜத் திங்கள் வெளியீடு

"எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே"

மலர் ௩ | பிரமோதூத ஆண்டு வைகாசி ஆனித் திங்கள் 1930௵ மே ஜூன் மீ | இதழ் ரு, சா

உள்ளுறை



ஆசிரியர் :—ம. பாலசுப்ரஹ்மண்ய முதலியார், B. A., B. L., M. L. C.
உதவி ஆசிரியர் :—கி. குப்புச்சாமி முதலியார்

சைவ சித்தாந்த மகாசமாஜம்,
150, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை.

ஆண்டுச் சந்தா ரூ. 1-8-0. 1930 வெளி நாட்டுக்கு ரூ. 2-0-0.

தனிப் பிரதி அணு 3.

# ஆலங்குடியில் சமாஜத்திய விசேஷ மகாநாடு

திருவிரும்பூளை என்று தேவாரத்தில் பாடல் பெற்றுள்ள ஆலங்குடியில் 1930ஞ ஜூன்மீ 1உ ஞாயிற்றுக்கிழமை (பிரமோதூதஞ வைகாசிமீ கக உ) மஹாகும்பாபிஷேகம் நடைபெறும். அதையொட்டி சைவசித்தாந்த மகாசமாஜத்தின் விசேஷ மகாநாடு ஒன்று **பண்டிதமணி. சைவத்திருவாளர் – மு. கதிரேசன் செட்டியார் அவர்கள்** தலைமையில் ஜூன்மீ 1உ முதல் **மூன்று நாட்கள்** வரை நடைபெறும். சைவசமய வளர்ச்சிக்குரிய பல அரிய தீர்மானங்கள் நிறைவேறுவதோடு பல பேரறிஞர்களின் சொற்பொழிவுகளும் நடைபெறும். நமது சமாஜத்தோடு இணைக்கப்பட்ட சபைகள் பல பிரதிநிதிகளை யனுப்புவதோடு செயல் முறைத்திட்டங்களையும் தீர்மானங்களாக எழுதி முன்னதாகவே அனுப்பவேண்டும். நமது சமாஜ அங்கத்தினர் தவறாமல் தாங்கள் வருவதோடு அமையாது பல நண்பர்களையும் சைவப் பற்றுடைய அன்பர்களையும் அழைத்து வருதல்வேண்டும்.

சென்னை,
10-5-1930.

இங்ஙனம் :
ம. பாலசுப்ரஹ்மண்யம், *காரியதரிசி.*

குறிப்பு :—ஆலங்குடி என்பது நீடாமங்கலம் ஸ்டே[redacted]னிலிருந்து 5 மைல் தூரத்திலும் கும்பகோணம் ஸ்டேஷனிலிருந்து 10 மைல் தூரத்தி[redacted] மோட்டார் போகும் பாதையிலுள்ளது.

## சமாஜத்தின் போஷக உறுப்பினர்

அப்பர் தேவார வெளியீட்டுக்காக நூறு ரூபாய் நன்கொடையாக அளித்த தென்ஆற்காடு உதவி மெடிகல் ஆபீசர் சைவத்திருவாளர் **டாக்டர். எஸ். பாலவேலாயுதம் பிள்ளையவர்களையும்**, திருவிடைமருதூரில் சைவ இளைஞர் மகாநாட்டைத் தமது சொந்தச் செலவில் நடத்திவைத்த சைவத்திருவாளர் **தி. ரா. போ. குப்புச்சாமி பிள்ளையவர்களையும்** நமது சமாஜத்துப் போஷக உறுப்பினர்களாகப் பதிவு செய்துகொண்டதை மிக மகிழ்ச்சியோடு தெரிவிக்கிறோம்.

## சமாஜ அறிக்கை

கோடை விடுமுறைக்காக 1930ஞ மேமீ 10உ முதல் 1930ஞ ஜூலைமீ 10உ வரை சமாஜ ஆபீசு மூடப்படும். சமாஜக்காரியதரிசிக்கு எழுதப்படும் கடிதங்களுக்குப் பதிலெழுதலும், பத்திரிகை, புத்தகம் அனுப்புதல் முதலியனவும் ஜூலைமீ 10உக்குமேல் நடைபெறும்

150, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு,
10—5—1930

இங்ஙனம் :
ம. பாலசுப்ரஹ்மண்யம்
*காரியதரிசி,*
**சைவ சித்தாந்த மகா சமாஜம்.**

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

" ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானதந்த வாணியை உள்நாடு "

| மலர் ௩ | பிரமோதூத ஆண்டு வைகாசி ஆனித் திங்கள் 1930 ௵ மே ஜூன் ௴ | இதழ் ரு, சு |
|---|---|---|

## இரண்டு அரிய நிகழ்ச்சிகள்

[பத்திராசிரியர்]

பிரமோதூத ஆண்டு பிறந்தவுடன் முதல் திங்களிலேயே நமது சமாஜத்தின் சார்பாக இரண்டு அரிய நிகழ்ச்சிகளைப் பாராட்டாதார் சைவருள் ஒருவருமிலர். இவற்றுள் ஒன்று திருவிடைமருதூரில் நடந்த சைவ இளைஞர் மகாநாடு, மற்றொன்று திருவாரூரில் நடைபெற்ற அப்பர் சுவாமிகள் தேவார வெளியீடு.

இளைஞர் இயக்கம் அரசியல், சமூகப்பணி முதலிய பல துறைகளிலும் செழித்து ஆங்காங்கு பல மகாநாடுகள் நடப்பதை நாம் கண்டதுண்டு. ஆனால் இதுகாறும் இளைஞர்கள் சமயத் துறையிலே ஒரு மகாநாடு நடத்தியதை நாம் கண்டதில்லை. சிறப்பாக "உறங்க வேண்டாம், விழியுங்கள், எழுங்கள்" என்று சமய வல்லுநர் இடித்துக் கூறும் சைவமக்களிடையே சைவ இளைஞர் மகாநாடு ஒன்று மிகச் சிறப்பாகவும் செம்மையாகவும் நடந்தது குறித்து நாம் பெரு மகிழ்ச்சியடைகின்றோம்.

இம்மகா நாட்டிலே நிறைவேறிய தீர்மானங்களும் மிக நல்ல முறையிலே அமைந்திருப்பது போற்றத் தக்கதே. இளங் கன்று பயமறியாது என்று கூறுவது உலகவழக்கு. ஆனால் சைவ இளைஞர்கள் தங்கள் கடமைகளையும் உரிமைகளையும் நன்கு உணர்ந்தவர்களாய் பெரும்பான்மை தாங்கள் முன்னின்று செய்யக் கூடியவை இன்னின்னவென்றும் தங்கள் கூட்டுறவு மிருந்தால் நமது சமாஜம் இன்னின்னபணிகளைச் செம்மையாகச்செய்தல் கூடும் என்றும் தங்கள் தீர்மானங்கள் வாயிலாக நமக்கு விளக்கியுள்ளார்கள். நமதுநாட்டிலே பெரும்பாலும் கடமைகளை மறந்து உரிமைகளை மட்டும் வற்புறுத்துவது வழக்கம். ஆனால்

நமது சைவஇளைஞர்களோ தங்கள் கடமைகளை மிகச்செவ்வையாக உணர்ந்து அவைகளை ஞாபகத்திலிருத்தித் தங்கள் தீர்மானங்களைச் செப்பஞ் செய்து நிறைவேற்றிய முறை முதியோருக்கும் ஒரு பாடத்தைக் கற்பிப்பதாயிற்று.

சைவ இளைஞர்கள் உறங்காது விழித்தெழுந்து முதியோர்களுடன் கலந்து வேலை செய்ய முன்வந்தமைக்கு அவர்கள்பால் என்ஞான்றும் நாம நன்றியுடையவர்களா யிருக்கின்றோம்.

மேற்கூறிய தகுதிவாய்ந்த இளைஞர் பலரில் எமது நட்புக்குரிய சிலரின் கூட்டுறவே திருவாமூரில் அப்பர் சுவாமிகள் தேவார வெளியீட்டையும் மிகச் செவ்வையாகத் திருவருளின் துணைகொண்டு நடத்தி வைத்தது. சென்ற ஆடிமீ சுவாதியில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம் சமாஜத்தின் பதிப்பு வெளியிடப்பட்டது. அப்பர் சுவாமிகள் திருநக்ஷத்திரமாகிய சித்திரை சதயத் திருநாளில் சுவாமிகள் அவதரித்த தலமாகிய திருவாமூரில் சுவாமிகள் தேவாரத்தின் சமாஜ சுத்தப்பதிப்பு வெளியிடப்பட்டது. ஒரு பெரிய மகாநாட்டுக்கு எவ்வளவு மிகுதியாக அன்பர்கள் திரண்டு வருவார்களோ அதற்கும் அதிகமான தொகையினர் அக்கூட்டத்துக்கு வந்திருந்தது சைவ உலகத்தினர் அப்பர் சுவாமிகளை எத்துணை மிகுதியாகப் பாராட்டி வருகின்றனர் என்பதையும் நமது சமாஜ வெளியீட்டினை எத்துணை ஆவலுடன் எதிர் பார்த்திருந்தனர் என்பதையும் ஒருங்கே விளக்குவதாயிற்று. சில செல்வர்களைக்கொண்டு திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் தேவாரத்தை அச்சிடு வதற்குரிய ஏற்பாடுகளும் நடைபெற்றன. விரைவில் அத்தேவாரமும் நமது சமாஜத்தின் சுத்தப்பதிப்பாக வெளிவரும் என்பதில் ஐயமில்லை.

இனி எதிர்காலத்தை நோக்குழி நமக்கு மீண்டும் மகிழ்ச்சியே உண்டாகிறது. திருவையாறு சப்தஸ்தான உத்ஸவத்தைப்போல் எவ்வகையிலும் தலை சிறந்து விளங்கும் உத்ஸவத்தை நாம எங்கணும் கண்டதில்லை. அவ்வுத்ஸவத்தில் ஏழு திருப்பதிகளிலும் நமது சமாஜத்தின் சார்பாக சமயப் பணி செய்வதற்குத் திருவாளர்கள் த. வே. உமாமகேஸ்வரம் பிள்ளை யவர்களும், ச. சச்சிதாநந்த பிள்ளை யீவர்களும் ஏற்பாடு செய்துள்ளார்கள். பெருந்திரளாக மக்கள் கூடுகின்ற உத்ஸவ காலங்களில் சமயப்பணி நடத்த வேண்டுமென்று அவாவும் சமாஜத்துக்குத் துணை நின்று இப்பெரியார்கள் இத்தகைய ஏற்பாடுகளைச்செய்துள்ளது அனைவர் உள்ளத்தையும் கவர்கின்றது.

இது மட்டுமல்ல. ஆலங்குடியில் நடக்கும் கும்பாபிஷேக காலத்தில் பண்டித மணி - சைவத்திருவாளர் - மு. கதிரேசஞ் செட்டியார் அவர்கள் தலைமையில் நமது சமாஜவிசேஷ மகாநாடு மிகச் சிறப்பாக 1930ஹு ஜூன் மீ 1, 2, 3-ம் தேதிகளில் நடைபெறும். அதுபோது வழக்கம்போல் பல அரிய சொற்பொழிவுகள் நடப்பதுடன் சமயப்பணி விவரங்கள் திட்டங்கள் பலவும் தீர்மானிக்கப்படும்.

எல்லாவற்றையும் உடனிருந்து மிகச் செம்மையாக நடத்திச சைவ வான் பயிரைத் தழைத்தோங்கச் செய்யும் இறைவன் திருவருளை வழுத்துகின்றோம்.

# சைவ இளைஞர் மகாநாடு

[தி. கு. கி. நாராயணசாமி]

இம்மகாநாடு மிகச்சிறப்பாக 1930-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 18-ந் தேதி வெள்ளிக்கிழமை காலை 9-மணி முதல் மாலை 7-30 மணிவரை நடந்தது. மகாநாட்டைத திறக்கவந்த மந்திரியார் அவர்களும் தலைமை வகிக்க வந்த திரு-கா. சுப்பிரமணியம் பிள்ளையவர்களும் ஊர்வலமாக வரப்பட்டனர்.

கடவுள் வணக்கம முடிந்தவுடன் சமாஜக் காரியதரிசியார் சுகாதார மந்யார் திரு-எஸ். முத்தையா முதலியார் அவர்களை இம்மகா நாட்டைத் திறந்துவைக்கும்படி வேண்டிக்கொண்டனர். அவ்வாறு வேண்டுங்கால் எக்காலத்திலும அரசாங்கத்தைச் சேர்ந்த மந்திரிப் பிரதானிகள் எந்த இயக்கங்களை ஆதரித்து எந்தமுறையில் ஒழுகுகின்றார்களோ அஃதேபோல் பொது மக்களும் ஒழுகுவது இயல்பென்றும், ஆகையால் தற்காலத்து மந்திரிமார்களும் எல்லா இயக்கங்களிலும் கலந்து கொள்ளாமல் புரை தீர்ந்த நன்மை பயக்கும் இயக்கங்களையே ஆதரிக்க வேண்டு மென்றும் இன்றேல் தமிழர் நாரிகமும் சமயமும் குன்றி விடுமென்றும் கூறினார்கள். பின்னர் திரு. ச. சச்சிதாநந்தம் பிள்ளையவர்கள் வரவேற்புக் கவி வாசித்து விளக்கிக் கொடுத்தனர். பிறகு மந்திரியார் மகாநாட்டைத் திறநது வைத்தார்கள். அவர்கள் செய்த சொற்பொழிவில் சிறப்பாக வலியுறுத்தப்பட்டபொருள்கள் :—(1) கடவுள் ஒருவர் உண்டு. (2) இக்கொள்கை யின்றேல் ஒழுக்கம் இல்பொருளாய் விடும். (3) ஒவ்வொரு சம ம் சீர்கேடான ஒழுக்கங்களுள (4) அவைகளைக் களைதல் மக்கள் கடன். (5) ஆனல் அடிப்படையான கொள்கைகளை எஞ்ஞான்றும் கைவிடுதல் கூடாது என்பனவாகும்.

இதன் பிறகு திரு. மறை. திருநாவுக்கரசனார் திரு. கா. சுப்பிரமணியம் பிள்ளையவர்களைத் தலைமை வகிக்கும்படி முன் மொழிந்தனர். இதை திரு. நாராயணசாமி முதலியவர் பின், வழி மொழிந்தனர். பிறகு திரு. நாராயணசாமி தலைவருக்கு வரவேற்புத்தாளை வாசித்துக் கொடுத்தார். பின்னர் தலைவரவர்கள் அரியதொரு விரிவுரை நிகழ்த்தினர். (இதன் விரிவை மற்றோரிடத்தில் காண்க.)

பிறகு மகாநாட்டைத் திறந்தருளிய மந்திரியார் அவர்கட்கு சமாஜக் காரியதரிசியார் வந்தனம் கூறினர். பிறகு காலைக்கூட்டம் கலைந்தது.

பிற்பகல் 2½ மணிக்கு விஷயாலோசனைக் கூட்டம் கூடித் தீர்மானங்கள் செப்பஞ் செய்யப்பட்டன. மாலை 3 மணிக்கு மகாநாடு மீண்டும் கூடிற்று. முதன் முதலாக திரு. சுரேந்திரநாத் யா அவர்கள் "நடராஜ தததுவம்" என்னும் பொருள்பற்றி ஒரு சிறு சொற்பொழிவு நிகழ்த்தினர். பிறகு, திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளை யவர்கள் திருமுகம் வாசிக்கப்பட்டது. பின்னர் கீழ்வரும் தீர்மானங்கள் ஒவ்வொன்றின் இறுதியில் குறிக கப்பட்ட இளைஞரால் முன்மொழி மொழி பகரப்பட்ட பின்னர் ஏக மனதாக நிறைவேறின. இறுதியில் சமாஜக் காரியதரிசியார் இத்தீர்மானங்

களைச் செயலில் கொணர்தற்கு இளைஞர்களின் கூட்டுறவும் பொருளுதவியும் தேவை யென்பதை நன்கு விளக்கினர். பிறகு திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியார் இளைஞர்கட்குப் பெரிதும் பயன்படக் கூடிய அரிய சொற்பொழி வொன்றை நிகழ்த்தினர். பிறகு தலைவரவர்கள் தமது முடிபுரையை மிக அரிய முறையில் நிகழ்த்தினர். பிறகு சமாஜக் காரியதரிசியார் தலைவர், வரவேற்புக்கழகத் தலைவர் திரு. தி. ரா. பொ. குப்புசாமிப் பிள்ளை, மகாநாட்டுக் காரியதரிசி திரு. தி. கு. கி. நாராயணசாமி முதலியார் எல்லா அன்பர்கட்கும் உரிய நன்றி மொழிகள் கூறியபின்னர் கடவுள் வாழ்த்தொலி முழங்க இம்மகாநாடு இறைவன் இன்னருளால் இனிது நிறைவேறிற்று.

## சைவஇளைஞர் மகாநாட்டுத் தீர்மானங்கள்

1. சைவசித்தாந்தக் கோட்பாடுகள் தற்கால ஆராய்ச்சி முடிபுகளுக்கு ஒத்திருக்கின்றன என்றும், சைவசமயம் இந்நூற்றாண்டு வாழ்க்கைக்கும் ஏற்றதாயுள்ளதேயென றும் சைவப் பெரியார்கள் சிலர் கூறுவதை இனிது விளக்குவனவான நூல்களை எளிய நடையில் எழுதுவித்து மாணவர்க்குக் கிடைக்கும்படி செய்ய வேண்டுமென்று சைவசித்தாந்த மஹாசமாஜத்தை இம்மகாநாடு வேண்டிக் கொள்கிறது. நாராயணசாமி,

2. சைவ மாணவரனைவரும் தமது சமயத்தின் அடிப்படையான கோட்பாடுகளையும் ஒழுக்கங்களையும் தக்கார் வாயிலாகக் கேட்டறிந்துகொண்டு, அவ வொழுக்கங்களைத் தாம் கைக்கொள்ளலோடு, தாம் தெளிவாயுணர்ந்து கொண்ட சைவமெய்ச் சரிதங்களையும் கொள்கைகளையும், தமக்கு ஒய்வு கிடைத்த காலங்களில் தமது கிராமங்களில் பிரசாரஞ் செய்ய வேண்டுமென்று இம்மகாநாடு வற்புறுத்துகிறது. மறை-திருநாவுக்கரசு, பொன்னுசாமி.

3. திருப்பாதிரிப்புலியூர் சைவ மகாநாட்டில் ஒப்புக்கொண்டபடி சைவ சமயத்தினருக்கு ஜாதிபேதம் இன்மையால் சைவர்கள் எந்த ஜாதியினராயினும் அவர்கள் சமயம், சமுதாயம் முதலியவைகளில் சமத்துவ உரிமைகளை அநுபவிக்கச் சைவ உலகம் சௌகரியம் செய்து கொடுக்கும்படி இம்மகாநாடு வேண்டுகிறது.

மேலும் இந்து மதத்தைச் சார்ந்த தீண்டப்படாதார் முதலியவகுப்பினர்களைச் சைவ உலகம் இழக்காதிருப்பதற்காக அவர்களுக்குச் சமயம், சமுதாயம் முதலியவைகளில் எல்லா உரிமைகளையும் அளிக்கும்படி சைவர்களை இம்மகாநாடு வற்புறுத்திக் கேட்டுக் கொள்கிறது. கைலைகுரு, ரத்னசாமிப் பிள்ளை.

4. சைவர்கட்குள் நடக்கும் திருமணம் முதலிய எல்லாச் சடங்குகளையும் தூய்மையும் சிக்கனமுமுடைய முறையில் தமிழிலேயே செய்தல் வேண்டுமென்றும், அவ வாறு அழகுறச் செய்தற்குச் சில சைவரைப் பழக்கும் பொறுப்பைச் சமாஜத்தார் மேற்கொள்ள வேண்டுமென்றும், அத்தகையார் ஏற்படுமளவும் அவர்களைக் கொண்டே சைவர்கள் தம்மில்லச் சடங்குகளை நடத்திக்கொள்ள வேண்டுமென்றும் இம்மகாநாடு கேட்டுக் கொள்கிறது.

திருமண காலத்தில் திருமுறைகள் முதலிய சிறந்த தமிழ் நூல்களைப் பரிசாக அளிக்கும் வழக்கத்தை மேற்கொள்ள வேண்டுமென று இம்மகாநாடு வற்புறுத்து கிறது. தியாகராஜன, தி. கி. நாராயணசாமி.

5. சைவர் மகாநாடு ஆலய சம்பந்தமாகக் காட்டியுள்ள சீர்திருத்தங்களை(யும்) இம்மகாநாடு பாராட்டுவதோடு, விக்கிரகாராதனையின் மூல நிகழ்ச்சிகளில் கருத்தை மடித்துவிடாமல், இறைவனைப்பற்றிய அறிவும், அவன்பாலும், உயிர்கள்பாலும் அன்பு(ம்) பெருகுதற்கான முறையில் திருக்கோயில்களில் வாரத்திற் கொருமுறை அன்பர்கூட்டத்தில் புனித வழிபாடு நடைபெற ஏற்பாடு செய்தல் அவ

சியமென்று இம்மகாநாடு கருதுகிறது. மறை. திருநாவுக்கரசு, கே. குழந்தைவேலு.

6. ஒவ்வொரு சைவ வாலிபனும் சைவ சித்தாந்த மகாசமாஜத்திலாதல், அதனோடு இணைக்கப்பட்ட யாதாவதொரு சைவசபையிலாதல் உறுப்பினனாய்ச் சேர்ந்து கொண்டு மகாசமாஜத்தை வலுப்படுத்துவதற்காக, அதற்கு ஆயிரக்கணக்கான அங்கத்தவர்களைச் சேர்த்தல், முனனமேஉள்ள சைவசபைகளை அதனோடு இணைத்தல் முதலிய வழிகளில் தொண்டுசெய்ய வேண்டு மென்று சைவ இளைஞர்களை இம்மகாநாடு வேண்டிக் கொள்கிறது. க. நடேசன், ரா. புருஷோத்தமன.

7. தேவார புத்தகங்களை மிக்க குறைந்த விலையில் கிடைக்கும்படி செய்தல், சித்தாந்தப் பத்திரிகை நடத்துதல், பல விடங்களில சொற்பொழிவு செய்வித்தல, சபைகளமைத்தல் முதலிய வழிகளில் சைவசித்தாந்த மகா சமாஜம் சைவப்பாதுகாப்புக்கான பணிகளைச் செய்து வருவதற்காக இம்மகாநாடு தன் நன்றி யறிதலைத் தெரிவிப்பதோடு, சைவ மடாதிபதிகள், இனியும் சும்மாயிராமல் காலத்தின் தேவைகளை நனகு உணர்ந்து, சைவ போதனைக் கல்லூரி யமைத்தல், சைவ பிரசாரகரை நியமித்தல் தமிழாராய்ச்சி செய்தல் முதலிய தம் சமயக்கடமைகளைத் திறம் படச்செய்ய உடனே தொடங்க வேண்டு மென்று அவர்களை வணக்கமாய் வேண்டிக

ப. இராமநாத பிள்ளை, த. ச. ரம்.

8. மாணவர்கள் பிரமசரிய ஒழுக்கத்திலும், தெய்வநம்பிக்கையிலும் சிறிதும் வழுவாதவர்களாய், இந்நாட்டுக் கசரத்தும் சிலம்பமும் பயின்று உடலையும் நன்றாய் ஓம்பி, உயரிய நோக்கோடு கல்வியைச் சிறக்கக் கற்பதிலேயே தமது கவனத்தைச் செலுத்தவேண்டு மென்று இம்மகாநாடு வற்புறுத்துகிறது. புருஷோத்தமர், நாராயணன்.

9. இக் காலத்தில் கலாசாலைகளிலேனும் வீடுகளிலேனும் கோயில்களிலேனும் ஒழுங்கான சமய போதனை நிறைவேறாமையால் விளையும் கேடுகள் பலவாயிருத்தலால், பாடசாலைகளிலோ அல்லது தக்க பிறவிடங்களிலோ வாரத்திற்கொருமுறை உண்மைச் சைவசமயத்தை விளக்கும் போதனைகள் கிரமமாக நடைபெற்றுவர ஏற்பாடு செய்யும் படி மடாதிபதிகளையும, கோவிலதிகாரிகளையும், சைவசித்தாந்த மகாசமாஜம் போன்ற சைவசபைகளையும் இம்மகாநாடு கேட்டுக் கொள்கிறது. பாலசுந்தர நயினா, சிதம்பரஞ் செட்டியார்.

10. B A. பட்டம் பெறுவதற்குத் தத்துவ சாஸ்திரப் பிரிவைத் தெரிந்து எடுத்துக் கொள்ளும சைவ மாணவர்கள் அனைவரும் 'சைவ சித்தாந்தம' எனனும் பிரிவை எடுத்துக் கற்றுத்தேர்ந் துபகரிக்க வேண்டுமென்று இமமகாநாடு வற்புறுத்துகிறது. கலாசாலையதிகாரிகள் இப்பாடத்தைக் கற்பித்தற்கான வசதிகளையும் விரைவில் அமைக்க வேண்டு மென்று அவாகளை வேண்டிக் கொள்கிறது. A. முததையா, தி. கி. நாராயணசாமி.

11. புதிதாய் அமைக்கப்பட் டிருக்கும் S. S. L. C. பரீக்ஷைத் திட்டத்தில், அப்பரீக்ஷைக்குச் செல்வோர் தததம் தாய்மொழியைத் தம்மிஷ்ட பாடங்களிலொன்றாக எடுகக வொட்டாதபடி செய்துள்ள புதுத்தடையை நீக்கிவிடும்படி S. S. L. C. போர்டாரையும், அரசாங்கத்தாரையும் இம்மகாநாடு வேண்டிக்

தங்கவேலு, இராமச்சந்திரன்.

12. (a) பெரிய கல்லூரிகளிருக்கு மிடங்களில் சைவ மாணவர்கட்கு மாணவரில்லங்களும், ஏற்ற விடங்களில் அநாதிவிடுதிகளும் ஏற்படுத்தச் சைவசித்தாந்த மகாசமாஜத்தார் தீவிரமான முயற்சிகள் செய்ய வேண்டு மெனறு இம்மகாநாடு அவர்களையும் மகா ஜனங்களையும் கேட்டுக்கொள்கிறது. (b) (செனனையிலுள்ள மணலி விடுதி போனறு) சைவசமயிகளால் ஸ்தாபிக்கப்பட்ட அறநிலையங்களில் இனிமேல் சைவமாணவாகளையே சேர்க்க வேண்டுமெனறும், அவாகளனைவரையும் சமத்துவமாகவும் கருணையுடனும் நடத்த வேண்டுமென்றும் விடுதிகளின தலைவர்களை இம்மகாநாடு வேண்டிக் கொள்ளுகிறது. A. முத்தையா, T. V. ரத்னசாமி.

13. தேவார பாடசாலைகளில் சைவசமயத்தைச் சார்ந்த எல்லாச் சாதிட்

யும் அறிவு, ஒழுக்கமென்னும் தகுதியொன்றே ' திச் சேர்த்துக கொள்ள வேண்டுமென்று அப்பாடசாலை நிர்வாகிகளை இம்மகாநாடு வேண்டுகிறது. ந. இராஜமாணிக்கம், ந. இரா

14. இறைவன் திருவுருவங்களில் சிறந்தனவற்றையும் இயற்கை வளப்பமிக்க சிவத்தலங்களையும், பேரழகுடைய சிவாலயங்களையும் சிற்பங்களையும் புகைப்பட மெடுத்தும வாணபடமாக ம அவற்றைத் தொகுத்து எளிய விலையில் எவர்க்கும் கிடைக்கும்படி செய்ய வேண்டுமென்று மகா சமாஜத்தாரை இம்மகாநாடு வேண்டுகிறது. ச. சிவகுமாரன் வா. தி. மாசிலாமணி.

# இளைஞர்கட்குத் திருமுகம்

[மா. வே. நெல்லையப்ப பிள்ளை]

அன்பார்ந்த சைவ இளைய சகோதரர்களே!

சென்னைச் சைவசித்தாந்த மகாசமாஜக் காரியதரிசி அவர்கள் ஆணையின்படி நீங்கள் உங்களுடைய பல இடங்களிலிருந்தும் பொதுநலத் தொண்டு கருதி உங்கள் மெய் வருத்தத்தையும் பணச் செலவையும் பொருட்படுத்தாது இங்கே வந்து சேர்ந்து சைவ இளைஞர் மகாநாடு கூடியிருக்கிறீர்கள். எல்லாம் வல்ல இறைவனருளால் உங்கள் வரவு நல்வரவு ஆகுக நற்பயன் விளைவிப்பதாகுக.

2. உங்களிற் சிலர் இன்னம கல்விச் சாலையில் படிக்கிறவர்களா யிருக்கலாம்; சிலர் இப்பொழுது உலக வாழ்க்கையிற் புகுந்திருக்கலாம். எப்படியிருந்தாலும் நீங்கள் எல்லாரும் உலக வாழ்க்கையைப்பற்றி அநுபவ அறிவு அறிய வேண்டியவர்களா யிருக்கிறீர்கள். ஆதலின் உங்களுக்கு உலகில் தனி வாழ்க்கையிலும் குடும்ப வாழ்க்கையிலும் பொது வாழ்க்கையிலும் (Public life) துன்ப இன்பங்களால் மொத்துண்டு அநுபவமடைந்திருக்கிற முதிய வயது உள்ள நான் இத்தருணத்தில் உலக வாழ்க்கையைப்பற்றிச் சில வார்த்தைகள் சொல்லுதல் பொருத்தமுடையதாயிருக்கும் என்று நினைக்கிறேன். நான் சொல்லுஞ் சொற்களை நீங்கள் அப்படியே ஒப்புக்கொண்டு நடத்தல் வேண்டுமென்று சொல்லவில்லை. நீங்கள் அச்சொற்களிலடங்கியுள்ள உஙக ளுடைய மன ல் உய்த்து உணர்ந்து அவைகளில் முன்னேற்ற வாழ்க்கைக்கு ஒத்திருப்பவைகளாக அறியப்பட்ட கருத்துக்களைக் கடைப்பிடித்து ஒழுகல் வேண்டும் என்று நான் உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

3. முதலாவது :—இக் காலத்தில் உள்ள எந்தககூட்ட மக்களும் தங்கள் முன்னோர்களுடைய வாழ்க்கையின் நாகரிகம இன்னதென அறிந்து அதிலுள்ள நற்கருத்துக்களையும் நல்ல பழக்க வழக்கங்களையும் தழுவியே உலகில் ஒழுகி வருகிறார்கள். சில ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னே நமது இந்திய நாட்டில் நடைபெற்று வந்த தமிழ் முன்னோர்களுடைய நாகரிகக் கருத்துக்களும் பழக்க வழக்கங்களும் மிக மேலானதா யுள்ளவைகளாக அவைகளை அறிந்த பிற நாட்டு அறிஞர்கள் கூறி யிருக்கிறார்கள். அவைகளை நீங்கள் பண்டைத் தமிழ்

நூல்களைப் படிப்பதனாலும் அறிந்தார் வாயிற்கேட்பதினாலும் அறிந்து அவைகளில் தற்கால முன்னேற்ற வாழ்க்கைக்கு ஏற்புடைத்தா யுள்ளவைகளைத் தழுவி, நடந்து அவர்களுடைய சந்ததியார்களாகச் சிறப்புடன் வாழ்தல் வேண்டும். அவ்வாறு நீங்கள் ஒழுகுதலினால் அந்நாகரிகத்திலுள்ள சமய நலன், ஒழுக்க நலன் முதலிய நலன்களை அடைதலுமின்றி அந்நலன்களை உங்கள் காலத்திலுள்ள எல்லா மக்களுக்கும் எடுத்துக் காட்டி அவர்களையும் நற்பயன் அடையும்படியாகச் செய்கிறவர்களாகின்றீர்கள்; உங்கள் பின் சந்ததியார்களுக்கும் அந்நலன்களை அறிந்து கைக்கொண்டு நடக்கும்படி வழி காட்டுகிறவர்களாகின்றீர்கள். இந்த முக்கியமான கடனை என்னைப் போன்ற முதியவர்கள் காலத்திலுள்ள தமிழ் மக்கள் பொதுவாய்ச் செய்யவில்லை என்று நான் தலைகுனிந்து உங்கள் முன் சொல்லுகிறேன். இளைஞர்களாகிய நீங்கள் அந்தக்குறையை நீக்கித் தமிழ் நாடு நலம் அடையும்படி செய்ய உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

4. இரண்டாவது:—தற்கால நாகரிக பாதையிலுள்ள ஒரு பெருங்குழியில் நீங்கள் தவறி விழுந்து விடாதபடி விழிப்பாயிருத்தல் வேண்டும். அந்தப் பெருங்குழியாவது ஆடம்பர வாழ்க்கையாகும். ஆடம்பர வாழ்க்கை என்பது பொன்போல மின்னுகின்ற உள்ளீடற்ற போலி வாழ்க்கை. பிறர் மதிக்கவும் பிறராற் பயன் பெறவும் செய்யப்படுகிற பகட்டு வாழ்க்கை அது. அந்த வாழ்க்கை மேற்கு நாட்டு நாகரிகக் கூட்டுறவால் நமது நாட்டுக்கு வந்தது. மேற்கு நாட்டு நாகரிகத்தினும் விடாமுயற்சித் திறன், நோ ஒழுங்கு முதலிய நலன்களை நீங்கள் கைக்கொள்ளல் வேண்டும்; ஆனால் ...ள்ள வாழ்க்கை ஆடம்பரத்தை முற்றிலும் நீங்கள் நீக்கல் வேண்டும். அது நமது முன்னோர்களுடைய உண்மையும் எளிமையுமுள்ள வாழ்க்கைக்கு (True & Simple life) முற்றிலும் மாறான அதிகப் பணச்செலவுள்ள சிக்கல் வாழ்க்கை (Expensive and Complicated life). உயர்தர ஆங்கிலக்கல்வி கற்றிருந்தாலும் ஆங்கிலேயர்களுடைய நாகரிகத்தில் சிறிதும் மயங்காது உண்மையாயும் எளிமையாயும் தூய்மையாயுமுள்ள வாழ்க்கையை வாழ்ந்துகொண்டு வருகிற சில தமிழ்ப் பெரியாரை நீங்கள் உங்கள் கண் முன்னே இப்பொழுது பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் அவர்களைப் பார்த்து உங்கள் வாழ்க்கையை உண்மையும் எளிமையும் தூய்மையும் உடையதாக விளங்கும்படி செய்ய நான் உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

5. ஆடம்பர வாழ்க்கை சம்பந்தமாய் நான் உங்களுக்கு ஓர் உண்மை சொல்ல விரும்புகிறேன். ஒருவனுடைய வாழ்க்கையானது தனக்கும் பிறர்க்கும் நற்பயனுடையதா யிருத்தற்கு செல்வம் அதிகார முதலியவற்றால் பெரிய வாழ்க்கை வேண்டப்படுவதில்லை. பெரிய வாழ்க்கையும் நல்லறிவுடன் நடத்தப்படா விட்டால் மிக்க தீமையுடையதாகலாம். நற்பயனுண்டாதல், வாழ்க்கை நடத்தப்படும் விதத்திலிருப்பது, அல்லது வாழ்க்கை பெரியது அல்லது சிறியதாயிருத்தலைப் பொறுத்தது அல்ல. நற்பயன் வாழ்க்கையே இன்பவாழ்க்கை யாகும்.

உங்களில் ஒவ்வொருவரும் பெரிய வாழ்க்கையை அடைதல் உலக நிகழ்ச்சியில் முடியாதது. ஆனால் நீங்கள் ஒவ்வொருவரும் உங்கள் நல்லறிவாலும் நன்முயற்சியாலும்நற்பயனுடைய இன்பவாழ்க்கை வாழக்கூடும். அதுவே வாழ்க்கை நலத்துக்கு இன்றி அமையாது வேண்டப்படுவ தாகும்.

6. மூன்றாவது :— நல்லொழுக் கத்தைப் பற்றிச் சில வார்த்தைகள் கூறிவிட்டு என் உரையை முடிவு செய்கிறேன். மக்களுக்குச் சிறப்புடைய அணியாய் விளங்குவது நல்லொழுக்கம் என்று நான் உங்களுக்குக் கூற வேண்டுவதில்லை. ஆனால் நல்லொழுக்கம் நடைமுறையில் தவறு திருப்பதற்கு அது விழிப்புடன் பாதுகாக்கப் படல்வேண்டும் என்பதை நீங்கள் மனதில் வைத்து ஒழுகல் வேண்டும். நல்லொழுக்கத்துக்கு ஆதாரமா யிருப்பவை எண்ணம் இச்சை செயல் என மூன்றுமே. எண்ணமும் இச்சையும் மனதில் உண்டாவன ; செயல் உடலினாலுண்டாவது. எண்ணமும் இச்சையும் நல்லனவாயிருநதால் செயலும் நல்லதாகவே யிருக்கும். ஆதலின் நீங்கள் மனதில் எப்பொழுதும் தீய எண்ணங்களும் தீய இச்சைகளும தங்குதற்கு இடம் கொடாமல் நல்ல எண்ணங்களும நல்ல இச்சைகளுமே தங்கும்படி மனதை அடக்கிப் பழக்கம் செய்து கொள்ளுதல் வேண்டும். தீய எண்ணம அல்லது தீய இச்சை ஒன்று பழைய வாசனையினாலே மனதில் வந்தால் உடனே அதற்கு எதிரிடையான நல்ல எண்ணத்தை அல்லது நல்ல இச்சையை மனதில் நினைத்துத் தீய எண்ணத்தை அல்லதுதீய இச்சையை விலக்கல் வேண்டும். நல்ல மனமே நல்ல வாழ்வுக்குக் காரணமா யிருத்தலால் மனதைப் பழக்கத்தினால் தூய்மை யுடையதாயும் திண்மை யுடையதாயும்(Stray) ஆக்கிக்கொள்ள வேண்டும். திண்மையும் தூய்மையும் உடைய மனதினால் (Stray and pure Mind) ஒருவன் தனக்கும் பிறருக்கும் நற்பயன் வேண்டிய அளவு விளைவித்தல் கூடும். இந்த இயற்கை உண்மைகளை அறிந்து நீங்கள் உலகவாழ்வில் எப்பொழுதும் தீமையைவிலக்கி இயன்றவாறு நன்மையைநாடிச செய்தலிலே கண்ணுங் கருத்துமா யிருத்தல் வேண்டும.

7. நல்லொழுக்க சம்பந்தமாய் தன்னலம் பிறர் நலம் என்ற மயக்க உணர்ச்சி சாதாரணமாய் மக்களுக்குள் உள்ளது. தன்னல மில்லாது பிறர்நல மில்லை. பிறர்நல மிலலாது தன்னலமில்லை. பிறர் நலம் கெடுத்துத் தன்னலம் தேடிக் கொள்ளுதல் இயற்கையில் இல்லை. இந்த உண்மையை அறிநது நீங்கள் மக்கட் பொது நலத்தை மேல் நிலையில் வைத்துத் தன்னலத்தை அதற்கு உட்படுத்தி ஒழுகல் வேண்டும். மக்கட் பொது நலம் நாடிச் செய்தலில் நீங்கள் எங்களைப்போல் இல்லாமல் சிரத்தையுடைய வர்களா யிருத்தல் வேண்டும். தமிழ் மக்களுடைய வருங்கால நலனும் பிற மக்களுடைய வருங்கால நலனும் இளைஞர்க ளாகிய நீங்கள் ஊக்கத்துடன் பொதுநலத் தொண்டு செய்தலைப் பொறுத்திருக்கிறது. ஆதலின் நீங்கள மக்கட் பொதுநலத் தொண்டில் ஈடுபட்டு உழைத்துத் தமிழ்நாட்டைச் சிறப்புடைய நாடாகச் செய்யும் பாக்கியத்தைப் பெற்றுக் கொள்ளும்

படி நான் உங்களைத் தாழ்மையாகக் கேட்டுக் கொள்கிறேன்.

8. இறைவனுடைய அருளால், உங்களில் ஒவ்வொருவருக்கும் இன்ப நல் வாழ்வு உண்டாகுக; உலக வாழ்வில் தீயனவற்றை எதிர்த்துச் செல்லுந் திறனும் நல்லனவற்றை நாடிச் செய்யும் ஆற்றலும் உண்டாகுக; சமயத் தொண்டு முதலிய பொது நலத் தொண்டுகளில் ஈடுபட்டு உழைக்கும் மனத்திறனும் செயற்றிறனும் உண்டாகுக.

---

# "சென்றடையாத திருவுடையான்"

[தாராபுரம் - நா. ஆறுமுகம் பிள்ளை]

"நன்றுடையானைத் தீயதில்லானை
நரைவெள்ளேறு
ஒன்றுடையானை உமையொருபாகம்
உடையானைச்
சென்றடையாத திருவுடையானைச்
சிராப்பள்ளிக்
குன்றுடையானைக் கூறவென்னுள்ளம்
குளிரும்மே".

என்னும் திருஞானசந்தப் பெருமான் அருளிச் செய்த திரிசிராப்பள்ளித் திருப்பதிக முதற்பாட்டின் மூன்றும் அடியில் விளங்கும் "சென்றடையாத திருவுடையான்" என்னும் தொடர் மொழிக்குச் சித்தாந்தம் மலர் ௩. இதழ் க, உ இல் திரு. வேள். N. துரைக்கண்ணன் என்பார் "இந்திரன் முதலிய இறையவர்களிடத்துப் போய்ப் பெறக்கூடாத விழுச்செல்வத்தை யுடையான்" என்று உரை வகுத்துள்ளார். ஆயினும், அவர் தம் கட்டுரையின் ஈற்றில் எழுதியுள்ள குறிப்பால் தாம் எழுதிய உரை பொருந்துவதோ அன்றோ என்னும் ஐயமுடையார் என்றே நினைக்கவேண்டி யிருக்கிறது. இவ்வுரையை மறுத்துச் "சித்தாந்தம்" மலர் ௩ இதழ் ௩ இல் திரு. G. கல்யாணம் B, A. என்பார் "தற்போதத்துடன் செல்பவர் அடைய முடியாத மோக்ஷ செல்வத்தையுடையவன்" என்று பொருள் எழுதியுள்ளார். அன்றியும் தாம் எழுதிய மறுப்புக்கு ஆதரவாக முற்கூறியவர் வரைந்துள்ள குறிப்பையும் எடுத்துக் காட்டியிருக்கிறார். இவர் கூறிய இப்பொருள் சாலச்சிறப்புடையதே என்பதற்குப் "பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரன்" என்னும் சிவஞான சித்தியார்த் திருமொழியே போதிய சான்றும். ஆயினும், இவர் முற்கூறியவர் உரையை மறுக்கும் முறை சிறிதும் பொருத்த மன்றெனத் தோன்றுவதால் அது பற்றி யாராய்வாம்.

'சென்று அடையா' என்னும் சொற்றொடர் 'வானவரிடம் சென்று அடைய முடியா' என்னும் பொருளைத் தரின் வானவருக்கு ஓர் ஏற்றம் நமது சமயாசாரியார் கற்பித்ததாகக் கருதவேண்டி யிருக்கும். "திருச்சிற்றம்பல மேய செல்வன் கழல் ஏத்தும் செல்வம் செல்வமே" என்று முழக்கிய ஒரு பெரியார் * * * வானோரை உயர்த்தி யிருப்பதாகப் பொருள் கொள்வது ஏற்புடைத் தாகுமா? என்று திரு. G. கல்யாணம், B. A.

அவர்கள் கேட்கின்றார். வானவர் உளர் என்ற கொள்கை யுடையார் எல்லாரும் மண்ணோரினும் வானோரே சிறந்தவர் என்று கூறுகின்றனர். அங்ஙனம் கூறற்கேது வென்னையோ வெனின், மக்கட் பிறப்பின ரெல்லாரும் நல் வினைப் பயனாகிய இன்பத்தையும் தீ வினைப் பயனாகிய துன்பத்தையும் அடிக்கடி மாறி மாறி நுகர்கின்றாராக லானும்தேவர்களெல்லாரும் நல்வினைப் பயனாகிய இன்பத்தையே பெரிதும் நுகர்கின்றாராகலானும் என உணர்ந்து கொள்க. தேவர்கள் பெரிதும் இன்பத் தையே நுகர்கின்றார்கள் என்பதைப் "போகம் வேண்டி வேண்டிலேன் புரந்தராதி யின்பமும்" என்னும் மணி மொழியே நன்கு விளக்கும். ஒருவர்பால் இல்லாத சிறப்பை அவர் பால் உளதாக ஏற்றிக்கூறல் வழுவாமே யொழிய அவர் பால் உள்ள உயர்வை எடுத்துக் கூறலால்வரும் இழுக்கென் னையோ! அறிகிலேம். நம் சைவசம யத் திருமுறைகள் பன்னிரண்டினும் பலப்பல இடங்களில் வானவர் தம் ஏற்றத்தை எடுத்திசைக்கும் தொடர் மொழிகளைக் காணலாம். திரு. G. கல்யாணம் B. A. அவர்கள் எடுத்துக் காட்டிய "தீய அசுரர் பகையுண்டு" என்னும் செய்யுளீற்றினுள்ள "வா னோர்க் கென்னை வளன் உண்டே" என்னும் தொடர் மொழியினும் "வானோர்க்கரிய மருந்தே போற்றி" என்னும் தொடர் மொழியினும் நாம் நாடோறும் நேரிற்கண்டு ஒருவரோ டொருவர் அளவளாவி வாழும் மண் ணோரை எடுத்துக் கூறாமல் காண்டற் கரியாராய வானோரை எடுத்து மொழி வானேன் என ஒரு சிறிது ஆராயினும் மண்ணோரினும் வானோர் ஏற்றமுடை யார் எனக் குறித்தற்கேயா மென்பது புலனாகும். "வானேயும் பெறில்வேண் டேன்" "திருமாலும் .... சென்று ணரா" என்னும தொடர் மொழிகளி னுள்ள உம்மைகள் வானுலகின் சிறப் பையும் திருமாலின் உயர்வையும் குறிக்கவே எழுந்தனவாம். இங்ஙன மெல்லாம் புகழ்ந்து பேசற்கேற்ற பெருநலம் துய்த்தற்கு இவர்கள் அளத்தற்கரிய நிறைவளனுடையரா யிருத்தல் வேண்டுமன்றோ? இவர்கள் எவ்வளவு பெருவளன் உடையராயி னும் ஆகுக? இவர் தம் ஏற்றத்தை எடுத்து மொழியும் திரு. வேள். N. துரைக் கண்ணன் அவர்களுடைய உரையாற் பெறப்படும் பயன்றான் யாதோ வெனில், கூறுதும்.

மன்னர் மன்னன் ஒருவன்பாற் சென்று ஒரு புலவன் பரிசிலாகப் பெற்ற அரும்பெறன் மாணிக்கமணி யின் உயர்வை மொழிய வேண்டுவார் "இது மாணிக்கமணி" என்று கூறிய அளவானே அதன் உயர்வு பெறப்பட மாட்டாது. மற்று, "இது மன்னர் பாலும் சென்று பெறற்கரிய மாணிக்க மணி" என்பரேல், அம்மணியின் உயர்வும் அதை யுடையானாகிய மன் னர் மன்னன்றன் ஏற்றமும் அதைப் பரிசிலாகப் பெற்ற புலவன்றன் புல மைத்திறனும் ஆகிய மூன்றும் இனிது விளங்கும். இது போலவே "சென் றடையாத திருவுடையான்" என்னும் தொடர் மொழிக்குத் திரு. வேள். N. துரைக்கண்ணன் அவர்கள் எழு திய "இந்திரன் முதலிய இறையவர்க ளிடத்துப் போய்ப் போய்ப் பெறக் கூடாத விழுச் செல்வத்தை யுடைய வன்" என்னும் உரையால் பேரின்பப் பேறாகிய விழுச் செல்வத்தின் உயர்

வும் அதனை யுடையானாகிய இறைவன் தன் ஏற்றமும் அதனை யடையும் அடியார் தம் தகுதியும் நன்கு விளங்கும். இதுவே இவ்வுரையாற் பெறப்படும் சிறந்த பயனும். "செங்கணவன்பாற் றிசைமுகன்பாற் றேவர்கள்பாலெங்கு மிலாததோ ரின்பம" என்னும் திருவாசகத் திருமொழியும் இவ்வுரையின் ஏற்றத்தை இனிது தெளிவுறுத்தும். மேலும், இவ்வுரை பேரின்பப் பேறாகிய விழுச்செல்வம் இந்திரன் முதலிய இறையவரிடத்துப் போய்ப் பெறக் கூடாதது, அதனையுடையான் சிவபெருமானே என்று விளக்கலால், இவ்விந்திரன் முதலிய இறையவரை இவர் தேவர் அவர் தேவர் என்று பேசிப் புலம்பி வணங்கன்மின் ; நினைத்தொறும் காண்டொறும் பேசுந்தோறும் எப்போதும் அனைத்தெலும் புண்ணெக ஆனந்தத் தேன் சொரியும் குனிப்புடையானையே நினைமின், வாழ்த்துமின், வணங்குமின் என அறிவுறுத்தலும் பெறப்படும். இதுகாறும் ஆராய்ந்தவாற்றான் திரு. வேள். N. துரைக்கண்ணன் அவர்கள் தாம் எழுதிய வுரையில் ஐயுற்றுஉம திரு. G. கல்யாணம அவர்கள் மறுத்தாலும் அவ்வுரை பொருத்தமுடைய தென்பதே தேற்றமாம்.

இன்னும் "சென்றடையாத திருவுடையான்" என்னும் இத்தொடர் மொழிக்குச் சிறிதாராய்ந்தால் வேறு பல பொருளும் காணலாம். அவற்றுள் எமக்குத் தோன்றியவை இவை :—

(க) ("பெருங் கருணைத் தடங்கடலாகிய இறைவன் தானே வந்து தந்தாலல்லாமல் எளியேமாகிய நாம் போய் அடையக் கூடாத பேரின்ப விழுச்செல்வத்தைத் (தனக்குடைமையாக) வுடையான் என்பது ஒரு பொருள். இப்பொருள் பொருத்தமுடையதென்பதை "என்னாலறியாப் பதந்தந்தாய், தாயாய் முலையைத் தருவானே தாரா தொழிந்தால் சவலையாய் நாயேன் கழிந்து போவேனே, தான் வந்து நாயேனைத் தாய்போற் றலை யளித்திட்டு, அண்டமுதலாயினன் அந்தமிலா ஆனந்தம் பண்டைப் பரிசே பழவடியார்க் கீந்தருளும்" என்னும் திருவாசக அருண்மொழிகளெல்லாம பேரின்பச செல்வத்தைத் தருதல் இறைவன் செயலாகவே வைத்துக கூறி வலியுறுத்தல் காண்க.

(உ) சென்றடையாத என்பது திருவைத் தழுவாமல் உடையானைத்தழுவுவதாகக் கொண்டு "இந்திரன் முதலிய இமையவர்களும் போய் அடைய முடியாத இறைவன்" எனக்கோடல் மற்றொரு பொருள். "பூவேறு கோனும் புரந்தரனும் பொற்பமைந்த நாவேறு செல்வியும் நாரணனும்-நான் மறையும் மாவேறு சோதியும் வானவரும் தாமறியாச சேவேறு சேவடி, செங்க ணெடுமாலும் சென்றிடந்து காணரிய பொங்கு மலர்ப்பாதம், தேவர் கோவறியாத தேவதேவன்" என்னும மணி மொழிகளெல்லாம் இவ்வுரை கூறற்கேற்ற சான்றுகளாம்.

(ங) மேற்கூறிய படியே "சென்றடையாத" என்பது உடையானைத் தழுவுவதாகவே கொண்டு "(தானே வந்து காட்டினாலன்றி நாமே) சென்று அடைய முடியாத முதல்வன்" என்பது வேறொரு பொருள். "அவனருளாலே அவன்றாள் வணங்கி, அவனருளே கண்ணாகக காணினல்லால் இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவனிறைவன் என்றெழுதிக் காட்டொணாதே" என்னும் தமிழ்

மறைமொழிகள் இவ்வுரையின் சிறப்பை விளக்கும். திரு. G. கல்யாணம் B. A. அவர்கள் தமதுரைக்கு மேற்கோளாகக்கொண்ட "நானே கருதின் வரநாடார் சும்மா இருநதால் அவர் தானே அணைவர்" என்னும் திருமொழி யாம் கூறிய இப்பொருளையே அறிவுறுத்தல் காண்க.

(ச) இச்செய்யுளை இளமையிலேயே எல்லாம்வல்ல இறைவனை நேரிற்கண்டு அவனால் பேரின்பப் பேற்றை எளிதிற் பெற்ற நம திருஞான சம்பநத வள்ளல் அது பெறுமாறறியாணை இறைவன்பால் அது பெறுமாறு ஆற்றுப்படுத்தும் செய்யுளாகக் கொண்டு, "ஆத! திருவுடையானைச் சிராப்பள்ளிக்குன்றுடையானைக் கூற என்னுள்ளம்குளிரும்? நன்றுடையானைத் தீயது இல்லானை நரைவெள் ஏறு ஒன்று உடையானை உமை ஒரு பாகம் உடையானைச் சென்று அடை" என்றுசொற்களைப் பிரித்து "இறைவனை யறியும் அறிவிலானே! பேரின்பச் செல்வத்தைத் தனக்குடைமையாக உடையவனைத் திரிசிராப்பள்ளிக் குன்றைத் திருக்கோயிலா உடையவனை வழுத்த என் (அடியேன்) மனம் குளிரும். ஆகையால் எல்லா நன்மைகளையும் உடையவனைத் தீமை சிறிதும் இல்லாதவனை மயிலையாகிய வெண்மை நிறம் வாய்ந்த ஆனேற்றை ஊர்தியாக உடையவனை உமையம்மையை ஒரு பால் உடையவனைப் போய் அடைவாயாக" (ஏ தேற்றம அல்லது அசை) என்பது பின்னும் ஒரு பொருள்.

இத்தனை பொருளில் எதுதான் சம்பந்தப் பெருமான் கருத்தை விளக்குவதோ எனில், அதையுணர யாம் வல்லேமில்லேம. செய்யுளியற்றும் ஆசிரியர்கள் ஒரு சொற்றொடரில் ஒரே கருத்தை அமைத்துச் செய்வதுமுண்டு. ஒரு சொற்றொடரிலேயே பல பொருள் தோன்ற அமைத்துச் செய்யுள் செய்வதும் உண்டு. அன்றியும், ஒரே பொருள் அமைத்துத் தாம் செய்த செய்யுளை மறுமுறை நோக்கின் அதில் பல பொருள் தோன்றக் கண்டு தாமே மகிழ்வதும் உண்டு. இத்தகைய செய்யுட்களுக்குச் சிறப்புடையவாய பல பொருளையும் கொள்ளலே நேரிதாம்.

---

# "சென்றடையாத திருவுடையான்"

[ஒ. கோ. கோவிந்தசாமிப் பிள்ளை, பி. ஏ.]

மேற்காட்டியுள்ள சொற்றொடர்க்கு இருவர் வரைந்த உரைகளை இப்பத்திரிகையில் அடியேன் கண்ணுற்றனன். ஆண்டு இருவரும் இருவிதமாகப் பொருள் கூறிப் போந்தனர். ஒருவர் "தேவர்களிடத்து சென்று கிடைக்கப்பெறாத செல்வத்தைத் தன்னிடத்தே யுடையவன்" என்றும் மற்றவர் "தற்போதத்துடன் செல்வார்கள் கிடைக்கப் பெறாத செல்வத்தை யுடையவன்" என்றுங் கூறினர்.

முதற் கண், முந்தியவர் கூறிய உரையை ஆராய்வாம். பாடல்கள் பதினொன்றையும் படித்து அவைகளில் மிளிர்கின்ற கருத்தை உற்று நோக்குமிடத்து சம்பந்தர் உலகத்தினர்க்கு எம்பிரானுடைய அருள் திறமைகளை

யும் குணங்களையும் வெளிப்படுத்தி அவரைப் போற்றினால் சிறந்த செல்வத்தை யடைவது உண்மை என்பதை வெளிப்படுத்தும் எண்ணத்தை யுடையவராய் இருந்ததாகத் தெரிகிறது. எம்பிரானைப் போற்றி யடையுங்கள் என்ற சம்பந்தர் தேவர்கள் ஒரு செல்வத்தைத் தரும் வன்மையுடையவர்கள் என்பதை நினைந்தே இரார் என்பது துணிபு. மேலும்,

நூறு கோடி பிரமர்க ளொங்கினர்
ஆறு கோடி நாராயண ரங்கனே
ஏறு கங்கை மணலெண் ணிலிந்திரர்
ஈறி லாத நல்லீச னொருவனே.

என்ற நாவுக்கரையர் பாட்டினால் தேவர்கள் அழியாத நிலைமையையுடையவர்கள் அல்லர் என்பது வெளிப்படை. அதனால் அவர்களிடத்து சிறந்த செல்வம் கிடையாது என்பது பெற்றாம். எனவே “ சென்றடையாத திருவுடையான்” என்று பாடும்போது தேவர்களிடத்து சென்று அடையாத செல்வத்தை யுடையவன் என்று சம்பந்தர் கருதியிரார்.

இனி, தற்போதத்துடன் சென்றவர்கள் கிடைக்கப்பெறாத செல்வத்தை யுடையவன் என்று மற்றவர் கூறின பொருளும் பொருத்த முடையதாகத் தோன்றவில்லை. ஏனெனில் ஒருவன் வேறொருவனிடம் ஒரு பொருள் கருதிச் சென்றால் அவனுக்கு முதன்மையாக அப்பொருளிடத்து இச்சை யிருக்கவேண்டும். அவ்விச்சையினால் தற்போதத்துடன் சென்றால் அப்பொருள் கிட்டாது என்பதை அவன் அறிவான். இச்சையும் தற்போதமும் முரண்படுகின்றமையால் தற்போதத்துடன்சென்று என்பது பொருத்த முடையதாகத்தோன்றவில்லை.மேலும் அங்ஙனமே பொருள் கொண்டாலும் தற்போதத்துடன் சென்றவர்க்கும் ஈசன் அருள் புரிந்திருக்கிறான் என்பது,

“ கருதத னுய்க் கயிலாய மலைதனைத்
தருக்கினா லெடுத் தானைத் தகரவே
வருத்தியா ருள் செய்தவன் ”

எனும் அப்பர் பாட்டால் விளங்குகின்றது.

இனி அச்சொற்றொடர்க்குக் கொள்ளத்தக்க பொருள் என்னை எனின் நாராணன், நான்முகன் முதலான தேவர்கள் சென்று அடையாத செல்வத்தை யுடையவன் என்பது தான். இதற்குச் சான்று மூவரும் மணிவாசகப் பெருமானும் பாடிய பாக்களில் நிறைந்து கிடக்கின்றது.

“ நடினா காண்கிலர் நான்முகனுந்
திருமா னயந்தேத்த ”

என்றார் சம்பந்தர்.

“ நாடி நாரணன நான்முகன் வானவா
தேடியே சறவுந்தெரி யாத தோர்
கோடி காவன் ”

என்றார் திருநாவுக்கரசர்.

“ கண்ணன் மலரோனுங்
கீழ்மேலுற நின்றான் ”

என்றார் சுந்தரர்.

“ பூவேறு கோனும்
புரந்தரனும் பொற்பமைந்த
நாவேறு செல்வியும்
நாரணனும் நான்மறையும்
மாவேறு சோதியும்
வானவருந் தாமறியாச்
சேவேறு சேவடி ”

என்றார் மாணிக்கவாசகனர்.

இதனால் தேவர்களுக்குக் கிட்டாத எம்பெருமான் உலகத்தினருக்குக் கிட்டுவனோ என்ற ஐயம் நமக்கு வேண்

டுவதில்லை. ஏனெனில் சம்பந்தரே முதலடியில் எம்பெருமான் நல்லவர், தீயதில்லாதவர் என்று கூறிப்போயிருக்கின்றார். தேவர்களுடைய அகங்காரம் சொல்லொணாதது. பகைமை வாய்ந்தது. இராவணனுடைய செருக்கோ தன்னையன்றி வந்த செருக்கு. எம்பிரானிடத்துப் பகைமை கொண்டதல்ல. இராவணன் சிறந்த சிவனடியான். அதுபற்றியே தான் எம்பெருமான் தேவர்களுக்கும் அரிதாகியும் இராவணனுக்கு எளியவனாகியு மிருந்தார். இங்கு பரஞ்சோதி முனிவர் தம் பழியஞ்சின படலத்தின் துவக்கத்தில் கண்டுள்ள,

"ஈறிலான் செழியனன்புக்
கெளியவனாகி மன்றுள்
மாறியாடிய கூத்தென்
சொல்வரம் பின்றாமோ
............... சொல்லுவாம்"

என்பது கருதற்பாலது.

ஆகவே சென்றடையாத என்ற தொடருக்கு பொருள், தேவர்கள் சென்றடையாத என்பதுதான். இந்த தொடரில் இரண்டு பொருளை சம்பந்தர் மிகவும் அழகாய் அமைத்திருப்பது சாலவும் கருதற்பாலதா யிருக்கின்றது. ஒரு பொருள் எம்பெருமானிடத்து உள்ள செல்வம் தேவர்களாலும் கோரப்பட்ட செல்வம். எனவே அப்படிப்பட்ட செல்வத்தை உலகத்தினரே நாடுங்கள் என்று சொல்வதைப் போன்றிருக்கின்றது. மற்றொரு பொருள் அச் செல்வத்தை யடைய வேண்டுமென்றால் தேவர்கள் சென்ற வண்ணம் செல்லாதீர்கள் என்று சம்பந்தர் சொல்ல வந்த மாதிரியாகத் தெரிகின்றது.

இஃது சைவ சமயத்திடத்துள்ள அன்பின்மிகுதியால் எழுதப் பட்டதேயன்றி மற்ற உரைகளுக்கு மறுப்பாக எழுதப்பட்ட தன்று. இத்தொடர்க்கு இன்னும் பலர் பலபொருள் கூறுவர். அதனை அடியேன் அன்புடன் எதிர்பார்க்கின்றனன்.

---

# "சென்றடையாத திருவுடையான்"

[திருக்குறள் விளக்கவாசிரியர் - கி. குப்புச்சாமி முதலியார்]

'நன்றுடையானை' என்பதனை முதலாக வுடைய தேவாரத்தின் மூன்றாம் அடியாகிய, "சென்றடையாத திருவுடையானை" என்பதனை இரண்டு முறை நான் பேசினேன். ஆயினும், சைவசித்தாந்த மகாசமாஜத்தின் காரியதரிசி இதைப்பற்றி எழுதித் தரல்வேண்டும் என்றமையால் ஒருவாறு சுருக்கி எழுதுகின்றேன். முதலில் இச்செய்யுளுக்கு உரை காண்போம். அஃதாவது,

நன்றுடையானை - அறக் கடலாகிய அந்தணனை,

தீயதிலானை - மறமென்பதில்லாத மைந்தனை,

நரைவெள்ளேறு ஒன்றுடையானை - அறவிடையென்னும் விடை யொன்றுடையானை,

உமை யொருபாக முடையானை - அருட்சத்தியை இடப்பாகத்தே யுடையானை,

சென்றடையாத திருவுடையானை - இயல்பாக அமைந்த அருட் செல்வ முடையானை,

சிராப்பள்ளி மேய குன்றுடையானை - திரிசிராப்பள்ளி யென்னு மிடத்தே அமைந்த குன்றத்தில் எழுந்தருளி யிருப்பானை,

கூற - வாக்கால் கூறுதலும்,

என்னுள்ளம் - என் மனமானது,

குளிரும் - மகிழும்.

என்பதாம்.

'அறவாழி அந்தணன்' ஆதலால், 'நன்றுடையானை' என்றும், அழிப்பும் இளைப்பாற்றற் காதலால், 'தீயதிலானை' என்றும், எல்லாம் அழிந்த காலத்தும் அழியாத தருமத்தை விடையாக ஆரோகணித் தமையால், 'நரைவெள்ளேறு ஒன்றுடையானை' என்றும், அருட்சத்தியை இடப்பாகத் துக் கொண்டதுரியங் கடந்த மூர்த்தி ஆதலால், 'உமையொரு பாகம் உடையானை' என்றும், அருண்மூர்த்தியாய் உலகமே உருவினனும் எல்லார்க்கும் எல்லாச் செல்வத்தையுந் தந்து நிற்பவனும் ஆதலால், 'சென்றடையாத திருவுடையானை' என்றும், இவ்விதம் எல்லா உலகமும் ஆன இறைவன் ஆன்மாக்கள் உய்யும் வண்ணம் நிலவுலகத் துத் திருக்கோயில்கள் பல கொண்டிருப்பதில் திரிசிராப்பள்ளியில் உள்ள குன்றில் எழுந்தருளி யிருக்கும் திருமூர்த்தியை வாக்கால் கூற என் மனமானது நிரதிசய இன்பத்தைப் பெற்றதுபோல் மகிழும் என்பார், 'சிராப்பள்ளிக் குன்றுடையானைக் கூற என்னுள்ளங் குளிரும்மே' என்றும் கூறினாராயிற்று.

இனிச் 'சென்றடையாத திருவுடையானை' என்று கூறியது எற்றுக்கெனின், ஏனைய தேவர்கள் இவனை வழிபட்டு அடையவேண்டுவனவற்றை யடைவது போல் அடைதல் இல்லாத செல்வன் அதாவது இயல்பாகவே செல்வம்அமைந்தவன் என்பதாம். இதனாலன்றே இறைவனை, "மன்னவன்" என்றனர். இதற்குப் பேருரை கண்ட சிவஞான முனிவரர், "வெண்கொற்றக் குடையும், நவமணி முடியும், சிங்காதனமும், மன்னவர்க்கேயுரிய சிறப்படையாளமாம். அதுபோலப் பிரபஞ்சம் எல்லாவற்றிற்கும் மூலகாரணமாகிய ஒரு பெரு வெண்கொற்றக் குடையும், எவற்றையும் ஒருங்கே ஓரியல்பான் அறியும் பேரறிவாகிய ஒரு பெருஞ்சுடர் முடியும், எவற்றினையும் அங்கங்கே உயிர்க்குயிராய் நின்று செலுத்தும் இயல்பாகிய ஒரு பெருஞ் சிங்காதனமும், பிறர்க்கின்றித் தனக்கே உரிமையாகச் சிறந்தமை பற்றி" என்று விதந்து கூறினர். அன்றியும், "விச்சதின்றியே விளைவு செய்குவாய்" என்பது வித்தின்றி விளைவாய் எனப் பொருள் பட்டுத் "திருமேனி கொள்ளும் முறைமை உணர்த்திய தூஉமாம்" என்றமையால் எல்லாம் இயல்பாகவே அமைந்தவன் என்றும், அவனிடத்துள்ள செல்வம் ஏனைய ஆன்மாக்களாகிய மக்கள் முதல் தேவர் என்பார் வரையும் சென்று அடைந்த செல்வம்போ லல்லாது இயல்பாகவே அமைந்த செல்வம் என்பது பொருள் ஆயிற்று. இதனைச் சுருங்க எழுதவேண்டும் என்றமையால் இதனுடன் விடுக்கின்றேன். இனி, இவ் விஷயத்தையே, ஐந்து பெரியோர்கள் எழுதியும், ஒரு பெரியோர் தலைவிராக

அமைந்தும் பேசினர். தலைவராக அமைந்து பேசினோர், "சென்றடையாத திருவுடையான்" என்பதற்கு ஆண்டவன் தானே ஆன்மாக்களிடம் சென்று செல்வதனைத் தருபவன் என்னும் பொருள்படப் பேசினர். முதலாவது எழுதிய திரு. என். துரைக்கண்ணரும், நான்காவது எழுதிய திரு. ஆறுமுகம்பிள்ளையும், ஒருமனத்தராய் 'ஆன்மாக்கள் ஏனைய தேவர்களிடம் சென்று அடையாத செல்வத்தையுடையான்' என்றனர். இரண்டாவது எழுதிய திரு. ஜி. கலியாணம் என்பவர் 'தற்போதத்தோடு ஆன்மாக்கள் சென்றடையாத செல்வன்' என்றனர். மூன்றாவது எழுதிய திரு பொ. முத்தையப் பிள்ளை ஒருவர் தாம், இறைவனுக்கே ஏற்றினர். மற்றும் கடைசியாக எழுதிய திரு. கோவிந்தசாமி முதலியார் முதல் எழுதியவரையும், இரண்டாவது எழுதியவரையும் மறுத்துத் தன் மதம் நாட்டினர்.

இனி,நான் முடிவாகக் கூறுவது என்னெனின், சமாஜ வருடக் கூட்டத்தில் வழக்கம்போல் காரியதரிசியவர்கள் கொடுக்கும் விஷயத்தைப் பேசுகின்ற விருத்தனாகிய நான் திருவெண்ணெய் நல்லூரிலும் பேசினேன். பேசியதிலிருந்து இத்துணைச் சித்தாந்த சைவர்கள் பேசியும் எழுதியும் முடித்தார்கள். இவ்வித செயல்களுக்குப் பேசியது போல் எழுதியும் தரல்வேண்டும் என்னும் காரியதரிசியின் விருப்பத்தின்படி இதை எழுதினேன்.

[குறிப்பு :—இப்பொருள் பற்றிய ஆராய்ச்சி இதோடு முடிவடையும்.—பத்திராசிரியர்.]

---

# சமயக்கேடு

[காழி. சிவ. கண்ணுசாமி, பி. ஏ.]

சமயமென்றெழுந்த ஒவ்வொன்றற்கும் குறைந்த அளவிலோ விரிந்த அளவிலோ சடங்குகள் ஏற்பட்டிருப்பனைக் காண்கின்றோம். இன்பப் பெருக்காம் இறைவன் பால் இயற்கையானெழும் அன்புப் பெருக்கேதுவாக அனைவரும் அவ்வவர்க்குத் தோன்றியவாறு வழிபாடியற்ற முற்படுவதே இயல்பு. நீராட்டியும், பூச்சொரிந்தும், பலியூட்டியும், ஆடியும், பாடியும், அழுதும், அரற்றியும், விழுந்தும், குதித்தும், நகைத்தும், மெய்ம்மறந்தும் மற்றுமிவ்வாறே நெஞ்சுகந்தபடி வழிபாடியற்றுவோர் தவருகச் செய்கிறார் என்று பகுத்தறிவு வழியானேக்கிற் கூறுதலியலாது. தத்துவவுணர்வு தடித்துக் கூர்ந்து செல்லாத காலத்து இவையெல்லாம் ஒரு படித்தாய் நோக்கப்பட்டிருத்தல் எளிதிற் பெறப்படும். ஆயினும் அவ்வுணர்வும் அதனையெழுந்த உண்மைப் பரம்பொருளின் ஆராய்ச்சியறிவும் முனைத்து, முதிர்ந்து, உரங்கொண்டு, அறிவாற்றற் கேற்றவாறு சமய நிலை படிப்படியாயுயர்ந்து, அவ்வுயர்ச்சி ஏதுவாகவும் கருத்து வேறுபாட்டினாலும் பல் வேறு உட்பிரிவு எய்துகின்ற காலத்து ஒவ்வொரு உட்பிரிவும் ஒவ்வொரு வித வழிபாட்டை விலக்கியோ அன்றித் தனக்கென ஏற்றுக்கொண்டோ ஒழுகி வரம்பு கட்டிக்கொள்ளுதல் இயல்பு.

அவ்வாறு ஒவ்வொரு சமய உட்பிரிவும் தனித்துக் கால்கொண்டு தழைத் தோங்கப் புகுங்கால் குறித்த சில ஒழுக்கங்களையும் வழிபாட்டு முறைகளையும் தேர்ந்து மேற்கொண்டு அவைகட்கு மேற்கோளாகப் பலப்பல நூல் விதிகளையும் தேடியமைத்துக்கொண்டு அவ்வழிபாட்டினை முறையே இடைவிடாம லியற்றி வருமாறு ஒரு குழுவினரையும் பிரித்தமைத்துக் கொண்டவுடன் அது ஒரு தனிச் சமயமாக நிலை பெறுகிறது. இவ்வாறே தான் ஒவ்வொரு சமயமும் தனக்கென்றே சடங்குகள் கரணங்கள் என்பனவற்றையும், சமய சாத்திரங்கள், வேதங்கள், ஆகமங்கள் என்பனவாதிய நூல்களையும், கடவுட் பணியாற்றும் ஒரு குழுவினரையும் அமைத்துக் கொண்டுளதென்று கூறலாம்.

இனி, பெருமுயற்சி யெடுத்து இவ்வாறு ஒரு சமயத்தை நிறுவியபின் அம்முயற்சியாளர் தாங்கொண்ட கருமம் முடிவுபெற்றதாகக் கருதி மடியினை மேற்கொண்டு அச்சமயத்தின் பிற்கால நடைமுறையையும் ஆய்ந்து நோக்க வேண்டும் என்றதோர் உணர்ச்சியே யின்றிச் சமய வளர்ச்சியை அதற்கென முன்னர் பிரித்தமைத்த குழுவினராகிய குருமார்களிடம் ஒப்பித்து வாளாவிருந்துவிடல், ஒவ்வொரு சமய வரலாற்றினுங் காணக் கிடைப்பதோர் உண்மையாகும். பசி வேளையில் எதிர்கொண்டழைத்துச் சமைத்த உணவை முன்னிருந்து ஊட்ட வேறெத்தகைய உழைப்புமின்றி அதனை யுட்கொள்ளுவதனாலாய களைப்பு தொண்டருக்கும் சொற்ப நேரமிருக்கு மென்று கூறுவரேல் தீராப் பசிகொண்ட பல்லாயிரம் உயிர்கட்கு ஆராவமுதளிக்கும் ஒரு சமயத்தை நிறுவியதனாலாய களைப்பு எத்துணை சொற்ப காலம் இருக்க வேண்டும்? அதனை ஒரு கற்பகால மென்றே கணக்கிட்டுக் கொள்ளுதலுந் தவறாமோ? இவ்வாறு களைமலிந்து கிடக்கும் ஒரு கற்ப காலமுழுதும் முன்னெழுந்த சமயமானது தன் சீர்குலைந்து அச்சுக்கெடா திருந்துவருமென்று கொள்ளவுங் கூடுமோ?

இனி, மடி மிகுந்து களைமலிந்து கிடக்கும் ஒரு காலத்தில் ஒவ்வொரு சமயமும் கேடுறுதற்குச் சிறந்த ஏதுக்களாய் இதுகாறும் எந்நாட்டிலும் இருந்து வந்தனவாகக் காணக்கிடப்பனவும் இனியும் இருக்கக் கூடியவையாகக் கருதக்கிடப்பனவும் மூன்றாகும். அவை குருமார்களின் தன்னலம், தெய்வத் திருவிளையாடற்றிரிபுப் பெருக்கம், வேதசாத்திர மறைபொருள் என்பனவே. இவை ஒவ்வொன்றையும் ஒரு சிறிது விளக்குவாம்.

மூன்றினுந் தலையாயது குருமார்களின் தன்னலங்கருதும் இழிதகைமையே. சமயங்கண்ட பெரியார்கள் மாண்டு மடிந்ததாலோ அன்றி மங்கியோய்ந்ததாலோ, கடவுட் பணியாற்றுவதற்கென அவர்களால் முதற்கண் தேர்ந்தமைக்கப்பட்ட குருமார்கள் நாளேற வேறத் தாமே கடவுளர்க்கும் மக்கட்கும் இடையே இருப்பதாகிய தொடர்பை ஆக்கியளித்து அழிக்கும் ஆற்றல் வாய்ந்தவர்களென்று கூறிப் பகடியடிக்க முற்படுவர். அதனைப் பகடியெனக் காணல் வேறுபல அனுவலிற் படிந்துகிடக்கும் ஏழை மாந்தர் கட்கரிதாகும். இப்பகடி தானும் சிறுகச் சிறுக, சமயத்தலைவர்கள், கடவுட் பணியியற்றும் ஆசாரியர்கள், மறைகிளக்கும் ஓதுவார்கள் என்ற இக்குழு

வினரின் பல பகுதியினரிடத்தும் தோற்றமுறுகிறது. கடவுட் பணியி லேயே என்றென்றும் ஈடுபட்டுக் கிடப்பதனுலோ அன்றி அப்பணி யாற்றுவதில் வேண்டியும் வேண்டாம லும் பல்லாற்ருனும்வரும் நன்பொருள் மிகுதியினுலோ, அன்றியும் எந்தை குருவாகையால் யானுங் குருவாதலைத் தடுப்பார் யாருமிரார் என்ற ஒரு நம் பிக்கையினுலோ மற்றிவை போன்ற எதனுலோ முதன் முதலாகப் பிரித் தமைக்கப்பட்ட குருக் குழாத்தின ரிடைக் காணக்கிடந்த உண்மைச் சம யப்பற்று ஒடுங்கி, கடவுட் பணியாற் றும முறைகளிற் பயிலும் பயிற்சிகள் குறைந்து, வெறும் வெளிச் சடங்கள வானே பணியை முடித்துக்கொண்டு உறங்க விழையும் இழுக்கம் குருமார்க ளிடத்தும் பெரும்பாலும் அவர்கள் கால்வழி வருவோர்களிடத்தும் குடி கொள்கிறது.

" சத்தியமின்றித் தனிஞானந் தானின்றி
யொத்த விடயம் விட்டோரு முணர்வின்றிப்
பத்தியுமின்றிப் பானுண்மை யின்றியூண்
பித்தேறு மூடர் "

பலர் பெருகிக் குருமார்களா யமை ந்து கடவுட் பணியாற்ற முன் வருவ ரேல் அவர்களை நம்பிக் கடைத்தேற வெண்ணினுல் அது " குருடுங் குரு டுங் குருட்டாட்டமாடிக் குருடுங் குரு டுங் குழிவிழு ', வதையன்ருே ஒக் கும்? இத்தகையோரால் இறைவழி பாட்டிற்குத் துணைக் கருவியாய்க் கோலப்பட்ட சடங்குகள், தன்னல மும் பொருள் வருவாயும் மக்கள் தம் அறியாமையுங் கருதி முதற்கருவியாக மாறிச் சமய வழிபாடெனக் காட்டப் பெறின் ஒரு சமயம் கீழறுபட்டுச் சிதைந்து போவது திண்ணம் என்று கூறவும் வேண்டுமோ?

இவ்வாறு தம்மாட்டுச் சமயப்பற்று அருகி ஊக்கங் குன்றி வருவதை யறிந்த காலத்து எங்கே தம்மாற் பிணிப்பு நெகிழ்ந்து விடுமோ வென அஞ்சியவராய்க் குருக்குழாத்தினர் தெய்வத் திருவிளையாடல்களாகவும் அற்புதச் செய்கைகளாகவும் சமய நூல்களிடைக் காணக் கிடக்கும் ஒரு சில மறுக்கொணு உண்மைகளை ஒன்று பலவாகப் பெருக்கியும், காலத்திற் கேற்றவாறும் மக்களறியாமைக்கேற்ற வாறும் திரித்தும் கூறியோ அன்றி அவ்வப்போது உண்டானதாகக் காட் டியோ தம் புல்லிய வாழ்க்கைக்கு அரண் கோலிக்கொள்ள முற்படுகின் றனர். இதனைக் கண்ட ஏழைமக் களும் வஞ்சகமறியாது அவையே உண்மை யென நம்பி ஏமுறுகின்றனர். இதனுல் மறுக்கொணுத வையா யெழுந்த அவ்வொரு சில திருவிளை யாடல்களும், அற்புதச் செயல்களும் ஊடுருவிப் பார்க்க முயலுவோர் கண்களில் முதலில் வெறும் பகட் டாகவே காணப்பட் டொழிகின்றன. இதைவிட ஒரு சமயத்தின் வேரை யறுக்கும் சுரிகையும் வேறுண்டோ?

இறுதியாகக் கூறிய வேதசாத்திர உண்மைப் பொருளை வெளிப்படை யாக விளக்கி யறிவு புகட்டாது தன் னலங் கருதி அதனை மறைபொரு ளாக்கி வைத்துக்கொண்டு வருவதனு லாய தீமைகள் வெளிப்படையாகலின் இங்கு விரிக்காது விடுக்கின்ருேம்.

இவ்வாறு வேலியே பயிரை யழித் ததுபோல் சமய வளர்ச்சிக்கெனத் தேர்ந்து அமைக்கப்பட்டவர்களே மடி

மையினாலும், அறியாமை யினாலும், வஞ்சகத்தினாலும், பொருள் வருவாய் கருதியும் சமயஉண்மைகளையொதுக்கி உள்ளீடற்ற வெளிச் சடங்குகளையே குறிக்கொண்டு காத்துவர முற்பட்டால் சமயக்கேடு திண்ணமாய் எய்தும் என்று கூறவும் வேண்டுமோ? சமயக்கேடு தொடங்கவே ஒவ்வொரு சமயத்தின் அடிப்படையா யமைந்த பொன்னனைய உயர்ந்த கொள்கையான "இறைவன் றிருமுன் எவ்வுயிருஞ் சமம்" என்ற கொள்கைமாறுபட்டு ஒவ்வொன்றிலும் உயர்வு தாழ்வு என்ற வேற்றுமை தோன்றுகிறது. பிறப்பில் வேற்றுமை, பிழைப்பில் வேற்றுமை, வழிபாட்டிலும் வேற்றுமை என்றித் தொடக்கத்தன எத்துணை வேற்றுமைகள்? உண்மை யிது பொய்ம்மை யிது என்றுணர முடியாதபடி சூழ்ச்சிகள் வலுத்து, வேடங்கள் மல்கிச் சமய உணர்ச்சிக்கும் அறிவுக்கும் இன்றியமையாத நேருணர்வு (Straight thinking) கெட்டு விடுகிறது.

"பொய்த்தவ வேடர் கைத்தகப் படுத்தற்கு
வஞ்சச் சொல்லின வார்வலை போக்கிச்
சமயப் படுகுழி சமைத்தாங் கமைவயின்
மானிட மாக்களை வலியப் புகுத்தும்
மாணு விரதத் தகப்படுத் தாழ்த்தும்
வளை வுணர்வு"

எங்கும் பரந்து தலைவிரித்தாடுகிறது.

இதுகாறுங்கூறியவாற்றான் மாசற்று எழுந்த ஒரு சமயம் குருமார்களின் தன்னலம், தெய்வத் திருவிளையாடல்களில் வஞ்சகத் திரிபு, சமய சாத்திர உண்மைப்பொருளை மறைத்தல் ஆகிய புற வேதுக்களால் எவ்வாறு கேடுறுகின்றது என்பதை ஒருவாறு காட்டினும்.

---

# சைவ இளைஞர் மகாநாடு

## தலைவர் பேருரை

[கா. சுப்பிரமணியம் பிள்ளை எம். ஏ., எம். எல்.]

**சை**வ இளைஞர் பொருட்டு முதல் முதல் கூட்டப்படும் இம்மகா நாட்டிற்கு என்னைத் தலைமை பூணும்படி கேட்டமைக்குக் காரணம் இளைஞரைப் போல பயிற்சி போதாமை என்பால் காணப்படுதல் போலும். நான் அதற்கு இசைந்தது எதனாலோ எனின் இளைஞர்பாலுள்ள உள்ளக்கிளர்ச்சி, களங்கமின்மை, விடாமுயற்சி முதலிய பல நற்பண்புகளைப் பெற்றுக் கொள்ளுதற்கும் அன்னார்க்கு அறிவுரை பகர வந்துள்ள மாட்சிமை தங்கிய பேரமைச்சர் முதலிய பெரியோரது பயிற்சி மிக்க போதனையின் பயன் கொள்ளுதற்கும் வாய்ப்பு அமைதலின் என்க.

இம்மகா நாட்டைத் திறந்த பேரமைச்சரது அறிவுரைகளின் விளக்கமாக யான் செப்பும் சிற்றுரையைக் கருதுக. இளமைப் பருவமானது எல்லா நலத்திற்கும் வித்திடும் பருவமாதலின் எல்லா நலத்தையும் விளக்க வல்ல கல்வியினை இளமையிற் பயிலுதல் வேண்டுமென்று நமது முன்னோர் கூறினர். 'இளமையிற் கல்வி சிலையினெழுத்து' என்பதைக் காண்க. கற்கும் கலைகளை எல்லாம் தொழிற்கலை, கவின்கலை, மெய்க்கலை என மூன்றுகப் பிரித்தல் கூடும். உடல் வாழ்க்கை நிலை பெறுதற்கு வேண்டும் ஊதியங் கருதிப் பயிலப்படும் உழவு, கைத்

தொழில், வணிகம் முதலியவற்றின் சார்பான கலைகளை எல்லாம் தொழிற் கலை எனலாம். ஐம்புலனிற்கும் மனதிற்கும் இன்பம் பயக்கவல்ல பாட்டு, இசை, கூத்து, ஓவியம், சிற்பம் முதலிய அழகினைச்சிறப்பிக்கும்கலைகளெல்லாம் கவின் கலை எனப்படும். இனி மெய்க்கலை என்பது தோன்றும் பொருள்களின் தன்மைகளை ஆராயும் கலை எனவும் தோன்றும் பொருள்களுக்கெல்லாம் அடிப்படையாயுள்ள முடிவான உண்மைப் பொருளை ஆயும் முடிந்த மெய்க்கலை எனவும் இரு திறப்படும். முன்னவற்றை அறிவியல் நூலின் (Science)பாலனவாகவும் பின்னவற்றைத் தத்துவ நூலின் (Philosaphy) பாலனவாகவும் மேல் நாட்டினர் கருதுவர். இன்னொரு முறையாகப் பார்க்குமிடத்து உலகத்தின் ஒவ்வொரு பகுதியையும் வகுத்து வகுத்து ஆயும்முறை அறிவியல் நூல் என்றும், எல்லாப் பொருளும் தொக்க பிண்டமாகிய உலகத்திற்கு ஆதாரம் யாதென்று ஆயும் முறை தத்துவநூல் முறையாகவும் கொள்ளப்படும்.

தத்துவநூல் ஆராய்ச்சியில் நமது முன்னோர் தலை சிறந்து விளங்கினர். அஃதே சமய உணர்ச்சிக்கு ஆதாரமாக உள்ளது. எக்கலையினும் மெய்க்கலை உயர்ந்ததாலும் அதன் கண்ணும் முடிந்த மெய்ப்பொருளை ஆய்ந்தறியும் சமயக் கலையானது மிக மேம்பாடு உடையது ஆதலானும் சமயக்கலையின் பயனையே கல்வியின் விழுமிய பெரும் பயனாக ஆசிரியர் திருவள்ளுவர் முதலிய பேரறிஞர்கள் அறுதியிட்டு உரைத்தனர்.

கற்றதனா லாய பயனென் கொல்
வாலறிவன்—நற்றாள் தொழா அரெனின்

எழுத்தறியதீரும் இழிதகைமை தீர்ந்தோன்
மொழித் திரத்தின் முட்டறுப்பான் ஆகும்
மொழித் திரத்தின் முட்டறுத்தனல்லோன்
[முதனூற்
பொருளுணர்ந்து கட்டறுத்து வீடு பெறும்.

என்ற விடத்து இலக்கண இலக்கியங்களின் குற்றமற்ற பயிற்சியினது முடிந்த மெய்ந்நூற் பொருளுணர்ந்து பற்று நீங்கி வீடு பெறுதற்குக் கருவி என்று கூறியது காண்க.

முடிந்த மெய்க்கலையின் சாரமே சைவத்தின் உட்கிடையாம். தென்னாடுடைய சிவனே போற்றி என்பதற்கேற்ப சிவநெறியானது பண்டைத் தமிழரது சமய நெறியாய் நிலவினமையான் அதன் உயிர் கருத்துக்கள் தொல்காப்பியம், திருவள்ளுவர் முதலிய பண்டைத் தமிழ் நூல்களில் பொதிந்து கிடப்பதை வைத்து இறுதி ஊகிக்கப்படும். தொல்காப்பியமானது இப்பொழுதுள்ள வடமொழி வியாகரணமாகிய பாணினியம் இயற்றப்படுதற்கு முன்னே தோன்றி மறைந்த ஐந்திரத்தினோடு ஒத்தகாலத்ததெனக் கருதுமிடத்து அதன் பழமை நன்கு புலனாகும். அத்துணைப் பழமையாகிய காலத்தைக்கடவுள் உயிர்உலகம் என்ற முப்பொருள் உண்மை தமிழ் நாட்டிலே எங்கும் வழங்கிவந்தது என்பது அவற்றின் சார்பாகிய சொற்களை எழுத்துக்களுக்கு உருவகப் பெயர்களாக ஆசிரியர் தொல்காப்பியனார் கொண்டமையால் இனிது விளங்கும். ஆய்தம், உயிர், மெய் என்ற மூன்று சொற்களையும் உற்றுநோக்குக. ஆய்தம் என்பது நுண்ணிது என்று பொருள் படும். எல்லா எழுத்தொலிகளும் தோன்றுதற்கு அடிப்படையாய்உள்ள மூச்சானது நுண்ணிதாய் எழுத்தொலி புலனாதற்கு ஏதுவாகிய காற்றுத்

தொகுதியோடு கலந்திருத்தலின் அதனையே ஆய்தம் என்முர்.

அது மூலமாகிய எழுத்தொலியினேடு கலந்தே ஒலித்தலின் அதனை சார்பெழுத்தென்முர். எல்லாப் பொருளுக்கும் ஆதாரமாய்த் தோன்முத அடிப்படியாய் அவற்ெறாடு சார்ந்து நிற்கும் மெய்ப் பரம்பொருளை யுணர்தலே சார்புணர்தல் என ஆசிரியர் திருவள்ளுவனுர் மெய்யுணர்தல் அதிகாரத்தில் குறித்தமை காண்க. "சார்பினுல் தோன்முது தானுவாய் எப்பொருட்கும், ஏனின்று எஞ்ஞான்றும் இன்பம் தகைத்தோர்" என்ற விடத்தும இக்கருத்து வலியுறுதல் காண்க. எல்லாப் பொருட்கும் சார்பாகிய முதல்வன் அப்பொருள்களின் இயல் பிலனுய் அவற்றின் வேறுன தன்மையுடையனுய் இருத்தலின் தனி முதலெனப் படுவன். அவ்வாறு உயிரொடும் மெய்யொடும் சாராது வேற்றியல்புடைய ஆய்தமானது தனிநிலை எனப்படுதல்காண்க.

இனி எப்பொருட்கும் இன்பம் ஈயும் இறைவனின் வேறுக அவ்வின்பத்தைப்பெறும் உயிர்கள் பல என்பதும் தொல்காப்பியத்துட் போந்த கருத்தேயாகும். "வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன்" என்ற விடத்து உயிர்கள் வினை வசப்பட்டு அறிவு மயங்கப் பெறுவன என்பது குறிப்பானறியக் கிடக்கின்றது. வினைக்கு ஏதுவாக எடுக்கும் உடம்பே மெய்யெனப்படுதலின் உயிர் ஊர்ந்து வரும் எழுத்துக்களை மெய்யெழுத்தெனவும். ஊரும் எழுத்துக்களை உயிரெனவும் குறியீடுசெய்து கொண்டமை மிகவும் வியக்கத்தக்கது. மெய்யென்பதே தத்துவம் என்னும் வடசொல்லின் பொருளாகும். தத்துவக் கூட்டமே உலகமாதலின் மெய்யென்ற விடத்து உலகம் சுட்டப்பட்டதென அறிக. இதுவரை கூறியவற்ருல் சைவசித்தாந்தத்துட் போந்த முப்பொருளுண்மை தொல்காப்பிய எழுத்ததிகாரத்துள் அமைந்து கிடக்கின்றது என்பது இனிது புலனுகும். இதனைப்பற்றிய விரிந்த ஆராய்ச்சி பிற்காலத்து நூல்களில் காணப்படும். இப்போது நாம் ஒரு தலையாக உள்ளத்தில் பதிததுக் கொள்வது யாதெனில் எல்லாம்வல்ல முழு முதற் கடவுள் ஒருவன் உண்டென்பதும் அவனன்றி ஓரணுவும் அசையா தென்பதும் ஆகிய முடிந்த உண்மைகளேயாம். இக்கருத்தினையே வடமொழி உபநிடதங்களும் பாரசீகப் பண்டைப் பல்நூல்களும் கிரேக்க தத்துவ நூலும் வெவ்வேறு வகையாகப் பகர்கின்றன. தற்காலத்திலே மேல்நாட்டுத் தத்துவ உணர்சசி சான்றவர்கள் அறிவுடையோர் முழுமுதற் பொருளே அறிவில்லாத பொருட் பிண்டமாகிய உலகத்திற்கு ஆதாரமாய் யுள்ளதென்பதை முடிவாகக் கைக் கொண்டுள்ளார்கள். இம்முடிந்த வுண்மையை அறியாத பலர் இக்காலத்திலும் முற்காலத்திலும் நாத்திக வாதம் பேசி யொழிந்தனர்.

கடவுள் உண்மை உணர்ச்சிக்குத் தடையாய் நிற்பனவற்றுள் ஒன்று யாதெனில் மக்களது முற்றுப்பெருத அவாவேயாம். நினைந்ததொன்றுமுடிய வேண்டுமென்று கருதுபவன் கடவுளை வணங்கியும் அது முடிவு பெருத விடத்து நாத்திக வாதத்தை மேற்கொண்டும் நிற்கின்முன். தான் செய்

வினைக்குத்தக்க பயனை ஒருவன் அடைகின்றான் என்பதையும் வினை செய்தல் ஒரு பிறவியிலும் அவ்வினையின் பயனை நுகருதல் மற்றொரு பிறவியிலும் நிகழ்தல் கூடுமென்பதே உணராத தாகும். தமக்குத் தக்கவற்றை அறிந்து உதவுகின்றார் கடவுள், துன்பத்தைக் கொடுத்தாலும் தம்மைப் பக்குவப் படுத்தி உய்வித்தல் பொருட்டே என்னும் கருத்துக்களை மனதில் பதித்துக்கொள்ளல் வேண்டும் என்பதை வற்புறுத்தவே ஆசிரியர் திருவள்ளுவனார்,

அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும்
செவ்வியான் கேடும்நினைக்கப்படும்.

என்று உறுதி கூறிப் போந்தனர். ஆங்கிலத்திலும் (God knows what is best for us) என்பதும் கடைப்பிடிக்கத் தக்கதே. 'வேண்டுவார் வேண்டியதே ஈவான்' என்ற திருவாக்கிற்குப் பொருளினை ஆய்ந்துகொள்ளல் வேண்டும். வேண்டுவார் என்ற சொல்லானது வேண்டும் தகுதியுடையார் என்று பொருள்படும். "தாமென்றும் மனந் தளராத் தகுதியினால் உலகத்துக்கு ஆமென்று சரண்புகுந்தார் தமைக் காக்கும் கருணையினான்" என்ற திருஞானசம்பந்தப் பெருமான் திருவாக்கினால் எக்காலத்தும் மனந்தளரா மையும் தான் மனத்தொடு இறைவன் செயல் யாவும் நன்மையே என்று கருதிச் சரண்புகுதலுமாகிய தகுதியுடையோரே இறைவனது சிறந்த கருணைக்குரியவர் என்பது தெளியப்படும். பயன் கருதாது இறைவனை வழிபட்டால் அது கிடையாத போது நாத்திகம் தலை எடுத்தலின் பயன் கருதாது கடவுளை வழிபடுகென பெரியோர்கள் கூறுவாராயினர். பயன் கருதற்கு ஏது ஆசையாதலின் ஆசையற்ற இடத்திலே தான் தெய்வ உணர்ச்சி நிலைபெறும் என்ற கருத்தினைத் தாயுமானப் பெரியார் "நிராசை இன்றேல் தெய்வம் உண்டோ" என்றார். ஆதலால் இறைவனடிக்குப் பயன் கருதாது• அன்பு செலுத்துதலே சிறந்த வழி பாடாகும். காதலற்கு அன்பினால் விளையும் இன்பம் போல இறையன்பினால் அடியார்க்கு இன்பம் விளையும். "இறவாத இன்ப" அன்பு என்பதும் அது. இவ்வாறே நமது சமயக்கருத்துக்கள் பிறவற்றையும் ஆய்ந்து உண்மை தெளிக. ஈண்டு அவற்றை விரிப்பில் பெருகும். சைவத்திலே எவ்வுயிர்க்கும் இரக்கம் வைத்தல் சிறந்த கொள்கையாகத் தழுவப் படுதலானும் ஒழுக்கம்பற்றியே உயர்வு என்பது தமிழ்க் கொள்கை யாதலானும் சைவ இளைஞர் யாவரும், அருள் ஒழுக்கமும், விரிந்த நோக்கமும், குற்றம் பொறுக்கும் குணமும், ஒற்றுமையும், விடாமுயற்சியும் உடையவர்களாய்த் திகழ்தல் வேண்டும்.

சைவத்தின் சிறந்த உண்மைகளை உலகத்தில் வெளிப்படுத்தினால் உலகினுள்ள அறிஞர் யாவரும் அவற்றை மேற்கொள்வர். "ஞால நின்புகழே மிக வேண்டும்" என்ற நமது பரமாசாரியார் திருவுள்ளக் கருத்தினை யாவரும் நிறைவேற்ற முயல வேண்டும்.

சைவ வொளியானது எங்கும் பரவுதற் பொருட்டு சைவ சித்தாந்தக் கலா சைவ நூல் நிலையம், சைவ போதகாசிரியர் நியமனம், சைவா விடுதி, சைவ நூல் வெளியீடு முதலிய பேரறங்கள் முதலியவற்றையும் சைவ ஆதீனத் தலைவர்களும் பிற சைவச் செல்வர்களும் கோயி லதிகாரிகளும் அமைத்து நன்குநடத்திச் சைவர்க்கும் சைவ இளைஞர்க்கும் பேருதவி புரியுமாறு திருவருள் சுரக்கும் பொருட்டு எல்லாம்வல்ல இறைவனை வழுத்துவன். சுபம்.

# கேவேடரும் கெளிறும்

[வே. மு. ஸ்ரீநிவாஸ முதலியார்]

(1) திருவாசகம் கீர்த்தித் திருவகவ லிடையே "கேவேடராகிக் கெளிறது படுத்தும்" என்ற அடியினுக்கு இது வரையில் பொருள் கண்ட பெரியார்கள் பலருள் திருவாளர் சாமிநாத பண்டிதர் அவர்கள் திருவாளர் நா. வேதாசலம் பிள்ளை அவர்கள் (மறைமலை அடிகள்) காலஞ்சென்ற திருவாளர் கா. இராமசாமி நாயுடு அவர்கள் ஆகிய இவர்கள் மூவரும் "கேவேடர்" என்ற சொல் "கேவர்த்த" அல்லது கைவர்த்த என்ற வடமொழியின் திரிபெனக் கொண்டு "மீன்வலைஞராகி மீனைப்படுத்தும் என்று பொருள் கொண்டிருக்கின்றனர் என்பதனை அறிஞர் பலர் அறிவர்.

(2) அன்றி, திரு. நா. வேதாசலம் பிள்ளை அவர்கள் தாம் எழுதிய உரை நூலகத்தே "இறைவன் வலைஞனாய்ச் சென்று படுத்தது சுறவுமீன் என்று திருவிளையாடல் புராணங் கூறுமாயினும் அடிகள் அதனைக் கெளிற்றுமீன் என்று கூறுதலின் அடிகள் கூற்றே கோள்ளற்பாலதாம் என்று எழுதியுள்ளார்கள்.

(3) பிள்ளை அவர்கள் கூறும் அடிகளால் அருளப்பட்ட திருக்கோவையார் என்னும் நூலகத்தே 187 எண்ணுள்ள பாட்டின்கண் "கார்த்தாங்கந் திரை தோணி சுறுக்கடல்மீன் எறிவோர்" என்று கூறி இருத்தலால் அப்பாட்டின் கவிக் கருத்துக்கேற்பப் பொருள் கொள்ளின், அவ்வடிகளின் கருத்தும் சிவபிரான் வலைஞனாகிப் படுத்தது சுறவு மீனே என்பதாகும். இவ்வேதுவினால் பிள்ளை அவர்களின் முடிபு பொய்த்தமையினை அறிஞர் பலர் அறிவர்.

(4) ஸ்ரீ வில்லிபுத்தூர், பாரதம் அருச்சுனன் தவநிலைச் சருக்கம் 81. எண்ணுள்ள "நனைமலர்ச் சிதறி" என்ற பாட்டின் கண் "வினைபடு கேழல் வேட்டை நாம் இன்றே வேடராய் ஆடுதல்வேண்டும் என்று சிவபிரான் கூற்றாகக் கூறி இருத்தலை அறிஞர் பலர் அறிவர்.

(5) ஆகையால் "கேழல் வேடர்" என்ற இவ்விரண்டு சொற்களுங் கூடி மருஉவின் பாத்தியாய்க் "கேவேடர் எனத் திரிந்து நின்றனவாகக்கொண்டு பன்றி வேட்டையராகிப் பன்றியினைப் படுத்தும் என்று பொருள் கொள்ளுதலே சாலச் சிறப்புடைத்தாகும் என்பதனை, நூற்களைப் புரட்டிப் புரட்டிப் படித்து, இந்தச் சொல்லுக்கு அந்தப் பொருள் அந்தப் பொருளுக்கு இந்தப் பெயர் என்று ஆய்ந்துகொண்டிராமல், 'ஊர்களைச் சுற்றிப் பாருங்கள்' என்று படிப்பவரைப் பழித்துப் புத்திபுகட்ட முற்படும் பண்டிதரல்லா அறிஞர் பலர் ஆய்ந்து கொள்வர் என்ற நம்பிக்கையான் இதனை வெளியிடலானேன்.

(கேழல் - பன்றி) களிறு, கெளிறு - பன்றி)

"எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினும் [அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"

[குறிப்பு:— இச்சொற்றொடர் பற்றி ஒரு பக்கத்து மேற்பட்ட ஆராய்ச்சியுரைகள் வெளியிடப்படா - பத்திராசிரியர்.]

# சிவலிங்கம்

[திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளையவர்கள் பி. ஏ. எழுதியது]

சிவலிங்கம் என்னும் தொடர்மொழியானது சிவம், லிங்கம் என்னும் இரண்டு சொற்களினது சேர்க்கையாலாகிறது; அது சிவமாகிய லிங்கம் அல்லது சிவத்தைக் காட்டும் லிங்கம் என விரியும்.

சிவம் என்னும் சொல் மங்கலம் அல்லது நன்மை என்று பொருள்படும். 'சிவம் நன்மை, குறுணி, முத்தி' என்பது சூடாமணி நிகண்டு. 'எல்லா உயிர்களுக்கும் எப்பொழுதும் நன்மையைச் செய்தலாற் சிவம்' என்று திருக் கோவையாருக்கு உரை எழுதிய பேராசிரியர் கூறுகின்றார். (358-வது பாட்டு). உண்மை அறிவு இன்பம் (சத்து சித்து ஆனந்தம்) என்னும் இம்மூன்றினது நிலைக்களமே சிவமாகும். எப்பொருள், எக்காலத்தும் இல்பொருள் ஆகாமல் உள்பொருளாய் அறிவின்றி நிலைபெற்றுள்ளதாயும் தான் எப்பொருளிடத்திலும் பற்றின்றி எல்லாப் பொருள்களும் தன்னைப் பற்றுக உடையனவாயும் உள்ளதோ அது சிவம்; எப்பொருள் அறிவு மயமாயிருந்து எல்லா உயிர்களுடைய அறிவை விளக்குமோ அது சிவம். எப்பொருள் எல்லா உயிர்களும் நுகர்கின்ற இன்பத்துக்கு இடமாய் நிற்குமோ அது சிவம். இலிங்கம் என்பது குறி அல்லது அடையாளம் ஆகும்.

சிவலிங்கம் என்பது சிவத்தைக் காட்டும் குறியாகும். உயிர்கள் சிவத்தை உண்மை அறிவினலே தான் நேரே தன்னறிவினுள்ளே உணர்ந்து அறிய முடியும். அத்தகுதி வாய்க்கப் பெறுமுன் உயிர்கள் அச்சிவத்தினது அருட்சத்தி விளக்கமாகிய உலகில் சிவத்தை அறிதற்குக்குறிகள் அமைந்திருக்கின்றன. அக்குறிகள் பின் வருமாறு:—

சிவன் எட்டு உருவினன். அட்டமூர்த்தி, அவன் நீர், நிலம், தீ, கால், வெளி, பகலோன், திங்கள், உயிர் ஆகிய இந்த எட்டுப் பொருள்களையும் உருவங்களாக உடையவன். நீர் நிலம் தீ கால் வெளி என்னும் ஐம்பெரும் பூதங்களாலாகிய உலகம் அவனுடைய உருவம். உலகமாகிய உருவம் சிவத்தைக் காட்டுங் குறியாயுள்ளது.

(1 இருநிலனய்த் 2 தீயாகி 3 நீருமாகி, 4 இயமானனய் எறியுங் 5 காற்றுமாகி, அருநிலைய 6 திங்களாய் 7 ஞாயிறாகி, 8 ஆகாசமாய் அட்டமூர்த்தியாகிப், பெரு நலமுங் குற்றமும் பெண்ணும் ஆணும், பிறர் உருவும் தம் உருவும் தாமே யாகி, நெருநலையாய், இன்றாகி நாளையாகி, நிமிர்புன் சடையடிகள் நின்ற வாறே.)

என்பது அப்பர் வாக்கு.

உலகம் சிவத்தினது குறியாயிருத்தலால் அது அண்டலிங்கம் என்று கூறப்படுகின்றது. அவ்வுண்மை,

இலிங்கம தாவ தியாரு மறியார்
இலிங்கம தாவ தெண்டிசை யெல்லாம்
இலிங்கம தாவ தெண்ணென் கலையும்
இலிங்கம தாக வெடுத்த துலகே.

என்று திருமந்திரத்திற் கூறியிருத்தல் காண்க.

ஐம்பெரும் பூதங்களாலாகிய உயிர்களது உடலும், ஒரு சிறிய உலகம். அந்த உடலும் சிவத்தைக் காட்டும் குறியாதலின் அது 'பிண்ட லிங்கம்' என்று கூறப்படும். அவ்வுண்மை,

மானுட ராக்கை வடிவு சிவலிங்கம்
மானுட ராக்கை வடிவு சிதம்பரம்
மானுட ராக்கை வடிவு சதாசிவம்
மானுட ராக்கை வடிவு திருக்கூத்தே

என்று திருமந்திரத்திற் கூறியிருத்தல் காண்க.

கவோ துக்கத்தின் குறிகளாகவோ தோன்றவில்லை. ஆன்மா வானது, ஸ்தூலதேகத்தோடு இதுகாறும் வைத்திருந்த கூட்டுறவைச் சாசுவதமாக விலக்கிக் கொள்கிறதென்றே தோன்றியது.

ஸ்தூல தேகத்தின் தலையைச்சுற்றி எழுகிய, மிருதுவான, பருத்த ஓர் ஒளி சூழ்ந்து கொண்டது. மூளையும் சிறு மூளையும், தங்களுடைய உட்புறங்களை விரித்துக் கொண்டன. அவை தங்கள் தாதுத்தொழில்களைச் செய்யாமல் நின்றொழிவதை நான் பார்த்தேன். உடனே இவைகளுக்கு மின்சார தாதுவும், காந்த தாதுவும் உண்டாகி, கீழ்த்தரப் பட்ட தேக அமைப்புகளில் ஊடுருவிப்பாய்ந்தன. சாதாரண தேகாரோக்கியத்தின் போது, மற்ற சிற்றங்கங்களைவிட மூளைக்கு எவ்வளவு உறுதி உண்டோ அதைவிடப் பதின்மடங்கு அதிகமான உறுதியை அம்மூளையானது மரணத்தறுவாயில் பெற்றது.

## ஜீவன் பிரிவு

பிறகு, மரணம், அதாவது ஸ்தூல தேகத்தினின்று ஜீவன் பிரிவு தொடங்கியது. மின்சாரம், காந்தம், இயக்கம், ஜீவன், உணர்ச்சி ஆகிய இவைகளின் தத்துவங்களை மூளையானது தனக்குள்ளே யிருக்கும் பல அறைகளில் ஆகர்ஷிக்கத் தொடங்கியது. சிரசு, மிகுந்த பிரகாச மடைந்தது. மற்ற இந்திரியங்கள் எவ்வளவுக் கெவ்வளவு குளிர்ச்சி யடைந்தும், இருளடைந்தும் போயினவோ அவ்வளவுக்கவ்வளவு மூளையானது பிரகாசத்தையும் சோபிதத்தையும் அடைந்தது.

மேற்படி ஸ்திரீயின் தலையினின்று எழுந்து அதைச் சூழ்ந்து கொண்டிருந்த பழுத்த நிறமுள்ள தெய்விகச் சூழலில், வேறொரு தலை அமைந்து கொண்டு வருவதை நான் பார்த்தேன். ஆன்ம உணர்ச்சி பெற்றவர்களுக்கே, இந்த இந்திரியாதீதமான நிலைகள் புலனாகு மென்பதையும், ஸ்தூலக் கண்கள் ஸ்தூல வஸ்துக்களையே பார்க்க முடியு மென்பதையும்வாசகர்கள் நினைவிலிருத்திக்கொள்ள வேண்டும். இஃது இயற்கைவிதி. மேலே கூறப்பட்ட புதிய தலையானது, வரவர நன்றாகத்தெரியத் தொடங்கியது. அதனை ஊடுருவிப் பார்க்க முடியாதபடியும், அதனை உற்று நோக்க முடியாதபடியும் அவ்வளவு சிற்றடக்கமாயும் பிரகாசமாயும் அந்தத்தலை இருந்தது. அந்த ஞானத் தலையானது அமைந்து கொண்டிருக்கையில், ஸ்தூலத் தலையைச் சூழ்ந்து கொண்டிருந்த ஒளிச் சூழலானது, கலக்கமடையத் தொடங்கியது. மேற்படிஞானத்தலை நன்றாக அமைந்ததும், இந்த ஒளிச்சூழல் மெதுமெதுவாக மறைய ஆரம்பித்தது. இதனால், மேற்படி ஒளிச்சூழலின் தத்துவங்கள், பிரிக்கக் கூடாதனவா யிருக்கின்றனவென்பதை நான் அறிந்து கொண்டேன். பிறகு மேற்படி ஞானத் தலையானது, எப்படித் தனியாகப் பிரிந்து அமையத் தொடங்கியதோ அப்படியே, படிப்படியாக கழுத்து, புஜங்கள், மார்பு முதலிய எல்லா அவயவங்களும் அமையத் தொடங்கின. இதனால், மனிதனுடைய தெய்விகத் தன்மை அமைவதற்குக் காரணமாயுள்ள எல்லா அணுக்களுக்குள்ளும் ஒருவித ஒருமைப்பாடு நிகழ்வது நன்கு புலனாகிறது.

அந்த ஸ்திரீயின் ஆன்ம தத்துவங்களும், சக்திகளும் ஒற்றுமைப் படுத் தங்களை அமைத்துக் கொண்டதே, அவளுடைய ஆன்ம அமைப்பு வெளிப்படுவதற்கும் ஒழுங்குபடுவதற்கும் காரணமாயிருந்தது. அவளுடைய ஸ்தூல தேகத்தில் காணப்பட்ட குறைகள், அவளுடைய சூக்ஷும சரீரத்தில் காணப்படவேயில்லை. அதாவது, அவளுடைய ஸ்தூல சரீரம் சரியானபடி அமைவதற்குப் பரம்பரையான தடைகள் என்னென்ன இருந்தனவோ அவையாவும் இப்பொழுது விலகிப் போகின்றன. இதனால், அவளுடைய சூக்ஷும தேக அமைப்பானது, மற்றப் பிரபஞ்சசிருஷ்டிப் பொருள்களின் போக்குப்படி, மேற்கண்ட தடைகளுக்கு மேற்பட்டதாய், தன்னை விகாசப்படுத்திக் கொள்ள முடிந்தது.

## சூக்ஷும சரீர அமைப்பு

சூக்ஷும சரீரமானது, மேற்கூறிய விதமாக அமைந்து கொண்டிருக்கையில், ஸ்தூலசரீரமானது தொந்தரவையும் துன்பத்தையும் அநுபவித்துக் கொண்டு வந்ததாக அறையிலிருந்த மற்றவர்களின் வெளிப் பார்வைக்குத் தென்பட்டது. ஆனால் உண்மையில், தேகத்தின் உட்புறமாயுள்ள உயிர்ச் சக்திகள் மூளைக்குச் சென்று அங்கிருந்து வேறொரு வடிவாக அமைவதன் பயனாகவே, மேற்படி துன்பநிலை உண்டாகிறது.

ஸ்தூலதேகத்தின் தலைக்கு நேராக ஜீவனானது கிளம்பியது. ஆனால் ஸ்தூல தேகத்திற்கும் சூக்ஷுமதேகத்திற்கும் நிரந்தரமான பிரிவு ஏற்படுவதற்குச் சற்று முன்னர், உயர்நிலையிலிருக்கும் சூக்ஷும சரீரத்தின் காலுக்கும், படுத்துக்கிடக்கும் ஸ்தூலதேகத்தின் தலைக்கும் இடையே ஓர் ஒளி அல்லது மின்சார சக்தி ஓடிக்கொண்டிருந்ததை நான் பார்த்தேன். தாழ்ந்த நிலையிலுள்ள ஜீவனானது, உயர் நிலையை அடைவதையே மரணமென்று சொல்லப்படுகிறதென்று அப்பொழுதே தெரிந்து கொண்டேன்; கீழான சரீரத்திற்கும், கீழான வாழ்க்கைக்கும் பதிலாக, உயர்வான சரீரத்தையும் அதற்குரிய சக்திகளையும் ஆனந்தங்களையும் அடைவதையே மரணமென்று கூறுவதாக அறிந்து கொண்டேன். இந்தப் பூவுலகத்தில் ஒரு குழந்தை பிறப்பதும் ஸ்தூல தேகத்தினின்று ஜீவன் பிரிந்து சென்று வேறோர் தேகமாக அமைவதும் எல்லா அம்சங்களிலும் ஒன்றாகவே இருக்கிறது. புதிதாகப் பிறக்கும் குழந்தைக்குக் கொப்பூழ்க்கொடி எப்படி இருக்கிறதோ, அப்படியே சூக்ஷும சரீரத்திற்கும், மேலே கூறப்பட்ட மின்சார சக்தி நூலானது இருக்கிறது. இந்த மின்சார சக்தி நூலானது, சில நிமிஷங்கள் வரை, ஸ்தூலதேகத்தையும் சூக்ஷும தேகத்தையும் சம்பந்தப் படுத்தி வைத்துக் கொண்டிருந்தது. பிறகு இந்தநூல் அறுபட்டதும், மேற்படி மின்சார சக்தியின் ஒரு சிறு அம்சம், கீழே படுத்துக் கிடக்கும் ஸ்தூல தேகத்தை வந்து சேர்கிறது. இந்தச் சக்தியானது, தேகத்தின் எல்லாப் பாகங்களிலும் சென்று தங்குவதால், தேகம் உடனே சீர்குலையாமல் இருக்கிறது.

ஸ்தூலதேகம் நன்றாகக் கெட்டுப் போகத் தொடங்கிய பிறகே, அதனை மண்ணில் புதைக்க வேண்டும். மேலே

நான் குறிப்பிட்ட கொப்பூழ்க் கொடியானது, சில சமயங்களில் அறுபட்டுப் போவதில்லை; ஸ்தூல தேகத்திற்கும் ஜீவனுக்கும் நுண்ணிய சம்பந்தம் இதன் மூலமாக ஏற்பட்டிருக்கிறது. சிலர், இறந்துபோன சில நாட்களுக்குப் பிறகோ அல்லது சில மணி நேரத்திற்குப் பிறகோ,—ஒரு பிரயாணத்தி லிருந்து அமைதியாகத் திரும்பி வருவதைப் போன்று—உயிர் பெற்றுத் தங்கள் சூட்சும உலக அநுபவங்களைக் கூறுவதனகாரணமு இதுவேயாகும். இதனையே சுழுத்தி அவஸ்தை யென்றும், மூர்ச்சையென்றும், தூங்கிக் கொண்டே நடத்தலென்றும், ஆன்ம பரவசமென்றும் பலவிதமாகக் கூறுகின்றனர். இந்த நிலைகளில் பல விதப் பாகுபாடுகள் உண்டு. ஆனால், ஆவியானது, தேகத்தினின்று செல்லாமல் தடுக்கப்பட்டு, சில மணி நேரமோ, அல்லதுசில நிமிஷங்களோ மத்தியமான ஒரு நிலையில் வைக்கப்பட்டிருந்தால், அப்பொழுது மனதில், முன்னைய அநுபவத்தின் ஞாபகம் நிலைத்து நிற்பதில்லை. இந்த ஞாபக மறதியே, ஆன்மா அழிவற்றது என்ற கொள்கை மறுக்கப் படுவதற்கு ஆதாரமாகக் காண்பிக்கப் படுகிறது.

நுண்ணிய கொப்பூழ்க் கொடி அல்லது மின்சாரக்கம்பி மூலமாக மட்டும், தேகத்தின் மீது தனது ஆதிக்கத்தை நிலை நிறுத்திக் கொண்டு, ஜீவனானது, ஸ்தூல தேகத்தினின்று அடியோடு பிரிந்துவிட்ட பிறகே, அந்த ஜீவன், இந்தத் தேகத்தையும் அது சம்பந்தமான விஷய வாசனைகளையும், மணிக் கணக்காகவோ, நாட்கணக்காகவோ விடுத்திருக்க முடிகிறது. பிறகு சந்தோஷமான நினைவுகளுடன் பிரபஞ்ச வாழ்க்கைக்குத் திரும்பி வர முடிகிறது.

## ஜீவனின் அநுபவங்கள்

ஆன்மா, ஸ்தூல தேகத்தினின்று பிரிந்தபிறகு என்னென்ன நிலையை யடைகிற தென்பதை நான் கூர்மையாகக் கவனித்து வந்தேன். முதலில் பூமிக்கடுத்த நிலையிலுள்ள சிதாபிசத்தைச் சிறிது கஷ்டத்துடனேயே நுகர ஆரம்பித்தது. ஆனால் சில விநாடிகளுக்குள், மிகுந்த சுலபமாகவும், சந்தோஷமாகவும் இயற்கையின் சித்துத் தத்துவங்களை இழுக்கவும் வெளிவிடவும் அதற்குச் சாத்தியமாயிற்று. பிரபஞ்ச வாழ்க்கையில் ஈடுபட்டிருந்தபோது அந்தப் பெண்மணிக்கு எந்தவிதமான தேக அமைப்புகள் அமைந்திருந் தனவோ, அதைவிட எல்லா அம்சங்களிலும் அழகுடைய தாயும் அபிவிருத்தி யடைந்ததாயுமுள்ள சூக்ஷும சரீரம் ஏற்பட்டிருப்பதை நான் இப்பொழுது கண்டேன். அதாவது மரணத்திற்கு முன்னிருந்தவைகளைப்போல் இப்பொழுது இதயம், வயிறு, ஜீரணப்பை, சுவாசப்பை முதலியன யாவும் காணப்பட்டன. இஃது ஆச்சரியமான, ஆனால் ஆறுதல் அளிக்கக்கூடிய உண்மை!

அவளுடைய சூக்ஷும சரீரத்தில் காணப்பட்ட அபிவிருத்திகள் அதாவது மாற்றங்கள், அவ்வளவு குறிப்பிடத் தக்கனவாகவோ, சமய இயல்பைக் கடக்கக் கூடிய விதமாகவோ இல்லை. மற்றும், அவை அவளுடைய இயற்கைத் தோற்றத்தையோ, உலக இயல்புகளையோ அடியோடு மாற்றவில்லை. அவள் பழையபடியே இருந்தாள். அவளுடைய நண்பர்கள் பார்த்

தால், நோய்வாய்ப்பட்ட ஒரு நண்பர் நம்மைவிட்டுப் பிரிந்துசென்று பிறகு தேகாரோக்கியத்துடன் திரும்பி வந்தால் நாம் எப்படி ஆச்சரியமும் சந்தோஷமும் அடைவோமோ அப்படியே, "ஓ! இப்பொழுது நீ எவ்வளவு நன்றாகக் காணப்படுகிறாய்! எவ்வளவு அபிவிருத்தி யடைந் திருக்கிறாய்?" என்று கூறுவார்கள். சூக்கும சரீரத்தில் காணப்பட்ட அபிவிருத்திகள் அவ்வளவு அழகுடையவைகளாக இருந்தன.

சூக்கும உலக வாழ்க்கைக்குரிய புதிய தத்துவங்களுக்கும், உயர்ந்த உணர்ச்சிகளுக்கும் அவள் தனனைப் பழக்கப்படுத்திக் கொள்வதை நான் பார்த்தேன். புதிய விழிப்புப்பெற்ற, விரைவான விகாசத்தை அடைந்து கொண்டிருக்கிறதான அந்த ஆன்மாவின் உணர்ச்சிகளை நான் குறிப்பாகக் கவனிக்கவில்லை. ஆனால், ஸ்தூலசரீரத்திலிருந்து சூக்கும தேகத்திற்கு மாறுகிறபொழுது அவள் ஒரேவித நிதானத்தைப் படைத்திருந்தாள். பிரபஞ்சத்தைவிட்டு அவள் பிரிந்துசென்றதற்காக அவளுடைய குடும்பததினரின் ஓயாத புலம்பலில் அவள் கலந்துகொள்ளவில்லை. சில்லிட்டுப் போன, உயிரற்ற ஓர் உருவத்தைக் கண்டே அவர்கள் அழுகிறார்கள் என்பதை அவள் ஒரே பார்வையில் கண்டுகொண்டாள். அவர்களுக்கு, மரணத்தைப் பற்றிய உண்மையான ஞானமின்மையினாலேயே, ஸ்தூல சரீரத்தின் பிரிவுக்காக வருந்துகிறார்கள் என்பதையுந் தெரிந்து கொண்டாள்.

மனித சமூகத்தைச்சேர்ந்த பெரும்பாலோர் மரணத்தைப்பற்றி மேற்போக்கான ஞானம் படைத்திருப்பதனாலேயே, நண்பர்களோ உறவினரோ ஸ்தூல தேகத்தினின்றும் பிரியும்போது அதிகமாக அழுகிறார்கள். இவர்கள, ஸ்தூல தேகத்தின் மரணம், ஜீவனின் அழிவு என்று கருதுகிறார்கள். ஒரு மனிதன் இயற்கையான மரணத்தை யடைந்தால், ஆன்மா எவ்விததுன்பத்தையும், அநுபவிப்பதில்லை யென்று உண்மை அறிய விழைவோர்க்கு நான் உறுதி கூறுகிறேன். அல்லது ஸ்தூல சரீரமானது, நோயினால் அழிந்து போனாலோ, பிற காரணங்களால் குலைக்கப்பட்டாலோ, ஆன்மா உரு வழிவதில்லை; தெளிவற்றுப் போவதுமில்லை. உன் அன்பான பார்வைக்குப் பதிலளிக்க முடியாத உயிரற்ற பிணத்தைப் பாராமல், சூக்குமக் கண்கொண்டு நீ பார்த்தால், உன்னெதிரே அதே உருவம், முன்னிலும் அழகாக உயிருடனிருப்பதைக் காண்பாய். ஆதலின், ஆன்மாவானது, இந்தப் பிரபஞ்ச வாழ்கையினின்று விடுதலையடைந்து, சூக்கும உலகத்திற்குச் செல்வதைக் குறித்து நாம் மகிழ்ச்சியே யடைய வேண்டும். ஆன்மாவானது, தேகத்தை விட்டுப் பிரிந்து, இதைவிட உயர்ந்த சிறந்த உலகத்தில் வசிக்கச் செல்லும்போது நாம் அழுவதைக் காட்டிலும், உலகத்தில் நடைபெறும் பெரும்பான்மை விவாகங்களுக்காகவே நாம் அழவேண்டும்.

## ஜீவனின் பிரிவு

நான் பார்த்த மாற்றம் ஏற்படுவதற்கு, அதாவது ஸ்தூல தேகத்தினின்று ஜீவன் பிரிந்து சூக்கும தேகத்தை யடைவதற்கு இரண்டரை மணிநேரம் ஆயிற்று. ஸ்தூல சிரசி

னின்று மேலெழுந்து தன்னைப் புனர் நிர்மாணஞ் செய்துகொள்ள ஒவ்வோர் ஜீவனுக்கும் இந்த இரண்டரை மணி நேரமே பிடிக்கிறதென்று சொல்ல முடியாது. மேற்படி ஸ்திரீ யின் ஸ்தூல தேகத்தினின்று பிரிந்த ஜீவனானது, தன்னைச் சூழ்ந்துள்ள புதிய தத்துவங்களுக்குப் பழக்கமானதும், தனது மனோசக்தியால் தேகத்தின் மேலிருந்த உயர்நிலையிலிருந்து இறங்கி, அந்த ஸ்திரீ நோயுடன் படுத்துக்கொண்டிருந்த படுக்கை யறையினின்று வெளியே சென்றது. அப்பொழுது கோடைகாலமானதால் எல்லாக் கதவுகளும் திறக்கப்பட்டிருந்தன. அதனால், அந்த ஆன்மா வெளியேறுவதற்கு எவ்வித தடையும் உண்டாகவில்லை. ஸ்தூல தேகத்தில் நாம் எந்தக் காற்றை மூச்சு விடுகிறோமோ, அந்தக் காற்றை சூக்கும சரீரத்தினால் சுலபமாகக் கடந்து விடலாமென்ற உண்மையை அப்பொழுதே நான் முதலில் கண்டேன். ஸ்தூல சரீரத்திலிருந்து கொண்டு நாம இந்தப் பூமியை எப்படிக் கடந்து செல்கிறோமோ அப்படியே மேற்படி ஜீவனானது ஆகாயத்தைக் கடந்து சென்றது. வீட்டினின்று வெளியேறியதும், இந்த ஆன்மாவை, சூட்சும உலகத்திலிருந்துவந்த வேறு இரண்டு ஆன்மாக்கள் சந்தித்தன. ஒன்றுக்கொன்று சிறிதுநேரம் அளவளாவியதும், மூன்றும் ஒன்று சேர்ந்து பிரபஞ்சத்தைச் சூழ்ந்திருக்கும் பரமாணு வாகாயத்தின் மூலமாகச் சாய்வாய் மேலேறிச் சென்றன. அவை மூன்றும் இயற்கை யாகவும், சகோதரப் பான்மையுடனும் ஆகாயத்தைக் கடந்தன. ஒரு மலையின் சாரலில் அவை நடந்து செல்வதுபோலவே எனக்குத் தோன்றியது. அவை தொலைதூரம் செல்லும்வரை நான் பார்த்தேன். பிறகு என்னுடைய ஜாக்கிரதா நிலைக்கு நான் வந்துவிட்டேன்.

---

# சான்றோர்க்கணி

[அ. வரதநஞ்சைய பிள்ளை]

இத்தலைத் தொடர் மொழியில், சான்றோராவார் யாவர்? அவர்க்கு அணியாவது யாது? அஃதெவ்வாறு? எனக் கேள்விகளை எழுப்பி முறைப்பட ஆய்ந்து உண்மை காண்பாம்.

இச் சொற்றொடர், ஆசிரியர் வள்ளுவனாரால் இல்லற வியலில், நடுவு நிலைமை என்னும் அதிகாரத்தின் கண்ணே,

"கேடும் பெருக்கமு மில்லலல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி"

எனவும்,

"சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ [லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி"

எனவும், வருஞ்செய்யுட்களின் இறுதியிற் கூறப்பெற்றதாம். சான்றோர் சால்புடையோர் சால்பு என்னும் பண்பு நற்குணங்கள் எல்லாம் ஒருங்கு நிரம்பி யமைதலை உணர்த்தும். ஆகவே எல்லா நற்குணங்களும் குறைவின்றி முற்ற நிரம்பிய தூயோராய நல்லோரே சான்றோரெனப் பெறுவர்.

சால்பு என்பதன் தன்மைகளைக் கூற வந்த விடத்தே நம் செந்நாப்போதார்,

"கடனென்ப நல்லவை யெல்லாம் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு"

எனப் பொது வகையாற் கூறிப் பின்னர் சிறப்பு வகையாக,

"அன்புநா ணொப்புர வு கண்ணோட்டம் வாய்மையோ
டைந்து சால்பூன்றிய தூண்"

"....பிறர்தீமை சொல்லா நலத்தது சால்பு"

"ஆற்றுவா ராற்றல் பணிதலது சான்றோர்
மாற்றாரை மாற்றும் படை"

"சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி
துலையல்லார் கண்ணுங் கொளல்"

"இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு"

என மொழிந்து விதந்தனர். இவ்வாற்றால், சான்றோர்பால் காணப்படும் சிறப்புச் செயல்களாவன :—

யாவரிடத்தும மனங்கசிந்த அன்பு பெருக்கலும், தீயசெய்ய நாணலும், பிறர்பாற் கைம்மாறு கருதாது இயன்றகடப்பாடுகளை நாளும் புரிதலும் மன இரக்கம் மிக்குடைத்தாதலும், உண்மையே பேசுதலும் * பிறர் தீமையை வெளியிடாமையும், ஒரு நற்காரியத்தை முற்றுவிக்கும் போது யாவரையும் தாழ்மையுடன் வேண்டித் துணைக் கோடலும், தம்மின் மிக இழிந்தோர்க்கும் தம்மைக் குறைந்தவராகக் காட்டிக் கோடலும், தமக்குத் துன்பம் புரிவோர்க்கும் மாறாக நன்மையே செய்தலும், இவைபோன்ற பிறசெயல்களுமாம் எனப்பெறுதும்.

உலக முய்வதற் கெனவே தோன்றித் தமக்கென வாழாப் பிறர்க்குரியாளர்களாகிய இச்சான்றோர் விரும்பும அணிகலன்கள் இரண்டு என மேற்றலைப்பிற் கண்டாம். அவற்றுள் ஒன்று, துன்பமோ இன்பமோ தொடரும போழ்து ஒரே பெற்றிப்பட்டு உள்ளம் சிறிதும் மாறாது செந்நெறி கடைப்பிடித்து ஒழுகுவது. மற்றொன்று, இருவர் வாதிகள் கூற்றுக்களையும் நன்கு கேட்டு நீதியை உள்ளவா றுரைத்தல். இவ்விரண்டு அணிகளும், உள்ளங் கோடாமையையே குறிப்பதாகலின், ஆசிரியர் கூறியது கூறல் எற்றுக்கு? என்பது முதல் வினா ?

நெஞ்சத்துக் கோடாமையை முன்னும், ஒருபாற் கோடாமையைப் பின்னும் வைத்ததேன் ? என்பது இரண்டாம் வினா.

இவ்விரு குறள்களுக்கு மிடையேயுள்ள வேறு, இரண்டு குறள்கள் "ஒரமுடையோன் கேடடைவான்" என்றும், நடுநிலைமை யுடையோர் ஒருகால் பண்டை வினைப்பயத்தாற் கேடடைய நேரினும், அக்கேடும், உயர்ந்தோரால் பெருஞ் செல்வமெனவே கருதப்பட்டு நன்குமதிப்ப விளைப்பதாகு மென்றும் முறையே கூறுகின்றன. இவை கொண்டு, கேடும் ஆக்கமும் முன் பிறவி வினைப் பயனை நியதி கூட்டவரு மென்னும் உண்மை கண்டு நடுநிலைமையி னீங்காதொழுக வேண்டுமென ஆசிரியர் குறித்தன ரென்பர் ஒரு சாரார்.

* பிறர் தீமையை வெளியிடின் எதிர் முறுவரோ என்றும், அவரதியல்பு அஃதெனின் இழிவு கூறல் தகாதே என்றும் அஞ்சுதலால்.

அங்ஙனம் நடுவுடையோர், இரு
வாதிகளின் வழக்கையுங் கேட்டு
நீதி புகல்பவ ரன்றே. அற்றாகவும்
ஒரு பாற் கோடாமை வேண்டு
மென• மறித்துங் கூறிய தென்னை ?
எனின், முற்கூறியது அவரது நெஞ்
சத் திட்பச் செம்மை. பின்னது,
உரைக்குஞ் சொன்னிலை குறித்தது
என்பர். நன்று, சமன் செய்து சீர்
தூக்குந் துலாக்கோல் எதற்குவமம் ?
எனின் ஒருபாற் கோடாத உள்ளத்
திற்கே ஒப்பாவது என மொழிவர்.
அங்ஙனமாயின், முற்கூறியதும் நெஞ்சு
கோடாமையையே யன்றோ ? அதனோ
டிதனிடை வேற்றுமை காணுமாறில்
லையே எனின் முற்கூறி யாங்கே கூறி
ஒழிப்பர். ஆதலின், முதற் குறட்கு
நுண்ணிய விழுப்பொருள் வேறுளதா
கல் வேண்டுமெனக்கருதற்கிடனுண்டு.
அஃதாமாறு கூறுதும்:

யாவரும் தம்மிடத் துள்ளவற்றை
விட்டு இல்லாத பொருள்களையே ஈட்
டுவ தியற்கை. அவ்வாறே பிறவியியல்
பாக நாம்பிறக்கும் அந்நாளேஏற்பட்டு,
அநுபவித்தன்றி வேறெவ் வகையா
னும் மாற்றிப் போக்கற் கியலாத வண்
ணம் அமைந்துள்ள கேடும் பெருக்க
மும் குறித்து அஞ்சுதலும் அகமகிழ்
தலும், கேட்டை மாற்றி ஆக்கத்
தையே விளைப்போமென முயற்சித்த
லும் பயனில் செயலே யாமென
வுண்மை தேறி, அவ்வக்காலங்களிற்
றத்தங் கடப்பாடுகளை ஒழுங்குறப்
புரிந்து செல்லத் துணிவுறும் செப்ப
மும் திட்பமுமுடைய மன அமைதி
யொன்றே நம்பாலிதுகாறுமில்லாதது.
ஆகலின் அதனையே தேடற்குப் பல்
லாற்றானு முயற்சிப்பா மெனக் கருது
தலே சான்றோர்க்கணியாம் எனக்
கூறினார் என்க.

இம்மைக்கும் மறுமைக்கும் ஏற்ற பெருமபயன் இவ்வுள்ளச் செம்மை ஒன்றாலேயே விளையுமாகலின் இஃது முதலில் வைத்தோதப்பட்டது.

சான்றோ ரியல்பு ஈதேயாம் எனப் பெரியபுராணத்தில் அருண்மொழித் தேவரும் அடியார் பெருமை கூறு மிடத்தில், "கேடும் செல்வமும்கெட்ட திருவினார்" எனவும், பிரபுலிங்கலீலை ஆசிரியரும்,

'கேடும் செல்வமும் கீர்த்தியும் நிந்தையும்
வேறற நோக்குதல்..................
கூடுந்தன்மை கொளுமனம் நனமனம்'

என்றுங் கூறிப்போந்தனர்.

சைவ சித்தாந்தத்தில் இருவினை ஒப்பு எனக் கூறப்படும் சிறந்த பக்குவமு மிஃதே. இவ் விருவினையொப்பு உண்டாய வழியே மலபரிபாகம், சத்திநிபாதம் முதலிய வீடுபேற்றிற்கு முன்றோன்றும் காரண காரியங்கள் ஒருதலையா னெய்துவன. ஆசிரியர் கருத்திதுவா யின்மையானே, ஒருபாற் கோடாது வழக்குரைக்கும் அவரதுலக ஒழுக்கம் பிற்கூறப்பட்டது.

துறவற நெறிக்குரிய இருவினை ஒப்புத் தன்மையை நடுவுநிலைமை கூறும் இல்லற வியலில் ஓதியது சாலாதெனின், நன்று சொன்னாய்! 'ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல்' என்னும் உத்திகொண்டு ஆசிரியர் அங்ஙனங் கூறுதல் இயல்பென்க. இங்ஙனமே,

"ஒருமையு ளாமைபோல் ஐந்தடக்க லாற்றின்
எழுமையு மேமாப் புடைத்து"

எனவும்,

"நிலையிற் றிரியா தடங்கியான் றோற்றம்
மலையினு மாணப் பெரிது"

என்றும், துறவுக்குரிய ஐந்தவித்

தொழுகு முறையினையும் அடக்க முடைமை அதிகாரப்பட்ட வழி இல்லற வியலில் வைததோதியதூஉங் காண்க.

முறைப்பட இல்லற நெறியில் வழா தொழுகுவோர்க்கே துறவு நெறியும் கைவந்து பயன் பெறுதல் கூடுமென்க.

“ காமஞ் சான்ற கடைக்கோட் காலை......
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே ”

என்ற தொல்காப்பியனுர்க்கு மிஃதே கருத்தாதலானு மறிக. ஆதலின், இல்லற நெறிககே யுரித்தெனவரை யறை செய்யப் படாதனவாய்த் துறவு நெறிக்கும் பயன் படும் பொதுவாய அறங்கள், இவ் விரண்டையும் தனித் தனிக் கூறும் இயல்களுள் அமயம் நேர்ந்துழி எவ்விடத்தேனுங் கூறுதற் குரியவெனக் கண்டோம். இனி இதில் ஐயுறவில்லை. இவ்வாறு கேடும் பெருக்கமும ஒரு நிகரனவென வுண்மை கண்டோருள்ளம் என்றும் துன்பங்காணுது இன்பத்தையே துய்க்குமாற்ருல் அவர்க்கும் கேடு ஒரு குறைவாகத் தோன்ருது. உயர்ந்தோரும் அவரது தகுதியின் மேன்மையை நன்குணர்ந்து நன்கு மதிப்பார்களாதலின் பிறர்க்கும் இழிவுகாட்டாது பெரும் பேருகவே முடியும். நடுவு நிலைமையிற் றிறம்பி ஆக்கம்பெறற்கு முயல்வார்க்குஊழின் உதவி யில்வழி அது கூட்டாமையே யன்றி அத்தீய பண்பால் கேடும் வருவிக்கப் படுதல் ஒருதலையே யாகலின் நல்லோர்க்கும் அல்லோர்க்கும் நடுவு நிலைமை விழுமிய பயனை வருவிக்குமெனத் தெரிவித்தற்கே,

“ கெடுவல் யான் என்பதறிக.....”

“ கெடுவாக வையாது லகம்......”

என்னும் இரு குறட்களையும் இடைப் பெய்தமைத்ததென்க.

உண்மை இவ்வாருதலின் இல்லறம் பற்றி ஒழுகுந் தலைமைப் பாடுடையோர், இருவர் வாதிகளின் வழக்கினும் நீதி தேர்ந்துண்மை கூறுக. பரிதண முதலியன வேட்டோ அன்றித் தமர் தம நண்பர்க்கு நண்பர், தமக்கு வேண்டியோரால் கண்ணோட்ட முடையர் எனப் பல காரணங்களில் ஒன்று கொண்டே, வழக்கல்லா வழக்கை யுரைததல் அடாது எனக் கூறியது “ சமன் செய்து ” என்னுங் குறளென்க.

இதுகாறுங் கூறிப்போந்த வாற்ருல் நற்குணங்களெல்லாம் நிரம்பிய சான்ருேர்க்கு அழகும் மதிப்புநகரும் பேரணிகள் இரண்டுள. ஒன்று இருவினைப்பயனுகத் துன்பஇன்பங்கள் முன் அமைத்தபடி எய்துவன வெனப் புறக்கணித்து அவற்றைக் குறித்துத் துன்புறலும் இன்பமடைதலுமிலராய் ஒரு நிலைமைப் பட்ட உள்ளத்தினராதல், மற்ருென்று, உலகியல்புகளில், கோடி கொடுப்பினும் தம்முடைய நாக்கோடாமல் உண்மை ஓதி வழக்குத் தீர்த்தல் என்றும, இவ்வாறன்றி ஓரங் கூறிப் பொருளீட்டுவானேல் அத்தீவினை தீய பயந்தே விடுமாகலின் தப்பாது கேடு தருதலானும், ஒருகால் நடு நிலைமையுடையார்க்கும கேடு வருமே எனின் அது கேடாக அவரும் கொள்ளார். உயர்ந்தோரும் இகழாது செல்வத்தோடொக்கு மென மதிப்பர் ஆகலானும் இல்லற துறவறங்கட்குப் பொதுப்பட நிற்கும் நடுவு நிலைமையின் முன்னேதிய அணி சாலச் சிறப்புடையதென்றும், பின்னது இல்லறப்பாங்கிற் குரித்தாய் மறுமைக்கும் பயன்றரும் காரணமாய் அமைவதா மென்றும் அறிகின்ருேம்.

# திருவிழாவில் சமயபோதனை

1. திருநாவுக்கரசு சுவாமிகள் திருவவதாரத் தலமாகிய திருவாமூரில் சித்திரைச் சதயத்தன்று ஒரு பெருங் கூட்டம் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்கள் தலைமையில் கூடிற்று. சமாஜக் காரியதரிசியும், திரு. ச. சச்சிதாநந்தம் பிள்ளையவர்களும் அப்பர் சுவாமிகள் சரித்திரம், தேவாரம் முதலியவற்றைப்பற்றிச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினர். அப்பர் சுவாமிகள் தேவாரம் சமாஜத்தின் புதிய சுத்தப்பதிப்பு ஊர்வலமாகக் கொண்டுவரப்பட்டு வெளியிடப்பட்டது.

2. காஞ்சீபுரம் என வழங்கும் திருக்கச்சியேகம்பத்தில் நடைபெற்ற பிரஹ்மோத்ஸவத்தில் நமது சமாஜத்தின் சார்பில் எழாந்திருநாள் ஒன்பதாந்திருநாள் ஆகிய இரண்டு நாட்களிலும் முறையே "சேக்கிழார் கவிநயம்" "பதிபுண்ணியம்" எனும் பொருள்கள்பற்றி சமாஜத்து வெளியூர் நிர்வாக சபையினருள் ஒருவராகிய காவித்தண்டலம் - சைவத்திருவாளர் வேதாசல முதலியாரவர்கள் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள்.

3. கூவம் என வழங்கும் திருவிற்கோலத்தில் நடைபெற்ற திருவிழாவில் நான்காம் நாள் ஐந்தாம் நாள் (4, 5–5–30) உத்ஸவங்களில் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள் தலைமையில் சமாஜக் காரியதரிசியார், திரு. பா. கந்தநரசிம்ஹம், திரு. கே. வைத்தியநாத முதலியார், திரு. அ. முத்துச்சாமி முதலியார், திரு. விஜய கந்தசாமி முதலியார், திரு. சு. வை. துரைசாமி முதலியார், திரு. சு. ரா. அண்ணாமலை முதலியாரவர்கள் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள். சமாஜத்தின் கிளைச்சபை யொன்று தாபிக்கப்பட்டது.

---

## சைவத்திறவு

ஸ்ரீமான் - திரு. வி. கலியாணசுந்தர முதலியார் இயற்றியது. "**தென்னாடுடைய சிவனே போற்றி - எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி**" என்னும் உரையைப் பீடிகையாகக் கொண்டு எழுதப்பட்டது. இந்நூலிடை, மாணிக்கவாசகனார் நிலை, திருவண்டப்பகுதி நுட்பம், நினைப்பற நினைத்தலின விளக்கம், மூவித உடலங்களின் பாகுபாடு, ஒரே கடவுளுண்மை, தென்னாடுடைய சிவன் எந்நாட்டவர்க்கும் இறை என்பது, இறைக்கும் இயற்கைக்குமுள்ள தொடர்பு, சேய்சிவம் என்பது, சமரசம், இறைவனை யுணரும் வழி, இறைவனது சொரூப தடத்த இயல்புகள், காவியங்களின் இன்றியமையாமை, நம்பிக்கையின் அவசியம், ஆராய்ச்சியின் அளவு, சைவத்திறவுள்ள இடம், கடவுளின் அகண்டாகாரப் படம், "தோடுடைய செவியன்" என்பதின் உள்ளுறை, ஆண்டவன் பெண் ஆண் வடிவமாக விருக்கும் நுட்பம், தோடு விடை மதி சுடலை முதலியவற்றின் உட்பொருள், கோயில்களின் நோக்கம், தற்காலக் கோயில்கள், சாதிப்பேய், நூல்களுங் கோயில்களே என்பது, தவப்பேறு முதலிய பொருள்கள் சுருங்கிய முறையில் ஆங்காங்கே விளக்கப்பட் டிருக்கின்றன. உருவ வழிபாட்டின் நுட்பமும், இன்றியமையாமையும் விளக்கமாக இந்நூற்கண் ஓதப்பட்டிருக்கின்றன. இந்நூலைப் படிப்போர்க்கு உருவ வழிபாட்டைப்பற்றிய பலதிற ஐயப்பாடுகள் நீங்கும். **விலை அணா 8.**

---

## முருகன் திருவருட்பா

வடலூர் - இராமலிங்க சுவாமிகள் அருளிச் செய்தது; திருவருட்பாவில் ஐந்தாந் திருமுறையாகத் திகழ்வது. இராமலிங்க சுவாமிகள் திருவருட்பேறு குறித்துத் திருத்தணிகையில் முருகப் பெருமான் முன்னிலையில் "அழுத அழுகை" இந்நூலில் தேங்கி வழிகிறது. "முருகன் திருவருட்பா" கருங்கல் மனதையுங் கரைத்துக் கரைத்து இளகச் செய்யும்; திருவருட்பேற்றில் காதல் எழுப்பும். அதை ஒருகால் ஓதுவோரும் அன்பராதல் ஒருதலை.

**விலை அணா 8.**

# அப்பர் சுவாமிகள் தேவாரம்

## சமாஜத்தின் சுத்தப்பதிப்பு வெளிவந்து விட்டது

### பிரதி ஒன்றின் விலை அணா பத்து

ஐம்பது பிரதிகட்குக் குறையாமல் முன் பணம் கொடுத்து வாங்குவோருக்கு ரூபாய் ஒன்றுக்கு இரண்டணா வீதம் கழிவு தரப்படும். வி. பி.யில் பிரதிகளை அனுப்ப இயலாது. புத்தகங்களைப் பெற விரும்புவோர் புத்தகக் கிரயம், தபாற்கூலி, ரிஜிஸ்தர் செலவு, பார்சல் செலவு முதலியவற்றிற்குத் தேவையான தொகையைக் கீழ்க்குறித்த வண்ணம் முன் பணமாகவே அனுப்ப வேண்டும்.

கிரயம், தபாற்கூலி, ரிஜிஸ்தர், பார்சல் செலவுள்பட

| | | | |
|---|---|---|---|
| ஒரு புத்தகம் பெறுவதற்கு ரூபா 1—0—0 | | 5 புத்தகங்கள் பெறுவதற்கு ரூபா | 4 4 0 |
| 2 புத்தகங்கள் ,, | 1 13 0 | 10 புத்தகங்கள் ,, ,, | 8 2 0 |

பத்து புத்தகங்கட்குமேலாயின் ரயில்வே பார்சலாகப் பெற்றுக்கொள்வதுதான் வான வழியாகும்.

இங்ஙனம் :

150, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு,
சென்னை.
10—5—1930

ம. பாலசுப்ரஹ்மண்யம், காரியதரிசி.
சைவ சித்தாந்த மகா சமாஜம்

---

## சைவ சித்தாந்த மகா சமாஜத்தில்

# விற்பனைக்குரிய புத்தகங்களின் அட்டவணை

| | ரூ. | அ. |
|---|---|---|
| " மலர் ஒன்று (பைண்டு பிரதி) | 2 | 0 |
| ம் " மலர் | 2 | 0 |
| சுந்தரர் தேவாரம் | 0 | 4 |
| அப்பர் தேவாரம் | 0 | 10 |
| திருவாசகம் (கலிக்கா) | 0 | 4 |
| திருக்குறள் விளக்கம் - அறத்துப்பால். | 3 | |
| ஷை பொருட்பால். | 4 | |
| ஷை காமத்துப்பால். | 1 | 12 |
| ஷை தொகுப்புரை. | 0 | 8 |
| புலால்மறுத்தலுக்கு 50 காரணங்கள்... | 0 | 2 |
| சர்வமத சம்மதம் ... ... | 0 | 2 |
| திருநாளைப்போவார் தீக்குளித்ததேன். | 0 | 2 |
| நள்ளிரவில் நகர்க்காட்சி | 0 | 2 |
| கடவுள் ... | | 2 |
| பண்மயத்த மொழிப்பாவை | | 2 |
| சமயத்தின் சாரம் ... | | 2 |
| சமய வளர்ச்சி ... | | 2 |
| சுயமரியாதை சம்பாஷணை | | 2 |
| திருஞானசம்பந்தர் (நாடகம்) | | 8 |
| சைவப் பெரியார் தனிக்கூட்ட மானங்கள் ... | 0 | 2 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| சங்க நூல்களும் சைவமும் | 0 | 2 |
| சைவர் மகாநாடு, திருப்பாதிரிப்புலியூர். | 0 | 8 |
| அறுசமயப் பகுதி ... ... | 0 | 2 |
| அறுபத்துமூன்று நாயன்மார் சரித்திர உண்மை ... ... | 0 | 4 |
| சிவஞானபோதம் ... ... | 0 | 2 |
| அஷ்டப்பிரகரணம் ... ... | 3 | 0 |
| சிவார்ச்சனா சந்திரிகை ... ... | 1 | 8 |
| சைவபூஷணம் ... ... | 1 | 0 |
| சைவ சித்தாந்த பரிபாஷை ... | 0 | 8 |
| சிவஞான சித்தியார் மூலமும் பொழிப்புரையும் ... ... | 2 | 8 |
| சிவஞான போதச் சிற்றுரை விளக்கம் | 3 | 8 |
| சர்வஞானோத்தரம் ... | 1 | 8 |
| தசகாரிய விளக்கம் ... | 0 | 8 |
| The Grace of Lord Siva (ஆங்கிலத்தில்) ... | 0 | 4 |
| ;க்குறட் சாரம் | 0 | 8 |
| ஷை | 0 | 10 |
| | 0 | 4 |
| சிவார்ச்சனைத் திருமந்திரம் | 0 | 1½ |

சுந்தரர் தேவாரம் மொத்தமாக வாங்குவோர்க்கு ரூபாய் ஒன்றுக்கு ஐந்து பிரதிகள் வீதம் கொடுக்கப்படும். மேற்கண்ட விலைகள் புத்தகக் கிரயம் மட்டுந்தான். தபாற்கூலி வேறு. பார்சல் செலவு, தபாற்கூலி, வி. பி. செலவு முதலியன வாங்குவோரே செலுத்தவேண்டும்.

மேலேகண்ட அட்டவணையிலுள்ள புத்தகங்கள் தேவையாயின், சமாஜ ஆண்டுவிழா முதலிய கூட்டங்கள் நடக்குமிடங்களிலும் பெறலாம்; கீழ்வரும் விலாசத்துக்கு முன்பணம் அனுப்பியும் பெற்றுக்கொள்ளலாம்.

ம. பாலசுப்ரஹ்மண்ய முதலியார், காரியதரிசி.
சைவ சித்தாந்த மகா சமாஜம்,
150, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை.

---

Printed at the Sadhu Press, 12, Ganapathi Mudali Street, Royapettah and Published by M. Balasubramania Mudaliar (Editor-in-charge) for the Saiva Siddhanta Maha Samajam, 150, Govindappa Naicken Street, G. T. Madras.

Registered No. M. 2330. "SIDDHANTHAM".
Vol. 3—No. 4.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

சைவசித்தாந்த மகாசமாஜத் திங்கள் வெளியீடு

"எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே"

| மலர் ௩ | பிரமோதூத ஆண்டு சித்திரைத் திங்கள் 1930ஞு ஏப்ரல்மீ | இதழ் ச |
|---|---|---|

| உள்ளுறை | பக்கம் |
|---|---|


ஆசிரியர் :—ம. பாலசுப்ரஹ்மண்ய முதலியார், B. A., B. L., M. L. C.
உதவி ஆசிரியர் :—கி. குப்புச்சாமி முதலியார்

சைவ சித்தாந்த மகாசமாஜம்,
150, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை.

ஆண்டுச் சந்தா ரூ. 1-8-0. 1930 வெளி நாட்டுக்கு ரூ. 2-0-0.
தனிப் பிரதி அணா 3.

சிவமயம்

# சைவ இளைஞர் மகாநாடு, திருவிடைமருதூர்

---

சைவசித்தாந்த மகா சமாஜத்தின் சார்பில் திருவிடைமருதூரில் சைவத்திருவாளர் **தி. ரா. போ. குப்புச்சாமிப் பிள்ளையவர்களின்** போராதரவில் **சைவ இளைஞர் மகாநாடு** ஒன்று 1930ஆம் ஏப்ரல்மீ 18உ வெள்ளிக்கிழமை நடைபெறும். சென்னை அரசாங்கத்துச் சுகாதார மந்திரியார் சைவத் திருவாளர் - **கனம். எஸ். முத்தையா முதலியாரவர்கள்** மகாநாட்டைத் திறந்துவைக்க அன்புடன் இசைந்துள்ளார்கள். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தலைமைத் தமிழ்ப் பேராசிரியர் சைவத்திருவாளர்-**கா. சுப்பிரமணியம் பிள்ளை எம். ஏ., எம். எல்.,** அவர்கள் தலைமை வகிக்க அன்புடன் இசைந்துள்ளார்கள். சைவ இளைஞர்களின் நன்மையைக் கோரும் ஒவ்வொருவரும் தவறாமல் வந்திருந்து மகாநாட்டைச் செவ்வனே நடத்தி வைக்குமாறு வேண்டுகிறோம்.

## நிகழ்ச்சி முறை

**1930ஆம் ஏப்ரல்மீ 18உ வெள்ளிக்கிழமை**

காலை 8-மணி - வரவேற்பு, திறப்புவிழா,
,, 9-மணி - தலைமைப் பேருரை.
மாலை 2-மணி முதல் 5-மணி வரை தீர்மானங்கள்.
,, 5-மணி ,, 6-மணி ,, முடிபுரை, வந்தனை, கடவுள் வாழ்த்து.

இங்ஙனம்: தங்களன்புள்ள,

**தி. ரா. போ. குப்புச்சாமிப் பிள்ளை,**
வரவேற்புக்கழகத் தலைவர்

**ம. பாலசுப்ரஹ்மண்யம்,**
சமாஜக் காரியதரிசி.

**தி. கு. கி. நாராயணசாமி,**
மகாநாட்டுக் காரியதரிசி.

## சைவமடங்கட்குச் செல்லுதல்

சைவ மடங்களுக்குச் சென்று சில முறையீடுகள் செய்யுமாறு தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள குழுவினரும் அவர்களுடன் செல்ல விரும்புவோரும் இம்மகாநாடு முடிந்தவுடனே மடங்கட்குச் சென்று தங்களாலியன்ற பணி செய்வார்களென்று இதன் மூலம் அறிக்கை செய்ய விரும்புகிறேன்.

இங்ஙனம்:

**ம. பாலசுப்ரஹ்மண்யம்,**
காரியதரிசி.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

" ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானகுரு வாணியை உள்நாடு "


| மலர் ௩ | பிரமோதூத ஆண்டு சித்திரைத் திங்கள் 1930 ஆம் ஏப்பிரல் மீ | இதழ் ௪ |
|---|---|---|


## சமயத்தொண்டு

[பத்திராசிரியர்]

சில ஆண்டுகளாக எங்கு பார்த்தாலும் சமயத்துறையிலே தொண்டுசெய்ய வேண்டும், சமயக் கல்வியைப் பள்ளிக் கூடங்களில் கட்டாயமாக்க வேண்டும், நமது சமயிகள் புறச்சமயம் புகுவதைத் தடுக்க வேண்டும் என்றெல்லாம் சொற்பொழிவுகள் செய்யும் பேரறிஞர்கள் கூக்குரலிடுவதைக் கேட்டுக் கேட்டுப் பழகிய நமது தமிழ் நாட்டினரின் செவிகள் செவிடு பட்டிருக்கும். செயலிலோவெனின் நாளுக்கு நாள் புறச்சமயம் புகுவோர் தொகையும் அகச்சமயவிரோதிகளின் தொகையும் அதிகரித்தே வருகின்றன என்பதை ஊகிக்கப் போதிய சான்றுகள் உள்ளன. மிகத்தாழ்ந்த இந்நிலையைக் கண்டு பெரிதும் வருந்திய திருவெண்ணெய் நல்லூரில் கூடிய சைவப் பெரியார்களும் அம்மகா நாட்டில் தலைமை வகித்த ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகளும் நமது சமயத்தைப் பரப்புவதற்குச் சில வழிகளைத் திட்டம் செய்தார்கள்.

அவைகளுள் ஒன்று, நமது சமயத்துக்கு அடிப்படையாகவுள்ள தேவார திருவாசகங்களி லிருந்து, சிறு பிள்ளைகள் உணரும் பொருட்டு எளிய திரட்டொன்று கண்டு, நால்வர் சரிதங்களையும் எளியநடையில் எழுதிப் பல ஆயிரக்கணக்கான பிரதிகள் அச்சிட்டு, பள்ளிக்கூடங்களில் பாடமாகவைத்து, இளமையிலிருந்தே நமது சமயிகளுக்குச் சமயஞானத்தை ஊட்டுவதாகும். இதற்குச் செய்ய வேண்டிய எழுத்து வேலைகளை முடித்துத் தருவதற்கு நான்கு பேரறிஞர்களை அம்மகா நாட்டினர் நியமித்தனர். அவர்கள் தங்கள் வேலைகளை முடித்து விட்டனரென்

றும், அவர்கள் எழுதிய சரிதங்களையும் திரட்டிய திரட்டையும் அச்சிடுவதற்குப் போதிய பொருள் உதவுதற்கும் சில செல்வர்கள் ஒப்புக்கொண்டு அவர்களுள் சிலர் தங்கள் பகுதித் தொகையையும் அனுப்பி விட்டார்களென்றும், ஆரம்ப சமய போதனைக்குரிய இந்நூலும் இன்னம் ஒரு மாதத்துக்குள் வெளிவரக்கூடுமென்றும் மிக மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

திருவெண்ணெய் நல்லூரில் கூடிய சைவர் மகாநாடு சமயப்பிரசாரத்துக்கு வேறு பல வழிகளையும் திட்டம் செய்தது. அவ்வழிகளில் உழைக்க வேண்டியவர்கள் எம்மட்டில் உழைத்துள்ளார்கள் என்பதைத தெரிவித்துக் கொள்ள மிகவும்வருந்துகிறோம். நமது சமாஜத்தோடு நூற்றுக் கணக்கான சைவசபைகள் இணைக்கப்பட வேண்டுமென்பது தமிழ்நாட்டுச் சைவர்களின் குறிக்கோள். ஆனால் இதுவரை இணைத்துக்கொண்ட சபைகளின் எண் மிகக் குறைவாக யிருப்பது மிகவும் வருந்தத்தக்கது. ஒரே மனதாகப் பல சபைகள் ஒன்றுசேர்ந்து ஒரு துறையில் உழைத்தால்தான் ஏதாவது சிறிது பயன் கைகூடுமென்பது எவரு மறிந்த உண்மை. ஒவ்வொரு சபையும் ஆண்டுக்கொருமுறை ஆண்டு விழாவொன்று நடத்துவதாக ஏற்படுத்தி இரண்டு தினங்கள் மகேசுவர பூசை செய்வித்துச் சில பட்டதாரிகளை அழைத்துத் திறப்பு, தலைமை முதலியவைகட்குப் பயன்படுத்திக் கொண்டு சில பண்டிதர்களைக்கொண்டு சொற்பொழிவுகள் நடத்திவைத்து மீண்டும் அடுத்த ஆண்டுவரையில் உறங்குவதே பெரு வழக்காக யிருக்கிறது. இவ்வாறு இன்னம் எத்தனை ஆண்டுகள்தான் கழிப்பது? எப்போதுதான் நாடோறும் இடைவிடாது பணிசெய்ய முன் வருவது?

சில சபைகட்கு இவ்விடத்து ஒரு ஐயம எழலாம். நாடோறும் இடைவிடாது செய்யக்கூடிய சமயப் பணி யாது? ஒரு பைசாகூட செலவில்லாமல் நாடோறும் செய்யக்கூடிய சமயப் பணியில் சில பகுதிகளை மாதிரிக்காகக் கீழே குறிக்கிறோம் :—

(1) ஒரு சபையின் அங்கத்தினர் தினந்தோறும் திருக்கோயிலிற்சென்று வழிபட்டு அங்கு வரும் மக்களுக்குக் கோயில், கடவுளுருவங்கள், உத்ஸவங்கள் இவைகளின் உட்கருத்துக்களை ல்.

(2) ஒரு சபையினர் தினந்தோறும் ஏதாவது ஒரு பள்ளிக்கூடத்துக்குச் சென்று ஆங்குள்ள பிள்ளைகட்குச் சமயச்சார்பான கதைகளையும் நீதிகளையும் போதித்தல்.

(3) ஒரு சபையினர் தினநதோறும் தாழ்நத வகுப்பினர் கூடும் இடங்களிற் சென்று அவர்களிடையில் கடவுள் வழிபாடு, கொல்லாமை, கள்ளுண்ணாமை, நல்லொழுக்கம் முதலியவைகளைப்பற்றி உரையாடல்.

(4) ஒரு சபையினர் தினந்தோறும் மாலைப்பொழுதில் ஏதாவது ஒரு வீதியிலோ அல்லது ஒரு கிராமத்திலோ ஒரு சிறு கூட்டம கூட்டி ஆங்குள்ளவர்கட்குப் பயன்படுமாறு பாதிரிமார்களைப்போல் நமது சமயப் பிரசாரத்தை நடத்துதல். இத்தகைய வழிகளில் எத்தனை சபைகள் உழைக்கின்றன ?

திருவெண்ணெய்நல்லூரில் தலைமை வகித்த ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் சமாஜ

வெளியூர் நிர்வாக சபையினர் தேர்தல் நிகழ்ந்த காலத்தில் ஒன்றைக் குறித்து மிகவும் வற்புறுத்தினார்கள். அதாவது உண்மையில் உழைப்பவர்களையே தேர்நதெடுக்கவேண்டும், பட்டதாரிகளையும் அரசியல் முதலிய துறைகளிலேயே கண்ணும் கருத்துமாய் சமயத் துறையை அசட்டை செய்பவர்களையும் நீக்க வேண்டும் என்பதே. அவர்கள் கூறிய புத்திமதியை ஒப்புக்கொண்டு சமயத்துக்கே உழைக்கக் கூடியவர்களை மகாநாட்டினர் தேர்ந்தெடுத்தனர். மாதா மாதம் தாங்கள் இயற்றும் பணியின் விவரங்களை இவ்வெளியூர் நிர்வாக சபையினர் சமாஜக் காரியதரிசிக்குத் தெரிவித்துக் கொள்ள வேண்டுமென்றும் ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் கட்டளையிட்டார்கள். அவர்கள் கட்டளையின் படியே மாதப்பணி யறிக்கைப்பத்திரம் என்று பல விவரங்களடங்கிய தாள் ஒன்றை அச்சிட்டுப் பல பிரதிகள் இவ்வெளியூர் நிர்வாக சபையினருக்கு அனுப்பப்பட்டன. ஆனால்........

அடுத்து வரும் மாதந்தொறிலாவது நமது சமாஜத்தின வெளியூர் நிர்வாகசபையினர் ஒருவருக்கொருவர் போட்டியிட்டு, மேலும்மேலும் சிறந்த பணி செய்து அவ்விவரங்களை யெல்லாம் நமக்கு அனுப்புவார்களென்று உண்மையாகவே நம்பி அவ்வாறு செய்யுமாறு அவர்களை மிகப் பணிவுடன் வேண்டுகிறோம். ஸ்ரீலஸ்ரீ சுவாமிகளின் கட்டளைப்படி அவ்வப்போது வெளியூர் நிர்வாக சபையினர் செய்துவரும் பணி விவரங்களை வெளியிடக் கடமைப்பட்டுள்ளோம். ஆகையால் இந்த இதழோடு வரும் அறிக்கைப் பத்திரத்தையும் சென்றயிதழோடு வந்த பத்திரத்தையும் நிரப்பி மறுதபாலில அனுப்பி நமது சமாஜத்தின் நன்றியையும் சைவ வுலகத்தின் நன்றியையும் ஸ்ரீலஸ்ரீ சுவாமிகளின் அருளையும் ஒருங்கே பெறுமாறு இப்பெரியார்களைப் பெரிதும் வேண்டுகிறோம்.

நமது பத்திரிகையைப் பலப்படுத்துதல், நமது தேவார வெளியீடுகளை விற்று முதலாக்குதல், ஒவ்வொரு தாலூகாவிலும் ஒரு சபையையாவது உண்டாக்கி நமது சமாஜத்தோடு இணைத்து வைத்தல், எளிய வகுப்பினருக்கும் பளளிக்கூடத்துப் பிள்ளைகட்கும் தவறாது சமயபோதனை செய்தல் முதலிய வழிகளில் மிகச்சிறப்பாக கவனத்தைச் செலுத்துமாறு இப்பெரியார்களை மிகத்தாழ்மையுடன் வேண்டுகிறோம்.

"முன்னவனே முன்னின்றால் முடியாத பொருளுளதோ?" என்றார் சேக்கிழார் பெருமான். நமது சமய முன்னேற்றத்துக்கு நமது சமயத் தலைவனாகிய ஆண்டவன் என்றும் முன்னிற்கிறான். அவனருளும் முன்னிற்கிறது. அவனருளைத் துணைகொண்டு நம் சமயப் பணியாளர்கள்தான் முன்னிற்க வேண்டும். அவ்வாறு முன்னின்றால் முடியாத பொருள் யாதுமில்லை யென்பது முக்காலும் சத்தியம். இத்தருவாயின் தேவை பணியாளர்கள் முன்னிற்றலேயாகும்.

சமயப்பணி செய்வதற்கு மங்கையர்கள் முன் வந்துள்ளார்கள். நமது சமாஜத்தில் மங்கையர் பகுதியொன்றும் ஏற்பட்டிருக்கிறது. இளைஞர்களும் முன் வந்துள்ளார்கள். திருவிடைமருதூரில் கூடும் சைவ இளைஞர் மகாநாட்டினையே சைவ உலகம் நோக்கிக்கொண்டிருக்கிறது. அம்மகாநாடும் தக்க

தலைவரைப் பெற்றிருக்கிறது. அதன் தீர்மானங்களும் பணி செயல் வகைக்குரிய வழிகளைத் திட்டமாகக் கூறும் என்று எதிர்பார்க்கிறோம்.

ஆலயங்களைப் புதுப்பித்துக் கும்பாபிஷேகங்கள் நடத்தும் தனவணிகப் பெருமக்களும் அக்காலங்களில் சமயபோதனை நடத்த வேண்டிய கடமையை யுணர்ந்துள்ளார்க ளென்பது நமது சமயவளர்ச்சிக்கோர் நல்ல அறிகுறியாகிறது. ஆலங்குடித்தான் ஆலங்குடியானுய்க் கோயில் கொண்டிருக்கும் நீடாமங்கலத்துக் கருகிலுள்ள ஆலங்குடி க்ஷேத்திரத்தில் நாளது வைகாசிமீ கக௨ நடைபெறும் கும்பாபிஷேகத்தை யொட்டி நமது சமாஜத்தின் விசேஷ மகாநாடு ஒன்றை மூன்றுநாட்கள் கூட்டிச் சமயபோதனை செய்யுமாறு கும்பாபிஷேக நிர்வாகஸ்தர்கள் அழைத்துள்ளது நமக்குப் பெருமகிழ்ச்சியை விளைவிக்கின்றது. இஃதேபோல் ஏனைய ஆலயங்களிலும் பெரிய விழாக்காலங்களி லெல்லாம் நமது சமாஜத்தின் துணைகொண்டு சமய போதனை செய்தற்குரிய ஏற்பாடுகள் நடைபெறும் என்று எதிர்பார்க்கிறோம்.

ஏனையோர் செய்ய வேண்டிய பணிகள் பற்பலவாக விருந்தாலும் நமது சமாஜத்தின் சாதாரண அங்கத்தினர்கள் செய்தற்குரிய பணிகளும் நிரம்பவுண்டு. சந்தாவைச் செலுத்திப் பத்திரிகையை வாங்கி விடுவது மட்டும் சமய வளர்ச்சியாகாது. பத்திரிகையில் வரும் விஷயங்களைத் தங்கள் நண்பர்கட்கெல்லாம் அவ்வப்போது தெரிவித்தும் எளிய மக்களுக்கு எளிய நடையில் விளக்கியும் தங்கள் இல்லங்களிலுள்ள பிள்ளை பெண்டிர்க்குப் போதித்தும் வருதல் சாலச்சிறந்தது. அதோடு மட்டும் நில்லாது பல அங்கத்தினரைச் சேர்த்து நமது சமாஜத்தைப் பலப்படுத்துதல் மிகச் சிறந்த பணியாகும். இதைப்பற்றி இம்மலரின் முதலிதழில் எழுதியதைக் கண்ணுற்ற ஊக்கசிகாமணிகள் சிலர் பல புதிய அங்கத்தினரைச் சேர்ப்பித்து உதவி புரிந்தார்கள். அவர்களைப் பின்பற்றி ஏனையோரும் குறைந்தது தலைக்கொரு புதிய அங்கத்தினர் வீதமாவது சேர்த்து உபகரித்தல் கூடுமா? கூடாதா? என்று உண்மையாகவே நமது சந்தா நேயர்களை வினவுகிறோம். ஒவ்வொரு ஊரிலும் வசிக்கும் நமது சமாஜ அங்கத்தினர் ஒன்று சேர்ந்து புதியசபை யொன்று தாபித்து, நமது சமாஜத்தோடு அதை இணைத்துக் கொள்வது கூடுமா? கூடாதா? என்றும் அவர்களை உண்மையாகவே வினவுகிறோம்.

மெய்யன்பர்களாகவும் உண்மையும் ஊக்கமும் நிரம்பியவர்களாகவும் உள்ள நமது சமாஜத்தினர் ஒரு சிறிதும் பின்வாங்காது நாம் கூறின வழிகளில் முன்னின்று நமக்கு ஊக்கத்தையும் உவகையையும் அளிப்பார்களென்றே எண்ணுகிறோம்.

---

[முருகன் திருவருட்பா:—இது வடலூர் ஞானவள்ளலாரின் அமுத மொழியாகும். முருகவேள் கலியக வரதன் என்பதும் இராமலிங்க சுவாமிகள் இருபதாம் நூற்றாண்டினர் போற்றுதற்குரிய ஞானி யென்பதும் யாவரும் அறிந்ததே. இந்நூலை வெளியிட்ட பாலன் பதிப்புக் கழகத்தினருக்கு முருகனடியவர் நன்றி பெரிதும் உரித்து. கஉஉ பக்கங் கொண்ட நூல். விலை அணா ௮. இராயப்பேட்டை முருகவேள் புத்தகசாலைக்கு எழுதுக.]

# ஆலங்குடி என்னுந் திருவிரும்பூவளாக் கோயிற் பெருமை

[சுவாமி - வேலாயுதம் பிள்ளை, பி. ஏ., எல். டி.]

ஞால நின்புகழே மிக வேண்டுந்தென்திரு
ஆல வாயில் அமர்ந்துறைஎம் ஆதியே !

## முன்னுரை

சிவன் கோயில்களே சைவ சமயத்தை வளர்ப்பதற்குச் சிறந்த அடிப்படைகள் ஆகும். அக்கோயில்களில் எழுந்தருளியிருக்கும் இறைவனை வழிபடுவதால் தொண்டர்கள் இன்புறுகின்றனர். இவ்வின்பத்தை மிகுதியாக்குவன அக்கோயில்களின் வரலாற்றை நன்குணர்தலும், அக் கோயில்களைச் சிறப்புறும்படி செய்திருக்கிற அருந்தொண்டர்களின் பாடல்களைப் பாடுதலுமேயாம். இவ்வாறின்றிப் பலர் அவ்வரலாற்றினைப் பிறழ உணர்ந்துங் கூறியும் எத்துணை அறியாமையை வெளியிடுகின்றனர் ? அக்கோயிற் பண்களைப்பாடாது அறவே ஒழிக்கின்றனர். அக்கோயில்களில் இதற்கென ஏற்படுத்தப்பட்ட ஓதுவார்களும் அக் கோயிற் பண்களை மறந்தும பாடாது விடுகின்றனரன்றோ ? இக் கொடுமைகளை நீக்கவே இவ்வரலாற்றுச் சுருக்கமும், பண்ணுஞ் சேர்த்து அச்சிடப் பட்டிருக்கின்றன. இதனுல் அன்பர் இன்புறுவாராக.

எல்லாரு மின்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே.

**கலங்காமற் காத்த பிள்ளையார் :—** ஆலங்குடி கோயிலின் தென்மேற்கு மூலையில் எழுந்தருளியிருக்கும் பிள்ளையாரின் பெயர் இதுவாகும். முன்னொரு காலத்தில் கஜாசுரன் என்பான் பலருக்குத் தீமை செய்ததன்றி ஆகாயத்திற் சென்று அங்குள்ள அண்டச் சுவரை இடித்து விட்டான். அதனுல் ஆகாய கங்கை பெருகி ஆலங்குடி உலக முழுவதையும் மூழ்கச் [illegible] க்க பிரமன், திருமால் முதலிய தேவர்கள் இக்கோயிலுக்கு வந்து இறைவனை [illegible]ழி பட்டனர். அவரருளால் பிள்ளையார் சென்று மேலுள்ள ஓட்டையைத் தனது காற்பெரு விரல் நகத்தால் அடைத்துவிட்டுக் கீழுள்ள வெள்ளத்தைத் தனது துதிக்கையால் உறிஞ்சி வற்றச் செய்தார். இவ்வாறு இவர் யாவரையுங் கலங்காது காத்ததால் இப்பெயர் பெற்றார்.

**ஆலங்குடி என்னும் பெயர் வந்த வகை :—** பண்டைக் காலத்தில் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் பெரும் போர் நடந்தது. அதில் பலர் இறந்து துன்ப மடைந்தனர். இவ்வாறு இறவாதிருக்க யாவருஞ் சென்று திருமாலை வேண்டினர். அவர் அமிர்தத்தை உண்டாக்குவதற்காக மேரு மலையை மத்தாகவும், வாசுகி என்னும் பாம்பைக் கயிறாகவும் பயன் படுத்தி, திருப்பாற் கடலைக் கடையப் புகுந்தார். கயிற்றின் ஒரு முனையைத் தேவர்களும் மற்றொரு முனையை அசுரர்களும் பிடித்து இழுத்துக் கடைந்தார்கள். அப்பொழுது வாசுகி யென்னும் பாம்பு வலி பொறுக்க முடியாது விஷத்தைக் கக்கிற்று. அதே பொழுதில் திருப்பாற் கடலிலிருந்து விஷமுண்டாயது. இவ்விஷங்களின் சூட்டைப் பொறுக்க முடியாத தேவர்களும் அசுரர்களுங் கலங்கி ஓட்டம் பிடித்தனர். அவர்களைக் காப்பதற்காகச் சென்ற திருமாலின் திரு

மேனி வெந்து கருகிற்று. பின் யாவருஞ் சென்று சிவபெருமானிடம் முறையிட்டு வேண்ட, அவர் மனம் இரங்கித் தன் தோழனுகிய சுந்திரனை அனுப்பினுர். அவர் சென்றதும் அவ்விஷம் சிறுத்து அவர் கையிலடங்கிற்று. அதைக் கொண்டு வந்து சிவபெருமானிடங் கொடுக்க, அவர் அதை வாங்கி உண்டார். உமாதேவியார் அவ்விஷம் கீழிறங்காதபடி அவர் தொண்டையைப் பிடித்துக் கொள்ள, அங்கேயே அது தங்கிற்று. தேவர்கள் அசுரர்கள் யாவருந் தங்களைக் காத்ததற்கு அடையாளமாக அவ்விஷத்தை எப்பொழுதும் தொண்டையிலேயே அடக்கி வைத்திருக்கும்படி வேண்டினர். அவ்வாறே செய்ததால் இறைவன் திருநீலகண்டரானுர். இவ்வாறு பெரிய ஆபத்தினின்றும் அவர்களைக் காத்ததால் ஆபத்சகாயர் என்றும் அழைக்கப்பெற்றுர். அவ்வூருக்கும் ஆலங்குடியென்னும் பெயருண்டாயிற்று. இதனை விகடமாகக் காளமேகப் புலவரும்,

ஆலங்குடி யானை ஆலாலம் உண்டானை
ஆலங்குடியான் என்று யார்சொன்னுர்-ஆலங்
குடியானே யாகிற் குவலயத் தோரெல்லாம்
மடியார்களோ மண் மீதில்.

என்று சிறப்பித்துப் பாடியருளினர். இவ்வூரிலேதான் விஷங்குடிக்கப் பெற்றது என்பதற்கு அடையாளமாக இவ்வூரிலுள்ளோர்க்கு விஷத்தால் ஒரு தீங்கும் நாளைக்கும் நேர்வதில்லை.

இவ்வாறு சிவபெருமான் விஷத்தைக் குடித்த பின் தேவர்கள் சென்று திருப்பாற்கடலை மறுபடியுங் கடைந்தனர். அதிலிருந்து மூதேவியும், சீதேவியும், கௌஸ்துபமணி முதலியனவும் கடைசியாக அமிர்தமும் உண்டாயிற்று. அவ்வமிர்தத்தால் ஆலங்குடிப் பெருமானை அபிஷேகம் செய்ததன்றி அக்கோயிலைச் சுற்றியும் நிறப்பி வைத்தனர். இதுதான் இப்பொழுது இக்கோயிலைச் சூழ்ந்திருக்கிற அமிர்த புஷ்கரணியாகும். பின் தேவர்கள் அசுரர்களை ஏமாற்றிவிட்டு அமிர்தத்தைத் தாங்களே உண்டு இறவாதிருந்தனர்.

**இதன் உட்கருத்து:**—நம்மை வாட்டுகின்ற கொடிய தீமைகளே ஆலகால விஷம். இவைகளை அடக்கவல்லவர் பரம் பொருளாகிய பரமசிவனன்றி வேறொருவருமல்லர். ஆதலின் அவர் அடியவருக்காக நஞ்சுண்ட பெருங் கருணையை நினைந்து உருகி வேண்டிக் கொள்ளின் தீரா வினைகளுந் தீருமென்பதற்கு ஐயமில்லை. இவ்வாறு நீக்கிக் கொண்ட பெரியார்களுட் பெரியார் திருஞான சம்பமூர்த்தி நாயனுராவர். இவர் தீமைகளைத் தீர்த்துக்கொண்ட வகையாவது :—

இவர் தனது 16,000 திருக்கூட்டத்தார்களுடன் கொங்கு நாட்டில் ஸ்தல யாத்திரை செய்து கொண்டிருந்த பொழுது காவிரியின் தென்கரையிலுள்ள கொடிமாடச் செங்குன்றூரில் தங்கியிருந்தார். ஆங்கு அடியவர் யாவரும் குளிர் மிகுதியாலும், பனி மிகுதியாலும் நோயுற்றனர். இது நாயனுருக்குத் தெரிந்ததும் அவர் இந்நோயை நீக்க “எவ்விடத்தும் அடியார் இடர் தீர்ப்பது திருநீலகண்டமென்றே” என்று திருநீலகண்டப் பதிகம் பாடினுர். இதனுல் அடியவர்க்கன்றி அந்நாட்டிலுள்ளோர் யாவர்க்கும் அந்நோய் நீங்கிற்று. இப்பதிகத்தை நாமும் ஓதின், நம் நோயுந்துன்பங்களும் நீங்குமென்பது திண்ணம்.

இவ்வாறு நீங்குவதற்கு வேறொரு நல்வழி பிரதோஷ விரதம் இருத்தலாம். ஒவ்வொரு மாதத்திலும் சாயுங் காலத்தில் வருகிற இரண்டு * திரயோதசி திதிகளும் அவ்விரதத்திற்குஉரிய நாட்களாம். அன்று பொழுது போக ஐந்து நாழிகையி லிருந்து பொழுது போய் ஐந்து நாழிகை யளவும் இறைவன் நஞ்சுண்ட பெரிய தோஷகாலமாகக் கருதப்படும். அந்நாள் முழுவதும் பட்டினியுற்று சாயுங்காலத்தில் சிவபெருமானைத் தரிசித்து வணங்குவோர் பலப்பல தீமைகளிலிருந்தும் நீங்குவரென்பது பலர் அறிந்ததே. இதைப் படிப்போர் யாவரும் இவ்வரிய நன்மை அடைவார்களாக.

**தக்ஷிணாமூர்த்தி**:-ஆலங்குடிக் கோயிலில் மிகுதியாகக் கொண்டாடப் படுகிற கடவுள் தக்ஷிணாமூர்த்தியே யாவர். இக்கோயிலில்நடக்கும் உற்சவம்யாவும் தக்ஷிணாமூர்த்தி உற்சவருக்கே நடக்கிறது. இப்பெருமை வேறொரு கோயிலுக்கும் இல்லை. இம்மூர்த்தியின் வரலாறுவது :—

முன்னொரு காலத்தில் சனகர், சநந்தர், சநாதனர், சனற்குமாரர் என்னும் நான்கு முனிவர்கள் வேதத்தின் பொருள் புரியாது மயங்கி, பிரம விஷ்ணுக்களால் தெளியாது, இறைவனை நோக்கித் தவம்புரிந்தனர். பின் இறைவன் தோன்றி ஆகமங்களால் தெளிவித்தனர். பின்னும் மனம் அடங்காது வருந்திய அந்நால்வர்க்கும் இறைவன் தக்ஷிணாமூர்த்தி வடிவுடன் வீற்றிருந்து யோகத்தால், ஞானமடைந்து நிஷ்டைகூடும்படி செய்தனர். இவ்வாறு இறைவன் யோகத்திலிருந்த பொழுது உலகம் யாவையும் அடங்கி ஒடுங்கிப் போயிற்று. இதனை நீக்கக் கருதிய பிரமன், காமனை ஏவி இறைவன் தவத்தை அழிக்கச் செய்தனர். அவன் புஷ்ப பாணங்களால் எய்ததும், இறைவன் நெற்றிக்கண்ணால் நோக்க, அவன் வெந்து சாம்பல் ஆயினன். பின்னும் இறைவர் யோகம் புரிவாராயினர். அது கண்ட தேவர்கள் யாவரும் கூடி வேண்ட அவர் விழித்து அருள்புரிந்து உமையம்மையை மணந்து உலகம் யாவும் விளக்கமுறச் செய்தனர். இவ்வாறு மணம்புரிந்த இடம் **திருமண மங்கலம்** என்னும் ஊராகும். இது ஆலங்குடியை அடுத்து வடக்கேயிருக்கிறது.

**தக்ஷிணாமூர்த்தியின் பெருமைகள்**:- இவரே ஞானமூர்த்தி யாவர். இவர் ஒன்றிலுந் தோயாது குணமற்றிருப்பவ ரென்பதைக் குறிக்கப் பளிங்கு போன்ற திருமேனி யுடையவராவர். இவர் எல்லாத் தீமைகளையும் அடக்கியாளும் வலிமையுடையவர் என்பதற்கு அடையாளமாகத் தன் வலது காலால் முயலகனை மிதித்து வீற்றிருக்கின்றனர். இவரது நான்கு கைகளுள் ஒரு வலக்கை சின்முத்திரை என்று சொல்லப்படுகிற ஞானக்குறியைக் காட்டுகிறது. இதன் பொருள் நீட்டி இருக்கிற மூன்று விரல்களாகிய மும்மலங்களையும் (ஆணவம், மாயை, கன்மம்) நீக்கி, கட்டை விரலாகிய இறைவன் திருவடியுடன் ஆட்காட்டி விரலாகிய உயிர் சேர்வதே முத்தி என்பதாம். மற்றொரு வலக்கை உருத்திராக்க மாலையைப் பிடித்திருக்கிறது. இது ஐந்தெழுத்தை உருத்திராக்க மாலை கொண்டு எண்ணி, பன்முறை சொல்லுதலே ஞானத்தைக் கொடுக்கும் வழி

* வளர் பிறையில் ஒன்றும் தேய்பிறையில் ஒன்றும் ஆக இரண்டு.

என்று குறிப்பிடுகிறது. இதனாற்றான் இம்மூர்த்தியின் முன்னிருந்து ஜெபம் செய்யும்படி விதி ஏற்பட்டிருக்கிறது. இவர் இடது கை ஒன்றில் ஏந்தியிருக்கிற அமிர்த கலயம் பேரின்பத்தை அளிக்க வல்லவரென்பதைக் காட்டுகிறது. மற்றொரு இடக்கையில் தாங்கியிருக்கும் சிவஞானபோதச் சுவடி, இந்நூலே உண்மை ஞானத்தை விளக்குகிறதென்பதையும், ஞானத்தால்தான் முத்தி அடையக்கூடும் என்பதையும் உணர்த்துகிறது. யாவராலும் வெல்ல முடியாத காமனை இவர் கொன்றது இவரை வழிபட்டால் எளிதில் பெண்ணாசையை நீக்கலாமென்பதை விளக்குகிறது. * இவ்வாறு பல அரிய அடையாளங்களுடன் கூடிய இம்மூர்த்தியை எப்பொழுதும் வணங்கி முத்தி அடைவோமாக. இவ்வாறு செய்ய இயலாவிடின் இக்குரு மூர்த்திக்குப் பிரியமான குருவாரம் (வியாழக்கிழமை) தோறும் தவறாதுவணங்கினால் பெரும் பேறடையலாம்.

**சுந்தரமூர்த்தி நாயனார் இவ்வூருக்கு வந்த வகை:**—ஆலகால விஷத்தை அடக்கிக் கொண்டுவந்து கொடுத்த சுந்திரனார் இவ்வுலகில் சுந்திரமூர்த்திநாயனாராகப் பிறந்து, திருவருள் பெற்று, திருவாரூரில் வந்திருந்த பொழுது ஆலங் குடிக்குச் சென்று வணங்க விரும்பினார். அதற்காகப் பயணப்பட்டுப் போகும்பொழுது சிவபெருமான் திருவிளையாடல் புரியக்கருதி வழியிலுள்ள அகஸ்திய காவேரி என்னும் வெட்டாற்றைப் பெருகவைத்தார். வெள்ளம் மிகுதியாக இருந்ததால் ஓடம் விடுவார் ஒருவரும் இல்லை. ஆதலின் கசிந்து உருகி இறைவனை வேண்டினார். உடனே சிவபெருமானே ஓடக்காரனாக வந்து சுந்தரமூர்த்தி நாயனாரையும் அடியார்களையும் ஏற்றிக் கொண்டு சென்றார். நடுஆற்றிற் சென்றதும் பரிசுக்கோலை வேண்டுமென்று தவறவிட்டு அதை எடுக்கப் போவார் போல் ஆற்றில் விழுந்து தத்தளித்துக் கொண்டும் ஆற்றுடன் சென்றார். ஓடமும் ஆற்றுடன் சென்று **திருக்கோளம்பூதூரை** அடைந்தது. சுந்தரர் அவ்வூர் இறைவனை வேண்ட அவர் தோன்றிக் காப்பாற்றுவதாகக் கூறி மறைந்தனர். பின் ஓடஞ்சென்று பாரின்மீது மோதி அமிழ்ந்ததால் அவ்விடம் **அமிழ்ந்தீச்சுர** மென்றழைக்கப் படுகிறது. பின் இறைவன் திருவருளால் சிதறுண்ட பலகைகளைப் பிடித்துக்கொண்டு மிதந்து சென்றார்கள். அவ்வாறு சென்றவிடம் **கப்பலுடையா**னென்று அழைக்கப்படுகிறது. இவ்வாறு செல்லும்பொழுது இறைவனை மீண்டும் மீண்டுந் துதிப்ப, அவர் தோன்றிக் கரையிலிருந்து கொண்டே தன் நீண்ட கைகளால் அவர்களை இழுத்துக் கரை யேற்றினர். இவ்விடம் **கைப்பத்தூர்** என்றழைக்கப்படுகிறது. இவ்வாறு அக்கரை சேர்ந்ததும் ஆலங்குடி சென்று இறைவனை வணங்கித் திருவாரூருக்குத் திரும்பினர்.

---

* இவ்வாறு காமனை வென்ற கடவுள் பெண்ணாசை மிகுத்தவர் என்று பலர் கூறி கொடிய நரகத்திற்கு ஆளாகின்றனர். இவர்கள் உணரவேண்டியது யாதெனில் ஞான மூர்த்தியாகிய சிவபெருமானுக்கு உமையும், கங்கையும் இருசக்திகளே அதாவது அவர் வல்லமைகளைக் குறிக்கின்றனர். அவர் பள்ளியறை செல்வது உமையுடன் கூடியிருப்பதற்கன்று. ஆங்கு கண்ணாடி வாயிலாக அன்பர்களுக்கு அருவதரிசனந் தந்தருளுவதற்கே. அங்கே சத்தி, பால், பழம் வைப்பது பிற்காலத்தவர் சேர்க்கை. ஆகமமார்க்கமல்ல.

சென்றடையாத திருவுடையானை - இயல்பாக அமைந்த அருட் செல்வமுடையானை,

சிராப்பள்ளி மேய குன்றுடையானை - திரிசிராப்பள்ளி யென்னுமிடத்தே அமைந்த குன்றத்தில் எழுந்தருளி யிருப்பானை,

கூற - வாக்கால் கூறுதலும்,

என்னுள்ளம் - என் மனமானது,

குளிரும் - மகிழும்.

என்பதாம்.

'அறவாழி அந்தணன்' ஆதலால், 'நன்றுடையானை' என்றும், அழிப்பும் இளைப்பாற்றற் காதலால், 'தீயதிலானை' என்றும், எல்லாம் அழிந்த காலத்தும் அழியாத தருமத்தை விடையாக ஆரோகணித் தமையால், 'நரைவெள்ளேறு ஒன்றுடையானை' என்றும், அருட்சத்தியை இடப்பாகத்துக் கொண்டதுரியங் கடந்த மூர்த்தி ஆதலால், 'உமையொரு பாகம் உடையானை' என்றும், அருண்மூர்த்தியாய் உலகமே உருவினனும் எல்லார்க்கும் எல்லாச் செல்வத்தையுந் தந்து நிற்பவனும் ஆதலால், 'சென்றடையாத திருவுடையானை' என்றும், இவ்விதம் எல்லா உலகமும் ஆன இறைவன் ஆன்மாக்கள் உய்யும் வண்ணம் நிலவுலகத்துத் திருக்கோயில்கள் பல கொண்டிருப்பதில் திரிசிராப்பள்ளியில் உள்ள குன்றில் எழுந்தருளி யிருக்கும் திருமூர்த்தியை வாக்கால் கூற என் மனமானது நிரதிசய இன்பத்தைப் பெற்றதுபோல் மகிழும் என்பார், 'சிராப்பள்ளிக் குன்றுடையானைக் கூற என்னுள்ளங் குளிரும்மே' என்றும் கூறினாராயிற்று.

இனிச் 'சென்றடையாத திருவுடையானை' என்று கூறியது எற்றுக்கெனின், ஏனைய தேவர்கள் இவனை வழிபட்டு அடையவேண்டுவனவற்றை யடைவது போல் அடைதல் இல்லாத செல்வன் அதாவது இயல்பாகவே செல்வம்அமைந்தவன் என்பதாம். இதனுலன்றோ இறைவனை, "மன்னவன்" என்றனர். இதற்குப் பேருரை கண்ட சிவஞான முனிவரர், "வெண்கொற்றக் குடையும், நவமணி முடியும், சிங்காதனமும், மன்னவர்க்கேயுரிய சிறப்படையாளமாம். அதுபோலப் பிரபஞ்சம் எல்லாவற்றிற்கும் மூலகாரணமாகிய ஒரு பெரு வெண்கொற்றக் குடையும், எவற்றையும் ஒருங்கே ஓரியல்பான் அறியும் பேரறிவாகிய ஒருபெருஞ்சுடர் முடியும், எவற்றினையும் அங்கங்கே உயிர்க்குயிராய் நின்று செலுத்தும் இயல்பாகிய ஒரு பெருஞ் சிங்காதனமும், பிறர்க்கின்றித் தனக்கே உரிமையாகச் சிறந்தமை பற்றி". என்று விதந்து கூறினர். அன்றியும், "விச்சதின்றியே விளைவு செய்குவாய்" என்பது வித்தின்றி விளைவாய் எனப் பொருள் பட்டுத் "திருமேனி கொள்ளும் முறைமை உணர்த்திய தூஉமாம்" என்றமையால் எல்லாம் இயல்பாகவே அமைந்தவன் என்றும், அவனிடத்துள்ள செல்வம் ஏனைய ஆன்மாக்களாகிய மக்கள் முதல் தேவர் என்பார் வரையும் சென்று அடைந்த செல்வம்போ லல்லாது இயல்பாகவே அமைந்த செல்வம் என்பது பொருள் ஆயிற்று. இதனைச் சுருங்க எழுதவேண்டும் என்றமையால் இதனுடன் விடுக்கின்றேன். இனி, இவ் விஷயத்தையே, ஐந்து பெரியோர்கள் எழுதியும், ஒரு பெரியோர் தலைவராக

அமைந்தும் பேசினர். தலைவராக அமைந்து பேசினோர், "சென்றடையாத திருவுடையான்" என்பதற்கு ஆண்டவன் தானே ஆன்மாக்களிடம் சென்று செல்வத்தைத் தருபவன் என்னும் பொருள்படப் பேசினர். முதலாவது எழுதிய திரு. என். துரைக் கண்ணரும், நான்காவது எழுதிய திரு. ஆறுமுகம்பிள்ளையும், ஒருமனத்தராய் 'ஆன்மாக்கள் ஏனைய தேவர்களிடம் சென்று அடையாத செல்வத்தையுடையான்' என்றனர். இரண்டாவது எழுதிய திரு. ஜி. கலியாணம் என்பவர் 'தற்போதத்தோடு ஆன்மாக்கள் சென்றடையாத செல்வன்' என்றனர். மூன்றாவது எழுதிய திரு பொ. முத்தையப் பிள்ளை ஒருவர் தாம், இறைவனுக்கே ஏற்றினர். மற்றும் கடைசியாக எழுதிய திரு. கோவிந்தசாமி முதலியார் முதல் எழுதியவரையும், இரண்டாவது எழுதியவரையும் மறுத்துத் தன் மதம் நாட்டினர்.

இனி,நான் முடிவாகக் கூறுவது என்னெனின், சமாஜ வருடக் கூட்டத்தில் வழக்கம்போல் காரியதரிசியவர்கள் கொடுக்கும் விஷயத்தைப் பேசுகின்ற விருத்தனாகிய நான் திருவெண்ணெய் நல்லூரிலும் பேசினேன். பேசியதிலிருந்து இத்துணைச் சித்தாந்த சைவர்கள் பேசியும் எழுதியும் முடித்தார்கள். இவ்வித செயல்களுக்குப் பேசியதுபோல் எழுதியும் தரல்வேண்டும் என்னும் காரியதரிசியின் விருப்பத்தின்படி இதை எழுதினேன்.

[குறிப்பு :—இப்பொருள் பற்றிய ஆராய்ச்சி இதோடு முடிவடையும்.—பத்திராசிரியர்.]

---

# சமயக்கேடு

[காழி. சிவ. கண்ணுசாமி, பி. ஏ.]

சமயமென் றெழுந்த ஒவ்வொன்றற்கும் குறைந்த அளவிலோ விரிந்த அளவிலோ சடங்குகள் ஏற்பட்டிருப்பதைக் காண்கின்றோம். இன்பப் பெருக்காம் இறைவன் பால் இயற்கையாவெழும் அன்புப் பெருக்கேதுவாக அனைவரும் அவ்வவர்க்குத் தோன்றியவாறு வழிபாடியற்ற முற்படுவதே இயல்பு. நீராட்டியும், பூச்சொரிந்தும், பலியூட்டியும், ஆடியும், பாடியும், அழுதும், அரற்றியும், விழுந்தும், குதித்தும், நகைத்தும், மெய்ம்மறந்தும் மற்றுமிவ்வாறே நெஞ்சுகந்தபடி வழிபாடியற்றுவோர் தவறாகச் செய்கிறார் என்று பகுத்தறிவு வழியானேக்கிற் கூறுதலியலாது. தத்துவவுணர்வு தடித்துக் கூர்ந்து செல்லாத காலத்து இவையெல்லாம் ஒரு படித்தாய் நோக்கப்பட்டிருத்தல் எளிதிற் பெறப்படும். ஆயினும் அவ்வுணர்வும் அதனானெழுந்த உண்மைப் பரம்பொருளின் ஆராய்ச்சியறிவும் முனைத்து, முதிர்ந்து, உரங்கொண்டு, அறிவாற்றற் கேற்றவாறு சமய நிலை படிப்படியா யுயர்ந்து, அவ்வுயர்ச்சி ஏதுவாகவும் கருத்து வேறுபாட்டினாலும் பல் வேறு உட்பிரிவு எய்துகின்ற காலத்து ஒவ்வொரு உட்பிரிவும் ஒவ்வொரு வித வழிபாட்டை விலக்கியோ அன்றித் தனக்கென ஏற்றுக்கொண்டோ ஒழுகி வரம்பு கட்டிக்கொள்ளுதல் இயல்பு.

கவோ துக்கத்தின் குறிகளாகவோ தோன்றவில்லை. ஆன்மா வானது, ஸ்தூலதேகத்தோடு இதுகாறும் வைத்திருந்த கூட்டுறவைச் சாசுவதமாக விலக்கிக் கொள்கிறதென்றே தோன்றியது.

ஸ்தூல தேகத்தின் தலையைச்சுற்றி அழகிய, மிருதுவான, பருத்த ஓர் ஒளி சூழ்ந்து கொண்டது. மூளையும் சிறு மூளையும், தங்களுடைய உட்புறங்களை விரித்துக் கொண்டன. அவை தங்கள் தாதுத்தொழில்களைச் செய்யாமல் நின்றொழிவதை நான் பார்த்தேன். உடனே இவைகளுக்கு மின்சார தாதுவும், காந்த தாதுவும் உண்டாகி, கீழ்த்தரப்பட்ட தேக அமைப்புகளில் ஊடுருவிப்பாய்ந்தன. சாதாரண தேகாரோக்கியத்தின் போது, மற்ற சிறந்தங்கங்களைவிட மூளைக்கு எவ்வளவு உறுதி உண்டோ அதைவிடப் பதின்மடங்கு அதிகமான உறுதியை அம்மூளையானது மரணத்தறுவாயில் பெற்றது.

## ஜீவன் பிரிவு

பிறகு, மரணம், அதாவது ஸ்தூல தேகத்தினின்று ஜீவன் பிரிவு தொடங்கியது. மின்சாரம், காந்தம், இயக்கம், ஜீவன், உணர்ச்சி ஆகிய இவைகளின் தத்துவங்களை மூளையானது தனக்குள்ளே யிருக்கும் பல அறைகளில் ஆகர்ஷிக்கத் தொடங்கியது. சிரசு, மிகுந்த பிரகாச மடைந்தது. மற்ற இந்திரியங்கள் எவ்வளவுக் கெவ்வளவு குளிர்ச்சி யடைந்தும், இருளடைந்தும் போயினவோ அவ்வளவுக்கவ்வளவு மூளையானது பிரகாசத்தையும் சோபிதத்தையும் அடைந்தது.

மேற்படி ஸ்திரீயின் தலையினின்று எழுந்து அதைச் சூழ்ந்து கொண்டிருந்த பழுத்த நிறமுள்ள தெய்விகச் சூழலில், வேறொரு தலை அமைந்து கொண்டு வருவதை நான் பார்த்தேன். ஆன்ம உணர்ச்சி பெற்றவர்களுக்கே, இந்த இந்திரியாதீதமான நிலைகள் புலனாகுமென்பதையும், ஸ்தூலக் கண்கள் ஸ்தூல வஸ்துக்களையே பார்க்க முடியுமென்பதையும்வாசகர்கள்நினைவிலிருத்திக்கொள்ள வேண்டும். இஃது இயற்கைவிதி. மேலே கூறப்பட்ட புதிய தலையானது, வரவர நன்றாகத்தெரியத் தொடங்கியது. அதனை ஊடுருவிப் பார்க்க முடியாதபடியும், அதனை உற்று நோக்க முடியாதபடியும் அவ்வளவு சிற்றடக்கமாயும் பிரகாசமாயும் அந்தத்தலை இருந்தது. அந்த ஞானத் தலையானது அமைந்து கொண்டிருக்கையில், ஸ்தூலத் தலையைச் சூழ்ந்து கொண்டிருந்த ஒளிச் சூழலானது, கலக்கமடையத் தொடங்கியது. மேற்படிஞானத்தலை நன்றாக அமைந்ததும், இந்த ஒளிச்சூழல் மெதுமெதுவாக மறைய ஆரம்பித்தது. இதனால், மேற்படி ஒளிச்சூழலின் தத்துவங்கள், பிரிக்கக கூடாதனவா யிருக்கின்றன வென்பதை நான் அறிந்து கொண்டேன். பிறகு மேற்படி ஞானத் தலையானது, எப்படித் தனியாகப் பிரிந்து அமையத் தொடங்கியதோ அப்படியே, படிப்படியாக கழுத்து, புஜங்கள், மார்பு முதலிய எல்லா அவயவங்களும் அமையத் தொடங்கின. இதனால், மனிதனுடைய தெய்விகத் தன்மை அமைவதற்குக் காரணமாயுள்ள எல்லா அணுக்களுக்குள்ளும் ஒருவித ஒருமைப்பாடு நிகழ்வது நன்கு புலனாகிறது.

அந்த ஸ்திரீயின் ஆன்ம தத்துவங்களும், சக்திகளும் ஒற்றுமைப் படுத் தங்களை அமைத்துக் கொண்டதே, அவளுடைய ஆன்ம அமைப்பு வெளிப்படுவதற்கும் ஒழுங்குபடுவதற்கும் காரணமாயிருந்தது. அவளுடைய ஸ்தூல தேகத்தில் காணப்பட்ட குறைகள், அவளுடைய சூக்கும சரீரத்தில் காணப்படவேயில்லை. அதாவது, அவளுடைய ஸ்தூல சரீரம் சரியானபடி அமைவதற்குப் பரம்பரையான தடைகள் என்னென்ன இருந்தனவோ அவையாவும் இப்பொழுது விலகிப் போகின்றன. இதனால், அவளுடைய சூக்கும தேக அமைப்பானது, மற்றப் பிரபஞ்சசிருஷ்டிப் பொருள்களின் போக்குப்படி, மேற்கண்ட தடைகளுக்கு மேற்பட்டதாய், தன்னை விகாசப்படுத்திக் கொள்ள முடிந்தது.

## சூக்கும சரீர அமைப்பு

சூக்கும சரீரமானது, மேற்கூறிய விதமாக அமைந்து கொண்டிருக்கையில், ஸ்தூலசரீரமானது தொந்தரவையும் துன்பத்தையும் அநுபவித்துக் கொண்டு வந்ததாக அறையிலிருந்த மற்றவர்களின் வெளிப் பார்வைக்குத் தென்பட்டது. ஆனால் உண்மையில், தேகத்தின் உட்புறமாயுள்ள உயிர்ச் சக்திகள் மூளைக்குச் சென்று அங்கிருந்து வேறொரு வடிவாக அமைவதன் பயனாகவே, மேற்படி துன்பநிலை உண்டாகிறது.

ஸ்தூலதேகத்தின் தலைக்கு நேராக ஜீவனானது கிளம்பியது. ஆனால் ஸ்தூல தேகத்திற்கும் சூக்குமதேகத்திற்கும் நிரந்தரமான பிரிவு ஏற்படுவதற்குச் சற்று முன்னர், உயர்நிலையிலிருக்கும் சூக்கும சரீரத்தின் காலுக்கும், படுத்துக்கிடக்கும் ஸ்தூலதேகத்தின் தலைக்கும் இடையே ஓர் ஒளி அல்லது மின்சார சக்தி ஓடிக்கொண்டிருந்ததை நான் பார்த்தேன். தாழ்ந்த நிலையிலுள்ள ஜீவனானது, உயர் நிலையை அடைவதையே மரணமென்று சொல்லப்படுகிறதென்று அப்பொழுதே தெரிந்து கொண்டேன்; கீழான சரீரத்திற்கும், கீழான வாழ்க்கைக்கும் பதிலாக, உயர்வான சரீரத்தையும் அதற்குரிய சக்திகளையும் ஆனந்தங்களையும் அடைவதையே மரணமென்று கூறுவதாக அறிந்து கொண்டேன். இந்தப் பூவுலகத்தில் ஒரு குழந்தை பிறப்பதும் ஸ்தூல தேகத்தினின்று ஜீவன் பிரிந்து சென்று வேறோர் தேகமாக அமைவதும் எல்லா அம்சங்களிலும் ஒன்றாகவே இருக்கிறது. புதிதாகப் பிறக்கும் குழந்தைக்குக் கொப்பூழ்க்கொடி எப்படி இருக்கிறதோ, அப்படியே சூக்கும சரீரத்திற்கும், மேலே கூறப்பட்ட மின்சார சக்தி நூலானது இருக்கிறது. இந்த மின்சார சக்தி நூலானது, சில நிமிஷங்கள் வரை, ஸ்தூலதேகத்தையும் சூக்கும தேகத்தையும் சம்பந்தப் படுத்தி வைத்துக் கொண்டிருந்தது. பிறகு இந்தநூல் அறுபட்டதும், மேற்படி மின்சார சக்தியின் ஒரு சிறு அம்சம், கீழே படுத்துக் கிடக்கும் ஸ்தூல தேகத்தை வந்து சேர்கிறது. இந்தச் சக்தியானது, தேகத்தின் எல்லாப் பாகங்களிலும் சென்று தங்குவதால், தேகம் உடனே சீர்குலையாமலிருக்கிறது.

ஸ்தூலதேகம் நன்றாகக் கெட்டுப் போகத் தொடங்கிய பிறகே, அதனை மண்ணில் புதைக்க வேண்டும். மேலே

நான் குறிப்பிட்ட கொப்பூழ்க் கொடியானது, சில சமயங்களில் அறுபட்டுப் போவதில்லை; ஸ்தூல தேகத்திற்கும் ஜீவனுக்கும் நுண்ணிய சம்பந்தம் இதன் மூலமாக ஏற்பட்டிருக்கிறது. சிலர், இறந்துபோன சில நாட்களுக்குப் பிறகோ அல்லது சில மணி நேரத்திற்குப் பிறகோ,—ஒரு பிரயாணத்தி விருந்து அமைதியாகத் திரும்பி வருவதைப் போன்று—உயிர் பெற்றுத் தங்கள் சூட்சும உலக அநுபவங்களைக் கூறுவதனகாரணம இதுவே யாகும். இதனையே சுழுத்தி அவஸ்தை யென்றும, மூடுசன்னியென்றும், தூங்கிக் கொண்டே நடத்தலென்றும், ஆன்ம பரவசமென்றும் பலவிதமாகக் கூறுகின்றனர். இந்த நிலைகளில் பல விதப் பாகுபாடுகள் உண்டு. ஆனால், ஆவியானது, தேகத்தினின்று செல்லாமல் தடுக்கப்பட்டு, சில மணி நேரமோ, அல்லதுசில நிமிஷங்களோ மத்தியமான ஒரு நிலையில் வைக்கப்பட்டிருந்தால், அப்பொழுது மனதில், முன்னைய அநுபவத்தின் ஞாபகம் நிலைத்து நிற்பதில்லை. இந்த ஞாபக மறதியே, ஆன்மா அழிவற்றது என்ற கொள்கை மறுக்கப் படுவதற்கு ஆதாரமாகக் காண்பிக்கப் படுகிறது.

நுண்ணிய கொப்பூழ்க் கொடி அல்லது மின்சாரக்கம்பி மூலமாக மட்டும், தேகத்தின் மீது தனது ஆதிக்கத்தை நிலை நிறுத்திக் கொண்டு, ஜீவனானது, ஸ்தூல தேகத்தினின்று அடியோடு பிரிந்துவிட்ட பிறகே, அந்த ஜீவன், இந்தத் தேகத்தையும் அது சம்பந்தமான விஷய வாசனைகளையும், மணிக் கணக்காகவோ, நாட்கணக்காகவோ விடுத்திருக்க முடிகிறது. பிறகு சந்தோஷமான நினைவுகளுடன் பிரபஞ்ச வாழ்க்கைக்குத் திரும்பி வர முடிகிறது.

### ஜீவனின் அநுபவங்கள்

ஆன்மா, ஸ்தூல தேகத்தினின்று பிரிந்தபிறகு என்னென்ன நிலையை யடைகிற தென்பதை நான் கூர்மையாகக் கவனித்து வந்தேன். முதலில் பூமிக்கடுத்த நிலையிலுள்ள சிதாமிசத்தைச் சிறிது கஷ்டத்துடனேயே நுகர ஆரம்பித்தது. ஆனால் சில விநாடிகளுக்குள், மிகுந்த சுலபமாகவும், சந்தோஷமாகவும் இயற்கையின் சித்துத் தத்துவங்களை இழுக்கவும் வெளிவிடவும் அதற்குச் சாத்தியமாயிற்று. பிரபஞ்ச வாழ்க்கையில் ஈடுபட்டிருந்தபோது அந்தப் பெண்மணிக்கு எந்தவிதமான தேக அமைப்புகள் அமைந்திருந் தனவோ, அதைவிட எல்லா அம்சங்களிலும் அழகுடைய தாயும் அபிவிருத்தி யடைந்ததாயுமுள்ள சூக்கும சரீரம் ஏற்பட்டிருப்பதை நான் இப்பொழுது கண்டேன். அதாவது மரணத்திற்கு முன்னிருந்தவைகளைப்போல் இப்பொழுது இதயம், வயிறு, ஜீரணப்பை, சுவாசப்பை முதலியன யாவும் காணப்பட்டன. இஃது ஆச்சரியமான, ஆனால் ஆறுதல் அளிக்கக்கூடிய உண்மை!

அவனுடைய சூக்கும சரீரத்தில் காணப்பட்ட அபிவிருத்திகள் அதாவது மாற்றங்கள், அவ்வளவு குறிப்பிடத் தக்கனவாகவோ, சமய இயல்பைக் கடக்கக் கூடிய விதமாகவோ இல்லை. மற்றும், அவை அவளுடைய இயற்கைத் தோற்றத்தையோ, உலக இயல்புகளையோ அடியோடு மாற்றவில்லை. அவள் பழையபடியே இருந்தாள். அவளுடைய நண்பர்கள் பார்த்

தால், நோய்வாய்ப்பட்ட ஒரு நண்பர் நம்மைவிட்டுப் பிரிந்துசென்று பிறகு தேகாரோக்கியத்துடன் திரும்பி வந்தால் நாம் எப்படி ஆச்சரியமும் சந்தோஷமும் அடைவோமோ அப்படியே, " ஓ ! இப்பொழுது நீ எவ்வளவு நன்றாகக் காணப்படுகிறாய் ! எவ்வளவு அபிவிருத்தி யடைந் திருக்கிறாய் ?" என்று கூறுவார்கள். சூக்ஷ்ம சரீரத்தில் காணப்பட்ட அபிவிருத்திகள் அவ்வளவு அழகுடையவைகளாக இருந்தன.

சூக்ஷ்ம உலக வாழ்க்கைக்குரிய புதிய தத்துவங்களுக்கும், உயர்ந்த உணர்ச்சிகளுக்கும் அவள் தன்னைப் பழக்கப்படுத்திக் கொள்வதை நான் பார்த்தேன். புதிய விழிப்புப்பெற்ற, விரைவான விகாசத்தை அடைந்து கொண்டிருக்கிறதான அந்த ஆன்மாவின் உணர்ச்சிகளை நான் குறிப்பாகக் கவனிக்கவில்லை. ஆனால், ஸ்தூலசரீரத்திலிருந்து சூக்ஷ்ம தேகத்திற்கு மாறுகிறபொழுது அவள் ஒரேவித நிதானத்தைப் படைத்திருந்தாள். பிரபஞ்சத்தைவிட்டு அவள் பிரிந்துசென்றதற்காக அவளுடைய குடும்பத்தினரின் ஓயாத புலம்பலில் அவள் கலந்து கொள்ளவில்லை. சில்லிட்டுப் போன, உயிரற்ற ஓர் உருவத்தைக் கண்டே அவர்கள் அழுகிறார்கள் என்பதை அவள் ஒரே பார்வையில் கண்டுகொண்டாள். அவர்களுக்கு, மரணத்தைப் பற்றிய உண்மையான ஞானமின்மையினாலேயே, ஸ்தூல சரீரத்தின் பிரிவுக்காக வருந்துகிறார்கள் என்பதையுந் தெரிந்து கொண்டாள்.

மனித சமூகத்தைச்சேர்ந்த பெரும்பாலோர் மரணத்தைப்பற்றி மேற்போக்கான ஞானம் படைத்திருப்பதனாலேயே, நண்பர்களோ உறவினரோ ஸ்தூல தேகத்தினின்றும் பிரியும் போது அதிகமாக அழுகிறார்கள். இவர்கள, ஸ்தூல தேகத்தின் மரணம், ஜீவனின் அழிவு என்று கருதுகிறார்கள். ஒரு மனிதன் இயற்கையான மரணத்தை யடைந்தால், ஆன்மா எவ்விததுன்பத்தையும், அநுபவிப்பதில்லை யென்று உண்மை அறிய விழைவோர்க்கு நான் உறுதி கூறுகிறேன். அல்லது ஸ்தூல சரீரமானது, நோயினால் அழிந்து போனாலோ, பிற காரணங்களால் கொலைக் கப்பட்டாலோ, ஆன்மா உரு வழிவதில்லை; தெளிவற்றுப் போவதுமில்லை. உன் அன்பான பார்வைக்குப் பதிலளிக்க முடியாத உயிரற்ற பிணத்தைப் பாராமல், சூக்ஷ்மக் கண் கொண்டு நீ பார்த்தால், உன்னெதிரே அதே உருவம், முன்னிலும் அழகாக உயிருடனிருப்பதைக் காண்பாய். ஆதலின், ஆன்மாவானது, இந்தப் பிரபஞ்ச வாழ்க்கையினின்று விடுதலையடைந்து, சூக்ஷ்ம உலகத்திற்குச் செல்வதைக் குறித்து நாம் மகிழ்ச்சியே யடைய வேண்டும். ஆன்மாவானது, தேகத்தை விட்டுப் பிரிந்து, இதைவிட உயர்ந்த சிறந்த உலகத்தில் வசிக்கச் செல்லும்போது நாம் அழுவதைக் காட்டிலும், உலகத்தில் நடைபெறும் பெரும்பான்மை விவாகங்களுக்காகவே நாம் அழவேண்டும்.

## ஜீவனின் பிரிவு

நான் பார்த்த மாற்றம் ஏற்படுவதற்கு, அதாவது ஸ்தூல தேகத்தினின்று ஜீவன் பிரிந்து சூக்ஷ்ம தேகத்தை யடைவதற்கு இரண்டரை மணிநேரம் ஆயிற்று. ஸ்தூல சிரசி

னின்று மேலெழுந்து தன்னைப் புனர் நிர்மாணஞ் செய்துகொள்ள ஒவ்வோர் ஜீவனுக்கும் இந்த இரண்டரை மணி நேரமே பிடிக்கிறதென்று சொல்ல முடியாது. மேற்படி ஸ்திரீயின் ஸ்தூல தேகத்தினின்று பிரிந்த ஜீவனானது, தன்னைச் சூழ்ந்துள்ள புதிய தத்துவங்களுக்குப் பழககமானதும், தனது மனோசக்தியால் தேகத்தின் மேலிருந்த உயர்நிலையிலிருந்து இறங்கி, அந்த ஸ்திரீ நோயுடன் படுத்துக்கொண்டிருந்த படுக்கை யறையினின்றும் வெளியே சென்றது. அப்பொழுது கோடைகாலமானதால் எல்லாக் கதவுகளும் திறக்கப்பட்டிருந்தன. அதனால், அந்த ஆன்மா வெளியேறுவதற்கு எவ்வித தடையும் உண்டாகவில்லை. ஸ்தூல தேகத்தில் நாம் எந்தக் காற்றை மூச்சு விடுகிறோமோ, அந்தக் காற்றை சூக்கும சரீரத்தினால் சுலபமாகக் கடந்து விடலாமென்ற உண்மையை அப்பொழுதே நான் முதலில் கண்டேன். ஸ்தூல சரீரத்திலிருந்து கொண்டு நாம் இந்தப் பூமியை எப்படிக் கடந்து செல்கிறோமோ அப்படியே மேற்படி ஜீவனானது ஆகாயத்தைக் கடந்து சென்றது. வீட்டினின்று வெளியேறியதும், இந்த ஆன்மாவை, சூட்சும உலகத்திலிருந்துவந்த வேறு இரண்டு ஆன்மாக்கள் சந்தித்தன. ஒன்றுக்கொன்று சிறிதுநேரம் அளவளாவியதும், மூன்றும் ஒன்று சேர்ந்து பிரபஞ்சத்தைச் சூழ்ந்திருக்கும் பரமாணு வாகாயத்தின் மூலமாகச் சாய்வாய் மேலேறிச் சென்றன. அவை மூன்றும் இயற்கை யாகவும், சகோதரப் பான்மையுடனும் ஆகாயத்தைக் கடந்தன. ஒரு மலையின் சாரலில் அவை நடந்து செல்வதுபோலவே எனக்குத் தோன்றியது. அவை தொலைதூரம் செல்லும்வரை நான் பார்த்தேன். பிறகு என்னுடைய ஜாக்கிரதா நிலைக்கு நான் வந்துவிட்டேன்.

---

# சான்றோர்க்கணி

[அ. வரதநஞ்சைய பிள்ளை]

இத்தலைத் தொடர் மொழியில், சான்றோராவார் யாவர்? அவர்க்கு அணியாவது யாது? அஃதெவ்வாறு? எனக் கேள்விகளை எழுப்பி முறைப்பட ஆய்ந்து உண்மை காண்பாம்.

இச் சொற்றொடர், ஆசிரியர் வள்ளுவனாரால் இல்லற வியலில், நடுவு நிலைமை என்னும் அதிகாரத்தின் கண்ணே,

"கேடும் பெருக்கமு மில்லலல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி"

எனவும்,

"சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ
[லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி"

எனவும், வருஞ்செய்யுட்களின் இறுதியிற் கூறப்பெற்றதாம். சான்றோர் சால்புடையோர் சால்பு என்னும் பண்பு நற்குணங்கள் எல்லாம் ஒருங்கு நிரம்பி யமைதலை உணர்த்தும். ஆகவே எல்லா நற்குணங்களும் குறைவின்றி முற்ற நிரம்பிய தூயோராய நல்லோரே சான்றோரெனப் பெறுவர்.

சால்பு என்பதன் தன்மைகளைக் கூற வந்த விடத்தே நம் செந்நாப்போதார்,

" கடனென்ப நல்லவை யெல்லாம் கடனறி
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு" [ந்து

எனப் பொது வகையாற் கூறிப் பின்னர் சிறப்பு வகையாக,

" அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் [வாய்மையோ
டைந்து சால்பூன் றிய தூண் "

" ....பிறர்தீமை சொல்லா நலத்தது சால்பு"

" ஆற்றுவா ராற்றல் பணிதலது சான்றோர்
மாற்றாரை மாற்றும் படை "

" சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி
துலையல்லார் கண்ணுங் கொளல் "

"இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு "

என மொழிந்து விதந்தனர். இவ்வாற்றால், சான்றோர்பால் காணப்படும் சிறப்புச் செயல்களாவன :—

யாவரிடத்தும் மனங்கசிந்த அன்பு பெருக்கலும், தீயசெய்ய நாணலும், பிறர்பாற் கைம்மாறு கருதாது இயன்றகடப்பாடுகளை நாளும் புரிதலும் மன இரக்கம் மிக்குடைத்தாதலும், உண்மையே பேசுதலும் * பிறர் தீமையை வெளியிடாமையும், ஒரு நற்கா · யத்தை முற்றுவிக்கும் போது யாவரையும் தாழ்மையுடன் வேண்டித் துணைக்கோடலும், தம்மின் மிக இழிந்தோர்க்கும் தம்மைக் குறைந்தவராகக் காட்டிக் கோடலும், தமக்குத் துன்பம் புரிவோர்க்கும் மாறாக நன்மையே செய்தலும், இவைபோன்ற பிறசெயல்களுமாம் எனப்பெறுதும்.

உலக முய்வதற் கெனவே தோன்றித் தமக்கென வாழாப் பிறர்க்குரியாளர்களாகிய இச்சான்றோர் விரும்பும் அணிகலன்கள் இரண்டு என மேற்றலைப்பிற் கண்டாம். அவற்றுள் ஒன்று, துன்பமோ இன்பமோ தொடரும் போழ்து ஒரே பெற்றிப்பட்டு உள்ளம் சிறிதும் மாறாது செந்நெறி கடைப்பிடித்து ஒழுகுவது. மற்றொன்று, இருவர் வாதிகள் கூற்றுக்களையும் நன்கு கேட்டு நீதியை உள்ளவா றுரைத்தல். இவ்விரண்டு அணிகளும், உள்ளக் கோடாமையையே குறிப்பதாகலின், ஆசிரியர் கூறியது கூறல் எற்றுக்கு? என்பது முதல் வினா ?

நெஞ்சத்துக் கோடாமையை முன்னும், ஒருபாற் கோடாமையைப் பின்னும் வைததேன் ? என்பது இரண்டாம் வினா.

இவ்விரு குறள்களுக்கு மிடையே யுள்ள வேறு, இரண்டு குறள்கள் " ஓரமுடையோன் கேடடைவான் " என்றும், நடுநிலைமை யுடையோர் ஒரு கால் பண்டை வினைப்பயத்தாற் கேடடைய நேரினும், அக்கேடும், உயர்ந்தோரால் பெருஞ் செல்வமெனவே கருதப்பட்டு நன்குமதிப்கை விளைப்பதாகு மென்றுங் முறையே கூறுகின்றன. இவை கொண்டு, கேடும் ஆக்கமும் முன் பிறவி வினைப் பயனாக நியதி கூட்டவரு மென்னும் உண்மை கண்டு நடுநிலைமையி னீங்காதொழுக வேண்டுமென ஆசிரியர் குறித்தனரென்பர் ஒரு சாரார்.

---

* பிறர் தீமையை வெளியிடின் ஏதமுறுவரோ என்றும், அவரதியல்பு அஃதெனின் இழிவு கூறல் தகாதே என்றும் அஞ்சுதலால்.

அங்ஙனம் நடுவுடையோர், இரு வாதிகளின் வழக்கையுங் கேட்டு நீதி புகல்பவ ரன்றே. அற்றாகவும் ஒரு பாற் கோடாமை வேண்டு மென மறித்துங் கூறிய தென்னை? எனின், முற்கூறியது அவரது நெஞ்சத் திட்பச் செம்மை. பின்னது, உரைக்கும் சொன்னிலை குறித்தது என்பர். நன்று, சமன் செய்து சீர் தூக்குந் துலாக்கோல் எதற்குவமம்? எனின் ஒருபாற் கோடாத உள்ளத் திற்கே ஒப்பாவது என மொழிவர். அங்ஙனமாயின், முற்கூறியதும் நெஞ்சு கோடாமையையே யன்றோ? அதனோடு இதனிடை வேற்றுமை காணுமாறில்லையே எனின் முற்கூறி யாங்கே கூறி ஒழிப்பர். ஆதலின், முதற் குறட்கு நுண்ணியவிழுப்பொருள் வேறுளதாதல் வேண்டுமெனக்கருதற்கிடனுண்டு. அஃதாமாறு கூறுதும்:

யாவரும் தம்மிடத் துள்ளவற்றை விட்டு இல்லாத பொருள்களையே ஈட்டுவ தியற்கை. அவ்வாறே பிறவியியல்பாக நாம்பிறக்கும் அந்நாளேஏற்பட்டு, அநுபவித்தன்றி வேறெவ் வகையானும் மாற்றிப் போக்கற் கியலாத வண்ணம் அமைந்துள்ள கேடும் பெருக்கமும் குறித்து அஞ்சுதலும் அகமகிழ்தலும், கேட்டை மாற்றி ஆக்கத்தையே விளைப்போமென முயற்சித்தலும் பயனில் செயலே யாமென வுண்மை தேறி, அவ்வக்காலங்களிற் றத்தங் கடப்பாடுகளை ஒழுங்குறப் புரிந்து செல்லத் துணிவுறும் செப்பமும் திட்பமுமுடைய மன அமைதியொன்றே நம்பாலிதுகாறுமில்லாதது. ஆகலின் அதனையே தேடற்குப் பல்லாற்றானு முயற்சிப்பா மெனக் கருதுதலே சான்றோர்க்கணியாம் எனக் கூறினார் என்க.

இம்மைக்கும் மறுமைக்கும் ஏற்ற பெரும்பயன் இவ்வுள்ளச் செம்மை ஒன்றாலேயே விளையுமாகலின் இஃது முதலில் வைத்தோதப்பட்டது.

சான்றோ ரியல்பு ஈதேயாம் எனப் பெரியபுராணத்தில் அருண்மொழித் தேவரும் அடியார் பெருமை கூறுமிடத்தில், "கேடும் செல்வமும்கெட்ட திருவினர்" எனவும், பிரபுலிங்கலீலை ஆசிரியரும்,

'கேடும் செல்வமும் கீர்த்தியும் நிந்தையும்
வேறற நோக்குதல்..................
கூடுந்தன்மை கொளுமனம் நன்மனம்'

என்றுங் கூறிப்போந்தனர்.

சைவ சித்தாந்தத்தில் இருவினை ஒப்பு எனக் கூறப்படும் சிறந்த பக்குவமு மிஃதே. இவ் விருவினையொப்பு உண்டாய வழியே மலபரிபாகம், சத்திநிபாதம் முதலிய வீடுபேற்றிற்கு முன் றோன்றும் காரண காரியங்கள் ஒருதலையா னெய்துவன. ஆசிரியர் கருத்திதுவா யின்மையானே, ஒரு பாற் கோடாது வழக்குரைக்கும் அவரதுலக ஒழுக்கம் பிற்கூறப்பட்டது.

துறவற நெறிக்குரிய இருவினை ஒப்புத் தன்மையை நடுவுநிலைமை கூறும் இல்லற வியலில் ஓதியது சாலாதெனின், நன்று சொன்னாய்! 'ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல்' என்னும் உத்திகொண்டு ஆசிரியர் அங்ஙனங் கூறுதல் இயல்பென்க. இங்ஙனமே,

"ஒருமையு ளாமைபோல் ஐந்தடக்க லாற்றின்
எழுமையு மேமாப் புடைத்து"

எனவும்,

"நிலையிற் றிரியா தடங்கியான் றோற்றம்
மலையினு மாணப் பெரிது"

என்றும், துறவுக்குரிய ஐந்தவித்

தொழுகு முறையினையும் அடக்க முடைமை அதிகாரப்பட்ட வழி இல்லற வியலில் வைத்தோதிய தூஉங் காண்க.

முறைப்பட இல்லற நெறியில் வழா தொழுகுவோர்க்கே துறவு நெறியும் கைவந்து பயன் பெறுதல் கூடுமென்க.

"காமஞ் சான்ற கடைக்கோட் காலை......
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே"

என்ற தொல்காப்பியனார்க்கு மிஃதே கருத்தாதலானு மறிக. ஆதலின், இல்லற நெறிக்கே யுரித்தெனவரை யறை செயயப படாதனவாய்த் துறவு நெறிக்கும பயன் படும் பொதுவாய அறங்கள், இவ் விரண்டையும் தனித் தனிக் கூறும் இயல்களுள் அமயம் நேர்நதுழி எவ் விடத்தேனுங் கூறுதற் குரியவெனக் கண்டோம். இனி இதில் ஐயுறவில்லை. இவ்வாறு கேடும் பெருக்கமும் ஒரு நிகரனவென வுண்மை கண்டோருள் ளம் என்றும் துன்பங்காணுது இன் பத்தையே துய்க்குமாற்றுல் அவர்க் கும் கேடு ஒரு குறைவாகத் தோன் றுது. உயர்ந்தோரும் அவரது தகுதி யின் மேன்மையை நன்குணர்ந்து நன்கு மதிப்பார்களாதலின் பிறர்க்கும் இழிவுகாட்டாது பெரும் பேருகவே முடியும். நடுவு நிலைமையிற் றிறம்பி ஆக்கம்பெறற்கு முயல்வார்க்குஊழின் உதவி யில்வழி அது கூட்டாமையே யன்றி அத்தீய பண்பால் கேடும் வரு விக்கப் படுதல் ஒருதலையே யாகலின் நல்லோர்க்கும் அல்லோர்க்கும் நடு நிலைமை விழுமிய பயனை வருவிக்கு மெனத் தெரிவித்தற்கே,

"கெடுவல் யான் என்பதறிக......"
வையாது லகம......"

என்னும் இரு குறட்களையும் இடைப் பெய்தமைத்ததென்க.

உண்மை இவ்வாறுதலின் இல்லறம் பற்றி ஒழுகுந் தலைமைப் பாடுடை யோர், இருவர் வாதிகளின் வழக்கி னும நீதி நேர்ந்துண்மை கூறுக. பரி தண முதலியன வேட்டோ அன்றித் தமர் தம் நண்பர்க்கு நண்பர், தமக்கு வேண்டியோரால் கண்ணோட்ட முடை யர் எனப் பல காரணங்களில் ஒன்று கொண்டே, வழக்கல்லா வழக்கை யுரைத்தல் அடாது எனக் கூறியது "சமன் செய்து" என்னுங் குற ளென்க.

இதுகாறுங் கூறிப்போநத வாற்றுல் நற்குணங்களெல்லாம் நிரம்பிய சான் றோர்க்கு அழகும் மதிப்புந்தரும் பேரணிகள் இரண்டுள. ஒன்று இருவி னைப்பயனுகத் துன்பஇன்பங்கள் முன் அமைத்தபடி எய்துவன வெனப் புறக் கணித்து அவற்றைக் குறித்துத் துன் புறலும் இன்பமடைதலுமிலராய் ஒரு நிலைமைப் பட்ட உள்ளத்தினராதல், மற்றொன்று, உலகியல்புகளில், கோடி கொடுப்பினும் தம்முடைய நாக்கோடா மல் உண்மை ஓதி வழக்குத் தீர்த்தல் என்றும், இவ்வாறன்றி ஓரங் கூறிப் பொருளீட்டுவானேல் அத்தீவினை தீய பயநதே விடுமாகலின் தப்பாது கேடு தருதலானும், ஒருகால் நடு நிலைமை யுடையார்க்கும் கேடு வருமே எனின் அது கேடாக அவரும கொள்ளார். உயர்நதோரும் இகழாது செல்வத்தோ டொக்கு மென மதிப்பர் ஆகலானும் துறவறங்கட்குப் பொதுப்பட நிற்கும் நடுவு நிலைமையின் முன் னேதிய அணி சாலச் சிறப்புடைய தென்றும், பின்னது இல்லறப்பாங்கிற் குரித்தாய் மறுமைக்கும் பயன்றரும் காரணமாய் அமைவதா மென்றும் அறிகின்றும்.

# திருவிழாவில் சமயபோதனை

1. திருநாவுக்கரசு சுவாமிகள் திருவவதாரத் தலமாகிய திருவாமூரில் சித்திரைச் சதயத்தன்று ஒரு பெருங் கூட்டம் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்கள் தலைமையில் கூடிற்று. சமாஜக் காரியதரிசியும், திரு. ச. சச்சிதாநந்தம் பிள்ளையவர்களும் அப்பர் சுவாமிகள் சரித்திரம், தேவாரம் முதலியவற்றைப்பற்றிச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினர். அப்பர் சுவாமிகள் தேவாரம் சமாஜத்தின் புதிய சுத்தப்பதிப்பு ஊர்வலமாகக் கொண்டுவரப்பட்டு வெளியிடப்பட்டது.

2. காஞ்சீபுரம் என வழங்கும் திருக்கச்சியேகம்பத்தில் நடைபெற்ற பிரஹ்மோத்ஸவத்தில் நமது சமாஜத்தின் சார்பில் ஏழாந்திருநாள் ஒன்பதாந்திருநாள் ஆகிய இரண்டு நாட்களிலும் முறையே "சேக்கிழார் கவிநயம்" "பதிபுண்ணியம்" எனும் பொருள்கள்பற்றி சமாஜத்து வெளியூர் நிர்வாக சபையினருள் ஒருவராகிய காவித்தண்டலம் - சைவத்திருவாளர் வேதாசல முதலியாரவர்கள் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள்.

3. கூவம் என வழங்கும் திருவிற்கோலத்தில் நடைபெற்ற திருவிழாவில் நான்காம் நாள் ஐந்தாம் நாள் (4, 5-5-30) உத்ஸவங்களில் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள் தலைமையில் சமாஜக் காரியதரிசியார், திரு. பா. கந்தநரசிம்ஹம், திரு. கே. வைத்தியநாத முதலியார், திரு. அ. முத்துச்சாமி முதலியார், திரு. விஜய கந்தசாமி முதலியார், திரு. சு. வை. துரைசாமி முதலியார், திரு. சு. ரா. அண்ணாமலை முதலியாரவர்கள் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள். சமாஜத்தின் கிளைச்சபை யொன்று தாபிக்கப்பட்டது.

---

# அப்பர் சுவாமிகள் தேவாரம்

## சமாஜத்தின் சுத்தப்பதிப்பு வெளிவந்து விட்டது

பிரதி ஒன்றின் விலை அணு பத்து

ஐம்பது பிரதிகட்குக் குறையாமல் முன் பணம் கொடுத்து வாங்குவோருக்கு ரூபாய் ஒன்றுக்கு இரண்டணு வீதம் கழிவு தரப்படும். வி. பி.யில் பிரதிகளை அனுப்ப இயலாது. புத்தகங்களைப் பெற விரும்புவோர் புத்தகக் கிரயம், தபாற்கூலி, ரிஜிஸ்தர் செலவு, பார்சல் செலவு முதலியவற்றிற்குத் தேவையான தொகையைக் கீழ்க்குறித்த வண்ணம் முன் பண மாகவே அனுப்ப வேண்டும்.

கிரயம், தபாற்கூலி, ரிஜிஸ்தர், பார்சல் செலவுள்பட

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஒரு புத்தகம் பெறுவதற்கு ரூபா 1—0—0 | | | 5 புத்தகங்கள் பெறுவதற்கு ரூபா 4 | 4 | 0 |
| 2 புத்தகங்கள் ,, ,, 1 | 13 | 0 | 10 புத்தகங்கள் ,, ,, 8 | 2 | 0 |

பத்து புத்தகங்கட்குமேலாயின் ரயில்வே பார்சலாகப் பெற்றுக்கொள்வதுதான் இலகு வான வழியாகும்.

இங்ஙனம் :

150, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு,
சென்னை.
10—5—1930

ம. பாலசுப்ரஹ்மண்யம், காரியதரிசி.
சைவ சித்தாந்த மகா சமாஜம்.

---

### சைவ சித்தாந்த மகா சமாஜத்தில்

## விற்பனைக்குரிய புத்தகங்களின் அட்டவணை

| | ரூ. | அ. |
|---|---|---|
| "சித்தாந்தம்" மலர் ஒன்று (பைண்டு பிரதி) ... | 2 | 0 |
| "சித்தாந்தம்" மலர் இரண்டு (பைண்டு பிரதி) ... | 2 | 0 |
| சுந்தரர் தேவாரம் ... ... | 0 | 4 |
| அப்பர் தேவாரம் ... ... | 0 | 10 |
| திருவாசகம் (கலிக்கா) ... ... | 0 | 4 |
| திருக்குறள் விளக்கம் - அறத்துப்பால். | 3 | 4 |
| ஷெ. பொருட்பால். | 4 | 8 |
| ஷெ. காமத்துப்பால். | 1 | 12 |
| ஷெ. தொகுப்புரை. | 0 | 8 |
| புலால்மறுத்தலுக்கு 50 காரணங்கள் ... | 0 | 2 |
| சர்வமத சம்மதம் ... ... | 0 | 2 |
| திருநாளைப்போவார் தீக்குளித்ததேன். | 0 | 2 |
| நள்ளிரவில் நகர்க்காட்சி ... | 0 | 2 |
| கடவுள் ... ... | 0 | 2 |
| பண்மயத்த மொழிப்பாவை ... | 0 | 2 |
| சமயத்தின் சாரம் ... ... | 0 | 2 |
| சமய வளர்ச்சி ... ... | 0 | 2 |
| சுயமரியாதை சம்பாஷணை ... | 0 | 2 |
| திருஞானசம்பந்தர் (நாடகம்) ... | 0 | 8 |
| சைவப் பெரியார் தனிக்கூட்டத் தீர் மானங்கள் ... ... | 0 | 2 |
| சங்க நூல்களும் சைவமும் ... | 0 | 2 |
| சைவர் மகாநாடு, திருப்பாதிரிப்புலியூர். | 0 | 8 |
| அறுசமயப் பகுதி ... ... | 0 | 2 |
| அறுபத்துமூன்று நாயன்மார் சரித்திர உண்மை ... ... | 0 | 4 |
| சிவஞானபோதம் ... ... | 0 | 2 |
| அஷ்டப்பிரகரணம் ... ... | 3 | 0 |
| சிவார்ச்சனு சந்திரிகை ... ... | 1 | 8 |
| சைவபூஷணம் ... ... | 1 | 0 |
| சைவ சித்தாந்த பரிபாஷை ... | 0 | 8 |
| சிவஞான சித்தியார் மூலமும் பொழிப் புரையும் ... ... | 2 | 8 |
| சிவஞான போதச் சிற்றுரை விளக்கம் | 3 | 8 |
| சர்வஞானேத்தரம் ... ... | 1 | 8 |
| தசகாரிய விளக்கம் ... ... | 0 | 8 |
| The Grace of Lord Siva (ஆங்கிலத்தில்) ... ... | 0 | 4 |
| திருக்குறட் சாரம் ... ... | 0 | 8 |
| ஷெ. (கலிக்கோ) ... | 0 | 10 |
| ஆசார ஒழுக்கமுறை ... ... | 0 | 4 |
| சிவார்ச்சனைத் திருமந்திரம் ... | 0 | 1½ |

சுந்தரர் தேவாரம் மொத்தமாக வாங்குவோர்க்கு ரூபாய் ஒன்றுக்கு ஐந்து பிரதிகள் வீதம் கொடுக்கப்படும். மேற்கண்ட விலைகள் புத்தகக் கிரயம் மட்டுந்தான். தபாற்கூலி வேறு. பார்சல் செலவு, தபாற்கூலி, வி. பி. செலவு முதலியன வாங்குவோரே செலுத்தவேண்டும்.

மேலேகண்ட அட்டவணையிலுள்ள புத்தகங்கள் தேவையாயின், சமாஜ ஆண்டுவிழா முத லிய கூட்டங்கள் நடக்குமிடங்களிலும் பெறலாம்; கீழ்வரும் விலாசத்துக்கு முன்பணம் அனுப்பியும் பெற்றுக்கொள்ளலாம்.

ம. பாலசுப்ரஹ்மண்ய முதலியார், காரியதரிசி.
சைவ சித்தாந்த மகா சமாஜம்,
150, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை.

---

Printed at the Sadhu Press, 12, Ganapathi Mudali Street, Royapettah. and Published by M. Balasubramania Mudaliar (Editor-in-charge) for the Saiva Siddhanta Maha Samajam, 150, Govindappa Naicken Street, G. T. Madras.

Registered No. M. 2330.

"SIDDHANTHAM"
Vol. 3—No. 4.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

சைவசித்தாந்த மகாசமாஜத் திங்கள் வெளியீடு

"எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே"

| மலர் ௩ | பிரமோதூத ஆண்டு சித்திரைத் திங்கள் 1930ஆம் ஏப்ரல்மீ | இதழ் ௪ |
|---|---|---|

| உள்ளுறை | | பக்கம் |
|---|---|---|


ஆசிரியர் :—ம. பாலசுப்ரஹ்மண்ய முதலியார், B. A., B. L., M. L. C.
உதவி ஆசிரியர் :—கி. குப்புச்சாமி முதலியார்

சைவ சித்தாந்த மகாசமாஜம்,
150, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை.

ஆண்டுச் சந்தா ரூ. 1-8-0.    1930    வெளி நாட்டுக்கு ரூ. 2-0-0.
தனிப் பிரதி அணா 3.

உ

சிவமயம்

# சைவ இளைஞர் மகாநாடு, திருவிடைமருதூர்

---

சைவசித்தாந்த மகா சமாஜத்தின் சார்பில் திருவிடைமருதூரில் சைவத்திருவாளர் **தி. ரா. பொ. துப்புச்சாமிப் பிள்ளையவர்களின்** ஆதரவில் **சைவ** இளைஞர் மகாநாடு ஒன்று 1930௵ ஏப்ரல்௴ 18௳ வெள்ளிக்கிழமை நடைபெறும். சென்னை அரசாங்கத்துச் சுகாதார மந்திரியார் சைவத் திருவாளர் - **கனம். எஸ். முத்தையா முதலியாரவர்கள்** மகாநாட்டைத் திறந்துவைக்க அன்புடன் இசைந்துள்ளார்கள். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தலைமைத் தமிழ்ப் பேராசிரியர் சைவத்திருவாளர்-**கா. சுப்பிரமணியம் பிள்ளை எம். ஏ., எம். எல்.,** அவர்கள் தலைமை வகிக்க அன்புடன் இசைந்துள்ளார்கள். சைவ இளைஞர்களின் நன்மையைக் கோரும் ஒவ்வொருவரும் தவறாமல் வந்திருந்து மகாநாட்டைச் செவ்வனே நடத்தி வைக்குமாறு வேண்டுகிறோம்.

### நிகழ்ச்சி முறை

**1930௵ ஏப்ரல்௴ 18௳ வெள்ளிக்கிழமை**

காலை 8-மணி - வரவேற்பு, திறப்புவிழா,

,, 9-மணி - தலைமைப் பேருரை.

மாலை 2-மணி முதல் 5-மணி வரை தீர்மானங்கள்.

,, 5-மணி ,, 6-மணி ,, முடிபுரை, வந்தனை, கடவுள் வாழ்த்து.

இங்ஙனம்: தங்களன்புள்ள,

**தி. ரா. பொ. துப்புச்சாமிப் பிள்ளை,**
வரவேற்புக்கழகத் தலைவர்

**ம. பாலசுப்ரஹ்மண்யம்,**
சமாஜக் காரியதரிசி.

**தி. கு. கி. நாராயணசாமி,**
மகாநாட்டுக் காரியதரிசி.

### சைவமடங்கட்குச் செல்லுதல்

சைவ மடங்களுக்குச் சென்று சில முறையீடுகள் செய்யுமாறு தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள குழுவினரும் அவர்களுடன் செல்ல விரும்புவோரும் இம்மகாநாடு முடிந்தவுடனே மடங்கட்குச் சென்று தங்களாலியன்ற பணி செய்வார்களென்று இதன் மூலம் அறிக்கை செய்ய விரும்புகிறேன்.

இங்ஙனம்:

**ம. பாலசுப்ரஹ்மண்யம்,**
காரியதரிசி.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

" ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானதந வாணியை உள்நாடு "

| மலர் ௩ | பிரமோதூத ஆண்டு சித்திரைத் திங்கள் 1930 ஆ எப்பிரல் மீ | இதழ் ௪ |
| --- | --- | --- |

## சமயத்தொண்டு

[பத்திராசிரியர்]

சில ஆண்டுகளாக எங்கு பார்த்தாலும் சமயத்துறையிலே தொண்டுசெய்ய வேண்டும், சமயக் கல்வியைப் பள்ளிக் கூடங்களில் கட்டாயமாக்க வேண்டும், நமது சமயிகள் புறச்சமயம் புகுவதைத் தடுக்க வேண்டும் என்றெல்லாம் சொற்பொழிவுகள் செய்யும் பேரறிஞர்கள் கூக்குரலிடுவதைக் கேட்டுக் கேட்டுப் பழகிய நமது தமிழ் நாட்டினரின் செவிகள் செவிடு பட்டிருக்கும். செயலிலோவெனின் நாளுக்கு நாள் புறச்சமயம் புகுவோர் தொகையும் அகச்சமயவிரோதிகளின் தொகையும் அதிகரித்தே வருகின்றன என்பதை ஊகிக்கப் போதிய சான்றுகள் உள்ளன. மிகத்தாழ்ந்த இந்நிலையைக் கண்டு பெரிதும் வருந்திய திருவெண்ணெய் நல்லூரில் கூடிய சைவப் பெரியார்களும் அம்மகா நாட்டில் தலைமை வகித்த ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகளும் நமது சமயத்தைப் பரப்புவதற்குச் சில வழிகளைத் திட்டம் செய்தார்கள்.

அவைகளுள் ஒன்று, நமது சமயத்துக்கு அடிப்படையாகவுள்ள தேவார திருவாசகங்களி லிருந்து, சிறு பிள்ளைகள் உணரும் பொருட்டு எளிய திரட்டொன்று கண்டு, நால்வர் சரிதங்களையும் எளியநடையில் எழுதிப் பல ஆயிரக்கணக்கான பிரதிகள் அச்சிட்டு, பள்ளிக்கூடங்களில் பாடமாகவைத்து, இளமையிலிருந்தே நமது சமயிகளுக்குச் சமயஞானத்தை ஊட்டுவதாகும். இதற்குச் செய்ய வேண்டிய எழுத்து வேலைகளை முடித்துத் தருவதற்கு நான்கு பேரறிஞர்களை அம்மகா நாட்டினர் நியமித்தனர். அவர்கள் தங்கள் வேலைகளை முடித்து விட்டனரென்

றும், அவர்கள் எழுதிய சரிதங்களையும் திரட்டிய திரட்டையும் அச்சிடுவதற்குப் போதிய பொருள் உதவுதற்கும் சில செல்வர்கள் ஒப்புக்கொண்டு அவர்களுள் சிலர் தங்கள் பகுதித தொகையையும் அனுப்பி விட்டார்களென்றும், ஆரம்ப சமய போதனைக்குரிய இந்நூலும் இன்னம் ஒரு மாதத்துக்குள் வெளிவரக்கூடுமென்றும் மிக மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்ளுகிறேம்.

திருவெண்ணெய் நல்லூரில் கூடிய சைவர் மகாநாடு சமயப்பிரசாரத்துக்கு வேறு பல வழிகளையும் திட்டம செய்தது. அவ்வழிகளில் உழைக்க வேண்டியவர்கள் எம்மட்டில் உழைத்துள்ளார்கள் என்பதைத் தெரிவித்துக் கொள்ள மிகவும்வருந்துகிறேம். நமது சமாஜத்தோடு நூற்றுக் கணக்கான சைவசபைகள் இணைக்கப்பட வேண்டுமென்பது தமிழ்நாட்டுச் சைவர்களின் குறிக்கோள். ஆனல் இதுவரை இணைத்துக்கொண்ட சபைகளின் எண் மிகக் குறைவாக யிருப்பது மிகவும் வருந்தத்தக்கது. ஒரே மனதாகப் பல சபைகள் ஒன்றுசேர்ந்து ஒரு துறையில் உழைத்தால்தான் ஏதாவது சிறிது பயன் கைகூடுமென்பது எவரு மறிந்த உண்மை. ஒவ்வொரு சபையும் ஆண்டுக்கொருமுறை ஆண்டு விழாவொன்று நடத்துவதாக ஏற்படுத்தி இரண்டு தினங்கள் மகேசுவர பூசை செய்வித்துச் சில பட்டதாரிகளை அழைத்துத் திறப்பு, தலைமை முதலியவைகட்குப் பயன்படுத்திக் கொண்டு சில பண்டிதர்களைக்கொண்டு சொற்பொழிவுகள் நடத்திவைத்து மீண்டும் அடுத்த ஆண்டுவரையில் உறங்குவதே பெரு வழக்காக யிருக்கிறது. இவ்வாறு இன்னம் எத்தனை ஆண்டுகள்தான் கழிப்பது? எப்போதுதான் நாடோறும் இடைவிடாது பணிசெய்ய முன் வருவது?

சில சபைகட்கு இவ்விடத்து ஒரு ஐயம் எழலாம். நாடோறும் இடைவிடாது செய்யக்கூடிய சமயப் பணியாது? ஒரு பைசாகூட செலவில்லாமல் நாடோறும் செய்யக்கூடிய சமயப் பணியில் சில பகுதிகளை மாதிரிக்காகக் கீழே குறிக்கிறேம் :—

(1) ஒரு சபையின் அங்கத்தினர் தினந்தோறும் திருக்கோயிலிற்சென்று வழிபட்டு அங்கு வரும் மக்களுக்குக் கோயில், கடவுளுருவங்கள், உத்ஸவங்கள் இவைகளின் உட்கருத்துக்களை விளக்குதல்.

(2) ஒரு சபையினர் தினந்தோறும் ஏதாவது ஒரு பள்ளிக்கூடத்துக்குச் சென்று ஆங்குள்ள பிள்ளைகட்குச் சமயச்சார்பான கதைகளையும் நீதிகளையும் போதித்தல்.

(3) ஒரு சபையினர் தினந்தோறும் தாழ்ந்த வகுப்பினர் கூடும் இடங்களிற் சென்று அவர்களிடையில் கடவுள் வழிபாடு, கொல்லாமை, கள்ளுண்ணாமை, நல்லொழுக்கம் முதலியவைகளைப்பற்றி உரையாடல்.

(4) ஒரு சபையினர் தினந்தோறும் மாலைப்பொழுதில் ஏதாவது ஒரு வீதியிலோ அல்லது ஒரு கிராமத்திலோ ஒரு சிறு கூட்டம் கூட்டி ஆங்குள்ளவர்கட்குப் பயன்படுமாறு பாதிரிமார்களைப்போல் நமது சமயப் பிரசாரத்தை நடத்துதல். இத்தகைய வழிகளில் எத்தனை சபைகள் உழைக்கின்றன?

திருவெண்ணெய்நல்லூரில் தலைமை வகித்த ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் சமாஜ

வெளியூர் நிர்வாக சபையினர் தேர்தல் நிகழ்ந்த காலத்தில் ஒன்றைக் குறித்து மிகவும் வற்புறுத்தினார்கள். அதாவது உண்மையில் உழைப்பவர்களையே தேர்ந்தெடுக்கவேண்டும், பட்டதாரிகளையும் அரசியல் முதலிய துறைகளிலேயே கண்ணும் கருத்துமாய் சமயத் துறையை அசட்டை செய்பவர்களையும் நீக்க வேண்டும் என்பதே. அவர்கள் கூறிய புத்திமதியை ஒப்புக்கொண்டு சமயத்துக்கே உழைக்கக் கூடியவர்களை மகாநாட்டினர் தேர்ந்தெடுத்தனர். மாதாமாதம் தாங்கள் இயற்றும் பணியின் விவரங்களை இவ்வெளியூர் நிர்வாக சபையினர் சமாஜக் காரியதரிசிக்குத் தெரிவித்துக் கொள்ள வேண்டுமென்றும் ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் கட்டளையிட்டார்கள். அவர்கள் கட்டளையின் படியே மாதப்பணி யறிக்கைப்பத்திரம் என்று பல விவரங்களடங்கிய தாள் ஒன்றை அச்சிட்டுப் பல பிரதிகள் இவ்வெளியூர் நிர்வாக சபையினருக்கு அனுப்பப்பட்டன. ஆனால்........

அடுத்து வரும் மாதங்களிலாவது நமது சமாஜத்தின் வெளியூர் நிர்வாகசபையினர் ஒருவருக்கொருவர் போட்டியிட்டு, மேலும்மேலும் சிறந்த பணி செய்து அவ்விவரங்களை யெல்லாம் நமக்கு அனுப்புவார்களென்று உண்மை யாகவே நம்பி அவ்வாறு செய்யுமாறு அவர்களை மிகப் பணிவுடன் வேண்டுகிறோம். ஸ்ரீலஸ்ரீ சுவாமிகளின் கட்டளைப்படி அவ்வப்போது வெளியூர் நிர்வாக சபையினர் செய்துவரும் பணி விவரங்களை வெளியிடக் கடமைப்பட்டுள்ளோம். ஆகையால் இந்த இதழோடு வரும் அறிக்கைப் பத்திரத்தையும் சென்றயிதழோடு வந்த பத்திரத்தையும் நிரப்பி மறுதபாலில் அனுப்பி நமது சமாஜத்தின் நன்றியையும் சைவ வுலகத்தின் நன்றியையும் ஸ்ரீலஸ்ரீ சுவாமிகளின் அருளையும் ஒருங்கே பெறுமாறு இப் பெரியார்களைப் பெரிதும் வேண்டுகிறோம்.

நமது பத்திரிகையைப் பலப்படுத்துதல், நமது தேவார வெளியீடுகளை விற்று முதலாக்குதல், ஒவ்வொரு தாலூகாவிலும் ஒரு சபையையாவது உண்டாக்கி நமது சமாஜத்தோடு இணைத்து வைத்தல், எளிய வகுப்பினருக்கும் பள்ளிக்கூடத்துப் பிள்ளைகட்கும் தவறாது சமயபோதனை செய்தல் முதலிய வழிகளில் மிகச்சிறப்பாக கவனத்தைச் செலுத்துமாறு இப்பெரியார்களை மிகத்தாழ்மையுடன் வேண்டுகிறோம்.

“முன்னவனே முன்னின்றால் முடியாத பொருளுளதோ?” என்றார் சேக்கிழார் பெருமான். நமது சமய முன்னேற்றத்துக்கு நமது சமயத் தலைவனாகிய ஆண்டவன் என்றும் முன்னிற்கிறான். அவனருளும் முன்னிற்கிறது. அவனருளைத் துணைகொண்டு நம் சமயப் பணியாளர்கள்தான் முன்னிற்க வேண்டும். அவ்வாறு முன்னின்றால் முடியாத பொருள் யாதுமில்லை யென்பது முக்காலும் சத்தியம். இத்தருவாயின் தேவை பணியாளர்கள் முன்னிற்றலேயாகும்.

சமயப்பணி செய்வதற்கு மங்கையர்கள் முன் வந்துள்ளார்கள். நமது சமாஜத்தில் மங்கையர் பகுதியொன்றும் ஏற்பட் டிருக்கிறது. இளைஞர்களும் முன் வந்துள்ளார்கள். திருவிடைமருதூரில் கூடும் சைவ இளைஞர் மகாநாட்டினையே சைவ உலகம் நோக்கிக்கொண்டிருக்கிறது. அம்மகாநாடும் தக்க

வவரைப் பெற்றிருக்கிறது. அதன் தீர்மானங்களும் பணி செயல் வகைக் குரிய வழிகளைத் திட்டமாகக் கூறும் என்று எதிர்பார்க்கிறோம்.

ரப புதுபபித்துக கும் பாபிஷேகங்கள் நடத்தும் தனவணி கப் பெருமக்களும் அக்காலங்களில் சமயபோதனை நடத்த வேண்டிய கடமையை யுணர்ந்துள்ளார்க ளென்பது நமது சமயவளர்ச்சிக்கோர் நல்ல அறிகுறியாகிறது. ஆலங்குடித்தான் ஆலங்குடியானுய்க் கோயில் கொண்டிருக்கும் நீடாமங்கலததுக் கருகிலுள்ள ஆலங்குடி க்ஷேத்திரத்தில் நாளது வைகாசிமீ கக௨ நடைபெறும் கும்பாபிஷேகத்தை யொட்டி நமது சமாஜத்தின் விசேஷ மகாநாடு ஒன்றை மூன்றுநாட்கள் கூட்டிச் சமயபோதனை செய்யுமாறு கும்பாபிஷேக நிர்வாகஸ்தர்கள் அழைத்துள்ளது நமக்குப் பெருமகிழ்ச்சியை விளைவிக்கின்றது. இஃதேபோல் ஏனைய ஆலயங்களிலும் பெரிய விழாக்காலங்களி லெல்லாம் நமது சமாஜத்தின் துணைகொண்டு சமய போதனை செய்தற்குரிய ஏற்பாடுகள் நடைபெறும் என்று எதிர்பார்க்கிறோம்.

ஏனையோர் செய்ய வேண்டிய பணிகள் பற்பலவாக விருந்தாலும் நமது சமாஜத்தின் சாதாரண அங்கத்தினர்கள் செய்தற்குரிய பணிகளும் நிரம்பவுண்டு. சந்தாவைச் செலுத்திப் பத்ரிகையை வாங்கி விடுவது மட்டும் சமய வளர்ச்சியாகாது. பத்திரிகையில் வரும் விஷயங்களைத் தங்கள் நண்பர்கட்கெல்லாம் அவ்வப்போது தெரிவித்தும் எளிய மக்களுக்கு எளிய நடையில் விளக்கியும் தங்கள் இல்லங்களிலுள்ள பிள்ளை பெண்டிர்க்குப் போதித்தும் வருதல் சாலச்சிறநதது. அதோடு மட்டும் நில்லாது பல அங்கத்தினரைச் சேர்த்து நமது சமாஜத்தைப் பலப்படுத்துதல் மிகச் சிறந்த பணியாகும். இதைப்பற்றி இம்மலரின் முதலிதழில் எழுதியதைக் கண்ணுற்ற ஊக்கசிகாமணிகள் சிலர் பல புதிய அங்கதினரைச் சேர்ப்பித்து உதவி புரிநதார்கள். அவர்களைப் பின்பற்றி ஏனையோரும் குறைந்தது தலைக்கொரு புதிய அங்கத்தினர் வீதமாவது சேர்த்து உபகரித்தல் கூடுமா? கூடாதா? என்று உண்மையாகவே நமது சந்தா நேயர்களை வினவுகிறோம். ஒவ்வொரு ஊரிலும் வசிக்கும் நமது சமாஜ அங்கத்தினர் ஒன்று சேர்ந்து புதியசபை யொன்று தாபித்து, நமது சமாஜத்தோடு அதை இணைத்துக் கொள்வது கூடுமா? கூடாதா? என்றும் அவர்களை உண்மையாகவே வினவுகிறோம்.

மெய்யன்பர்களாகவும் உண்மையும் ஊக்கமும் நிரம்பியவர்களாகவும் உள்ள நமது சமாஜத்தினர் ஒரு சிறிதும் பின்வாங்காது நாம் கூறின வழிகளில் முன்னின்று நமக்கு ஊக்கத்தையும் உவகையையும் அளிப்பார்களென்றே எண்ணுகிறோம்.

[முருகன் திருவருட்பா :—இது வடலூர் ஞானவள்ளலாரின் அமுத மொழியாகும். முருகவேள் கலியுக வரதன் என்பதும் இராமலிங்க சுவாமிகள் இருபதாம் நூற்றாண்டினர் போற்றுதற்குரிய ஞானி யென்பதும் யாவரும் அறிந்ததே. இந்நூலை வெளியிட்ட பாலுன் பதிப்புக் கழகத்தினருக்கு முருகனடியவர் நன்றி பெரிதும் உரித்து. ௩௨௨ பக்கம் கொண்ட நூல். விலை அணு அ. இராயப்பேட்டை முருகவேள் புத்தகசாலைக்கு எழுதுக.]

# ஆலங்குடி என்னுந்
# திருவிரும்பூவளாக் கோயிற் பெருமை

[சுவாமி - வேலாயுதம் பிள்ளை, பி. ஏ., எல். டி.]

ஞால நின்புகழே மிக வேண்டுந்தென்திரு
ஆல வாயில் அமர்ந்துறைஎம் ஆதியே !

## முன்னுரை

சிவன் கோயில்களே சைவ சமயத்தை வளர்ப்பதற்குச் சிறந்த அடிப்படைகள் ஆகும். அக்கோயில்களில் எழுந்தருளியிருக்கும் இறைவனை வழிபடுவதால் தொண்டர்கள் இன்புறுகின்றனர். இவ்வின்பத்தை மிகுதியாக்குவன அக்கோயில்களின் வரலாற்றை நன்குணர்தலும், அக் கோயில்களைச் சிறப்புறும்படி செய்திருக்கிற அருந்தொண்டர்களின் பாடல்களைப் பாடுதலுமேயாம். இவ்வாறின்றிப் பலர் அவ்வரலாற்றினைப் பிறழ உணர்ந்துங் கூறியும் எத்துணை அறியாமையை வெளியிடுகின்றனர் ? அக்கோயிற் பண்களைப்பாடாது அறவே ஒழிகின்றனர். அக்கோயில்களில் இதற்கென ஏற்படுத்தப்பட்ட ஓதுவார்களும் அக் கோயிற் பண்களை மறந்தும் பாடாது விடுகின்றனரன்றோ ? இக் கொடுமைகளை நீக்கவே இவ்வரலாற்றுச் சுருக்கமும், பண்ணுஞ் சேர்த்து அச்சிடப்பட்டிருக்கின்றன. இதனால் அன்பர் இன்புறுவாராக.

எல்லாரு மின்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன் றறியேன பராபரமே.

**கலங்காமற் காத்த பிள்ளையார் :—** ஆலங்குடி கோயிலின் தென்மேற்கு மூலையில் எழுந்தருளியிருக்கும் பிள்ளையாரின் பெயர் இதுவாகும். முன்னொரு காலத்தில் **கஜாசுரன்** என்பான் பல்ருக்குத் தீமை செய்ததன்றி ஆகாயத்திற் சென்று அங்குள்ள அண்டச் சுவரை இடித்து விட்டான். அதனால் ஆகாய கங்கை பெருகி ஆலங்குடி தவிர உலக முழுவதையும் மூழ்கச் செய்தது. இதை நீக்க பிரமன், திருமால் முதலிய தேவர்கள் இக்கோயிலுக்கு வந்து இறைவனை வழி பட்டனர். அவரருளால் பிள்ளையார் சென்று மேலுள்ள ஓட்டையைத் தனது காற பெரு விரல் நகத்தால் அடைத்துவிட்டுக் கீழுள்ள வெள்ளத்தைத் தனது துதிக்கையால் உறிஞ்சி வற்றச் செய்தார். இவ்வாறு இவர் யாவரையுங் கலங்காது காத்ததால் இப்பெயர் பெற்றார்.

**ஆலங்குடி என்னும் பெயர் வந்த வகை :—**பண்டைக் காலத்தில் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் பெரும் போர் நடந்தது. அதில் பலர் இறந்து துன்ப மடைந்தனர். இவ்வாறு இறவாதிருக்க யாவருஞ் சென்று திருமாலை வேண்டினர். அவர் அமிர்தத்தை உண்டாக்குவதற்காக மேரு மலையை மத்தாகவும், வாசுகி என்னும் பாம்பைக் கயிறாகவும் பயன் படுத்தி, திருப்பாற் கடலைக் கடையப் புகுந்தார். கயிற்றின் ஒரு முனையைத் தேவர்களும் மற்றொரு முனையை அசுரர்களும் பிடித்து இழுத்துக் கடைநதார்கள். அப்பொழுது வாசுகி யென்னும் பாம்பு வலி பொறுக்க முடியாது விஷத்தைக் கக்கிற்று. அதே பொழுதில் திருப்பாற் கடலிலிருந்து விஷமுண்டாயது. இவ்விஷங்களின் கூட்டைப் பொறுக்க முடியாத தேவர்களும் அசுரர்களுங் கலங்கி ஓட்டம் பிடிததனர். அவர்களைக் காப்பதற்காகச் சென்ற திருமாலின் திரு

மேனி வெந்து கருகிற்று. பின் யாவருஞ் சென்று சிவபெருமானிடம் முறையிட்டு வேண்ட, அவர் மனம் இரங்கித் தன் தோழனுகிய சுந்திரனை அனுப்பினுர். அவர் சென்றதும் அவ்விஷம் சிறுத்து அவர் கையிலடங்கிற்று. அதைக் கொண்டு வந்து சிவபெருமானிடங் கொடுக்க, அவர் அதை வாங்கி உண்டார். உமாதேவியார் அவ்விஷம் கீழிறங்காதபடி அவர் தொண்டையைப் பிடித்துக் கொள்ள, அங்கேயே அது தங்கிற்று. தேவர்கள் அசுரர்கள் யாவருந் தங்களைக் காத்ததற்கு அடையாளமாக அவ்விஷத்தை எப்பொழுதும் தொண்டையிலேயே அடக்கி வைத்திருக்கும்படி வேண்டினர். அவ்வாறே செய்ததால் இறைவன் திருநீலகண்டராஞர். இவ்வாறு பெரிய ஆபத்தினின்றும் அவர்களைக் காத்ததால் ஆபத்சகாயர் என்றும் அழைக்கப் பெற்றுர். அவ்வூருக்கும் ஆலங்குடியென்னும் பெயருண்டாயிற்று. இதனை விகடமாகக் காளமேகப் புலவரும்,

ஆலங்குடி யானை ஆலாலம் உண்டானை
ஆலங்குடியான் என்று யார்சொன்னுர்-ஆலங்
குடியானே யாகிற் குவலயத் தோரெல்லாம்
மடியார்களோ மண் மீதில்.

என்று சிறப்பித்துப் பாடியருளினர். இவ்வூரிலேதான் விஷங்குடிக்கப் பெற்றது என்பதற்கு அடையாளமாக இவ்வூரிலுள்ளோர்க்கு விஷத்தால் ஒரு தீங்கும் நாளைக்கும் நேர்வதில்லை.

இவ்வாறு சிவபெருமான் விஷத்தைக் குடித்த பின் தேவர்கள் சென்று திருப்பாற்கடலை மறுபடியுங் கடைந்தனர். அதிலிருந்து மூதேவியும், சீதேவியும், கௌஸ்துபமணி முதலியனவும் கடைசியாக அமிர்தமும் உண்டாயிற்று. அவ்வமிர்தத்தால் ஆலங்குடிப் பெருமானை அபிஷேகம் செய்ததன்றி அக்கோயிலைச் சுற்றியும் நிறப்பி வைத்தனர். இதுதான் இப்பொழுது இக்கோயிலைச் சூழ்ந்திருக்கிற அமிர்த புஷ்கரணியாகும். பின் தேவர்கள் அசுரர்களை ஏமாற்றிவிட்டு அமிர்தத்தைத் தாங்களே உண்டு இறவாதிருந்தனர்.

**இதன் உட்கருத்து:**—நம்மை வாட்டுகின்ற கொடிய தீமைகளை ஆலகால விஷம். இவைகளை அடக்கவல்லவர் பரம் பொருளாகிய பரமசிவனன்றி வேறொருவருமல்லர். ஆதலின் அவர் அடியவருக்காக நஞ்சுண்ட பெருங் கருணையை நினைந்து உருகி வேண்டிக் கொள்ளின் தீரா வினைகளுந் தீருமென்பதற்கு ஐயமில்லை. இவ்வாறு நீக்கிக் கொண்ட பெரியார்களுட் பெரியார் திருஞான சம்பமூர்த்தி நாயனுராவர். இவர் தீமைகளைத் தீர்த்துக்கொண்ட வகையாவது :—

இவர் தனது 16,000 திருக்கூட்டத்தார்களுடன் கொங்கு நாட்டில் ஸ்தல யாத்திரை செய்து கொண்டிருந்த பொழுது காவிரியின் தென்கரையிலுள்ள கொடிமாடச் செங்குன்றூரில் தங்கியிருந்தார். ஆங்கு அடியவர் யாவரும் குளிர் மிகுதியாலும், பனி மிகுதியாலும் நோயுற்றனர். இது நாயனுருக்குத் தெரிந்ததும் அவர் இந்நோயை நீக்க "எவ்விடத்தும் அடியார் இடர் தீர்ப்பது திருநீலகண்ட மென்றே" என்று திருநீலகண்டப் பதிகம் பாடினுர். இதனுல் அடியவர்க்கன்றி அந்நாட்டிலுள்ளோர் யாவர்க்கும் அந்நோய் நீங்கிற்று. இப்பதிகத்தை நாமும் ஓதின், நம் நோயுந்துன்பங்களும் நீங்குமென்பது திண்ணம்.

இவ்வாறு நீங்குவதற்கு வேறொரு நல்வழி பிரதோஷ விரதம் இருத்தலாம். ஒவ்வொரு மாதத்திலும் சாயுங் காலத்தில் வருகிற இரண்டு * திரயோதசி திதிகளும் அவ்விரதத்திற்குஉரிய நாட்களாம். அன்று பொழுது போக ஐந்து நாழிகையி லிருந்து பொழுது போய் ஐந்து நாழிகை யளவும் இறைவன் நஞ்சுண்ட பெரிய தோஷகாலமாகக் கருதப்படும். அந்நாள் முழுவதும் பட்டினியுற்று சாயுங்காலத்தில் சிவபெருமானைத் தரிசித்து வணங்குவோர் பலப்பல தீமைகளிலிருந்தும் நீங்குவ ரென்பது பலர் அறிந்ததே. இதைப் படிப்போர் யாவரும் இவ்வரிய நன்மை அடைவார்களாக.

**தக்ஷிணாமூர்த்தி:-** ஆலங்குடிக் கோயிவில் மிகுதியாகக் கொண்டாடப் படுகிற கடவுள் தக்ஷிணாமூர்த்தியே யாவர். இக்கோயிலில்நடக்கும் உற்சவம்யாவும் தக்ஷிணாமூர்த்தி உற்சவருக்கே நடக்கிறது. இப்பெருமை வேறொரு கோயிலுக்கும் இல்லை. இம்மூர்த்தியின் வரலாறுவது :—

முன்னொரு காலத்தில் சனகர், சநந்தர், சநாதனர், சனற்குமாரர் என்னும் நான்கு முனிவர்கள் வேதத்தின் பொருள் புரியாது மயங்கி, பிரம விஷ்ணுக்களால் தெளியாது, இறைவனை நோக்கித் தவம்புரிந்தனர். பின் இறைவன் தோன்றி ஆகமங்களால் தெளிவித்தனர். பின்னும் மனம் அடங்காது வருந்திய அந்நால்வர்க்கும் இறைவன் தக்ஷிணாமூர்த்தி வடிவுடன் வீற்றிருந்து யோகத்தால், ஞானமடைந்து நிஷ்டை கூடும்படி செய்தனர். இவ்வாறு இறைவன் யோகத்திலிருந்த பொழுது உலகம் யாவையும் அடங்கி ஒடுங்கிப் போயிற்று. இதனை நீக்கக் கருதிய பிரமன், காமனை ஏவி இறைவன் தவத்தை அழிக்கச் செய்தனர். அவன் புஷ்ப பாணங்களால் எய்ததும், இறைவன் நெற்றிக்கண்ணால் நோக்க, அவன் வெந்து சாம்பல் ஆயினன். பின்னும் இறைவர் யோகம் புரிவாராயினர். அது கண்ட தேவர்கள் யாவரும் கூடி வேண்ட அவர் விழித்து அருள்புரிந்து உமையம்மையை மணந்து உலகம் யாவும் விளக்கமுறச் செய்தனர். இவ்வாறு மணம்புரிந்த இடம் **திருமணமங்கலம்** என்னும் ஊராகும். இது ஆலங்குடியை அடுத்து வடக்கே யிருக்கிறது.

**தக்ஷிணாமூர்த்தியின் பெருமைகள்:-** இவரே ஞானமூர்த்தி யாவர். இவர் ஒன்றிலுந் தோயாது குணமற்றிருப்பவ ரென்பதைக் குறிக்கப் பளிங்கு போன்ற திருமேனி யுடையவராவர். இவர் எல்லாத் தீமைகளையும் அடக்கியாளும் வலிமையுடையவர் என்பதற்கு அடையாளமாகத் தன் வலது காலால் முயலகனை மிதித்து வீற்றிருக்கின்றனர். இவரது நான்கு கைகளுள் ஒரு வலக்கை சின்முத்திரை என்று சொல்லப்படுகிற ஞானக்குறியைக் காட்டுகிறது. இதன் பொருள் நீட்டி இருக்கிற மூன்று விரல்களாகிய மும்மலங்களையும் (ஆணவம், மாயை, கன்மம்) நீக்கி, கட்டை விரலாகிய இறைவன் திருவடியுடன் ஆட்காட்டி விரலாகிய உயிர் சேர்வதே முத்தி என்பதாம். மற்றொரு வலக்கை உருத்திராக்க மாலையைப் பிடித்திருக்கிறது. இது ஐந்தெழுத்தை உருத்திராக்க மாலை கொண்டு எண்ணி, பன்முறை சொல்லுதலே ஞானத்தைக் கொடுக்கும் வழி

* வளர் பிறையில் ஒன்றும் தேய்பிறையில் ஒன்றும் ஆக இரண்டு.

என்று குறிப்பிடுகிறது. இதனுற்றான் இம்மூர்த்தியின் முன்னிருந்து ஜெபம் செய்யும்படி விதி ஏற்பட்டிருக்கிறது. இவர் இடது கை ஒன்றில் ஏந்தியிருக்கிற அமிர்த கலயம் பேரின்பத்தை அளிக்க வல்லவரென்பதைக் காட்டுகிறது. மற்ருெரு இடக்கையில் தாங்கியிருக்கும் சிவஞானபோதச் சுவடி, இந்நூலே உண்மை ஞானத்தை விளக்குகிறதென்பதையும், ஞானத்தால்தான் முத்தி அடையக்கூடும் என்பதையும் உணர்த்துகிறது. யாவராலும வெல்ல முடியாத காமனை இவர் கொன்றது இவரை வழிபட்டால் எளிதில் பெண்ணுசையை நீககலாம்என்பதை விளக்குகிறது. * இவ்வாறு பல அரிய அடையாளங்களுடன் கூடிய இம்மூர்த்தியை எப்பொழுதும் வணங்கி முத்தி அடைவோமாக. இவ்வாறு செய்ய இயலாவிடின் இக்குரு மூர்த்திக்குப் பிரியமான குருவாரம் (வியாழக்கிழமை) தோறும் தவருதுவணங்கிஞல் பெரும் பேறடையலாம்.

**சுந்தரமூர்த்தி நாயஞர் இவ்வூருக்கு வந்த வகை:—** ஆலகால விஷத்தை அடக்கிக் கொண்டுவந்து கொடுத்த சுந்திரஞர் இவ்வுலகில் சுந்திரமூர்த்திநாயஞராகப் பிறநது, திருவருள் பெற்று, திருவாரூரில் வந்திருந்த பொழுது ஆலங் குடிக்குச் சென்று வணங்க விரும்பிஞர். அதற்காகப் பயணப்பட்டுப் போகும்பொழுது சிவபெருமான் திருவிளையாடல் புரியக்கருதி வழியிலுள்ள அகஸ்திய காவேரி என்னும் வெட்டாற்றைப் பெருகவைத்தார். வெள்ளம் மிகுதியாக இருந்ததால் ஓடம் விடுவார் ஒருவரும் இல்லை. ஆதலின் கசிந்து உருகி இறைவனை வேண்டிஞர். உடனே சிவபெருமானே ஓடக்காரஞக வந்து சுந்தரமூர்த்தி நாயஞரையும் அடியார்களையும ஏற்றிக் கொண்டு சென்ருர். நடுஆற்றிற் சென்றதும் பரிசுக்கோலை வேண்டுமென்று தவறவிட்டு அதை எடுக்கப் போவார் போல் ஆற்றில் விழுந்து தத்தளித்துக் கொண்டும் ஆற்றுடன் சென்ருர். ஓடமும் ஆற்றுடன் சென்று **திருக்கோளம்பூதூரை** அடைந்தது. சுந்தரர் அவ்வூர் இறைவனை வேண்ட அவர் தோன்றிக் காப்பாற்றுவதாகக் கூறி மறைந்தனர். பின் ஓடஞ்சென்று பாரின்மீது மோதி அமிழ்ந்ததால் அவ்விடம் **அமிழ்ந்தீச்சுர** மென்றழைக்கப் படுகிறது. பின் இறைவன் திருவருளால் சிதறுண்ட பலகைகளைப் பிடித்துக்கொண்டு மிதந்து சென்ருர்கள். அவ்வாறு சென்றவிடம் **கப்பலுடையானென்று** அழைக்கப்படுகிறது. இவ்வாறு செல்லும்பொழுது இறைவனை மீண்டும் மீண்டுந் துதிப்ப, அவர் தோன்றிக் கரையிலிருந்து கொண்டே தன் நீண்ட கைகளால் அவர்களை இழுத்துக் கரை யேற்றினர். இவ்விடம் **கைப்பத்தூர்** என்றழைக்கப்படுகிறது. இவ்வாறு அக்கரை சேர்ந்ததும் ஆலங்குடி சென்று இறைவனை வணங்கித் திருவாரூருக்குத் திரும்பினர்.

* இவ்வாறு காமனை வென்ற கடவுள் பெண்ணுசை மிகுத்தவர் என்று பலர் கூறி கொடிய நரகத்திற்கு ஆளாகின்றனர். இவர்கள் உணரவேண்டியது யாதெனில் ஞான மூர்த்தியாகிய சிவபெருமானுக்கு உமையும், கங்கையும் இருசக்திகளே அதாவது அவர் வல்லமைகளைக் குறிக்கின்றனர். அவர் பள்ளியறை செல்வது உமையுடன் கூடியிருப்பதற்கன்று. ஆங்கு கண்ணுடி வாயிலாக அன்பர்களுக்கு அருவதரிசனந் தந்தருளுவதற்கே. அங்கே சத்தி, பால், பழம் வைப்பது பிற்காலத்தவர் சேர்க்கை. ஆகமமார்க்கமல்ல.

அமுதோக மந்திரி கதை:—இந்த ஆலங்குடிக் கோயிலை முதன் முதல் திருப்பணி செய்தவர் முசுகுந்த சக்ர வர்த்தியின் மந்திரியாகிய அமுதோகர் ஆவர். இவர் இக்கோயிலைக் கட்டும் படி முசுகுந்தர் கொடுத்த பொருளை வைத்து விட்டுத் தன் பொருளைப் போட்டுக்கட்டி முடித்தார். அரசன் தன் பொருளை எடுத்துக்கொண்டு திருப்பணியினு லாகிய புண்ணியத் தைக் கொடுக்கும்படி எவ்வளவு கேட் டுங் கொடாததினால் அமுதோகரைக் கொலை புரிந்தான். இவ்வாறு கொலை செய்த விடம் அபிமுக்தீச்சுரம் என்றும் அமுதோகேச்சுரம் என்றும் வழங்கப் படுகிறது. அமுதோகரின் உயிர் தக்ஷிணாமூர்த்தி திருவடி நீழலையடைந் தது. முசுகுந்தரும் அவரை வழிபட் டுப் பின் முத்தியடைந்தனர். இவ் வாறு பலர் முத்திபெற்ற இக்கோயி லின் பெருமை சொல்லவும் பெரிதே!

இக்கோயில் கும்பகோணத்தி லிரு ந்து நீடாமங்கலத்துக்குச் செல்லும் வழியில் 11-வது மைலில் உள்ளது. நீடாமங்கலத்தி லிருந்து 4-மைலில் இருக்கிறது. இக்கோயிலைச் சுற்றிலும் சுமார் ஐந்துமைல் வட்டத்தில் திருக் கலைய நல்லூர், திருக்கடுவாய்க் கரைத் தென்புத்தூர் (ஆண்டான் கோயில்) திருநாரையூர், திருக்குட வாயில், திருக்கொள்ளம்பூதூர், திருப்பாதா ளீச்சுரம், திருப்பூவனூர், திருஅர  தைப் பெரும்பாழி (அரித்துவார மங் கலம்) கோவில் வெண்ணி ஆகிய பல பாடல் பெற்ற கோயில்கள் இருக்கின் றன. இக்கோயில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரால் திரு இரும்பூளை என்று பாடப்பெற்றிருக்கிறது. ஏனெ னில் பூளைச் செடியே இவ்வூர் ஸ்தல விருக்ஷமாகும். அதனால் பூளைப் பூவால் இவ்வூரில் எழுந்தருளி யிருக்கும் சிவ லிங்கப் பெருமான் பூசிக்கப்பெறுவார். இவ்வூர் முன்னொரு காலத்தில் பூளை வனமாக இருந்த தென்பதை, இவ் வூரருகே செல்லும் ஆறு பூளைவன ஆறு (புலவனாறு) என்று அழைக்கப் படுவதே நிலைநிறுத்தும்.

### திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் தேவாரம்

**திருவிரும்பூளை - வினாவுரை - பண் இந்தளம்**

*திருச்சிற்றம்பலம்*

*சீரார் கழலே தொழுவீர் இது செப்பீர்*

.............................

*பந்தம் மறுத் தோங்குவர் பான்மை யினாலே.*

*திருச்சிற்றம்பலம்*

சுவாமி பெயர் - காசியாரண்ணியேசுரர்
தேவியார் - ஏலவார்குழலம்மை.

### பெரியபுராணம் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் புராணம்

*தேவர்பிரா னமர்ந்த திருவிரும்பூளை......*
*பொருள் விரியப் பாடினார்.*

400, 401, 402.

### திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் தேவாரம்

**திருநீலகண்டம் - பண் வியாழக்குறிஞ்சி**

*திருச்சிற்றம்பலம்*

*அவ்வினைக் கிவ்வினையா மென்று*
*சொல்லு மஃதறி வீர்*

.............................

.............................

*நிறைந்த வுலகினில் வானவர்*
*கோனொடுங் கூடு வரே.*

*திருச்சிற்றம்பலம்*

# அப்பர் சுவாமிகள் தேவாரம்

நாளது பிரமோதூதஸு சித்திரைமீ சதய நக்ஷத்திர தினத்தன்று அப்பர் சுவாமிகள் திருவவதாரத் தலமாகிய திருவாமூரிலும் (தென்னாற்காடு ஜில்லா), திருமயிலாப்பூர் முதலிய ஏனைய தலங்களிலும் எழுந்தருளி யிருக்கும் சமயாசாரிய சுவாமிகட்கு வழிபாடுகள் முடிந்தவுடன் நமது சமாஜம் அச்சிட்டுள்ள அப்பர் சுவாமிகள் தேவாரம் புதிய சுத்தப்பதிப்பு வெளியிடப்படும். அதுகாலை அன்பர்கள் திருநாவுக்கரசு சுவாமிகள் திருவருளைப் பெறுமாறு வேண்டுகிறேம்.

இங்ஙனம்:

ம. பாலசுப்ரஹ்மண்யம், காரியதரிசி.

குறிப்பு:—சைவப் பஞ்சாங்கத்தின்படி இந்த திருநக்ஷத்திரம் (23-4-1930) புதன்கிழமை யன்றும் வேறு சில பஞ்சாங்கங்களின்படி கஉ-௳ (24-4-1930) வியாழக்கிழமை யன்றும் வருகிறது.

தனிப்பிரதி ஒன்றன் விலை

தபாற்கூலி, பார்சல் செலவு முதலியன வேறு. வேண்டுவோர் உடனே முன்பணம் அனுப்புக.

---

சைவ சித்தாந்த மகா சமாஜத்தில்

## விற்பனைக்குரிய புத்தகங்களின் அட்டவணை

| | ரூ. | அ. |
|---|---|---|
| ... மலர் ஒன்று (பைண்டு பிரதி) | 2 | 0 |
| "சித்தாந்தம்" மலர் இரண்டு (பைண்டு பிரதி) | 2 | 0 |
| சுந்தரர் தேவாரம் ... | 0 | 4 |
| திருவாசகம் | 0 | 2 |
| ...ரக்கம் - அறத்துப்பால். | 3 | 4 |
| ஷெ பொருட்பால். | 4 | 8 |
| ஷெ காமத்துப்பால். | 1 | 12 |
| ஷெ தொகுப்புரை. | 0 | 8 |
| புலால்மறுத்தலுக்கு 50 காரணங்கள் ... | 0 | 2 |
| சர்வமத சம்மதம் | 0 | 2 |
| | 0 | 2 |
| நளினிரவில் நகாக்காட்சி ... | 0 | 2 |
| கடவுள் ... ... | 0 | 2 |
| பண்மயத்த மொழிப்பரவை ... | 0 | 2 |
| சமயத்தின் சாரம் ... ... | 0 | 2 |
| சமய வளர்ச்சி ... ... | 0 | 2 |
| சுயமரியாதை சம்பாஷணை ... | 0 | 2 |
| திருஞானசம்பந்தர் (நாடகம்) ... | 0 | 8 |
| சைவப் பெரியார் தனிக்கூட்டத் தீர்மானங்கள் ... ... | 0 | 2 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| சங்க நூல்களும் சைவமும் ... | 0 | 2 |
| சைவர் மகாநாடு, திருப்பாதிரிப்புலியூர். | 0 | 8 |
| அறுசமயப் பகுதி ... ... | 0 | 2 |
| அறுபத்துமூன்று நாயன்மார் சரித்திர உண்மை ... ... | 0 | 4 |
| சிவஞானபோதம் ... ... | 0 | 2 |
| அஷ்டப்பிரகாணம் ... ... | 3 | 0 |
| சிவார்ச்சனா சந்திரிகை ... ... | 1 | 8 |
| சைவபூஷணம் ... ... | 1 | 0 |
| சைவ சித்தாந்த பரிபாஷை ... | 0 | 8 |
| சிவஞான சித்தியார் மூலமும் பொழிப்புரையும் ... ... | 2 | 8 |
| சிவஞான போதச் சிற்றுரை விளக்கம் | 3 | 8 |
| சர்வஞானோத்தரம் ... ... | 1 | 8 |
| தசகாரிய விளக்கம் ... ... | 0 | 8 |
| The Grace of Lord Siva (ஆங்கிலத்தில்) ... ... | 0 | 4 |
| திருக்குறட் சாரம் ... ... | 0 | 8 |
| ஷெ (கலிக்கோ) ... | 0 | 10 |
| ஆசார ஒழுக்கமுறை ... ... | 0 | 4 |
| சிவார்ச்சனைத் திருமந்திரம் ... | 0 | 1½ |

சுந்தரர் தேவாரம் மொத்தமாக வாங்குவோர்க்கு ரூபாய் ஒன்றுக்கு ஐந்து பிரதிகள் வீதம் கொடுக்கப்படும். மேற்கண்ட விலைகள் புத்தகக் கிரயம் மட்டுந்தான். தபாற்கூலி வேறு. பார்சல் செலவு, தபாற்கூலி, வி. பி. செலவு முதலியன. வாங்குவோரே செலுத்தவேண்டும்.

மேலேகண்ட அட்டவணையிலுள்ள புத்தகங்கள் தேவையாயின், சமாஜ ஆண்டுவிழா முதலிய கூட்டங்கள் நடக்குமிடங்களிலும் பெறலாம்; கீழ்வரும் விலாசத்துக்கு முன்பணம் அனுப்பியும் பெற்றுக்கொள்ளலாம்.

ம. பாலசுப்ரஹ்மண்ய முதலியார், காரியதரிசி.
சைவ சித்தாந்த மகா சமாஜம்,
150, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை.

Printed at the Sadhu Press, 12, Ganapathi Mudali Street, Royapettah and Published by M. Balasubramania Mudaliar (Editor-in-charge) for the Saiva Siddhanta Maha Samajam, 150, Govindappa Naicken Street, G. T. Madras.

சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

" ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானகுரு வாணியை உள்நாடு "


| மலர் ௩ | பிரமோதூத ஆண்டு வைகாசி ஆனித் திங்கள் 1930 ௵ மே ஜூன் ௴ | இதழ் ரு, சு |
|---|---|---|


## இரண்டு அரிய நிகழ்ச்சிகள்

[பத்திராசிரியர்]

பிரமோதூத ஆண்டு பிறந்தவுடன் முதல் திங்களிலேயே நமது சமாஜத்தின் சார்பாக இரண்டு அரிய நிகழ்ச்சிகளைப் பாராட்டாதார் சைவருள் ஒருவருமிலர். இவற்றுள் ஒன்று திருவிடை மருதூரில் நடந்த சைவ இளைஞர் மகாநாடு, மற்றொன்று திருவாரூரில் நடைபெற்ற அப்பர் சுவாமிகள் தேவார வெளியீடு.

இளைஞர் இயக்கம் அரசியல், சமூகப்பணி முதலிய பல துறைகளிலும் செழித்து ஆங்காங்கு பல மகாநாடுகள் நடப்பதை நாம கண்டதுண்டு. ஆனால் இதுகாறும் இளைஞர்கள் சமயத் துறையிலே ஒரு மகாநாடு நடத்தியதை நாம் கண்டதில்லை. சிறப்பாக " உறங்க வேண்டாம், விழியுங்கள், எழுங்கள் " என்று சமய வல்லுநர் இடித்துக் கூறும் சைவமக்களிடையே சைவ இளைஞர் மகாநாடு ஒன்று மிகச் சிறப்பாகவும் செம்மையாகவும் நடந்தது குறித்து நாம் பெரு மகிழ்ச்சியடைகின்றோம்.

இம்மகா நாட்டிலே நிறைவேறிய தீர்மானங்களும் மிக நல்ல முறையிலே அமைந்திருப்பது போற்றத் தக்கதே. இளங் கன்று பயமறியாது என்று கூறுவது உலகவழக்கு. ஆனால் சைவ இளைஞர்கள் தங்கள் கடமைகளையும் உரிமைகளையும் நன்கு உணர்ந்தவர்களாய் பெரும்பான்மை தாங்கள் முன்னின்று செய்யக் கூடியவை இன்னின்னவென்றும் தங்கள்கூட்டுறவு மிருந்தால் நமது சமாஜம் இன்னின்னபணிகளைச் செம்மையாகச்செய்தல் கூடும் என்றும் தங்கள் தீர்மானங்கள் வாயிலாக நமக்கு விளக்கியுள்ளார்கள். நமதுநாட்டிலே பெரும்பாலும் கடமைகளை மறந்து உரிமைகளை மட்டும் வற்புறுத்துவது வழக்கம். ஆனால்

நமது சைவஇளைஞர்களோ தங்கள் கடமைகளை மிகச்செவ்வையாக உணர்ந்து அவைகளை ஞாபகத்திலிருத்தித் தங்கள் தீர்மானங்களைச் செப்பஞ் செய்து நிறைவேற்றிய முறை முதியோருக்கும் ஒரு பாடத்தைக் கற்பிப்பதாயிற்று.

சைவ இளைஞர்கள் உறங்காது விழித்தெழுந்து முதியோர்களுடன் கலந்து வேலை செய்ய முன்வந்தமைக்கு அவர்கள்பால் எஞ்ஞான்றும் நாம் நன்றியுடையவர்களா யிருக்கின்றோம்.

மேற்கூறிய தகுதிவாய்ந்த இளைஞர் பலரில் எமது நட்புக்குரிய சிலரின் கூட்டுறவே திருவாரூரில் அப்பர் சுவாமிகள் தேவார வெளியீட்டையும் மிகச் செவ்வையாகத் திருவருளின் துணைகொண்டு நடத்தி வைத்தது. சென்ற ஆடிமீ சுவாதியில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம் சமாஜத்தின் பதிப்பு வெளியிடப்பட்டது. அப்பர் சுவாமிகள் திருநக்ஷத்திரமாகிய சித்திரை சதயத் திருநாளில் சுவாமிகள் அவதரித்த தலமாகிய திருவாரூரில் சுவாமிகள் தேவாரத்தின் சமாஜ சுத்தப்பதிப்பு வெளியிடப்பட்டது. ஒரு பெரிய மகாநாட்டுக்கு எவ்வளவு மிகுதியாக அன்பர்கள் திரண்டு வருவார்களோ அதற்கும் அதிகமான தொகையினர் அக்கூட்டத்துக்கு வந்திருந்தது சைவ உலகத்தினர் அப்பர் சுவாமிகளை எத்துணை மிகுதியாகப் பாராட்டி வருகின்றனர் என்பதையும் நமது சமாஜ வெளியீட்டினை எத்துணை ஆவலுடன் எதிர் பார்த்திருந்தனர் என்பதையும் ஒருங்கே விளக்குவதாயிற்று. சில செல்வர்களைக்கொண்டு திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் தேவாரத்தை அச்சிடுவதற்குரிய ஏற்பாடுகளும் நடைபெற்றன. விரைவில் அத்தேவாரமும் நமது சமாஜத்தின் சுத்தப்பதிப்பாக வெளிவரும் என்பதில் ஐயமில்லை.

இனி எதிர்காலத்தை நோக்குழி நமக்கு மீண்டும் மகிழ்ச்சியே உண்டாகிறது. திருவையாறு சப்தஸ்தான உத்ஸவத்தைப்போல் எவ்வகையிலும் தலை சிறந்து விளங்கும் உத்ஸவத்தை நாம் எங்கணும் கண்டதில்லை. அவ்வுத்ஸவத்தில் ஏழு திருப்பதிகளிலும் நமது சமாஜத்தின் சார்பாக சமயப் பணி செய்வதற்குத் திருவாளர்கள் த. வே. உமாமஹேசுவரம் பிள்ளை யவர்களும், ச. சச்சிதாநந்த பிள்ளை யவர்களும் ஏற்பாடு செய்துள்ளார்கள். பெருந்திரளாக மக்கள் கூடுகின்ற உத்ஸவ காலங்களில் சமயப்பணி நடத்த வேண்டுமென்று அவாவும் சமாஜத்துக்குத் துணை நின்று இப்பெரியார்கள் இத்தகைய ஏற்பாடுகளைச்செய்துள்ளது அனைவர் உள்ளத்தையும் கவர்கின்றது.

இது மட்டுமல்ல. ஆலங்குடியில் நடக்கும் கும்பாபிஷேக காலத்தில் பண்டித மணி - சைவத்திருவாளர் - மு. கதிரேசஞ் செட்டியார் அவர்கள் தலைமையில் நமது சமாஜவிசேஷ மகாநாடு மிகச் சிறப்பாக 1930ஆு ஜூன் மீ 1, 2, 3-ம் தேதிகளில் நடைபெறும். அதுபோது வழக்கம்போல் பல அரிய சொற்பொழிவுகள் நடப்பதுடன் சமயப்பணி விவரங்கள் திட்டங்கள் பலவும் தீர்மானிக்கப்படும்.

எல்லாவற்றையும் உடனிருந்து மிகச் செம்மையாக நடத்திச் சைவ வான் பயிரைத் தழைத்தோங்கச் செய்யும் இறைவன் திருவருளை வழுத்துகின்றோம்.

# சைவ இளைஞர் மகாநாடு

[தி. கு. கி. நாராயணசாமி]

இம்மகாநாடு மிகச்சிறப்பாக 1930-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 18-ந் தேதி வெள்ளிக்கிழமை காலை 9-மணி முதல் மாலை 7-30 மணிவரை நடந்தது. மகாநாட்டைத் திறக்கவந்த மந்திரியார் அவர்களும் தலைமை வகிக்க வந்த திரு-கா. சுப்பிரமணியம் பிள்ளை யவர்களும் ஊர்வலமாக அழைத்து வரப்பட்டனர்.

கடவுள் வணக்கம் முடிந்தவுடன் சமாஜக் காரியதரிசியார் சுகாதார மந்திரியார் திரு-எஸ். முத்தையா முதலியார் அவர்களை இம்மகா நாட்டைத் திறந்துவைக்கும்படி வேண்டிக்கொண்டனர். அவ்வாறு வேண்டுங்கால் எக்காலத்திலும் அரசாங்கத்தைச் சேர்ந்த மந்திரிப் பிரதானிகள் எந்த இயக்கங்களை ஆதரித்து எந்தமுறையில் ஒழுகுகின்றார்களோ அதேபோல் பொது மக்களும் ஒழுகுவது இயல்பென்றும், ஆகையால் தற்காலத்து மந்திரிமார்களும் எல்லா இயக்கங்களிலும் கலந்து கொள்ளாமல் புரை தீர்ந்த நன்மை பயக்கும் இயக்கங்களையே ஆதரிக்க வேண்டு மென்றும் இன்றேல் தமிழர் நாரிகமும் சமயமும் குன்றி விடுமென்றும் கூறினார்கள். பின்னர் திரு. ச. சச்சிதாநந்தம் பிள்ளையவர்கள் வரவேற்புக் கவி வாசித்து விளக்கிக் கொடுத்தனர். பிறகு மந்திரியார் மகாநாட்டைத் திறந்து வைத்தார்கள். அவர்கள் செய்த சொற்பொழிவில் சிறப்பாக வலியுறுத்தப்பட்டபொருள்கள் :—(1) கடவுள் ஒருவர் உண்டு. (2) இக்கொள்கை யின்றேல் ஒழுக்கம் இல்பொருளாய் விடும். (3) ஒவ்வொரு சமயத்திலும் சீர்கேடான ஒழுக்கங்களுள. (4) அவைகளைக் களைதல் மக்கள் கடன். (5) ஆனால் அடிப்படையான கொள்கைகளை எஞ்ஞான்றும் கைவிடுதல் கூடாது என்பனவாகும்.

இதன் பிறகு திரு. மறை. திருநாவுக்கரசனார் திரு. கா. சுப்பிரமணியம் பிள்ளையவர்களைத் தலைமை வகிக்கும்படி முன் மொழிந்தனர். இதை திரு. நாராயணசாமி முதலியவர் பின், வழி மொழிந்தனர். பிறகு திரு. நாராயணசாமி தலைவருக்கு வரவேற்புத்தாளை வாசித்துக் கொடுத்தார். பின்னர் தலைவரவர்கள் அரியதொரு விரிவுரை நிகழ்த்தினர். (இதன் விரிவை மற்றோரிடத்தில் காண்க.)

பிறகு மகாநாட்டைத் திறந்தருளிய மந்திரியார் அவர்கட்கு சமாஜக் காரிய தரிசியார் வந்தனம் கூறினர். பிறகு காலைக்கூட்டம் கலைந்தது.

பிற்பகல் 2½ மணிக்கு விஷயாலோசனைக் கூட்டம் கூடித் தீர்மானங்கள் செப்பஞ் செய்யப்பட்டன. மாலை 3 மணிக்கு மகாநாடு மீண்டும் கூடிற்று. முதன் முதலாக திரு. சுரேந்திரநாத் ஆரியா அவர்கள் "நடராஜ தத்துவம்" என்னும் பொருள்பற்றி ஒரு சிறு சொற்பொழிவு நிகழ்த்தினர். பிறகு, திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளை யவர்கள் திருமுகம் வாசிக்கப்பட்டது. பின்னர் கீழ்வரும் தீர்மானங்கள் ஒவ்வொன்றின் இறுதியில் குறிக்கப்பட்ட இளைஞரால் முன்மொழி பின்மொழி பகரப்பட்ட பின்னர் ஏகமனதாக நிறைவேறின. இறுதியில் சமாஜக் காரியதரிசியார் இத்தீர்மானங்

களைச் செயலில் கொணர்தற்கு இளைஞர்களின் கூட்டுறவும் பொருளுதவியும் தேவை யென்பதை நன்கு விளக்கினர். பிறகு திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியார் இளைஞர்கட்குப் பெரிதும் பயன்படக் கூடிய அரிய சொற்பொழி வொன்றை நிகழ்த்தினர். பிறகு தலைவரவர்கள் தமது முடிபுரையை மிக அரிய முறையில் நிகழ்த்தினர். பிறகு சமாஜக் காரியதரிசியார் தலைவர், வரவேற்புக்கழகத் தலைவர் திரு. தி. ரா. பொ. குப்புசாமிப் பிள்ளை, மகாநாட்டுக் காரியதரிசி திரு. தி. கு. கி. நாராயணசாமி முதலிய எல்லா அன்பர்கட்கும் உரிய நன்றி மொழிகள் கூறியபின்னர் கடவுள் வாழ்த்தொலி முழங்க இம்மகாநாடு இறைவன் இன்னருளால் இனிது நிறைவேறிற்று.

## சைவஇளைஞர் மகாநாட்டுத் தீர்மானங்கள்

1. சைவசித்தாந்தக் கோட்பாடுகள் தற்கால ஆராய்ச்சி முடிபுகளுக்கு ஒத்திருக்கின்றன என்றும், சைவசமயம் இந்நூற்றாண்டு வாழ்க்கைக்கும் ஏற்றதாயுள்ளதேயென்றும் சைவப் பெரியார்கள் சிலர் கூறுவதை இனிது விளக்குவன்வான நூல்களை எளிய நடையில் எழுதுவித்து மாணவர்க்குக் கிடைக்கும்படி செய்ய வேண்டுமென்று சைவசித்தாந்த மஹாசமாஜத்தை இம்மகாநாடு வேண்டிக் கொள்ளுகிறது. தி. கி. நாராயணசாமி, மிளகுசிசுந்தரம்.

2. சைவ மாணவரனைவரும் தமது சமயத்தின் அடிப்படையான கோட்பாடுகளையும் ஒழுக்கங்களையும் தக்கார் வாயிலாகக் கேட்டறிந்துகொண்டு, அவ்வொழுக்கங்களைத் தாம் கைக்கொள்ளலோடு, தாம் தெளிவாயுணர்ந்து கொண்ட சைவமெய்ச் சரிதங்களையும் கொள்கைகளையும், தமக்கு ஓய்வு கிடைத்த காலங்களில் தமது கிராமங்களில் பிரசாரஞ் செய்ய வேண்டுமென்று இம்மகாநாடு வற்புறுத்துகிறது. மறை-திருநாவுக்கரசு, பொன்னுசாமி.

3. திருப்பாதிரிப்புலியூர் சைவ மகாநாட்டில் ஒப்புக்கொண்டபடி சைவ சமயத்தினருக்கு ஜாதிபேதம் இன்மையால் சைவர்கள் எந்த ஜாதியினராயினும் அவர்கள் சமயம், சமுதாயம் முதலியவைகளில் சமத்துவ உரிமைகளை அநுபவிக்கச் சைவ உலகம் சௌகரியம் செய்து கொடுக்கும்படி இம்மகாநாடு வேண்டுகிறது.

மேலும் இந்து மதத்தைச் சார்ந்த தீண்டப்படாதார் முதலியவகுப்பினர்களைச் சைவ உலகம் இழக்காதிருப்பதற்காக அவர்களுக்குச் சமயம், சமுதாயம் முதலியவைகளில் எல்லா உரிமைகளையும் அளிக்கும்படி சைவர்களை இம்மகாநாடு வற்புறுத்திக் கேட்டுக் கொள்கிறது. கைலைகுரு, ரத்னசாமிப் பிள்ளை.

4. சைவர்கட்குள் நடக்கும் திருமணம் முதலிய எல்லாச் சடங்குகளையும் தூய்மையும் சிக்கனமுமுடைய முறையில் தமிழிலேயே செய்தல் வேண்டுமென்றும், அவ்வாறு அழகுறச் செய்தற்குச் சில சைவரைப் பழக்கும் பொறுப்பைச் சமாஜத்தார் மேற்கொள்ள வேண்டுமென்றும், அத்தகையார் ஏற்பட்டதும் அவர்களைக் கொண்டே சைவர்கள் தம்மில்லச் சடங்குகளை நடத்திக்கொள்ள வேண்டுமென்றும் இம்மகாநாடு கேட்டுக் கொள்கிறது.

திருமண காலத்தில் திருமுறைகள் முதலிய சிறந்த தமிழ் நூல்களைப் பரிசாக அளிக்கும் வழக்கத்தை மேற்கொள்ள வேண்டுமென்று இம்மகாநாடு வற்புறுத்துகிறது. தியாகராஜன், தி. கி. நாராயணசாமி.

5. சைவர் மகாநாடு ஆலய சம்பந்தமாகக் காட்டியுள்ள சீர்திருத்தங்களை(யும்) இம்மகாநாடு பாராட்டுவதோடு, விக்கிரகாராதனையின் தூல நிகழ்ச்சிகளில் கருத்தை மடித்துவிடாமல், இறைவனைப்பற்றிய அறிவும், அவன் பாலும், உயிர்கள்பாலும் அன்பு(ம்) பெருகுதற்கான முறையில் திருக்கோயில்களில் வாரத்திற் கொருமுறை அன்பர்கூட்டத்தில் புனித வழிபாடு நடைபெற ஏற்பாடு செய்தல் அவ

சயமென்று இம்மகாநாடு கருதுகிறது. மறை. திருநாவுக்கரசு, கே. குழந்தைவேலு.

6. ஒவ்வொரு சைவ வாலிபனும் சைவ சித்தாந்த மகாசமாஜத்திலாதல், அதனோடு இணைக்கப்பட்ட யாதாவதொரு சைவசபையிலாதல் உறுப்பினனாய்ச் சேர்ந்து கொண்டு மகாசமாஜத்தை வலுப்படுத்துவதற்காக, அதற்கு ஆயிரக்கணக்கான அங்கத்தவர்களைச் சேர்த்தல், முன்னமேஉள்ள சைவசபைகளை அதனோடு இணைத்தல் முதலிய வழிகளில் தொண்டுசெய்ய வேண்டு மென்று சைவ இளைஞர்களை இம்மகாநாடு வேண்டிக் கொள்கிறது. க. நடேசன், ரா. புருஷோத்தமன்.

7. தேவார புத்தகங்களை மிகக் குறைந்த விலையில் கிடைக்கும்படி செய்தல், சித்தாந்தப் பத்திரிகை நடத்துதல், பல விடங்களில சொற்பொழிவு செய்வித்தல், சபைகளமைத்தல் முதலிய வழிகளில் சைவசித்தாந்த மகா சமாஜம் சைவப்பாதுகாப்புக்கான பணிகளைச் செய்து வருவதற்காக இம்மகாநாடு தன் நன்றி யறிதலைத் தெரிவிப்பதோடு, சைவ மடாதிபதிகள், இனியும் சும்மாயிராமல் காலத்தின் தேவைகளை நன்கு உணர்ந்து, சைவ போதனைக் கல்லூரி யமைத்தல், சைவ பிரசாரகரை நியமித்தல் தமிழாராய்ச்சி செய்தல் முதலிய தம் சமயக்கடமைகளைத் திறம்படச்செய்ய உடனே தொடங்க வேண்டு மென்று அவர்களை வணக்கமாய் வேண்டிக் கொள்கிறது. ப. இராமநாத பிள்ளை, த. ச. மீனாட்சிசுந்தரம்.

8. மாணவர்கள் பிரமசரிய ஒழுக்கத்திலும், தெய்வநம்பிக்கையிலும் சிறிதும் வழுவாதவர்களாய், இந்நாட்டுக் கசரத்தும் சிலம்பமும் பயின்று உடலையும் நன்றாய் ஓம்பி, உயரிய நோக்கோடு கல்வியைச் சிறக்கக் கற்பதிலேயே தமது கவனத்தைச் செலுத்தவேண்டு மென்று இம்மகாநாடு வற்புறுத்துகிறது. புருஷோத்தமர், நாராயணன்.

9. இக் காலத்தில் கலாசாலைகளிலேனும் வீடுகளிலேனும் கோயில்களிலேனும் ஒழுங்கான சமய போதனை நிறைவேறாமையால் விளையும் கேடுகள் பலவாயிருத்தலால், பாடசாலைகளிலோ அல்லது தக்க பிறவிடங்களிலோ வாரத்திற்கொருமுறை உண்மைச் சைவசமயத்தை விளக்கும் போதனைகள் கிரமமாக நடைபெற்றுவர ஏற்பாடு செய்யும்படி மடாதிபதிகளையும், கோவிலதிகாரிகளையும், சைவசித்தாந்த மகாசமாஜம் போன்ற சைவசபைகளையும் இம்மகாநாடு கேட்டுக் கொள்கிறது. பாலசுந்தர நயினார், சிதம்பரஞ் செட்டியார்.

10. B. A. பட்டம் பெறுவதற்குத் தத்துவ சாஸ்திரப் பிரிவைத் தெரிந்து எடுத்துக் கொள்ளும் சைவ மாணவர்கள் அனைவரும் 'சைவ சித்தாந்தம்' எனனும் பிரிவை எடுத்துக் கற்றுத்தேர்ந் துபகரிக்க வேண்டுமென இம்மகாநாடு வற்புறுத்துகிறது. கலாசாலையதிகாரிகள் இப்பாடத்தைக கற்பித்தற்கான வசதிகளையும் விரைவில் அமைக்க வேண்டு மென்று அவர்களை வேண்டிக் கொள்கிறது. A. முத்தையா, தி. கி. நாராயணசாமி.

11. புதிதாய் அமைக்கப்பட் டிருக்கும் S. S. L. C. பரீக்ஷைத் திட்டத்தில், அப்பரீக்ஷைக்குச் செல்வோர் தத்தம் தாய்மொழியைத் தம்மிஷ்ட பாடங்களிலொன்றாக எடுக்க வொட்டாதபடி செய்துள்ள புதுத்தடையை நீக்கிவிடும்படி S. S. L. C. போர்டாரையும், அரசாங்கத்தாரையும் இம்மகாநாடு வேண்டிக் கொள்கிறது. தங்கவேலு, இராமச்சந்திரன்.

12. (a) பெரிய கல்லூரிகளிருக்கு மிடங்களில் சைவ மாணவர்கட்கு மாணவரில்லங்களும், ஏற்ற விடங்களில் அநாதிவிடுதிகளும் ஏற்படுத்தச் சைவசித்தாந்த மகாசமாஜத்தார் தீவிரமான முயற்சிகள் செய்ய வேண்டு மெனறு இம்மகாநாடு அவர்களையும் மகா ஜனங்களையும் கேட்டுக்கொள்கிறது. (b) (சென்னையிலுள்ள மணலி விடுதி போனறு) சைவசமயிகளால் ஸ்தாபிக்கப்பட்ட அறநிலையங்களில் இனிமேல் சைவமாணவர்களையே சேர்க்க வேண்டுமென்றும், அவர்களனைவரையும் சமத்துவமாகவும் கருணையுடனும் நடத்த வேண்டுமென்றும், விடுதிகளின் தலைவர்களை இம்மகாநாடு வேண்டிக் கொள்ளுகிறது. A. முத்தையா, T. V. ரத்னசாமி.

13. தேவார பாடசாலைகளில் சைவசமயத்தைச் சார்ந்த எல்லாச் சாதிப் பிள்ளைகளை

யும் அறிவு, ஒழுக்கமென்னும் தகுதி யொன்றே கருதிச் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று அப்பாடசாலை நிர்வாகிகளை இம்மகாநாடு வேண்டுகிறது. ந. இராஜமாணிக்கம், ந. இரத்தினவேலு.

14. இறைவன் திருவுருவங்களில் சிறந்தனவற்றையும் இயற்கை வளப்பமிக்க சிவத்தலங்களையும், பேரழகுடைய சிவாலயங்களையும் சிற்பங்களையும் புகைப்படமெடுத்தும் வர்ணபடமாக எழுதுவித்தும் அவற்றைத் தொகுத்து எளிய விலையில் எவர்க்கும் கிடைக்கும்படி செய்ய வேண்டுமென்று மகா சமாஜத்தாரை இம்மகாநாடு வேண்டுகிறது. ச. சிவகுமாரன், வா. தி. மாசிலாமணி.

---

# இளைஞர்கட்குத் திருமுகம்

[மா. வே. நெல்லையப்ப பிள்ளை]

அன்பார்ந்த சைவ இளைய சகோதரர்களே!

சென்னைச் சைவசித்தாந்த மகாசமாஜக் காரியதரிசி அவர்கள் ஆணையின்படி நீங்கள் உங்களுடைய பல இடங்களிலிருந்தும் பொதுநலத் தொண்டு கருதி உங்கள் மெய் வருத்தத்தையும் பணச் செலவையும் பொருட்படுத்தாது இங்கே வந்து சேர்ந்து சைவ இளைஞர் மகாநாடு கூடியிருக்கிறீர்கள். எல்லாம் வல்ல இறைவனருளால் உங்கள் வரவு நல்வரவு ஆகுக; நற்பயன் விளைவிப்பதாகுக.

2. உங்களிற் சிலர் இன்னம் கல்விச் சாலையில் படிக்கிறவர்களாயிருக்கலாம்; சிலர் இப்பொழுது உலக வாழ்க்கையிற் புகுந்திருக்கலாம். எப்படியிருந்தாலும் நீங்கள் எல்லாரும் உலக வாழ்க்கையைப்பற்றி அநுபவ அறிவு அறிய வேண்டியவர்களாயிருக்கிறீர்கள். ஆதலின் உங்களுக்கு உலகில் தனி வாழ்க்கையிலும் குடும்ப வாழ்க்கையிலும் பொது வாழ்க்கையிலும் (Public life) துன்ப இன்பங்களால் மொத்துண்டு அநுபவமடைந்திருக்கிற முதிய வயது உள்ள நான் இத்தருணத்தில் உலக வாழ்க்கையைப்பற்றிச் சில வார்த்தைகள் சொல்லுதல் பொருத்தமுடையதாயிருக்கும் என்று நினைக்கிறேன். நான் சொல்லுஞ் சொற்களை நீங்கள் அப்படியே ஒப்புக்கொண்டு நடத்தல் வேண்டுமென்று சொல்லவில்லை. நீங்கள் அச்சொற்களிலடங்கியுள்ள கருத்துக்களை உங்களுடைய மனதில் உய்த்து உணர்ந்து அவைகளில் முன்னேற்ற வாழ்க்கைக்கு ஒத்திருப்பவைகளாக அறியப்பட்ட கருத்துக்களைக் கடைப்பிடித்து ஒழுகல் வேண்டும் என்று நான் உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

3. முதலாவது :—இக் காலத்தில் உள்ள எந்தக்கூட்ட மக்களும் தங்கள் முன்னோர்களுடைய வாழ்க்கையின் நாகரிகம் இன்னதென அறிந்து அதிலுள்ள நற்கருத்துக்களையும் நல்ல பழக்க வழக்கங்களையும் தழுவியே உலகில் ஒழுகி வருகிறார்கள். சில ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னே நமது இந்திய நாட்டில் நடைபெற்று வந்த தமிழ் முன்னோர்களுடைய நாகரிகக் கருத்துக்களும் பழக்க வழக்கங்களும் மிக மேலானதாயுள்ளவைகளாக அவைகளை அறிந்த பிற நாட்டு அறிஞர்கள் கூறியிருக்கிறார்கள். அவைகளை நீங்கள் பண்டைத் தமிழ்

நூல்களைப் படிப்பதனாலும் அறிந்தார் வாயிற்கேட்பதினாலும் அறிந்து அவைகளில் தற்கால முன்னேற்ற வாழ்க்கைக்கு ஏற்புடைத்தாயுள்ளவைகளைத் தழுவி நடந்து அவர்களுடைய சந்ததியார்களாகச் சிறப்புடன் வாழ்தல் வேண்டும். அவ்வாறு நீங்கள் ஒழுகுதலினால் அந்நாகரிகத்திலுள்ள சமய நலன், ஒழுக்க நலன் முதலிய நலன்களை அடைதலுமின்றி அந்நலன்களை உங்கள் காலத்திலுள்ள எல்லா மக்களுக்கும் எடுத்துக் காட்டி அவர்களையும் நற்பயன் அடையும்படியாகச் செய்கிறவர்களாகின்றீர்கள்; உங்கள் பின் சந்ததியார்களுக்கும் அந்நலன்களை அறிந்து கைக்கொண்டு நடக்கும்படி வழி காட்டுகிறவர்களாகின்றீர்கள். இந்த முக்கியமான கடனை என்னைப் போன்ற முதியவர்கள் காலத்திலுள்ள தமிழ் மக்கள் பொதுவாய்ச் செய்யவில்லை என்று நான் தலைகுனிந்து உங்கள் முன் சொல்லுகிறேன். இளைஞர்களாகிய நீங்கள் அந்தக்குறையை நீக்கித் தமிழ் நாடு நலம் அடையும்படி செய்ய உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

4. இரண்டாவது:—தற்கால நாகரிக பாதையிலுள்ள ஒரு பெருங்குழியில் நீங்கள் தவறி விழுந்து விடாதபடி விழிப்பாயிருத்தல் வேண்டும். அந்தப் பெருங்குழியாவது ஆடம்பர வாழ்க்கையாகும். ஆடம்பர வாழ்க்கை என்பது பொன்போல மின்னுகின்ற உள்ளீடற்ற போலி வாழ்க்கை. பிறர் மதிக்கவும் பிறராற் பயன் பெறவும் செய்யப்படுகிற பகட்டு வாழ்க்கை அது. அந்த வாழ்க்கை மேற்கு நாட்டு நாகரிகக் கூட்டுறவால் நமது நாட்டுக்கு வந்தது. மேற்கு நாட்டு நாகரிகத்தினாலும் விடாமுயற்சித் திறன், நேர் ஒழுங்கு முதலிய நலன்களை நீங்கள் கைக்கொள்ளல் வேண்டும்; ஆனால் அதிலுள்ள வாழ்க்கை ஆடம்பரத்தை முற்றிலும் நீங்கள் நீக்கல் வேண்டும். அது நமது முன்னோர்களுடைய உண்மையும் எளிமையுமுள்ள வாழ்க்கைக்கு (True & Simple life) முற்றிலும் மாறான அதிகப் பணச்செலவுள்ள சிக்கல் வாழ்க்கை (Expensive and Complicated life). உயர்தர ஆங்கிலக்கல்வி கற்றிருந்தாலும் ஆங்கிலேயர்களுடைய நாகரிகத்தில் சிறிதும் மயங்காது உண்மையாயும் எளிமையாயும் தூய்மையாயுமுள்ள வாழ்க்கையை வாழ்ந்துகொண்டு வருகிற சில தமிழ்ப் பெரியாரை நீங்கள் உங்கள் கண் முன்னே இப்பொழுது பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் அவர்களைப் பார்த்து உங்கள் வாழ்க்கையை உண்மையும் எளிமையும் தூய்மையும் உடையதாக விளங்கும்படி செய்ய நான் உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

5. ஆடம்பர வாழ்க்கை சம்பந்தமாய் நான் உங்களுக்கு ஓர் உண்மை சொல்ல விரும்புகிறேன். ஒருவனுடைய வாழ்க்கையானது தனக்கும் பிறர்க்கும் நற்பயனுடையதாயிருத்தற்கு செல்வம் அதிகார முதலியவற்றால் பெரிய வாழ்க்கை வேண்டப்படுவதில்லை. பெரிய வாழ்க்கையும் நல்லறிவுடன் நடத்தப்படாவிட்டால் மிக்க தீமையுடையதாகலாம். நற்பயனுண்டாதல், வாழ்க்கை நடத்தப்படும் விதத்திலிருப்பது, அல்லது வாழ்க்கை பெரியது அல்லது சிறியதாயிருத்தலைப் பொறுத்தது அல்ல. நற்பயன் வாழ்க்கையே இன்பவாழ்க்கையாகும்.

உங்களில் ஒவ்வொருவரும் பெரிய வாழ்க்கையை அடைதல் உலக நிகழ்ச்சியில் முடியாதது. ஆனால் நீங்கள் ஒவ்வொருவரும் உங்கள் நல்லறிவாலும் நன்முயற்சியாலும்நற்பயனுடைய இன்பவாழ்க்கை வாழக்கூடும். அதுவே வாழ்க்கை நலத்துக்கு இன்றி அமையாது வேண்டப்படுவ தாகும்.

6. மூன்றாவது :— நல்லொழுக் கத்தைப் பற்றிச் சில வார்த்தைகள் கூறிவிட்டு என் உரையை முடிவு செய்கிறேன். மக்களுக்குச் சிறப்புடைய அணியாய் விளங்குவது நல்லொழுக்கம் என்று நான் உங்களுக்குக் கூற வேண்டுவதில்லை. ஆனால் நல்லொழுக்கம் நடைமுறையில் தவறா திருப்பதற்கு அது விழிப்புடன் பாதுகாக்கப் படல்வேண்டும் என்பதை நீங்கள் மனதில் வைத்து ஒழுகல் வேண்டும். நல்லொழுக்கத்துக்கு ஆதாரமா யிருப்பவை எண்ணம் இச்சை செயல் என மூன்றுமே. எண்ணமும் இச்சையும் மனதில் உண்டாவன ; செயல் உடலினாலுண்டாவது. எண்ணமும் இச்சையும் நல்லனவாயிருந்தால் செயலும் நல்லதாகவே யிருக்கும். ஆதலின் நீங்கள் மனதில் எப்பொழுதும் தீய எண்ணங்களும் தீய இச்சைகளும் தங்குதற்கு இடம் கொடாமல் நல்ல எண்ணங்களும் நல்ல இச்சைகளுமே தங்கும்படி மனதை அடக்கிப் பழக்கம் செய்து கொள்ளுதல் வேண்டும். தீய எண்ணம் அல்லது தீய இச்சை ஒன்று பழைய வாசனையினாலே மனதில் வந்தால் உடனே அதற்கு எதிரிடையான நல்ல எண்ணத்தை அல்லது நல்ல இச்சையை மனதில் நினைத்துத் தீய எண்ணத்தை அல்லதுதீய இச்சையை விலக்கல் வேண்டும். நல்ல மனமே நல்ல வாழ்வுக்குக் காரணமாயிருத்தலால் மனதைப் பழக்கத்தினால் தூய்மை யுடையதாயும் திண்மை யுடையதாயும்(Stray) ஆக்கிக்கொள்ள வேண்டும். திண்மையும் தூய்மையும் உடைய மனதினால் (Stray and pure Mind) ஒருவன் தனக்கும் பிறருக்கும் நற்பயன் வேண்டிய அளவு விளைவித்தல் கூடும். இந்த இயற்கை உண்மைகளை அறிந்து நீங்கள் உலகவாழ்வில் எப்பொழுதும் தீமையைவிலக்கி இயன்றவாறு நன்மையைநாடிச் செய்தலிலே கண்ணுங் கருத்துமா யிருத்தல் வேண்டும்.

7. நல்லொழுக்க சம்பந்தமாய் தன்னலம் பிறர் நலம் என்ற மயக்க உணர்ச்சி சாதாரணமாய் மக்களுக்குள் உள்ளது. தன்னல மில்லாது பிறர்நல மில்லை. பிறர்நல மில்லாது தன்னலமில்லை. பிறர் நலம் கெடுத்துத் தன்னலம் தேடிக் கொள்ளுதல் இயற்கையில் இல்லை. இந்த உண்மையை அறிந்து நீங்கள் மக்கட் பொது நலத்தை மேல் நிலையில் வைத்துத் தன்னலத்தை அதற்கு உட்படுத்தி ஒழுகல் வேண்டும். மக்கட் பொது நலம் நாடிச் செய்தலில் நீங்கள் எங்களைப்போல் இல்லாமல் சிரத்தையுடையவர்களா யிருத்தல் வேண்டும். தமிழ் மக்களுடைய வருங்கால நலனும் பிற மக்களுடைய வருங்கால நலனும் இளைஞர்களாகிய நீங்கள் ஊக்கத்துடன் பொதுநலத் தொண்டு செய்தலைப் பொறுத்திருக்கிறது. ஆதலின் நீங்கள் மக்கட் பொதுநலத் தொண்டில் ஈடுபட்டு உழைத்துத் தமிழ்நாட்டைச் சிறப்புடைய நாடாகச் செய்யும் பாக்கியத்தைப் பெற்றுக் கொள்ளும்

படி நான் உங்களைத் தாழ்மையாகக் கேட்டுக் கொள்கிறேன்.

8. இறைவனுடைய அருளால், உங்களில் ஒவ்வொருவருக்கும் இன்ப நல் வாழ்வு உண்டாகுக; உலக வாழ்வில் தீயனவற்றை எதிர்த்துச் செல்லுந் திறனும் நல்லனவற்றை நாடிச் செய்யும் ஆற்றலும் உண்டாகுக; சமயத் தொண்டு முதலிய பொது நலத் தொண்டுகளில் ஈடுபட்டு உழைக்கும் மனத்திறனும் செயற்றிறனும் உண்டாகுக.

---

# "சென்றடையாத திருவுடையான்"

[தாராபுரம் - நா. ஆறுமுகம் பிள்ளை]

"நன்றுடையானைத் தீயதில்லானை
 நரைவெள்ளேறு
ஒன்றுடையானை உமையொருபாகம்
 உடையானைச்
சென்றடையாத திருவுடையானைச்
 சிராப்பள்ளிக்
குன்றுடையானைக் கூறவென்னுள்ளம்
 குளிரும்மே"

என்னும் திருஞானசந்தப் பெருமான் அருளிச் செய்த திரிசிராப்பள்ளித் திருப்பதிக முதற்பாட்டின் மூன்றும் அடியில் விளங்கும் "சென்றடையாத திருவுடையான்" என்னும் தொடர் மொழிக்குச் சித்தாந்தம் மலர் ௩. இதழ் ௧, ௨ இல் திரு. வேள். N. துரைக்கண்ணன் என்பார் "இந்திரன் முதலிய இறையவர்க ளிடத்துப் போய்ப் பெறக்கூடாத விழுச்செல்வத்தை யுடையான்" என்று உரை வகுத்துள்ளார். ஆயினும், அவர் தம் கட்டுரையின் ஈற்றில் எழுதியுள்ள குறிப்பால் தாம் எழுதிய உரை பொருந்துவதோ அன்றோ என்னும் ஐயமுடையார் என்றே நினைக்கவேண்டி யிருக்கிறது. இவ்வுரையை மறுத்துச் "சித்தாந்தம்" மலர் ௩ இதழ் ௩ இல் திரு. G. கல்யாணம் B, A. என்பார் "தற்போதத்துடன் செல்பவர் அடைய முடியாத மோக்ஷ செல்வத்தையுடையவன்" என்று பொருள் எழுதியுள்ளார். அன்றியும் தாம் எழுதிய மறுப்புக்கு ஆதரவாக முற்கூறியவர் வரைந்துள்ள குறிப்பையும் எடுத்துக் காட்டியிருக்கிறார். இவர் கூறிய இப்பொருள் சாலச்சிறப்புடையதே என்பதற்குப் "பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரன்" என்னும் சிவஞான சித்தியார்த் திருமொழியே போதிய சான்றும். ஆயினும், இவர் முற்கூறியவர் உரையை மறுக்கும் முறை சிறிதும் பொருத்தமன்றெனத் தோன்றுவதால் அது பற்றி யாராய்வாம்.

'சென்று அடையா' என்னும் சொற்றொடர் 'வானவரிடம் சென்று அடைய முடியா' என்னும் பொருளைத் தரின் வானவருக்கு ஓர் ஏற்றம் நமது சமயாசாரியார் கற்பித்ததாகக் கருதவேண்டி யிருக்கும். "திருச்சிற்றம்பல மேய செல்வன் கழல் ஏத்தும் செல்வம் செல்வமே" என்று முழக்கிய ஒரு பெரியார் * * * வானோரை உயர்த்தி யிருப்பதாகப் பொருள் கொள்வது ஏற்புடைத் தாகுமா? என்று திரு. G. கல்யாணம், B. A.

அவர்கள் கேட்கின்றார். வானவர் உளர் என்ற கொள்கை யுடையார் எல்லாரும் மண்ணோரினும் வானோரே சிறந்தவர் என்று கூறுகின்றனர். அங்ஙனம் கூறற்கேது வென்னையோ வெனின், மக்கட் பிறப்பின ரெல்லாரும் நல்வினைப் பயனாகிய இன்பத்தையும் தீவினைப் பயனாகிய துன்பத்தையும் அடிக்கடி மாறி மாறி நுகர்கின்றாராக லானும்தேவர்களெல்லாரும் நல்வினைப் பயனாகிய இன்பத்தையே பெரிதும் நுகர்கின்றாராகலானும் என உணர்ந்து கொள்க. தேவர்கள் பெரிதும் இன்பத்தையே நுகர்கின்றார்கள் என்பதைப் "போகம் வேண்டி வேண்டிலேன் புரந்தராதி யின்பமும்" என்னும் மணி மொழியே நன்கு விளக்கும். ஒருவர்பால் இல்லாத சிறப்பை அவர்பால் உளதாக வேற்றிக்கூறல் வழுவாமே யொழிய அவர் பால் உள்ள உயர்வை எடுத்துக் கூறலால்வரும் இழுக்கென்னையோ! அறிகிலேம். நம் சைவசமயத் திருமுறைகள் பன்னிரண்டினும் பலப்பல இடங்களில் வானவர் தம் ஏற்றத்தை எடுத்திசைக்கும் தொடர்மொழிகளைக் காணலாம். திரு. G. கல்யாணம் B. A. அவர்கள் எடுத்துக் காட்டிய "தீய அசுரர் பகையுண்டு" என்னும் செய்யுளீற்றிலுள்ள "வானோர்க் கென்னை வளன் உண்டே" என்னும் தொடர் மொழியினும் "வானோர்க்கரிய மருந்தே போற்றி" என்னும் தொடர் மொழியினும் நாம் நாடோறும் நேரிற்கண்டு ஒருவரோடொருவர் அளவளாவி வாழும் மண்ணோரை எடுத்துக் கூறாமல் காண்டற்கரியராய வானோரை எடுத்து மொழிவானேன் என ஒரு சிறிது ஆராயினும் மண்ணோரினும் வானோர் ஏற்றமுடையார் எனக் குறித்தற்கேயா மென்பது புலனாகும். "வானேயும் பெறில்வேண்டேன்" "திருமாலும் .... சென்றுணரா" என்னும் தொடர் மொழிகளிலுள்ள உம்மைகள் வானுலகின் சிறப்பையும் திருமாலின் உயர்வையும் குறிக்கவே எழுந்தன்வாம். இங்ஙனமெல்லாம் புகழ்ந்து பேசற்கேற்ற பெருநலம் துய்த்தற்கு இவர்கள் அளத்தற்கரிய நிறைவளனுடையராயிருத்தல் வேண்டுமன்றோ? இவர்கள் எவ்வளவு பெருவளன் உடையராயினும் ஆகுக? இவர் தம் ஏற்றத்தை எடுத்து மொழியும் திரு. வேள். N. துரைக் கண்ணன் அவர்களுடைய உரையாற் பெறப்படும் பயன்றான் யாதோ வெனில், கூறுதும்.

மன்னர் மன்னன் ஒருவன்பாற் சென்று ஒரு புலவன் பரிசிலாகப் பெற்ற அரும்பெறன் மாணிக்கமணியின் உயர்வை மொழிய வேண்டுவார் "இது மாணிக்கமணி" என்று கூறிய அளவானே அதன் உயர்வு பெறப்படமாட்டாது. மற்று, "இது மன்னர் பாலும் சென்று பெறற்கரிய மாணிக்கமணி" என்பரேல், அம்மணியின் உயர்வும் அதை யுடையானாகிய மன்னர் மன்னன்றன் ஏற்றமும் அதைப் பரிசிலாகப் பெற்ற புலவன்றன் புலமைத்திறனும் ஆகிய மூன்றும் இனிது விளங்கும். இது போலவே "சென்றடையாத திருவுடையான்" என்னும் தொடர் மொழிக்குத் திரு. வேள். N. துரைக்கண்ணன் அவர்கள் எழுதிய "இந்திரன் முதலிய இறையவர்களிடத்துப் போய்ப் போய்ப் பெறக் கூடாத விழுச் செல்வத்தை யுடையவன்" என்னும் உரையால் பேரின்பப் பேறாகிய விழுச் செல்வத்தின் உயர்

வுமே அதனை யுடையானாகிய தன் ஏற்றமும் அதனை யடையும் அடியார் தம் தகுதியும் நன்கு விளங்கும். இதுவே இவ்வுரையாற் பெறப்படும் சிறந்த பயனும். "செங்கணவன்பாற் றிசைமுகன்பாற் றேவர்கள்பாலிலரு மிலாததோ ரின்பம்" என்னும் திருவாசகத் திருமொழியும் இவ்வுரையின் ஏற்றத்தை இனிது தெளிவுறுத்தும். மேலும், இவ்வுரை பேரின்பப் பேறாகிய விழுச்செல்வம் இந்திரன் முதலிய இறையவரிடத்துப் போய்ப் பெறக் கூடாதது, அதனையுடையான் சிவபெருமானே என்று விளக்கலால், இவ்விந்திரன் முதலிய இறையவரை இவர் தேவர் அவர் தேவர் என்று பேசிப் புலம்பி வணங்கன்மின் ; நினைத்தொறும் காண்டொறும் பேசுந்தோறும் எப்போதும் அனைத்தெலும் பண்ணைக ஆனந்தத் தேன் சொரியும் குனிப்புடையானையே வா வணங்குமின் என அறிவுறுத்தலும் பெறப்படும். இதுகாறும் ஆராய்ந்தவாற்றான் திரு. வேள். N. துரைக்கண்ணன் அவர்கள் தாம் எழுதிய வுரையில் ஐயுற்றாலும் திரு. G. கல்யாணம் அவர்கள் மறுத்தாலும் அவ்வுரை பொருத்தமுடையதென்பதே தேற்றமாம்.

இன்னும் "சென்றடையாத திருவுடையான்" என்னும் இத்தொடர் மொழிக்குச் சிறிதாராய்ந்தால் வேறு பல பொருளும் காணலாம். அவற்றுள் எமக்குத் தோன்றியவை இவை :—

(க) ("பெருங் கருணைத் தடங்கடலாகிய இறைவன் தானே வந்து தந்தாலல்லாமல் எளியேமாகிய நாம் போய் அடையக் கூடாத பேரின்ப விழுச்செல்வத்தைத் (தனக்குடைமையாக) வுடையான் என்பது ஒரு பொருள். இப்பொருள் பொருத்தமுடையதென்பதை "என்னாலறியாப் பதந்தந்தாய், தாயாய் முலையைத் தருவானே தாரா தொழிந்தால் சவலையாய் நாயேன் கழிந்து போவேனோ, தான் வந்து நாயேனைத் தாய்போற் றலை யளித்திட்டு, அண்டமுதலாயினான் அந்தமிலா ஆனந்தம் பண்டைப் பரிசே பழவடியார்க் கீந்தருளும்" என்னும் திருவாசக அருண்மொழிகளெல்லாம் பேரின்பசெல்வத்தைத் தருதல் இறைவன் செயலாகவே வைத்துக் கூறி வலியுறுத்தல் காண்க.

(உ) சென்றடையாத என்பது திருவைத் தழுவாமல் உடையானைத்தழுவுவதாகக் கொண்டு "இந்திரன் முதலிய இமையவர்களும் போய் அடைய முடியாத இறைவன்" எனக்கோடல் மற்றொரு பொருள். "பூவேறு கோனும் புரந்தரனும் பொற்பமைந்த நாவேறு செல்வியும் நாரணனும் நான்மறையும் மாவேறு சோதியும் வானவரும் தாமறியாச் சேவேறு சேவடி, செங்க ணெடுமாலும் சென்றிடந்து காண்பரிய பொங்கு மலர்ப்பாதம், தேவர் கோவறியாத தேவதேவன்" என்னும் மணிமொழிகளெல்லாம் இவ்வுரை கூறற்கேற்ற சான்றுகளாம்.

(ங) மேற்கூறிய படியே "சென்றடையாத" என்பது உடையானைத் தழுவுவதாகவே கொண்டு "(தானே வந்து காட்டினாலன்றி நாமே) சென்று அடைய முடியாத முதல்வன்" என்பது வேறொரு பொருள். "அவனருளாலே அவன்றாள் வணங்கி, அவனருளே கண்ணாகக் காணினல்லால் இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவனிறைவன் என்றெழுதிக் காட்டொணாதே" என்னும் தமிழ்

மறைமொழிகள் இவ்வுரையின் சிறப்பை விளக்கும். திரு. G. கல்யாணம் B. A. அவர்கள் தமதுரைக்கு மேற்கோளாகக்கொண்ட "நானே கருதின் வரநாடார் சும்மா இருந்தால் அவர் தானே அணைவர்" என்னும் திருமொழி யாம் கூறிய இப்பொருளையே அறிவுறுத்தல் காண்க.

(ச) இச்செய்யுளை இளமையிலேயே எல்லாம்வல்ல இறைவனை நேரிற்கண்டு அவனால் பேரின்பப் பேற்றை எளிதிற் பெற்ற நம் திருஞான சம்பந்த வள்ளல் அது பெறுமாறறியானை இறைவன்பால் அது பெறுமாறு ஆற்றுப்படுத்தும் செய்யுளாகக் கொண்டு, "ஆத! திருவுடையானைச் சிராப்பள்ளிக்குன்றுடையானைக் கூற என்னுள்ளம்குளிரும்? நன்றுடையானைத் தீயது இல்லானை நரைவெள் ஏறு ஒன்று உடையானை உமை ஒரு பாகம் உடையானைச் சென்று அடை" என்றுசொற்களைப் பிரித்து "இறைவனை யறியும் அறிவிலானே! பேரின்பச் செல்வத்தைத் தனக்குடைமையாக உடையவனைத் திரிசிராப்பள்ளிக் குன்றைத் திருக்கோயிலா உடையவனை வழுத்த என் (அடியேன்) மனம் குளிரும். ஆகையால் எல்லா நன்மைகளையும் உடையவனைத் தீமை சிறிதும் இல்லாதவனை மயிலையாகிய வெண்மை நிறம் வாய்ந்த ஆனேற்றை ஊர்தியாக உடையவனை உமையம்மையை ஒரு பால் உடையவனைப் போய் அடைவாயாக" (ஏ தேற்றம் அல்லது அசை) என்பது பின்னும் ஒரு பொருள்.

இத்தனை பொருளில் எதுதான் சம்பந்தப் பெருமான் கருத்தை விளக்குவதோ எனில், அதையுணர யாம் வல்லே மல்லேம். செய்யுளியற்றும் ஆசிரியர்கள் ஒரு சொற்றொடரில் ஒரே கருத்தை அமைத்துச் செய்வதுமுண்டு. ஒரு சொற்றொடரிலேயே பல பொருள் தோன்ற அமைத்துச் செய்யுள் செய்வதும் உண்டு. அன்றியும், ஒரே பொருள் அமைத்துத் தாம் செய்த செய்யுளை மறுமுறை நோக்கின் அதில் பல பொருள் தோன்றக் கண்டு தாமே மகிழ்வதும் உண்டு. இத்தகைய செய்யுட்களுக்குச் சிறப்புடையவாய பல பொருளையும் கொள்ளலே நேரிதாம்.

---

# "சென்றடையாத திருவுடையான்"

[ஒ. கோ. கோவிந்தசாமிப் பிள்ளை, பி. ஏ.]

மேற்காட்டியுள்ள சொற்றொடர்க்கு இருவர் வரைந்த உரைகளை இப்பத்திரிகையில் அடியேன் கண்ணுற்றனன். ஆண்டு இருவரும் இருவிதமாகப் பொருள் கூறிப் போந்தனர். ஒருவர் "தேவர்களிடத்து சென்று கிடைக்கப்பெறாத செல்வத்தைத் தன்னிடத்தே யுடையவன்" என்றும் மற்றவர் "தற்போதத்துடன் செல்வார்கள் கிடைக்கப் பெறாத செல்வத்தை யுடையவன்" என்றுங் கூறினர்.

முதற் கண், முந்தியவர் கூறிய உரையை ஆராய்வாம். பாடல்கள் பதினொன்றையும் படித்து அவைகளில் மிளிர்கின்ற கருத்தை உற்று நோக்குமிடத்து சம்பந்தர் உலகத்தினர்க்கு எம்பிரானுடைய அருள் திறமைகளை

யும் குணங்களையும் வெளிப்படுத்தி அவரைப் போற்றினால் சிறந்த செல்வத்தை யடைவது உண்மை என்பதை வெளிப்படுத்தும் எண்ணத்தை யுடையவராய் இருந்ததாகத் தெரிகிறது. எம்பிரானைப் போற்றி யடையுங்கள் என்ற சம்பந்தர் தேவர்கள் ஒரு செல்வத்தைத் தரும் வன்மையுடையவர்கள் என்பதை நினைந்தே இரார் என்பது துணிபு. மேலும்,

நூறு கோடி பிரமர்க ணொங்கினர்
ஆறு கோடி நாராயண ரங்கனே
ஏறு கங்கை மணலெண் ணிலிந்திரர்
ஈறி லாத நல்லீச னொருவனே.

என்ற நாவுக்கரையர் பாட்டினால் தேவர்கள் அழியாத நிலைமையையுடையவர்கள் அல்லர் என்பது வெளிப்படை. அதனால் அவர்களிடத்து சிறந்த செல்வம் கிடையாது என்பது பெற்றாம். எனவே "சென்றடையாத திருவுடையான்" என்று பாடும்போது தேவர்களிடத்து சென்று அடையாத செல்வத்தை யுடையவன் என்று சம்பந்தர் கருதியிரார்.

இனி, தற்போதத்துடன் சென்றவர்கள் கிடைக்கப்பெறாத செல்வத்தை யுடையவன் என்று மற்றவர் கூறின பொருளும் பொருத்த முடையதாகத் தோன்றவில்லை. ஏனெனில் ஒருவன் வேறொருவனிடம் ஒரு பொருள் கருதிச் சென்றால் அவனுக்கு முதன்மையாக அப்பொருளிடத்து இச்சையிருக்கவேண்டும். அவ்விச்சையினால் தற்போதத்துடன் சென்றால் அப்பொருள் கிட்டாது என்பதை அவன் அறிவான். இச்சையும் தற்போதமும் முரண்படுகின்றமையால் தற்போதத்துடன்சென்று என்பது பொருத்த முடையதாகத் தோன்றவில்லை.மேலும் அங்ஙனமே பொருள் கொண்டாலும் தற்போதத்துடன் சென்றவர்க்கும் ஈசன் அருள் புரிந்திருக்கிறான் என்பது,

" கருத்த னாய்க் கயிலாய மலைதனைத்
தருக்கி னாலெடுத் தானைத் தகாவே
வருத்தியா ரருள் செய்தவன் "

எனும் அப்பர் பாட்டால் விளங்குகின்றது.

இனி அச்சொற்றொடர்க்குக் கொள்ளத்தக்க பொருள் என்னை எனின் நாராணன், நான்முகன் முதலான தேவர்கள் சென்று அடையாத செல்வத்தை யுடையவன் என்பது தான். இதற்குச் சான்று மூவரும் மணிவாசகப் பெருமானும் பாடிய பாக்களில் நிறைந்து கிடக்கின்றது.

" நாடினர் காண்கிலர் நான்முகனுந்
திருமா னயந்தேத்த "

என்றார் சம்பந்தர்.

" நாடி நாரணன் நான்முகன் வானவர்
தேடியே சறவுந்தெரி யாத தோர்
கோடி காவன் "

என்றார் திருநாவுக்கரசர்.

" கண்ணன் மலரோனுங்
கீழ்மேலுற நின்றான் "

என்றார் சுந்தரர்.

" பூவேறு கோனும்
புரந்தரனும் பொற்பமைந்த
நாவேறு செல்வியும்
நாரணனும் நான்மறையும்
மாவேறு சோதியும்
வானவருந் தாமறியாச்
சேவேறு சேவடி "

என்றார் மாணிக்கவாசகனார்.

இதனால் தேவர்களுக்குக் கிட்டாத எம்பெருமான் உலகத்தினருக்குக் கிட்டுவனோ என்ற ஐயம் நமக்கு வேண்

டுவதில்லை. ஏனெனில் சம்பந்தரே முதலடியில் எம்பெருமான் நல்லவர், தீயதில்லாதவர் என்று கூறிப்போயிருக்கின்றார். தேவர்களுடைய அகங்காரம் சொல்லொணாதது. பகைமை வாய்ந்தது. இராவணனுடைய செருக்கோ தன்னையன்றி வந்த செருக்கு. எம்பிரானிடத்துப் பகைமை கொண்டதல்ல. இராவணன் சிறந்த சிவனடியான். அதுபற்றியே தான் எம்பெருமான் தேவர்களுககும் அரிதாகியும் இராவணனுக்கு எளியவனாகியு மிருந்தார். இங்கு பரஞ்சோதி முனிவர் தம் பழியஞ்சின படலத்தின் துவக்கத்தில் கண்டுள்ள,

"ஈறிலான செழியனன்புக்
கெளியவனாகி மன்னுள்
மாறியாடிய கூத்தென்
சொல்வாம் பின்தாமோ
............... சொல்லுவாம்"

என்பது கருதற்பாலது.

ஆகவே சென்றடையாத என்ற தொடருக்கு பொருள், தேவர்கள் சென்றடையாத என்பதுதான். இந்த தொடரில் இரண்டு பொருளை சம்பந்தர் மிகவும் அழகாய் அமைத்திருப்பது சாலவும் கருதற்பாலதா யிருக்கின்றது. ஒரு பொருள் எம்பெருமானிடதது உள்ள செல்வம் தேவர்களாலும் கோரப்பட்ட செல்வம். எனவே அப்படிப்பட்ட செல்வத்தை உலகத்தினரே நாடுங்கள் என்று சொல்வதைப் போன்றிருக்கின்றது. மற்றொரு பொருள் அச் செல்வத்தை யடைய வேண்டு மென்றால் தேவர்கள் சென்ற வண்ணம் செல்லாதீர்கள் என்று சம்பந்தர் சொல்ல வந்த மாதிரியாகத் தெரிகின்றது.

இஃது சைவ சமயத் திடத்துள்ள அன்பின்மிகுதியால் எழுதப் பட்டதேயன்றி மற்ற உரைகளுக்கு மறுப்பாக எழுதப்பட்ட தன்று. இத்தொடர்க்கு இன்னும் பலர் பலபொருள் கூறுவர். அதனை அடியேன் அன்புடன் எதிர் பார்க்கின்றனன்.

---

## "சென்றடையாத திருவுடையான்"

[திருக்குறள் விளக்கவாசிரியர் - கி. குப்புச்சாமி முதலியார்]

'நன்றுடையானை' என்பதனை முதலாக வுடைய தேவாரத்தின் மூன்றாம் அடியாகிய, "சென்றடையாத திருவுடையானை" என்பதனை இரண்டு முறை நான் பேசினேன். ஆயினும், சைவசித்தாந்த மகாசமாஜத்தின் காரியதரிசி இதைப்பற்றி எழுதித் தரல்வேண்டும் என்றமையால் ஒருவாறு சுருக்கி எழுதுகின்றேன். முதலில் இச்செய்யுளுக்கு உரை காண்போம். அஃதாவது,

நன்றுடையானை - அறக் கடலாகிய அந்தணனை,

தீயதிலானை - மறமென்ப தில்லாத மைந்தனை,

நரைவெள்ளேறு ஒன்றுடையானை - அறவிடையென்னும் விடை யொன்றுடையானை,

உமை யொருபாக முடையானை - அருட்சத்தியை இடப்பாகத்தே யுடையானை,

சென்றடையாத திருவுடையானை - இயல்பாக அமைந்த அருட் செல்வ முடையானை,

சிராப்பள்ளி மேய குன்றுடையானை - திரிசிராப்பள்ளி யென்னு மிடத்தே அமைந்த குன்றத்தில் எழுந்தருளி யிருப்பானை,

கூற - வாக்கால் கூறுதலும்,

என்னுள்ளம் - என் மனமானது,

குளிரும் - மகிழும்.

என்பதாம்.

'அறவாழி அந்தணன்' ஆதலால், 'நன்றுடையானை' என்றும், அழிப்பும் இளைப்பாற்றற் காதலால், 'தீயதிலானை' என்றும், எல்லாம் அழிந்த காலத்தும் அழியாத தருமத்தை விடையாக ஆரோகணித் தமையால், 'நரைவெள்ளேறு ஒன்றுடையானை' என்றும், அருட்சத்தியை இடப்பாகத் துக் கொண்டதுரியங் கடந்த மூர்த்தி ஆதலால், 'உமையொரு பாகம் உடையானை' என்றும், அருண்மூர்த்தியாய் உலகமே உருவினனும் எல்லார்க்கும் எல்லாச் செல்வத்தையுந் தந்து நிறபவனும் ஆதலால், 'சென்றடையாத திருவுடையானை' என்றும், இவ்விதம் எல்லா உலகமும் ஆன இறைவன் ஆன்மாக்கள் உய்யும் வண்ணம் நிலவுலகத் துத் திருக்கோயில்கள் பல கொண் டிருப்பதில் திரிசிராப்பள்ளியில் உள்ள குன்றில் எழுந்தருளி யிருக்கும் திருமூர்த்தியை வாக்கால் கூற என் மனமானது நிரதிசய இன்பத்தைப் பெற் றதுபோல் மகிழும் என்பார், 'சிராப் பள்ளிக் குன்றுடையானைக் கூற என் னுள்ளங் குளிரும்மே' என்றும் கூறினு ராயிற்று.

இனிச் 'சென்றடையாத திருவுடையானை' என்று கூறியது எற்றுக் கெனின், ஏனைய தேவர்கள் இவனை வழிபட்டு அடையவேண்டுவனவற்றை யடைவது போல் அடைதல் இல்லாத செல்வன் அதாவது இயல்பாகவே செல்வம்அமைந்தவன் என்பதாம். இத னலன்றே இறைவனை, "மன்னவன்" என்றனர். இதற்குப் பேருரை கண்ட சிவஞான முனிவரர், "வெண்கொற் றக் குடையும், நவமணி முடியும், சிங் காதனமும், மன்னவர்க்கேயுரிய சிறப் படையாளமாம். அதுபோலப் பிர பஞ்சம் எல்லாவற்றிற்கும் மூலகாரண மாகிய ஒரு பெரு வெண்கொற்றக் குடையும், எவற்றையும் ஒருங்கே ஓரியல்பான் அறியும் பேரறிவாகிய ஒரு பெருஞ்சுடர் முடியும், எவற்றினை யும் அங்கங்கே உயிர்க்குயிராய் நின்று செலுத்தும் இயல்பாகிய ஒரு பெருஞ் சிங்காதனமும், பிறர்க்கின்றித் தனக் கே உரிமையாகச் சிறந்தமை பற்றி" என்று விதந்து கூறினர். அன்றியும், "விச்சதின்றியே விளைவு செய்குவாய்" என்பது வித்தின்றி விளைவாய் எனப் பொருள் பட்டுத் "திருமேனி கொள்ளும் முறைமை உணர்த்திய துஉமாம்" என்றமையால் எல்லாம் இயல்பாகவே அமைந்தவன் என்றும், அவனிடத்துள்ள செல்வம் ஏனைய ஆன்மாக்களாகிய மக்கள் முதல் தேவர் என்பார் வரையும் சென்று அடைந்த செல்வம்போ லல்லாது இயல் பாகவே அமைந்த செல்வம் என்பது பொருள் ஆயிற்று. இதனைச் சுருங்க எழுதவேண்டும் என்றமையால் இத னுடன் விடுக்கின்றேன். இனி, இவ் விஷயத்தையே, ஐந்து பெரியோர்கள் எழுதியும், ஒரு பெரியோர் தலைவராக

அமைந்தும் பேசினர். தலைவராக அமைந்து பேசினோர், "சென்றடையாத திருவுடையான்" என்பதற்கு ஆண்டவன் தானே ஆன்மாக்களிடம் சென்று செல்வத்தைத் தருபவன் என்னும் பொருள்படப் பேசினர். முதலாவது எழுதிய திரு. என். துரைக்கண்ணரும், நான்காவது எழுதிய திரு. ஆறுமுகம்பிள்ளையும், ஒருமனத்தராய் 'ஆன்மாக்கள் ஏனைய தேவர்களிடம் சென்று அடையாத செல்வத்தையுடையான்' என்றனர். இரண்டாவது எழுதிய திரு. ஜி. கலியாணம் என்பவர் 'தற்போதத்தோடு ஆன்மாக்கள் சென்றடையாத செல்வன்' என்றனர். மூன்றாவது எழுதிய திரு பொ. முத்தையப் பிள்ளை ஒருவர் தாம், இறைவனுக்கே ஏற்றினர். மற்றும் கடைசியாக எழுதிய திரு. கோவிந்தசாமி முதலியார் முதல் எழுதியவரையும், இரண்டாவது எழுதியவரையும் மறுத்துத் தன் மதம் நாட்டினர்.

இனி, நான் முடிவாகக் கூறுவது என்னெனின், சமாஜ வருடக் கூட்டத்தில் வழக்கம்போல் காரியதரிசியவர்கள் கொடுக்கும் விஷயத்தைப் பேசுகின்ற விருத்தனாகிய நான் திருவெண்ணெய் நல்லூரிலும் பேசினேன். பேசியதிலிருந்து இத்துணைச் சித்தாந்த சைவர்கள் பேசியும் எழுதியும் முடித்தார்கள். இவ்வித செயல்களுக்குப் பேசியதுபோல் எழுதியும் தரல்வேண்டும் என்னும் காரியதரிசியின் விருப்பத்தின்படி இதை எழுதினேன்.

[குறிப்பு :—இப்பொருள் பற்றிய ஆராய்ச்சி இதோடு முடிவடையும்.—பத்திராசிரியர்.]

---

# சமயக்கேடு

[காழி. சிவ. கண்ணுசாமி, பி. ஏ.]

சமயமென் றெழுந்த ஒவ்வொன்றற்கும் குறைந்த அளவிலோ விரிந்த அளவிலோ சடங்குகள் ஏற்பட்டிருப்பதைக் காண்கின்றோம். இன்பப் பெருக்காம் இறைவன் பால் இயற்கையானெழும் அன்புப் பெருக்கேதுவாக அனைவரும் அவ்வவர்க்குத் தோன்றியவாறு வழிபாடியற்ற முற்படுவதே இயல்பு. நீராட்டியும், பூச்சொரிந்தும், பலியூட்டியும், ஆடியும், பாடியும், அழுதும், அரற்றியும், விழுந்தும், குதித்தும், நகைத்தும், மெய்ம்மறந்தும் மற்றுமிவ்வாறே நெஞ்சுகந்தபடி வழிபாடியற்றுவோர் தவறுகச் செய்கிறார் என்று பகுத்தறிவு வழியானெக்கிற் கூறுதலியலாது. தத்துவவுணர்வு தடித்துக் கூர்ந்து செல்லாத காலத்து இவையெல்லாம் ஒரு படித்தாய் நோக்கப்பட்டிருத்தல் எளிதிற் பெறப்படும். ஆயினும் அவ்வுணர்வும் அதனுனெழுந்த உண்மைப் பரம்பொருளின் ஆராய்ச்சியறிவும் முனைத்து, முதிர்ந்து, உரங்கொண்டு, அறிவாற்றற் கேற்றவாறு சமய நிலை படிப்படியாயுயர்ந்து, அவ்வுயர்ச்சி ஏதுவாகவும் கருத்து வேறுபாட்டினுலும் பல் வேறு உட்பிரிவு எய்துகின்ற காலத்து ஒவ்வொரு உட்பிரிவும் ஒவ்வொரு வித வழிபாட்டை விலக்கியோ அன்றித் தனக்கென ஏற்றுக்கொண்டோ ஒழுகி வரம்பு கட்டிக்கொள்ளுதல் இயல்பு.

அவ்வாறு ஒவ்வொரு சமய உட்பிரிவும் தனித்துக் கால்கொண்டு தழைத் தோங்கப் புகுங்கால் குறித்த சில ஒழுக்கங்களையும் வழிபாட்டு முறைகளையும் தேர்ந்து மேற்கொண்டு அவை கட்டு மேற்கோளாகப் பலப்பல நூல் விதிகளையும் தேடியமைத்துக்கொண்டு அவ்வழிபாட்டினை முறையே இடைவிடாம லியற்றி வருமாறு ஒரு குழுவினரையும் பிரித்தமைத்துக் கொண்டவுடன் அது ஒரு தனிச் சமயமாக நிலை பெறுகிறது. இவ்வாறே தான் ஒவ்வொரு சமயமும் தனக்கென்றே சடங்குகள் கரணங்கள் என்பனவற்றையும், சமய சாத்திரங்கள், வேதங்கள், ஆகமங்கள் என்பனவாதிய நூல்களையும், கடவுட் பணியாற்றும் ஒரு குழுவினரையும் அமைத்துக் கொண்டுளதென்று கூறலாம்.

இனி, பெருமுயற்சி யெடுத்து இவ்வாறு ஒரு சமயத்தை நிறுவியபின் அம்முயற்சியாளர் தாங்கொண்ட கருமம் முடிவுபெற்றதாகக் கருதி மடியினை மேற்கொண்டு அச்சமயத்தின் பிற்கால நடைமுறையையும் ஆய்ந்து நோக்க வேண்டும் என்றதோர் உணர்ச்சியேயின்றிச் சமய வளர்ச்சியை அதற்கென முன்னர் பிரித்தமைத்த குழுவினராகிய குருமார்களிடம் ஒப்பித்து வாளாவிருந்துவிடல், ஒவ்வொரு சமய வரலாற்றினுங் காணக் கிடைப்பதோர் உண்மையாகும். பசி வேளையில் எதிர் கொண்டழைத்துச் சமைத்த உணவை முன்னிருந்து ஊட்ட வேறெத்தகைய உழைப்புமின்றி அதனை யுட்கொள்ளுவதனாலாய களைப்பு தொண்டருக்கும் சொற்ப நேரமிருக்கு மென்று கூறுவரேல் தீராப் பசிகொண்ட பல்லாயிரம் உயிர்கட்கு ஆராவமுதளிக்கும் ஒரு சமயத்தை நிறுவியதனாலாய களைப்பு எத்துணை சொற்ப காலம் இருக்க வேண்டும்? அதனை ஒரு கற்பகாலமென்றே கணக்கிட்டுக் கொள்ளுதலுந் தவறுமோ? இவ்வாறு களைமலிந்து கிடக்கும் ஒரு கற்ப காலமுழுதும் முன்னெழுந்த சமயமானது தன் சீர்குலைந்து அச்சுக்கெடா திருந்துவருமென்று கொள்ளவுங் கூடுமோ?

இனி, மடி மிகுந்து களைமலிந்து கிடக்கும் ஒரு காலத்தில் ஒவ்வொரு சமயமும் கேடுறுதற்குச் சிறந்த ஏதுக்களாய் இதுகாறும் எந்நாட்டிலும் இருந்து வந்தனவாகக் காணக்கிடப்பனவும் இனியும் இருக்கக் கூடியவையாகக் கருதக்கிடப்பனவும் மூன்றாகும். அவை குருமார்களின் தன்னலம், தெய்வத் திருவிளையாடற்றிரிபுப் பெருக்கம், வேதசாத்திர மறைபொருள் என்பனவே. இவை ஒவ்வொன்றையும் ஒரு சிறிது விளக்குவாம்.

மூன்றினுந் தலையாயது குருமார்களின் தன்னலங்கருதும் இழிதகைமையே. சமயங்கண்ட பெரியார்கள் மாண்டு மடிந்ததாலோ அன்றி மங்கியோய்ந்ததாலோ, கடவுட் பணியாற்றுவதற்கென அவர்களால் முதற்கண் தேர்ந் தமைக்கப்பட்ட குருமார்கள் நாளேற வேறத் தாமே கடவுளர்க்கும் மக்கட்கும் இடையே இருப்பதாகிய தொடர்பை ஆக்கியளித்து அழிக்கும் ஆற்றல் வாய்ந்தவர்களென்று கூறிப் பகடியடிக்க முற்படுவர். அதனைப் பகடியெனக் காணல் வேறு பல அநுவலிற் படிந்துகிடக்கும் ஏழை மாந்தர் கட்கரிதாகும். இப்பகடி தானும் சிறுகச் சிறுக, சமயத்தலைவர்கள், கடவுட் பணியியற்றும் ஆசாரியர்கள், மறைகிளக்கும் ஓதுவார்கள் என்ற இக்குழு

வினரின் பல பகுதியினரிடத்தும் தோற்றமுறுகிறது. கடவுட் பணியிலேயே என்றென்றும் ஈடுபட்டுக் கிடப்பதனுலோ அன்றி அப்பணியாற்றுவதில் வேண்டியும் வேண்டாமலும் பல்லாற்ருனும்வரும் நன்பொருள் மிகுதியினுலோ, அன்றியும் எந்தை குருவாகையால் யானுங் குருவாதலைத் தடுப்பார் யாருமிரார் என்ற ஒரு நம்பிக்கையினுலோ மற்றிவை போன்ற எதனுலோ முதன் முதலாகப் பிரித்தமைக்கப்பட்ட குருக் குழாத்தினரிடைக் காணக்கிடந்த உண்மைச் சமயப்பற்று ஒடுங்கி, கடவுட் பணியாற்றும முறைகளிற் பயிலும் பயிற்சிகள் குறைந்து, வெறும் வெளிச் சடங்களவானே பணியை முடித்துக்கொண்டு உறங்க விழையும் இழுக்கம் குருமார்களிடத்தும் பெரும்பாலும் அவர்கள் கால்வழி வருவோர்களிடத்தும் குடிகொள்கிறது.

" சத்தியமின்றித் தனிஞானந் தானின்றி
யொத்த விடயம் விட்டோரு முணர்வின்றிப்
பத்தியுமின்றிப் பரனுண்மை யின்றியூண்
பித்தேறு மூடர் "

பலர் பெருகிக் குருமார்களா யமைந்து கடவுட் பணியாற்ற முன் வருவரேல் அவர்களை நம்பிக் கடைத்தேற வெண்ணினுல் அது " குருடுங் குருடுங் குருட்டாட்டமாடிக் குருடுங் குருடுங் குழிவிழு', வதையன்ருே ஒக்கும்? இத்தகையோரால் இறைவழிபாட்டிற்குத் துணைக் கருவியாய்க் கோலப்பட்ட சடங்குகள், தன்னலமும் பொருள் வருவாயும் மக்கள் தம் அறியாமையுங் கருதி முதற்கருவியாக மாறிச் சமய வழிபாடெனக் காட்டப் பெறின் ஒரு சமயம் கீழறுபட்டுச் சிதைந்து போவது திண்ணம் என்று கூறவும் வேண்டுமோ?

இவ்வாறு தம்மாட்டுச் சமயப்பற்று அருகி ஊக்கங் குன்றி வருவதையறிந்த காலத்து எங்கே தம்மாற் பிணிப்பு நெகிழ்ந்து விடுமோ வென அஞ்சியவராய்க் குருக்குழாத்தினர் தெய்வத் திருவிளையாடல்களாகவும் அற்புதச் செய்கைகளாகவும் சமய நூல்களிடைக் காணக் கிடக்கும் ஒரு சில மறுக்கொணு உண்மைகளை ஒன்று பலவாகப் பெருக்கியும், காலத்திற் கேற்றவாறும் மக்களறியாமைக்கேற்றவாறும் திரித்தும் கூறியோ அன்றி அவ்வப்போது உண்டானதாகக் காட்டியோ தம் புல்லிய வாழ்க்கைக்கு அரண் கோலிக்கொள்ள முற்படுகின்றனர். இதனைக் கண்ட ஏழைமக்களும் வஞ்சகமறியாது அவையே உண்மை யென நம்பி ஏமுறுகின்றனர். இதனுல் மறுக்கொணுதவையாயெழுந்த அவ்வொரு சில திருவிளையாடல்களும், அற்புதச் செயல்களும் ஊடுருவிப் பார்க்க முயலுவோர் கண்களில் முதலில் வெறும் பகட்டாகவே காணப்பட்டொழிகின்றன. இதைவிட ஒரு சமயத்தின் வேரையறுக்கும் சுரிகையும் வேறுண்டோ?

இறுதியாகக் கூறிய வேதசாத்திர உண்மைப் பொருளை வெளிப்படையாக விளக்கி யறிவு புகட்டாது தன்னலங் கருதி அதனை மறைபொருளாக்கி வைத்துக்கொண்டு வருவதனுலாய தீமைகள் வெளிப்படையாகவின் இங்கு விரிக்காது விடுக்கின்ருேம்.

இவ்வாறு வேலியே பயிரை யழித்ததுபோல் சமய வளர்ச்சிக்கெனத் தேர்ந்து அமைக்கப்பட்டவர்களே மடி

மையினாலும், அறியாமை யினாலும், வஞ்சகத்தினாலும், பொருள் வருவாய் கருதியும் சமயஉண்மைகளையொதுக்கி உள்ளீடற்ற வெளிச் சடங்குகளையே குறிக்கொண்டு காத்துவர முற்பட்டால் சமயக்கேடு திண்ணமாய் எய்தும் என்று கூறவும் வேண்டுமோ? சமயக்கேடு தொடங்கவே ஒவ்வொரு சமயத்தின் அடிப்படையா யமைந்த பொன்னனைய உயர்ந்த கொள்கையான "இறைவன் திருமுன் எவ்வுயிருஞ் சமம்" என்ற கொள்கைமாறுபட்டு ஒவ்வொன்றிலும் உயர்வு தாழ்வு என்ற வேற்றுமை தோன்றுகிறது. பிறப்பில் வேற்றுமை, பிழைப்பில் வேற்றுமை, வழிபாட்டிலும் வேற்றுமை என்றித் தொடக்கத்தன எத்துணை வேற்றுமைகள்? உண்மை யிது பொய்ம்மை யிது என்றுணர முடியாதபடி சூழ்ச்சிகள் வலுத்து, வேடங்கள் மல்கிச் சமய உணர்ச்சிக்கும் அறிவுக்கும் இன்றியமையாத நேருணர்வு (Straight thinking) கெட்டு விடுகிறது.

"பொய்த்தவ வேடர் கைத்தகப் படுத்தற்கு
வஞ்சச் சொல்லின் வார்வலை போக்கிச்
சமயப் படுகுழி சமைத்தாங் கமைவயின்
மானிட மாக்களை வலியப் புகுத்தும்
மாணு விரதத் தகப்படுத் தாழ்த்தும்
வளை வுணர்வு"

எங்கும் பரந்து தலைவிரித்தாடுகிறது.

இதுகாறுங்கூறியவாற்ருன் மாசற்று எழுந்த ஒரு சமயம் குருமார்களின் தன்னலம், தெய்வத் திருவிளையாடல்களில் வஞ்சகத் திரிபு, சமய சாத்திர உண்மைப்பொருளை மறைத்தல் ஆகிய புற வேதுக்களால் எவ்வாறு கேடுறுகின்றது என்பதை ஒருவாறு காட்டினும்.

---

# சைவ இளைஞர் மகாநாடு

## தலைவர் பேருரை

[கா. சுப்பிரமணியம் பிள்ளை எம். ஏ., எம். எல்.]

**சை**வ இளைஞர் பொருட்டு முதல் முதல் கூட்டப்படும் இம்மகா நாட்டிற்கு என்னைத் தலைமை பூணும்படி கேட்டமைக்குக் காரணம் இளைஞரைப் போல பயிற்சி போதாமை என்பால் காணப்படுதல் போலும். நான் அதற்கு இசைந்தது எதனுலோ எனின் இளைஞர்பாலுள்ள உள்ளக்கிளர்ச்சி, களங்கமின்மை, விடாமுயற்சி முதலிய பல நற்பண்புகளைப் பெற்றுக் கொள்ளுதற்கும் அன்னார்க்கு அறிவுரை பகர வந்துள்ள மாட்சிமை தங்கிய பேரமைச்சர் முதலிய பெரியோரது பயிற்சி மிக்க போதனையின் பயன் சொள்ளுதற்கும் வாய்ப்பு அமைதலின் என்க.

இம்மகா நாட்டைத் திறந்த பேரமைச்சரது அறிவுரைகளின் விளக்கமாக யான் செப்பும் சிற்றுரையைக் கருதுக. இளமைப் பருவமானது எல்லா நலத்திற்கும் வித்திடும் பருவமாதலின் எல்லா நலத்தையும் விளக்க வல்ல கல்வியினை இளமையிற் பயிலுதல் வேண்டுமென்று நமது முன்னோர் கூறினர். 'இளமையிற் கல்வி சிலையினெழுத்து' என்பதைக் காண்க. கற்கும் கலைகளை எல்லாம் தொழிற்கலை, கவின்கலை, மெய்க்கலை என மூன்றுகப் பிரித்தல் கூடும். உடல் வாழ்க்கை நிலை பெறுதற்கு வேண்டும் ஊதியங் கருதிப் பயிலப்படும் உழவு, கைத்

தொழில்; வணிகம் முதலியவற்றின் சார்பான கலைகளை எல்லாம் தொழிற் கலை எனலாம். ஐம்புலனிற்கும் மனதிற்கும் இன்பம் பயக்கவல்ல பாட்டு, இசை, கூத்து, ஓவியம், சிற்பம் முதலிய அழகினைச்சிறப்பிக்கும்கலைகளெல்லாம் கவின் கலை எனப்படும். இனி மெய்க்கலை என்பது தோன்றும் பொருள்களின் தன்மைகளை ஆராயும் கலை எனவும் தோன்றும் பொருள்களுக்கெல்லாம் அடிப்படையாயுள்ள முடிவான உண்மைப் பொருளை ஆயும் முடிந்த மெய்க்கலை எனவும் இருதிறப்படும். முன்னவற்றை அறிவியல் நூலின் (Science)பாலனவாகவும் பின்னவற்றைத் தத்துவ நூலின் (Philosaphy) பாலனவாகவும் மேல் நாட்டினர் கருதுவர். இன்னொரு முறையாகப் பார்க்குமிடத்து உலகத்தின் ஒவ்வொரு பகுதியையும் வகுத்து வகுத்து ஆயும்முறை அறிவியல் நூல் என்றும், எல்லாப் பொருளும் தொக்க பிண்டமாகிய உலகத்திற்கு ஆதாரம் யாதென்று ஆயும் முறை தத்துவநூல் முறையாகவும் கொள்ளப்படும்.

தத்துவநூல் ஆராய்ச்சியில் நமது முன்னோர் தலை சிறந்து விளங்கினர். அஃதே சமய உணர்ச்சிக்கு ஆதாரமாக உள்ளது. எக்கலையினும் மெய்க்கலை உயர்ந்ததாலும் அதன் கண்ணும் முடிந்த மெய்ப்பொருளை ஆய்ந்தறியும் சமயக் கலையானது மிக மேம்பாடு உடையது ஆதலானும் சமயக்கலையின் பயனையே கல்வியின் விழுமிய பெரும் பயனாக ஆசிரியர் திருவள்ளுவர் முதலிய பேரறிஞர்கள் அறுதியிட்டு உரைத்தனர்.

கற்றதனா லாய பயனென் கொல்
வாலறிவன்—நற்றாள் தொழா அரெனின்

எழுத்தறியதீரும் இழிதகைமை தீர்ந்தோன்
மொழித் திரத்தின் முட்டறுப்பான் ஆகும்
மொழித் திரத்தின் முட்டறுத்தனல்லோன் [முதனூற்
பொருளுணர்ந்து கட்டறுத்து வீடு பெறும்.

என்ற விடத்து இலக்கண இலக்கியங்களின் குற்றமற்ற பயிற்சியினது முடிந்த மெய்ந்நூற் பொருளுணர்ந்து பற்று நீங்கி வீடு பெறுதற்குக் கருவி என்று கூறியது காண்க.

முடிந்த மெய்க்கலையின் சாரமே சைவத்தின் உட்கிடையாம். தென்னாடுடைய சிவனே போற்றி என்பதற்கேற்ப சிவநெறியானது பண்டைத் தமிழரது சமய நெறியாய் நிலவினமையான் அதன் உயிர் கருத்துக்கள் தொல்காப்பியம், திருவள்ளுவர் முதலிய பண்டைத் தமிழ் நூல்களில் பொதிந்து கிடப்பதை வைத்து இறுதி ஊகிக்கப்படும். தொல்காப்பியமானது இப்பொழுதுள்ள வடமொழி வியாகரணமாகிய பாணினியம் இயற்றப்படுதற்கு முன்னே தோன்றி மறைந்த ஐந்திரத்திேனாடு ஒத்தகாலத்ததெனக் கருதுமிடத்து அதன் பழமை நன்கு புலனாகும். அத்துணைப் பழமையாகிய காலத்தைக்கடவுள் உயிர்உலகம் என்ற முப்பொருள் உண்மை தமிழ் நாட்டிலே எங்கும் வழங்கிவந்தது என்பது அவற்றின் சார்பாகிய சொற்களை எழுத்துக்களுக்கு உருவகப் பெயர்களாக ஆசிரியர் தொல்காப்பியனார் கொண்டமையால் இனிது விளங்கும். ஆய்தம், உயிர், மெய் என்ற மூன்று சொற்களையும் உற்றுநோக்குக. ஆய்தம் என்பது நுண்ணிது என்று பொருள் படும். எல்லா எழுதொலிகளும் தோன்றுதற்கு அடிப்படையாய்உள்ள மூச்சானது நுண்ணிதாய் எழுத்தொலி புலனாதற்கு ஏதுவாகிய காற்றுத்

தொகுதியோடு கலந்திருத்தலின் அதனையே ஆய்தம் என்றார்.

அது மூலமாகிய எழுத்தொலியினோடு கலந்தே ஒலித்தலின் அதனை சார்பெழுத்தென்றார். எல்லாப் பொருளுக்கும் ஆதாரமாய்த் தோன்றாத அடிப்படியாய் அவற்றோடு சார்ந்து நிற்கும் மெய்ப் பரம்பொருளை யுணர்தலே சார்புணர்தல் என ஆசிரியர் திருவள்ளுவனார் மெய்யுணர்தல் அதிகாரத்தில் குறித்தமை காண்க. "சார்பினால் தோன்றாது தானருவாய் எப்பொருட்கும், ஏனின்று எஞ்ஞான்றும் இன்பம் தகைத்தோர்" என்ற விடத்தும் இக்கருத்து வலியுறுதல் காண்க. எல்லாப் பொருட்கும் சார்பாகிய முதல்வன் அப்பொருள்களின் இயல் பிலனாய் அவற்றின் வேறான தன்மையுடையனாய் இருத்தலின் தனி முதலெனப் படுவன். அவ்வாறு உயிரொடும் மெய்யொடும் சாராது வேற்றியல்புடைய ஆய்தமானது தனிநிலை எனப்படுதல்காண்க.

இனி எப்பொருட்கும் இன்பம் ஈயும் இறைவனின் வேறாக அவ்வின்பத்தைப்பெறும் உயிர்கள் பல என்பதும் தொல்காப்பியத்துட் போந்த கருத்தேயாகும். "வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன்" என்ற விடத்து உயிர்கள் வினை வசப்பட்டு அறிவு மயங்கப் பெறுவன என்பது குறிப்பானறியக் கிடக்கின்றது. வினைக்கு ஏதுவாக எடுக்கும் உடம்பே மெய்யெனப்படுதலின் உயிர் ஊர்ந்து வரும் எழுத்துக்களை மெய்யெழுத்தெனவும் ஊரும் எழுத்துக்களை உயிரெனவும் குறியீடுசெய்து கொண்டமை மிகவும் வியக்கத்தக்கது. மெய்யென்பதே தத்துவம் என்னும் வடசொல்லின் பொருளாகும். தத்துவக் கூட்டமே உலகமாதாவின் மெய்யென்ற விடத்து உலகம் சுட்டப்பட்டதென அறிக. இதுவரை கூறியவற்றால் சைவசித்தாந்தத்துட் போந்த முப்பொருளுண்மை தொல்காப்பிய எழுத்ததிகாரத்துள் அமைந்து கிடக்கின்றது என்பது இனிது புலனாகும். இதனைப்பற்றிய விரிந்த ஆராய்ச்சி பிற்காலத்து நூல்களில் காணப்படும். இப்போது நாம் ஒரு தலையாக உள்ளத்தில் பதித்துக் கொள்வது யாதெனில் எல்லாம்வல்ல முழு முதற் கடவுள் ஒருவன் உண்டென்பதும் அவனன்றி ஓரணுவும் அசையா தென்பதும் ஆகிய முடிந்த உண்மைகளேயாம். இக்கருத்தினையே வடமொழி உபநிடதங்களும் பாரசீகப் பண்டைப் பல்நூல்களும் கிரேக்க தத்துவ நூலும் வெவ்வேறு வகையாகப் பகர்கின்றன. தற்காலத்திலே மேல்நாட்டுத் தத்துவ உணர்ச்சி சான்றவர்கள் அறிவுடையோர் முழுமுதற் பொருளே அறிவில்லாத பொருட் பிண்டமாகிய உலகத்திற்கு ஆதாரமாய் யுள்ளதென்பதை முடிவாகக் கைக் கொண்டுள்ளார்கள். இம்முடிந்த வுண்மையை அறியாத பலர் இக்காலத்திலும் முற்காலத்திலும் நாத்திக வாதம் பேசி யொழிந்தனர்.

கடவுள் உண்மை உணர்ச்சிக்குத் தடையாய் நிற்பனவற்றுள் ஒன்று யாதெனில் மக்களது முற்றுப்பெறாத அவாவேயாம். நினைத்ததொன்றுமுடிய வேண்டுமென்று கருதுபவன் கடவுளை வணங்கியும் அது முடிவு பெறாத விடத்து நாத்திக வாதத்தை மேற்கொண்டும் நிற்கின்றான். தான் செய்

வினைக்குத்தக்க பயனை ஒருவன் அடைகின்றான் என்பதையும் வினை செய்தல் ஒரு பிறவியிலும் அவ்வினையின் பயனை நுகருதல் மற்றொரு பிறவியிலும் நிகழ்தல் கூடுமென்பதே உணராததாகும். தமக்குத் தக்கவற்றை அறிந்து உதவுகின்றார் கடவுள், துன்பத்தைக் கொடுத்தாலும் தம்மைப் பக்குவப் படுத்தி உய்வித்தல் பொருட்டே என்னும் கருத்துக்களை மனதில் பதித்துக்கொள்ளல் வேண்டும் என்பதை வற்புறுததவே ஆசிரியர் திருவள்ளுவனார்,

அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும்
செவ்வியான் கேடும்நினைக்கப்படும்.

என்று உறுதி கூறிப் போந்தனர். ஆங்கிலத்திலும் (God knows what is best for us) என்பதும் கடைப்பிடிக்கத் தக்கதே. 'வேண்டுவார் வேண்டியதே ஈவான்' என்ற திருவாக்கிற்குப் பொருளினை ஆய்ந்துகொள்ளல் வேண்டும். வேண்டுவார் என்ற சொல்லானது வேண்டும் தகுதியுடையார் என்று பொருள்படும். "தாமென்றும் மனந் தளராத் தகுதியினால் உலகத்துக்கு ஆமென்று சரண்புகுந்தார் தமைக் காக்கும் கருணையினன்" என்ற திருஞானசம்பந்தப் பெருமான் திருவாக்கினால் எக்காலத்தும் மனந்தளராமையும் தான் மனத்தொடு இறைவன் செயல் யாவும் நன்மையே என்று கருதிச் சரண்புகுதலுமாகிய தகுதியுடையோரே இறைவனது சிறந்த கருணைக்குரியவர் என்பது தெளியப்படும். பயன் கருதாது இறைவனை வழிபட்டால் அது கிடையாத போது நாத்திகம் தலை எடுத்தலின் பயன் கருதாது கடவுளை வழிபடுகென பெரியோர்கள் கூறுவாராயினர். பயன் கருதற்கு ஏது ஆசையாதலின் ஆசையற்ற இடத்திலே தான் தெய்வ உணர்ச்சி நிலைபெறும் என்ற கருத்தினைத் தாயுமானப் பெரியார் "நிராசை இன்றேல் தெய்வம் உண்டோ" என்றார். ஆதலால் இறைவனடிக்குப் பயன் கருதாது அன்பு செலுத்துதலே சிறந்த வழி பாடாகும். காதலற்கு அன்பினால் விளையும் இன்பம் போல இறையன்பினால் அடியார்க்கு இன்பம் விளையும். "இறவாத இன்ப" அன்பு என்பதும் அது. இவ்வாறே நமது சமயக்கருத்துக்கள் பிறவற்றையும் ஆய்நது உண்மை தெளிக. ஈண்டு அவற்றை விரிப்பில் பெருகும். சைவத்திலே எவ்வுயிர்க்கும் இரக்கம் வைத்தல் சிறந்த கொள்கையாகத் தழுவப் படுதலானும் ஒழுக்கம்பற்றியே உயர்வு என்பது தமிழ்க் கொள்கை யாதலானும் சைவ இளைஞர் யாவரும், அருள் ஒழுக்கமும், விரிந்த நோக்கமும், குற்றம் பொறுக்கும் குணமும், ஒற்றுமையும், விடாமுயற்சியும் உடையவர்களாய்த் திகழ்தல் வேண்டும்.

சைவத்தின் சிறந்த உண்மைகளை உலகத்தில் வெளிப்படுத்தினால் உலகிலுள்ள அறிஞர் யாவரும் அவற்றை மேற்கொள்வர். "ஞால நின்புகழே மிக வேண்டும்" என்ற நமது பரமாசாரியார் திருவுள்ளக் கருத்தினை யாவரும் நிறைவேற்ற முயல வேண்டும்.

சைவ வொளியானது எங்கும் பரவுதற் பொருட்டு சைவ சித்தாந்தக் கலாசாலை, சைவ நூல் நிலயம், சைவ போதகாசிரியர் நியமனம், சைவர் விடுதி, சைவ நூல் வெளியீடு முதலிய பேரறங்கள் முதலியவற்றையும் சைவ ஆதீனத் தலைவர்களும் பிற சைவச் செல்வர்களும் கோயி லதிகாரிகளும் அமைத்து நன்குநடத்திச் சைவர்க்கும் சைவ இளைஞர்க்கும் பேருதவி புரியுமாறு திருவருள் சுரக்கும் பொருட்டு எல்லாம்வல்ல இறைவனை வழுத்துகிறேன். சுபம்.

# கேவேடரும் கெளிறும்

[வே. மு. ஸ்ரீநிவாஸ முதலியார்]

(1) திருவாசகம் கீர்த்தித் திருவகவ லிடையே "கேவேடராகிக் கெளிறது படுத்தும்" என்ற அடியினுக்கு இது வரையில் பொருள் கண்ட பெரியார் கள் பலருள் திருவாளர் சாமிநாத பண்டிதர் அவர்கள் திருவாளர் நா. வேதாசலம் பிள்ளை அவர்கள் (மறை மலை அடிகள்) காலஞ்சென்ற திரு வாளர் கா. இராமசாமி நாயுடு அவர் கள் ஆகிய இவர்கள் மூவரும் "கே வேடர்" என்ற சொல் "கேவர்த்த" அல்லது கைவர்த்த என்ற வடமொழி யின் திரிபெனக் கொண்டு "மீன்வலை ஞராகி மீனைப்படுத்தும் என்று பொருள் கொண் டிருக்கின்றனர் ஏ அறிஞர் பலர் அறிவர்.

(2) அன்றி, திரு. நா. வேதாசலம் பிள்ளை அவர்கள் தாம் எழுதிய உரை நூலகத்தே "இறைவன் வலைஞனாய்ச் சென்று படுத்தது சுறவுமீன் என்று திரு விளையாடல் புராணங் கூறுமாயினும் அடிகள் அதனைக் கெளிற்றுமீன் என்று கூறுதலின் அடிகள் கூற்றே கோள்ளற் பாலதாம் என்று எழுதியுள்ளார்கள்.

(3) பிள்ளை அவர்கள் கூறும் அடிக ளால் அருளப்பட்ட திருக்கோவையார் என்னும் நூலகத்தே 187 எண்ணுள்ள பாட்டின்கண் "கார்த்தாங்கந் திரை தோணி சுறுக்கடல்மீன் எறிவோர்" என்று கூறி இருத்தலால் அப்பாட் டின் கவிக் கருத்துக்கேற்பப் பொருள் கொள்ளின், அவ்வடிகளின் கருத்தும் சிவபிரான் வலைஞனாகிப் படுத்தது சுறவு மீனே என்பதாகும். இவ்வேதுவினால் பிள்ளை அவர்களின் முடிபு பொய்த் தமையினை அறிஞர் பலர் அறிவர்.

(4) ஸ்ரீ வில்லிபுத்தூர், பாரதம் அருச்சுனன் தவநிலைச் சருக்கம் 81. எண்ணுள்ள "நனைமலர்ச் சிதறி" என்ற பாட்டின் கண் "வினைபடு கேழல் வேட்டை நாம் இன்றே வேட ராய் ஆடுதல்வேண்டும் என்று சிவ பிரான் கூற்றாகக் கூறி இருத்தலை அறிஞர் பலர் அறிவர்.

(5) ஆகையால் "கேழல் வேடர்" என்ற இவ்விரண்டு சொற்களும் கூடி மரூஉவின் பாற்றியாய்க் "கேவேடர் எனத் திரிந்து நின்றனவாகக்கொண்டு பன்றி வேட்டையராகிப் பன்றியினைப் படுத்தும் என்று பொருள் கொள்ளு தலே சாலச் சிறப்புடைத்தாகும் என் பதனை, நூற்களைப் புரட்டிப் புரட்டிப் படித்து, இந்தச் சொல்லுக்கு அந்தப் பொருள் அந்தப் பொருளுக்கு இந்தப் பெயர் என்று ஆய்ந்துகொண்டிராமல், 'ஊர்களைச் சுற்றிப் பாருங்கள்' என்று படிப்பவரைப் பழித்துப் புத்திபுகட்ட முற்படும் பண்டிதரல்லா அறிஞர் பலர் ஆய்ந்து கொள்வர் என்ற நம் பிக்கையான் வெளியிடலா னேன்.

(கேழல் - பன்றி) களிறு, கெளிறு - பன்றி)

"எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினும் [அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"

[குறிப்பு :—{ பற்றி ஒரு பக்கத்து மேற்பட்ட ஆராய்ச்சியுரைகள் வெளியிடப்படா - பத்திராசிரியர்.]

# சிவலிங்கம்

[திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளையவர்கள் பி. ஏ. எழுதியது]

சிவலிங்கம் என்னும் தொடர்மொழியானது சிவம், லிங்கம் என்னும் இரண்டு சொற்களினது சேர்க்கையாலாகிறது; அது சிவமாகிய லிங்கம் அல்லது சிவத்தைக் காட்டும் லிங்கம் என விரியும்.

சிவம் என்னும் சொல் மங்கலம் அல்லது நன்மை என்று பொருள் படும். 'சிவம் நன்மை, குறுணி, முத்தி' என்பது சூடாமணி நிகண்டு. 'எல்லா உயிர்களுக்கும் எப்பொழுதும் நன்மையைச் செய்தலாற் சிவம்' என்று திருக் கோவையாருக்கு உரை எழுதிய பேராசிரியர் கூறுகின்றார். (358-வது பாட்டு). உண்மை அறிவு இன்பம் (சத்து சித்து ஆனந்தம்) என்னும் இம்மூன்றினது நிலைக்களமே சிவமாகும். எப்பொருள், எக்காலத்தும் இல்பொருள் ஆகாமல் உள்பொருளாய் அறிவின்றி நிலைபெற்றுள்ளதாயும் தான் எப்பொருளிடத்திலும் பற்றின்றி எல்லாப் பொருள்களும் தன்னைப் பற்றாக உடையனவாயும் உள்ளதோ அது சிவம்; எப்பொருள் அறிவு மயமாயிருந்து எல்லா உயிர்களுடைய அறிவை விளக்குமோ அது சிவம். எப்பொருள் எல்லா உயிர்களும் நுகர்கின்ற இன்பத்துக்கு இடமாய் நிற்குமோ அது சிவம். இலிங்கம் என்பது குறி அல்லது அடையாளம் ஆகும்.

சிவலிங்கம் என்பது சிவத்தைக் காட்டும் குறியாகும். உயிர்கள் சிவத்தை உண்மை அறிவினாலே தான் நேரே தன்னறிவினுள்ளே உணர்ந்து அறிய முடியும். அத்தகுதி வாய்க்கப் பெறுமுன் உயிர்கள் அச்சிவத்தினது அருட்சத்தி விளக்கமாகிய உலகில் சிவத்தை அறிதற்குக்குறிகள் அமைந்திருக்கின்றன. அக்குறிகள் பின் வருமாறு:—

சிவன் எட்டு உருவினன். அட்டமூர்த்தி, அவன் நீர், நிலம், தீ, கால் வெளி, பகலோன், திங்கள், உயிர் ஆகிய இந்த எட்டுப் பொருள்களையும் உருவங்களாக உடையவன். நீர் நிலம் தீ கால் வெளி என்னும் ஐம்பெரும் பூதங்களாலாகிய உலகம் அவனுடைய உருவம். உலகமாகிய உருவம் சிவத்தைக் காட்டுங் குறியாயுள்ளது.

(1 இருநிலனாய்த் 2 தீயாகி 3 நீருமாகி, 4 இயமானனாய் எறியுங் 5 காற்றுமாகி, அருநிலைய 6 திங்களாய் 7 ஞாயிறாகி, 8 ஆகாசமாய் அட்டமூர்த்தியாகிப், பெரு நலமும் குற்றமும் பெண்ணும் ஆணும், பிறர் உருவும் தம் உருவும் தாமே யாகி, நெருநலையாய், இன்றாகி நாளையாகி, நிமிர்புன் சடையடிகள் நின்ற வாறே.)

என்பது அப்பர் வாக்கு.

உலகம் சிவத்தினது குறியாயிருத்தலால் அது அண்டலிங்கம் என்று கூறப்படுகின்றது. அவ்வுண்மை,

இலிங்கம தாவ தியாரு மறியார்
இலிங்கம தாவ தெண்டிசை யெல்லாம்
இலிங்கம தாவ தெண்ணெண் கலையும்
இலிங்கம தாக வெடுத்த துலகே.

என்று திருமந்திரத்திற் கூறியிருத்தல் காண்க.

ஐம்பெரும் பூதங்களாலாகிய உயிர்களது உடலும், ஒரு சிறிய உலகம். அந்த உடலும் சிவத்தைக் காட்டும் குறியாதலின் அது 'பிண்ட லிங்கம்' என்று கூறப்படும். அவ்வுண்மை,

மானுட ராக்கை வடிவு சிவலிங்கம்
மானுட ராக்கை வடிவு சிதம்பரம்
மானுட ராக்கை வடிவு சதாசிவம்
மானுட ராக்கை வடிவு திருக்கூத்தே

என்று திருமந்திரத்திற் கூறியிருத்தல் காண்க.

கவோ துக்கத்தின் குறிகளாகவோ தோன்றவில்லை. ஆன்மா வானது, ஸ்தூலதேகத்தோடு இதுகாறும் வைத்திருந்த கூட்டுறவைச் சாசுவதமாக விலக்கிக் கொள்கிறதென்றே தோன்றியது.

ஸ்தூல தேகத்தின் தலையைச்சுற்றி அழகிய, மிருதுவான, பருத்த ஓர் ஒளி சூழ்ந்து கொண்டது. மூளையும் சிறு மூளையும், தங்களுடைய உட்புறங்களை விரித்துக் கொண்டன. அவை தங்கள் தாதுத்தொழில்களைச் செய்யாமல் நின்றொழிவதை நான் பார்த்தேன். உடனே இவைகளுக்கு மின்சார தாதுவும், காந்த தாதுவும் உண்டாகி, கீழ்த்தரப்பட்ட தேக அமைப்புகளில் ஊடுருவிப்பாய்ந்தன. சாதாரண தேகாரோக்கியத்தின் போது, மற்ற சிறந்தங்களைவிட மூளைக்கு எவ்வளவு உறுதி உண்டோ அதைவிடப் பதின் மடங்கு அதிகமான உறுதியை அம்மூளையானது மரணத்தறுவாயில் பெற்றது.

## ஜீவன் பிரிவு

பிறகு, மரணம், அதாவது ஸ்தூல தேகத்தினின்று ஜீவன் பிரிவு தொடங்கியது. மின்சாரம், காந்தம், இயக்கம், ஜீவன், உணர்ச்சி ஆகிய இவைகளின் தத்துவங்களை மூளையானது தனக்குள்ளே யிருக்கும் பல அறைகளில் ஆகர்ஷிக்கத் தொடங்கியது. சிரசு, மிகுந்த பிரகாச மடைந்தது. மற்ற இந்திரியங்கள் எவ்வளவுக் கெவ்வளவு குளிர்ச்சி யடைந்தும், இருளடைந்தும் போயினவோ அவ்வளவுக்கவ்வளவு மூளையானது பிரகாசத்தையும் சோபிதத்தையும் அடைந்தது.

மேற்படி ஸ்திரீயின் தலையினின்று எழுந்து அதைச் சூழ்ந்து கொண்டிருந்த பழுத்த நிறமுள்ள தெய்விகச் சூழலில், வேறொரு தலை அமைந்து கொண்டு வருவதை நான் பார்த்தேன். ஆன்ம உணர்ச்சி பெற்றவர்களுக்கே, இந்த இந்திரியாதீதமான நிலைகள் புலனாகுமென்பதையும், ஸ்தூலக் கண்கள் ஸ்தூல வஸ்துக்களையே பார்க்க முடியுமென்பதையும்வாசகர்கள்நினைவிலிருத்திக்கொள்ள வேண்டும். இஃது இயற்கைவிதி. மேலே கூறப்பட்ட புதிய தலையானது, வரவர நன்றாகத்தெரியத் தொடங்கியது. அதனை ஊடுருவிப் பார்க்க முடியாதபடியும், அதனை உற்று நோக்க முடியாதபடியும் அவ்வளவு சிற்றடக்கமாயும் பிரகாசமாயும் அந்தத்தலை இருந்தது. அந்த ஞானத் தலையானது அமைந்து கொண்டிருக்கையில், ஸ்தூலத் தலையைச் சூழ்ந்து கொண்டிருந்த ஒளிச் சூழலானது, கலக்கமடையத் தொடங்கியது. மேற்படிஞானத்தலை நன்றாக அமைந்ததும், இந்த ஒளிச்சூழல் மெதுமெதுவாக மறைய ஆரம்பித்தது. இதனால், மேற்படி ஒளிச்சூழலின் தத்துவங்கள், பிரிக்கக் கூடாதனவா யிருக்கின்றன வென்பதை நான் அறிந்து கொண்டேன். பிறகு மேற்படி ஞானத் தலையானது, எப்படித் தனியாகப் பிரிந்து அமையத் தொடங்கியதோ அப்படியே, படிப்படியாக கழுத்து, புஜங்கள், மார்பு முதலிய எல்லா அவயவங்களும் அமையத் தொடங்கின. இதனால், மனிதனுடைய தெய்விகத் தன்மை அமைவதற்குக் காரணமாயுள்ள எல்லா அணுக்களுக்குள்ளும் ஒருவித ஒருமைப்பாடு நிகழ்வது நன்கு புலனாகிறது.

அந்த ஸ்திரீயின் ஆன்ம தத்துவங்களும், சக்திகளும் ஒற்றுமைப் படுத் தங்களை அமைத்துக் கொண்டதே, அவளுடைய ஆன்ம அமைப்பு வெளிப்படுவதற்கும் ஒழுங்குபடுவதற்கும் காரணமாயிருந்தது. அவளுடைய ஸ்தூல தேகத்தில் காணப்பட்ட குறைகள், அவளுடைய சூக்கும சரீரத்தில் காணப்படவேயில்லை. அதாவது, அவளுடைய ஸ்தூல சரீரம் சரியானபடி அமைவதற்குப் பரம்பரையான தடைகள் என்னென்ன இருந்தனவோ அவையாவும் இப்பொழுது விலகிப் போகின்றன. இதனால், அவளுடைய சூக்கும தேக அமைப்பானது, மற்றப் பிரபஞ்சசிருஷ்டிப் பொருள்களின் போக்குப்படி, மேற்கண்ட தடைகளுக்கு மேற்பட்டதாய், தன்னை விகாசப்படுத்திக் கொள்ள முடிந்தது.

## சூக்கும சரீர அமைப்பு

சூக்கும சரீரமானது, மேற்கூறிய விதமாக அமைந்து கொண்டிருக்கையில், ஸ்தூலசரீரமானது தொந்தரவையும் துன்பத்தையும் அநுபவித்துக் கொண்டு வந்ததாக அறையிலிருந்த மற்றவர்களின் வெளிப் பார்வைக்குத் தென்பட்டது. ஆனால் உண்மையில், தேகத்தின் உட்புறமாயுள்ள உயிர்ச் சக்திகள் மூளைக்குச் சென்று அங்கிருந்து வேறொரு வடிவாக அமைவதன் பயனாகவே, மேற்படி துன்பநிலை உண்டாகிறது.

ஸ்தூலதேகத்தின் தலைக்கு நேராக ஜீவனானது கிளம்பியது. ஆனால் ஸ்தூல தேகத்திற்கும் சூக்குமதேகத்திற்கும் நிரந்தரமான பிரிவு ஏற்படுவதற்குச் சற்று முன்னர், உயர்நிலையிலிருக்கும் சூக்கும சரீரத்தின் காலுக்கும், படுத்துக்கிடக்கும் ஸ்தூலதேகத்தின் தலைக்கும் இடையே ஓர் ஒளி அல்லது மின்சார சக்தி ஓடிக்கொண்டிருந்ததை நான் பார்த்தேன். தாழ்ந்த நிலையிலுள்ள ஜீவனானது, உயர் நிலையை அடைவதையே மரணமென்று சொல்லப்படுகிறதென்று அப்பொழுதே தெரிந்து கொண்டேன்; கீழான சரீரத்திற்கும், கீழான வாழ்க்கைக்கும் பதிலாக, உயர்வான சரீரத்தையும் அதற்குரிய சக்திகளையும் ஆனந்தங்களையும் அடைவதையே மரணமென்று கூறுவதாக அறிந்து கொண்டேன். இந்தப் பூவுலகத்தில் ஒரு குழந்தை பிறப்பதும் ஸ்தூல தேகத்தினின்று ஜீவன் பிரிந்து சென்று வேறோர் தேகமாக அமைவதும் எல்லா அமிசங்களிலும் ஒன்றாகவே இருக்கிறது. புதிதாகப் பிறக்கும் குழந்தைக்குக் கொப்பூழ்க்கொடி எப்படி இருக்கிறதோ, அப்படியே சூக்கும சரீரத்திற்கும், மேலே கூறப்பட்ட மின்சார சக்தி நூலானது இருக்கிறது. இந்த மின்சார சக்தி நூலானது, சில நிமிஷங்கள் வரை, ஸ்தூலதேகத்தையும் சூக்கும தேகத்தையும் சம்பந்தப் படுத்தி வைத்துக் கொண்டிருந்தது. பிறகு இந்தநூல் அறுபட்டதும், மேற்படி மின்சார சக்தியின் ஒரு சிறு அமிசம், கீழே படுத்துக் கிடக்கும் ஸ்தூல தேகத்தை வந்து சேர்கிறது. இந்தச் சக்தியானது, தேகத்தின் எல்லாப் பாகங்களிலும் சென்று தங்குவதால், தேகம் உடனே சீர்குலையாமலிருக்கிறது.

ஸ்தூலதேகம் நன்றாகக் கெட்டுப் போகத் தொடங்கிய பிறகே, அதனை மண்ணில் புதைக்க வேண்டும். மேலே

நான் குறிப்பிட்ட கொப்பூழ்க் கொடியானது, சில சமயங்களில் அறுபட்டுப் போவதில்லை ; ஸ்தூல தேகத்திற்கும் ஜீவனுக்கும் நுண்ணிய சம்பந்தம் இதன் மூலமாக ஏற்பட்டிருக்கிறது. சிலர், இறந்துபோன சில நாட்களுக்குப் பிறகோ அல்லது சில மணி நேரத்திற்குப் பிறகோ,—ஒரு பிரயாணத்தி லிருந்து அமைதியாகத் திரும்பி வருவதைப் போன்று—உயிர் பெற்றுத் தங்கள் சூட்சும உலக அநுபவங்களைக் கூறுவதனகாரணம இதுவேயாகும். இதனையே சுழுத்தி அவஸ்தை யென்றும, மூடுசென்னியென்றும், தூங்கிக் கொண்டே நடத்தலென்றும், ஆன்ம பரவசமென்றும் பலவிதமாகக் கூறுகின்றனர். இந்த நிலைகளில் பல விதப் பாகுபாடுகள் உண்டு. ஆனால், ஆவியானது, தேகத்தினின்று செல்லாமல் தடுக்கப்பட்டு, சில மணி நேரமோ, அல்லதுசில நிமிஷங்களோ மத்தியமான ஒரு நிலையில் வைக்கப்பட்டிருந்தால், அப்பொழுது மனதில், முன்னைய அநுபவத்தின் ஞாபகம் நிலைத்து நிற்பதில்லை. இந்த ஞாபக மறதியே, ஆன்மா அழிவற்றதுஎன்ற கொள்கை மறுக்கப் படுவதற்கு ஆதாரமாகக் காண்பிக்கப் படுகிறது.

நுண்ணிய கொப்பூழ்க் கொடி அல்லது மின்சாரக்கம்பி மூலமாக மட்டும், தேகத்தின் மீது தனது ஆதிக்கத்தை நிலை நிறுத்திக் கொண்டு, ஜீவனானது, ஸ்தூல ... ன்று அடியோடு பிரிந்துவிட் பிறகே, அந்த ஜீவன், இந்தத் தேகத்தையும் அது சம்பந்தமான விஷய வாசனைகளையும், மணிக் கணக்காகவோ, நாட்கணக்காகவோ விடுத்திருக்க முடிகிறது. பிறகு சந்தோஷமான நினைவுகளுடன் பிரபஞ்ச வாழ்க்கைக்குத் திரும்பி வர முடிகிறது.

## ஜீவனின் அநுபவங்கள்

ஆன்மா, ஸ்தூல தேகத்தினின்று பிரிந்தபிறகு என்னென்ன நிலையை யடைகிற தென்பதை நான் கூர்மையாகக் கவனித்து வந்தேன். முதலில் பூமிக்கடுத்த நிலையிலுள்ள சிதாமிசத்தைச சிறிது கஷ்டத்துடனேயே நுகர ஆரம்பித்தது. ஆனால் சில விநாடிகளுக்குள், மிகுந்த சுலபமாகவும், சந்தோஷமாகவும் இயற்கையின் சித்துத் தத்துவங்களை இழுக்கவும் வெளிவிடவும் அதற்குச சாத்தியமாயிற்று. பிரபஞ்ச வாழ்க்கையில் ஈடுபட்டிருந்தபோது அந்தப் பெண்மணிக்கு எந்தவிதமான தேக அமைப்புகள் அமைந்திருந் தனவோ, அதைவிட எல்லா அமிசங்களிலும் அழகுடைய தாயும் அபிவிருத்தி யடைந்ததாயுமுள்ள சூக்கும சரீரம் ஏற்பட்டிருப்பதை நான் இப்பொழுது கண்டேன். அதாவது மரணத்திற்கு முன்னிருந்தவைகளைப்போல் இப்பொழுது இதயம், வயிறு, ஜீரணப்பை, சுவாசப்பை முதலியன யாவும் காணப்பட்டன. இஃது யமான, ஆனல ஆறுதல் கககூடிய உண்மை !

அவனுடைய சூக்கும ல காணப்பட்ட ்களை அதாவது மாற்றங்கள், அவ்வளவு குறிப்பிடத் தக்கனவாகவோ, சமய இயல்பைக் கடக்கக் கூடிய விதமாகவோ இல்லை. மற்றும், அவை அவளுடைய இயற்கைத் தோற்றத்தையோ, உலக இயல்புகளையோ அடியோடு மாற்றவில்லை. அவள் பழையபடியே இருந்தாள். அவளுடைய நண்பர்கள் பார்த்

தால், நோய்வாய்ப்பட்ட ஒரு நண்பர் நம்மைவிட்டுப் பிரிந்துசென்று பிறகு தேகாரோக்கியத்துடன் திரும்பி வந்தால் நாம் எப்படி ஆச்சரியமும் சந்தோஷமும் அடைவோமோ அப்படியே, " ஓ ! இப்பொழுது நீ எவ்வளவு நன்முகக் காணப்படுகிருய் ! எவ்வளவு அபிவிருத்தி யடைந் திருக்கிருய் ?" என்று கூறுவார்கள். சூக்கும சரீரத்தில் காணப்பட்ட அபிவிருத்திகள் அவ்வளவு அழகுடையவைகளாக இருந்தன.

சூக்கும உலக வாழ்க்கைக்குரிய புதிய தத்துவங்களுக்கும், உயர்ந்த உணர்ச்சிகளுக்கும் அவள் தன்னைப் பழக்கப்படுத்திக் கொள்வதை நான் பார்த்தேன். புதிய விழிப்புப்பெற்ற, விரைவான விகாசத்தை அடைந்து கொண்டிருக்கிறதான அந்த ஆன்மாவின் உணர்ச்சிகளை நான் குறிப்பாகக் கவனிக்கவில்லை. ஆனல், ஸ்தூலசரீரத்திலிருந்து சூக்கும தேகத்திற்கு மாறுகிறபொழுது அவள் ஒரேவித நிதானத்தைப் படைத்திருந்தாள். பிரபஞ்சத்தைவிட்டு அவள் பிரிந்துசென்றதற்காக அவளுடைய குடும்பததினரின் ஓயாத புலம்பலில் அவள் கலந்துகொள்ளவில்லை. சில்விட்டுப் போன, உயிரற்ற ஓர் உருவத்தைக் கண்டே அவர்கள் அழுகிருர்கள் என்பதை அவள் ஒரே பார்வையில் கண்டுகொண்டாள். அவர்களுக்கு, மரணத்தைப் பற்றிய உண்மையான ஞானமின்மையினுலேயே, ஸ்தூல சரீரத்தின் பிரிவுக்காக வருந்துகிருர்கள் என்பதையுந் தெரிந்து கொண்டாள்.

மனித சமூகத்தைச்சேர்ந்த பெரும்பாலோர் மரணத்தைப்பற்றி மேற்போக்கான ஞானம் படைத்திருப்பதனுலேயே, நண்பர்களோ உறவினரோ ஸ்தூல தேகததினின்றும் பிரியும் போது அதிகமாக அழுகிருர்கள். இவர்கள, ஸ்தூல தேகத்தின் மரணம், ஜீவனின் அழிவு என்று கருதுகிருர்கள். ஒரு மனிதன் இயற்கையான மரணத்தை யடைந்தால், ஆன்மா எவ்விததுன்பத்தையும், அநுபவிப்பதில்லை யென்று உண்மை அறிய விழைவோர்க்கு நான் உறுதி கூறுகிறேன். அல்லது ஸ்தூல சரீரமானது, நோயினுல் அழிந்து போனுலோ, பிற காரணங்களால் குலைக்கப்பட்டாலோ, ஆன்மா உரு வழிவதில்லை; தெளிவற்றுப் போவதுமில்லை. உன் அன்பான பார்வைக்குப் பதிலளிக்க முடியாத உயிரற்ற பிணத்தைப் பாராமல், சூக்குமக் கண்கொண்டு நீ பார்த்தால், உன்னெதிரே அதே உருவம், முன்னிலும் அழகாக உயிருடனிருப்பதைக் காண்பாய். ஆதலின், ஆன்மாவானது, இந்தப் பிரபஞ்ச வாழ்க்கையினின்று விடுதலையடைந்து, சூக்கும உலகத்திற்குச் செல்வதைக் குறித்து நாம் மகிழ்ச்சியே யடைய வேண்டும். ஆன்மாவானது, தேகத்தை விட்டுப் பிரிந்து, இதைவிட உயர்ந்த சிறந்த உலகத்தில் வசிக்கச் செல்லும்போது நாம் அழுவதைக் காட்டிலும், உலகத்தில் நடைபெறும் பெரும்பான்மை விவாகங்களுக்காகவே நாம் அழவேண்டும்.

## ஜீவனின் பிரிவு

நான் பார்த்த மாற்றம் ஏற்படுவதற்கு, அதாவது ஸ்தூல தேகத்தினின்று ஜீவன் பிரிந்து சூக்கும தேகத்தை யடைவதற்கு இரண்டரை மணிநேரம் ஆயிற்று. ஸ்தூல சிரசி

னின்று மேலெழுந்து தன்னைப் புனர் நிர்மாணஞ் செய்துகொள்ள ஒவ்வோர் ஜீவனுக்கும் இரண்டரை மணி நேரமே பிடிக்கிறதென்று சொல்ல முடியாது. மேற்படி ஸ்திரீயின் ஸ்தூல தேகத்தினின்று பிரிந்த ஜீவனானது, தன்னைச் சூழ்ந்துள்ள புதிய தத்துவங்களுக்குப் பழக்கமானதும், தனது மனோசக்தியால் தேகத்தின் மேலிருந்த உயர்நிலையிலிருந்து இறங்கி, அந்த ஸ்திரீ நோயுடன் படுத்துக்கொண்டிருந்த படுக்கை யறையினின்று வெளியே சென்றது. அப்பொழுது கோடைகாலமானதால் எல்லாக் கதவுகளும் திறக்கப்பட்டிருந்தன. அதனால், அந்த ஆன்மா வெளியேறுவதற்கு எவ்வித தடையும் உண்டாகவில்லை. ஸ்தூல தேகத்தில் நாம் எந்தக் காற்றை மூச்சு விடுகிறோமோ, அந்தக் காற்றை சூக்கும சரீரத்தினால் சுலபமாகக் கடந்து விடலாமென்ற உண்மையை அப்பொழுதே நான் முதலில் கண்டேன். ஸ்தூல சரீரத்தி லிருந்துகொண்டு நாம் இந்தப் பூமியை எப்படிக் கடந்து செல்கிறோமோ அப்படியே மேற்படி ஜீவனானது ஆகாயத்தைக் கடந்து சென்றது. வீட்டினின்று வெளியேறியதும், இந்த ஆன்மாவை, சூட்சும உலகத்திலிருந்துவந்த வேறு இரண்டு ஆன்மாக்கள் சந்தித்தன. ஒன்றுக்கொன்று சிறிதுநேரம் அளவளாவியதும், மூன்றும் ஒன்று சேர்ந்து பிரபஞ்சத்தைச் சூழ்ந்திருக்கும் பரமாணு வாகாயத்தின் மூலமாகச் சாய்வாய் மேலேறிச் சென்றன. அவை மூன்றும் இயற்கை யாகவும், சகோதரப் பான்மையுடனும் ஆகாயத்தைக் கடந்தன. ஒரு மலையின் சாரலில் அவை நடந்து செல்வதுபோலவே எனக்குத் தோன்றியது. அவை தொலைதூரம் செல்லும்வரை நான் பார்த்தேன். பிறகு என்னுடைய ஜாக்கிரதா நிலைக்கு நான் வந்துவிட்டேன்.

## சான்றோர்க்கணி

[அ. வரதநஞ்சைய பிள்ளை]

இத்தலைத் தொடர் மொழியில், சான்றோராவார் யாவர்? அவர்க்கு அணியாவது யாது? அஃதெவ்வாறு? எனக் கேள்விகளை எழுப்பி முறைப்பட ஆய்ந்து உண்மை காண்பாம்.

இச் சொற்றொடர், ஆசிரியர் வள்ளுவனரால் இல்லற வியலில், நடுவு நிலைமை என்னும் அதிகாரத்தின் கண்ணே,

"கேடும் பெருக்கமு மில்லலல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி"

எனவும்,

"சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ
[லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி"

எனவும், வருஞ்செய்யுட்களின் இறுதியிற் கூறப்பெற்றதாம். சான்றோர் சால்புடையோர் சால்பு என்னும் பண்பு நற்குணங்கள் எல்லாம் ஒருங்கு நிரம்பி யமைதலை உணர்த்தும். ஆகவே எல்லா நற்குணங்களும் குறைவின்றி முற்ற நிரம்பிய தூயோராய நல்லோரே சான்றோரெனப் பெறுவர்.

சால்பு என்பதன் தன்மைகளைக் கூற வந்த விடத்தே நம் செந்நாப்போதார்,

" கடனென்ப நல்லவை யெல்லாம் கடனறி
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு" [ந்து

எனப் பொது வகையாற் கூறிப் பின் னர் சிறப்பு வகையாக,

" அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் [வாய்மையோ
டைந்து சால்பூன்றிய தூண் "

" .....பிறர்தீமை சொல்லா நலத்தது சால்பு"

" ஆற்றுவா ராற்றல் பணிதலது சான்றோர்
மாற்றாரை மாற்றும் படை"

" சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி
துலையல்லார் கண்ணுங் கொளல் "

"இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு "

என மொழிந்து விதந்தனர். இவ்வாற் றால், சான்றோர்பால் காணப்படும் சிறப்புச் செயல்களாவன :—

யாவரிடத்தும் மனங்கசிந்த அன்பு பெருக்கலும், தீயசெய்ய நாணலும், பிறர்பாற் கைம்மாறு கருதாது இயன் றஉதவிகளை நாளும் புரிதலும் மன இரக்கம் மிக்குடைத்தாதலும், உண் மையே பேசுதலும் * பிறர் தீமையை வெளியிடாமையும், ஒரு நற்கா யத்தை முற்றுவிக்கும் போது யாவரையும் தாழ்மையுடன் வேண்டித் துணைக் கோடலும், தம்மின் மிக இழிந்தோர்க் கும் தம்மைக் குறைந்தவராகக் காட் டிக் கோடலும், தமக்குத் துன்பம் புரிவோர்க்கும் மாறாக நன்மையே செய்தலும், இவைபோன்ற பிறசெயல் களுமாம் எனப்பெறுதும்.

* பிறர் தீமையை வெளியிடின் எத முறுவரே என்றும், அவரதியல்பு அஃ தெனின் இழிவு கூறல் தகாதே என்றும் அஞ்சுதலால்.

உலக முய்வதற் கெனவே தோன் றித் தமக்கென வாழாப் பிறர்க்குரி யாளர்களாகிய இச்சான்றோர் விரும் பும் அணிகலன்கள் இரண்டு என மேற்றலைப்பிற் கண்டாம். அவற்றுள் ஒன்று, துன்பமோ இன்பமோ தொடருமபோழ்து ஒரே பெற்றிப் பட்டு உள்ளம் சிறிதும் மாறாது செந் நெறி கடைப்பிடித்து ஒழுகுவது. மற்றொன்று, இருவர் வாதிகள் கூற் றுக்களையும் நன்கு கேட்டு நீதியை உள்ளவா றுரைத்தல். இவ்விரண்டு அணிகளும், உள்ளங் கோடாமையை யே குறிப்பதாகலின், ஆசிரியர் கூறி யது கூறல் எற்றுக்கு? என்பது முதல் வினா?

நெஞ்சத்துக் கோடாமையை முன் னும், ஒருபாற் கோடாமையைப் பின் னும் வைத்ததேன்? என்பது இரண் டாம் வினா.

இவ்விரு குறள்களுக்கு மிடையே யுள்ள வேறு, இரண்டு குறள்கள் "ஊழுடையோன் கேடடைவான்" என்றும், நடுநிலைமை யுடையோர் ஒரு கால் பண்டை வினைப்பயத்தாற் கேட டைய நேரினும், அக்கேடும், உயர்ந் தோரால் பெருஞ் செல்வமெனவே கருதப்பட்டு நன்குமதிப்பப விளைப்ப தாகு மென்றும் முறையே கூறுகின் றன. இவை கொண்டு, கேடும் ஆக்க மும் முன் பிறவி வினைப் பயனாக நியதி கூட்டவரு மென்னும் உண்மை கண்டு நடுநிலைமையி னீங்காதொழுக வேண்டுமென ஆசிரியர் குறித்தன ரென்பர் ஒரு சாரார்.

அங்ஙனம் நடுவுடையோர், இரு வாதிகளின் வழக்கையுங் கேட்டு நீதி புகல்பவ ரன்றே. அற்றாகவும் ஒரு பாற் கோடாமை வேண்டு மென மறித்துங் கூறிய தென்னை? எனின், முற்கூறியது அவரது நெஞ்சத் திட்பச் செம்மை. பின்னது, உரைக்கும் சொன்னிலை குறித்தது என்பர். நன்று, சமன் செய்து சீர் தூக்குந் துலாக்கோல் எதற்குவமம்? எனின் ஒருபாற் கோடாத உள்ளத் திற்கே ஒப்பாவது என மொழிவர். அங்ஙனமாயின், முற்கூறியதும் நெஞ்சு கோடாமையையே யன்றோ? அதனோ டிதனிடை வேற்றுமை காணுமாறில் லையே எனின் முற்கூறி யாங்கே கூறி ஒழிப்பர். ஆதலின், முதற் குறட்கு நுண்ணிய விழுப்பொருள் வேறுளதா கல் வேண்டுமெனக்கருதற்கிடனுண்டு. அஃதாமாறு கூறுதும்:

யாவரும் தமமிடத் துள்ளவற்றை விட்டு இல்லாத பொருள்களையே ஈட் டுவ தியற்கை. அவ்வாறே பிறவியியல் பாக நாம்பிறக்கும் அந்நாளேஏற்பட்டு, அநுபவித்தன்றி வேறெவ் வகையா னும் மாற்றிப் போக்கற் கியலாத வண் ணம் அமைந்துள்ள கேடும் பெருக்க மும் குறித்து அஞ்சுதலும் அகமகிழ் தலும், கேட்டை மாற்றி ஆக்கத் தையே விளைப்போமென முயற்சித்த லும் பயனில் செயலே யாமென வுண்மை தேறி, அவ்வக்காலங்களிற் றத்தங் கடப்பாடுகளை ஒழுங்குறப் புரிந்து செல்லத் துணிவுறும் செப்ப மும் திட்பமுமுடைய மன அமைதி யொன்றே நம்பாலிதுகாறுமில்லாதது. ஆகலின் அதனையே தேடற்குப் பல் லாற்றானு முயற்சிப்பா மெனக் கருது தலே சான்றோர்க்கணியாம் எனக் கூறினர் என்க.

இம்மைக்கும் மறுமைக்கும் ஏற்ற பெரும்பயன் இவ்வுள்ளச் செம்மை ஒன்றாலேயே விளையுமாகலின் இஃது முதலில் வைத்தோதப்பட்டது.

சான்றோ ரியல்பு ஈதேயாம் எனப் பெரியபுராணத்தில் அருண்மொழித் தேவரும் அடியார் பெருமை கூறு மிடத்தில், "கேடும் செல்வமும்கெட்ட திருவினார்" எனவும், பிரபுலிங்கலீலை ஆசிரியரும்,

'கேடும் செல்வமும் கீர்த்தியும் நிந்தையும்
வேறற நோக்குதல்..................
கூடுந்தன்மை கொளுமனம் நன்மனம்'

என்றுங் கூறிப்போந்தனர்.

சைவ சித்தாந்தத்தில் இருவினை ஒப்பு எனக் கூறப்படும் சிறந்த பக்கு வமு மிஃதே. இவ் விருவினையொப்பு உண்டாய வழியே மலபரிபாகம், சத் திநிபாதம் முதலிய வீடுபேற்றிற்கு முன் றோன்றும் காரண காரியங்கள் ஒருதலையா னெய்துவன. ஆசிரியர் கருத்திதுவா யின்மையானே, ஒரு பாற் கோடாது வழக்குரைக்கும் அவ ரதுலக ஒழுக்கம் பிற்கூறப்பட்டது.

துறவற நெறிக்குரிய இருவினை ஒப் புத் தன்மையை நடுவுநிலைமை கூறும் இல்லற வியலில் ஓதியது சாலாதெ னின், நன்று சொன்னாய்! 'ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல்' என் னும் உத்திகொண்டு ஆசிரியர் அங்ங னங் கூறுதல் இயல்பென்க. இங் ஙனமே,

"ஒருமையு ளாமைபோல் ஐந்தடக்க லாற்றின்
எழுமையு மேமாப் புடைத்து"

எனவும்,

"நிலையிற் றிரியா தடங்கியான் றோற்றம்
மலையினு மாணப் பெரிது"

என்றும், துறவுக்குரிய ஐந்தவித்

தொழுகு முறையினையும் அடக்க முடைமை அதிகாரப்பட்ட வழி இல்லற வியலில் வைத்தோதிய தூஉங் காண்க.

முறைப்பட இல்லற நெறியில் வழாதொழுகுவோர்க்கே துறவு நெறியும் கைவந்து பயன் பெறுதல் கூடுமென்க.

“காமஞ் சான்ற கடைக்கோட் காலை......
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே”

என்ற தொல்காப்பியனார்க்கு மிஃதே கருத்தாதலாலு மறிக. ஆதலின், இல்லற நெறிக்கே யுரித்தெனவரையறை செய்யப் படாதவாய்த் துறவு நெறிக்கும் பயன் படும் பொதுவாய அறங்கள், இவ் விரண்டையும் தனித் தனிக் கூறும் இயல்களுள் அமயம் நேர்ந்துழி எவ்விடத்தேனுங் கூறுதற் குரியவெனக் கண்டோம். இனி இதில் ஐயுறவில்லை. இவ்வாறு கேடும் பெருக்கமும் ஒரு நிகரனவென வுண்மை கண்டோருள்ளம் என்றும் துன்பங்காணாது இன்பத்தையே துய்க்குமாற்றால் அவர்க்கும் கேடு ஒரு குறைவாகத் தோன்றாது. உயர்ந்தோரும் அவரது தகுதியின் மேன்மையை நன்குணர்ந்து நன்கு மதிப்பார்களாதலின் பிறர்க்கும் இழிவுகாட்டாது பெருமை பேறுகவே முடியும். நடுவு நிலைமையிற் றிறம்பி ஆக்கம்பெறற்கு முயல்வார்க்குஊழின் உதவி யில்வழி அது கூடாமையே யன்றி அத்தீய பண்பால் கேடும் வருவிக்கப் படுதல் ஒருதலையே யாகலின் நல்லோர்க்கும் அல்லோர்க்கும் நடுவு நிலைமை விழுமிய பயனை வருவிக்குமெனத் தெரிவித்தற்கே,

“கெடுவல் யான் என்பதறிக......”

“கெடுவாக வையாது லகம்......”

என்னும் இரு குறட்களையும் இடைப்பெய்தமைத்ததென்க.

உண்மை இவ்வாறாதலின் இல்லறம் பற்றி ஒழுகுந் தலைமைப் பாடுடையோர், இருவர் வாதிகளின் வழக்கினும் நீதி தேர்ந்துண்மை கூறுக. பரிதண முதலியன வேட்டோ அன்றித் தமர் தம் நண்பர்க்கு நண்பர், தமக்கு வேண்டியோரால் கண்ணோட்ட முடையர் எனப் பல காரணங்களில் ஒன்று கொண்டே, வழக்கல்லா வழக்கை யுரைத்தல் அடாது எனக் கூறியது “சமன் செய்து” என்னுங் குறளென்க.

இதுகாறுங் கூறிப்போந்த வாற்றால் நற்குணங்களெல்லாம் நிரம்பிய சான்றோர்க்கு அழகும் மதிப்புந் தரும் பேரணிகள் இரண்டுள. ஒன்று இருவினைப்பயனாகத் துன்ப இன்பங்கள் முன் அமைத்தபடி எய்துவன வெனப் புறக்கணித்து அவற்றைக் குறித்துத் துன்புறலும் இன்பமடைதலுமிலராய் ஒரு நிலைமைப் பட்ட உள்ளத்தினராதல், மற்றொன்று, உலகியல்புகளில், கோடி கொடுப்பினும் தம்முடைய நாக்கோடாமல் உண்மை ஓதி வழக்குத் தீர்த்தல் என்றும், இவ்வாறன்றி ஓரங் கூறிப் பொருளீட்டுவானேல் அத்தீவினை தீய பயந்தே விடுமாகலின் தப்பாது கேடு தருதலானும், ஒருகால் நடு நிலைமையுடையார்க்கும் கேடு வருமே எனின் அது கேடாக அவரும் கொள்ளார். உயர்ந்தோரும் இகழாது செல்வத்தோடொக்கு மென மதிப்பர் ஆகலானும் இல்லற துறவறங்கட்குப் பொதுப்பட நிற்கும் நடுவு நிலைமையின் முன்னோதிய அணி சாலச் சிறப்புடையதென்றும், பின்னது இல்லறப்பாங்கிற் குரித்தாய் மறுமைக்கும் பயன்றரும் காரணமாய் அமைவதா மென்றும் அறிகின்றாம்.

# திருவிழாவில் சமயபோதனை

1. திருநாவுக்கரசு சுவாமிகள் திருவவதாரத் தலமாகிய திருவாமூரில் சித்திரைச் சதயத்தன்று ஒரு பெருங் கூட்டம் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்கள் தலைமையில் கூடிற்று. சமாஜக் காரியதரிசியும், திரு. ச. சச்சிதாநந்தம் பிள்ளையவர்களும் அப்பர் சுவாமிகள் சரித்திரம், தேவாரம் முதலியவற்றைப்பற்றிச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினர். அப்பர் சுவாமிகள் தேவாரம் சமாஜத்தின் புதிய சுத்தப்பதிப்பு ஊர்வலமாகக் கொண்டுவரப்பட்டு வெளியிடப்பட்டது.

2. காஞ்சிபுரம் என வழங்கும் திருக்கச்சியேகம்பத்தில் நடைபெற்ற பிரஹ்மோத்ஸவத்தில் நமது சமாஜத்தின் சாரபில் ஏழாந்திருநாள் ஒன்பதாந்திருநாள் ஆகிய இரண்டு நாட்களிலும் முறையே "சேக்கிழார் கவிநயம்" "பதிபுண்ணியம்" எனும் பொருள்கள்பற்றி சமாஜத்து வெளியூா நிர்வாக சபையினருள் ஒருவராகிய காவித்தண்டலம் - சைவத்திருவாளர் வேதாசல முதலியாரவர்கள் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள்.

3. கூவம் என வழங்கும் திருவிற்கோலத்தில் நடைபெற்ற திருவிழாவில் நான்காம் நாள் ஐந்தாம் நாள் (4, 5-5-30) உத்ஸவங்களில் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள் தலைமையில் சமாஜக் காரியதரிசியார், திரு. பா. கந்தநரசிம்ஹம், திரு. கே. வைத்தியநாத முதலியார், திரு. அ. முத்துச்சாமி முதலியார், திரு. விஜய சுந்தசாமி முதலியார், திரு. சு. வை. துரைசாமி முதலியார், திரு. சு. ரா. அண்ணாமலை முதலியாரவர்கள் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள். சமாஜத்தின் கிளைச்சபை யொன்று தாபிக்கப்பட்டது.

---

# அப்பர் சுவாமிகள் தேவாரம்

## சமாஜத்தின் சுத்தப்பதிப்பு வெளிவந்து விட்டது

பிரதி ஒன்றின் விலை அணா பத்து

ஐம்பது பிரதிகட்குக் குறையாமல் முன் பணம் கொடுத்து வாங்குவோருக்கு ரூபாய் ஒன்றுக்கு இரண்டணா வீதம் கழிவு தரப்படும். வி. பி.யில் பிரதிகளை அனுப்ப இயலாது. புத்தகங்களைப் பெற விரும்புவோர் புத்தகக் கிரயம், தபாற்கூலி, ரிஜிஸ்தர் செலவு, பார்சல் செலவு முதலியவற்றிற்குத் தேவையான தொகையைக் கீழ்க்குறித்த வண்ணம் முன் பணமாகவே அனுப்ப வேண்டும்.

கிரயம், தபாற்கூலி, ரிஜிஸ்தர், பார்சல் செலவுள்பட

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| ஒரு புத்தகம் பெறுவதற்கு ரூபா | 1—0—0 | | | 5 புத்தகங்கள் பெறுவதற்கு ரூபா | 4 | 4 | 0 |
| 2 புத்தகங்கள் ,, ,, | 1 | 13 | 0 | 10 புத்தகங்கள் ,, ,, | 8 | 2 | 0 |

பத்து புத்தகங்கட்குமேலாயின் ரயில்வே பார்சலாகப் பெற்றுக்கொள்வதுதான் இலகுவான வழியாகும்.

இங்ஙனம் :

150, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு,
சென்னை.
10—5—1930

ம. பாலசுப்ரஹ்மண்யம், காரியதரிசி.
சைவ சித்தாந்த மகா சமாஜம்.

---

சைவ சித்தாந்த மகா சமாஜத்தில்

## விற்பனைக்குரிய புத்தகங்களின் அட்டவணை

| | ரூ. | அ. |
|---|---|---|
| "சித்தாந்தம்" மலர் ஒன்று (பைண்டு பிரதி) ... | 2 | 0 |
| "சித்தாந்தம்" மலர் இரண்டு (பைண்டு பிரதி) ... | 2 | 0 |
| சுந்தரர் தேவாரம் ... ... | 0 | 4 |
| அப்பர் தேவாரம் ... ... | 0 | 10 |
| திருவாசகம் (கலிக்கா) ... ... | 0 | 4 |
| திருக்குறள் விளக்கம் - அறத்துப்பால். | 3 | 4 |
| ௸ பொருட்பால். | 4 | 8 |
| ௸ காமத்துப்பால். | 1 | 12 |
| ௸ தொகுப்புரை. | 0 | 8 |
| புலால்மறுத்தலுக்கு 50 காரணங்கள்... | 0 | 2 |
| சர்வமத சம்மதம் ... ... | 0 | 2 |
| திருநாளைப்போவார் தீக்குளித்ததேன். | 0 | 2 |
| நள்ளிரவில் நகர்க்காட்சி ... | 0 | 2 |
| கடவுள் ... ... | 0 | 2 |
| பண்மயத்த மொழிப்பாவை ... | 0 | 2 |
| சமயத்தின் சாரம் ... ... | 0 | 2 |
| சமய வளர்ச்சி ... ... | 0 | 2 |
| சுயமரியாதை சம்பாஷணை ... | 0 | 2 |
| திருஞானசம்பந்தர் (நாடகம்) ... | 0 | 8 |
| சைவப் பெரியார் தனிக்கூட்டத் தீர்மானங்கள் ... ... | 0 | 2 |
| சங்க நூல்களும் சைவமும் ... | 0 | 2 |
| சைவர் மகாநாடு, திருப்பாதிரிப்புலியூர். | 0 | 8 |
| அறுசமயப் பகுதி ... ... | 0 | 2 |
| அறுபத்துமூன்று நாயன்மார் சரித்திர உண்மை ... ... | 0 | 4 |
| சிவஞானபோதம் ... ... | 0 | 2 |
| அஷ்டப்பிரகரணம் ... ... | 3 | 0 |
| சிவார்ச்சனு சந்திரிகை ... ... | 1 | 8 |
| சைவபூஷணம் ... ... | 1 | 0 |
| சைவ சித்தாந்த பரிபாஷை ... | 0 | 8 |
| சிவஞான சித்தியார் மூலமும் பொழிப்புரையும் ... ... | 2 | 8 |
| சிவஞான போதச் சிற்றுரை விளக்கம் | 3 | 8 |
| சர்வஞானோத்தரம் ... ... | 1 | 8 |
| தசகாரிய விளக்கம் ... ... | 0 | 8 |
| The Grace of Lord Siva (ஆங்கிலத்தில்) ... ... | 0 | 4 |
| திருக்குறட் சாரம் ... ... | 0 | 8 |
| ௸ (கலிக்கோ) ... | 0 | 10 |
| ஆசார ஒழுக்கமுறை ... ... | 0 | 4 |
| சிவார்ச்சனைத் திருமந்திரம் ... | 0 | 1½ |

சுந்தரர் தேவாரம் மொத்தமாக வாங்குவோர்க்கு ரூபாய் ஒன்றுக்கு ஐந்து பிரதிகள் வீதம் கொடுக்கப்படும். மேற்கண்ட விலைகள் புத்தகக் கிரயம் மட்டுந்தான். தபாற்கூலி வேறு. பார்சல் செலவு, தபாற்கூலி, வி. பி. செலவு முதலியன வாங்குவோரே செலுத்தவேண்டும்.

மேலேகண்ட அட்டவணையிலுள்ள புத்தகங்கள் தேவையாயின், சமாஜ ஆண்டுவிழா முதலிய கூட்டங்கள் நடக்குமிடங்களிலும் பெறலாம்; கீழ்வரும் விலாசத்துக்கு முன்பணம் அனுப்பியும் பெற்றுக்கொள்ளலாம்.

ம. பாலசுப்ரஹ்மண்ய முதலியார், காரியதரிசி.
சைவ சித்தாந்த மகா சமாஜம்,
150, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை.

Printed at the Sadhu Press, 12, Ganapathi Mudali Street, Royapettah and Published by M. Balasubramania Mudaliar (Editor-in-charge) for the Saiva Siddhanta Maha Samajam, 150, Govindappa Naicken Street, G. T. Madras.

Registered No. M. 2330.

" SIDDHANTHAM "
Vol. 3—No. 5, 6.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

சைவசித்தாந்த மகாசமாஜத் திங்கள் வெளியீடு

" எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே "

| மலர் ௩ | பிரமோதூத ஆண்டு வைகாசி ஆனித் திங்கள்<br>1930ஸு மே ஜூன்மீ | இதழ் ௫,௬ |
|---|---|---|

உள்ளுறை



ஆசிரியர் :—ம. பாலசுப்ரஹ்மண்ய முதலியார், B. A., B. L., M. L. C.
உதவி ஆசிரியர் :—கி. குப்புச்சாமி முதலியார்

சைவ சித்தாந்த மகாசமாஜம்,
150, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை.

ஆண்டுச் சந்தா ரூ. 1-8-0. 1930 வெளி நாட்டுக்கு ரூ. 2-0-0.

தனிப் பிரதி அணா 3.

# ஆலங்குடியில் சமாஜத்திய விசேஷ மகாநாடு

திருவிரும்பூளை என்று தேவாரத்தில் பாடல் பெற்றுள்ள ஆலங்குடியில் 1930ஞு ஜூன்மீ 1உ ஞாயிற்றுக்கிழமை (பிரமோதூதஞு வைகாசிமீ கஙஉ) மஹாகும்பாபிஷேகம் நடைபெறும். அதையொட்டி சைவசித்தாந்த மகாசமாஜத்தின் விசேஷ மகாநாடு ஒன்று **பண்டிதமணி. சைவத்திருவாளர் – மு. கதிரேசன் செட்டியார் அவர்கள்** தலைமையில் ஜூன்மீ 1உ முதல் மூன்று நாட்கள் வரை நடைபெறும். சைவசமய வளர்ச்சிக்குரிய பல அரிய தீர்மானங்கள் நிறைவேறுவதோடு பல பேரறிஞர்களின சொற்பொழிவுகளும் நடைபெறும். நமது சமாஜத்தோடு இணைக்கப்பட்ட சபைகள் பல பிரதிநிதிகளை யனுப்புவதோடு செயல் முறைத்திட்டங்களையும் தீர்மானங்களாக எழுதி முன்னதாகவே அனுப்பவேண்டும். நமது சமாஜ அங்கத்தினர் தவறாமல் தாங்கள் வருவதோடு அமையாது பல நண்பர்களையும் சைவப் பற்றுடைய அன்பர்களையும் அழைத்து வருதல்வேண்டும்.

சென்னை,
10-5-1930.

இங்ஙனம் :
ம. பாலசுப்ரஹ்மண்யம், காரியதரிசி.

குறிப்பு :—ஆலங்குடி என்பது நீடாமங்கலம் ஸ்டேஷனிலிருந்து 5 மைல் தூரத்திலும் கும்பகோணம் ஸ்டேஷனிலிருந்து 10 மைல் தூரத்திலும் மோட்டார் போகும் பாதையிலுள்ளது.

## சமாஜத்தின் போஷக உறுப்பினர்

அப்பர் தேவார வெளியீட்டுக்காக நூறு ரூபாய் நன்கொடையாக அளித்த தென்ஆற்காடு உதவி மெடிகல் ஆபீசர் **சைவத்திருவாளர் டாக்டர். எஸ். பாலவேலாயுதம் பிள்ளையவர்களையும்**, திருவிடைமருதூரில் சைவ இளைஞர் மகாநாட்டைத் தமது சொந்தச் செலவில் நடத்திவைத்த **சைவத்திருவாளர் தி. நா. போ. குப்புச்சாமி பிள்ளையவர்களையும்** நமது சமாஜத்துப் போஷக உறுப்பினர்களாகப் பதிவு செய்துகொண்டதை மிக மகிழ்ச்சியோடு தெரிவிக்கிறோம்.

## சமாஜ அறிக்கை

கோடை விடுமுறைக்காக 1930ஞு மேமீ 10உ முதல் 1930ஞு ஜூலைமீ 10உ வரை சமாஜ ஆபீசு மூடப்படும். சமாஜக்காரியதரிசிக்கு எழுதப்படும் கடிதங்களுக்குப் பதிலெழுதலும், பத்திரிகை, புத்தகம் அனுப்புதல் முதலியனவும் ஜூலைமீ 10உக்குமேல் நடைபெறும்.

150, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு,
10—5—1930

இங்ஙனம் :
ம. பாலசுப்ரஹ்மண்யம்
காரியதரிசி,
**சைவ சித்தாந்த மகா சமாஜம்.**

சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

" ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானதந் வாணியை உள்நாடு "

| மலர் ௩ | பிரமோதூத ஆண்டு வைகாசி ஆனித் திங்கள் 1930 ஆம் மே ஜூன் மீ | இதழ் ௫, ௬ |
| --- | --- | --- |

## இரண்டு அரிய நிகழ்ச்சிகள்

[பத்திராசிரியர்]

பிரமோதூத ஆண்டு பிறந்தவுடன் முதல் திங்களிலேயே நமது சமாஜத்தின் சார்பாக இரண்டு அரிய நிகழ்ச்சிகளைப் பாராட்டாதார் சைவருள் ஒருவருமிலர். இவற்றுள் ஒன்று திருவிடை மருதூரில் நடந்த சைவ இளைஞர் மகாநாடு, மற்றொன்று திருவாமூரில் நடைபெற்ற அப்பர் சுவாமிகள் தேவார வெளியீடு.

இளைஞர் இயக்கம் அரசியல், சமூகப்பணி முதலிய பல துறைகளிலும் செழித்து ஆங்காங்கு பல மகாநாடுகள் நடப்பதை நாம் கண்டதுண்டு. ஆனால் இதுகாறும் இளைஞர்கள் சமயத் துறையிலே ஒரு மகாநாடு நடத்தியதை நாம் கண்டதில்லை. சிறப்பாக "உறங்க வேண்டாம், விழியுங்கள், எழுங்கள்" என்று சமய வல்லுநர் இடித்துக் கூறும் சைவமக்களிடையே சைவ இளைஞர் மகாநாடு ஒன்று மிகச் சிறப்பாகவும் செம்மையாகவும் நடந்தது குறித்து நாம் பெரு மகிழ்ச்சியடைகின்றோம்.

இம்மகா நாட்டிலே நிறைவேறிய தீர்மானங்களும் மிக நல்ல முறையிலே அமைந்திருப்பது போற்றத்தக்கதே. இளங் கன்று பயமறியாது என்று கூறுவது உலகவழக்கு. ஆனால் சைவ இளைஞர்கள் தங்கள் கடமைகளையும் உரிமைகளையும் நன்கு உணர்ந்தவர்களாய் பெரும்பான்மை தாங்கள் முன்னின்று செய்யக் கூடியவை இன்னின்னவென்றும் தங்கள்கூட்டுறவு மிருந்தால் நமது சமாஜம் இன்னின்னபணிகளைச் செம்மையாகச்செய்தல் கூடும் என்றும் தங்கள் தீர்மானங்கள் வாயிலாக நமக்கு விளக்கியுள்ளார்கள். நமதுநாட்டிலே பெரும்பாலும் கடமைகளை மறந்து உரிமைகளை மட்டும் வற்புறுத்துவது வழக்கம். ஆனால்

நமது சைவஇளைஞர்களோ தங்கள் கடமைகளை மிகச்செவ்வையாக உணர்ந்து அவைகளை ஞாபகத்திலிருத்தித் தங்கள் தீர்மானங்களைச் செப்பஞ் செய்து நிறைவேற்றிய முறை முதியோருக்கும் ஒரு பாடத்தைக் கற்பிப்பதாயிற்று.

சைவ இளைஞர்கள் உறங்காது விழித்தெழுந்து முதியோர்களுடன் கலந்து வேலை செய்ய முன்வந்தமைக்கு அவர்கள்பால் என்ஞான்றும் நாம் நன்றியுடையவர்களா யிருக்கின்றோம்.

மேற்கூறிய தகுதிவாய்ந்த இளைஞர் பலரில் எமது நட்புக்குரிய சிலரின் கூட்டுறவே திருவாமூரில் அப்பர் சுவாமிகள் தேவார வெளியீட்டையும் மிகச் செவ்வையாகத் திருவருளின் துணைகொண்டு நடத்தி வைத்தது. சென்ற ஆடிமீ சுவாதியில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம் சமாஜத்தின் பதிப்பு வெளியிடப்பட்டது. அப்பர் சுவாமிகள் திருநக்ஷத்திரமாகிய சித்திரை சதயத் திருநாளில் சுவாமிகள் அவதரித்த தலமாகிய திருவாமூரில் சுவாமிகள் தேவாரத்தின் சமாஜ சுத்தப்பதிப்பு வெளியிடப்பட்டது. ஒரு பெரிய மகாநாட்டுக்கு எவ்வளவு மிகுதியாக அன்பர்கள் திரண்டு வருவார்களோ அதற்கும் அதிகமான தொகையினர் அக்கூட்டத்துக்கு வந்திருந்தது சைவ உலகத்தினர் அப்பர் சுவாமிகளை எத்துணை மிகுதியாகப் பாராட்டி வருகின்றனர் என்பதையும் நமது சமாஜ வெளியீட்டினை எத்துணை ஆவலுடன் எதிர் பார்த்திருந்தனர் என்பதையும் ஒருங்கே விளக்குவதாயிற்று. சில செல்வர்களைக்கொண்டு திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் தேவாரத்தை அச்சிடு வதற்குரிய ஏற்பாடுகளும் நடைபெற்றன. விரைவில் அத்தேவாரமும் நமது சமாஜத்தின் சுத்தப்பதிப்பாக வெளிவரும் என்பதில் ஐயமில்லை.

இனி எதிர்காலத்தை நோக்குழி நமக்கு மீண்டும் மகிழ்ச்சியே உண்டாகிறது. திருவையாறு சப்தஸ்தான உத்ஸவத்தைப்போல் எவ்வகையிலும் தலை சிறந்து விளங்கும் உத்ஸவத்தை நாம் எங்கணும் கண்டதில்லை. அவ்வுத்ஸவத்தில் ஏழு திருப்பதிகளிலும் நமது சமாஜத்தின் சார்பாக சமயப் பணி செய்வதற்குத் திருவாளர்கள் த. வே. உமாமஹேசுவரம் பிள்ளை யவர்களும், ச. சச்சிதாநந்த பிள்ளை யவர்களும் ஏற்பாடு செய்துள்ளார்கள். பெருந்திரளாக மக்கள் கூடுகின்ற உத்ஸவ காலங்களில் சமயப்பணி நடத்த வேண்டுமென்று அவாவும் சமாஜத்துக்குத் துணை நின்று இப்பெரியார்கள் இத்தகைய ஏற்பாடுகளைச்செய்துள்ளது அனைவர் உள்ளத்தையும் கவர்கின்றது.

இது மட்டுமல்ல. ஆலங்குடியில் நடக்கும் கும்பாபிஷேக காலத்தில் பண்டித மணி - சைவத்திருவாளர் - மு. கதிரேசஞ் செட்டியார் அவர்கள் தலைமையில் நமது சமாஜவிசேஷ மகாநாடு மிகச் சிறப்பாக 1930ளு ஜூன் மீ 1, 2, 3-ம் தேதிகளில் நடைபெறும். அதுபோது வழக்கம்போல் பல அரிய சொற்பொழிவுகள் நடப்பதுடன் சமயப்பணி விவரங்கள் திட்டங்கள் பலவும் தீர்மானிக்கப்படும்.

எல்லாவற்றையும் உடனிருந்து மிகச் செம்மையாக நடத்திச் சைவ வான் பயிரைத் தழைத்தோங்கச் செய்யும் இறைவன் திருவருளை வழுத்துகின்றோம்.

# சைவ இளைஞர் மகாநாடு

[தி. கு. கி. நாராயணசாமி]

இம்மகாநாடு மிகச்சிறப்பாக 1930-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 18-ந் தேதி வெள்ளிக்கிழமை காலை 9-மணி முதல் மாலை 7-30 மணிவரை நடந்தது. மகாநாட்டைத் திறக்கவந்த மந்திரியார் அவர்களும் தலைமை வகிக்க வந்த திரு-கா. சுப்பிரமணியம் பிள்ளையவர்களும் ஊர்வலமாக அழைத்து வரப்பட்டனர்.

கடவுள் வணக்கம் முடிந்தவுடன் சமாஜக் காரியதரிசியார் சுகாதார மந்திரியார் திரு-எஸ். முத்தையா முதலியார் அவர்களை இம்மகா நாட்டைத் திறந்துவைக்கும்படி வேண்டிக்கொண்டனர். அவ்வாறு வேண்டுங்கால் எக்காலத்திலும் அரசாங்கத்தைச் சேர்ந்த மந்திரிப் பிரதானிகள் எந்த இயக்கங்களை ஆதரித்து எந்தமுறையில் ஒழுகுகின்றார்களோ அஃதேபோல் பொது மக்களும் ஒழுகுவது இயல்பென்றும், ஆகையால் தற்காலத்து மந்திரிமார்களும் எல்லா இயக்கங்களிலும் கலந்து கொள்ளாமல் புரை தீர்ந்த நன்மை பயக்கும் இயக்கங்களையே ஆதரிக்க வேண்டு மென்றும் இன்றேல் தமிழர் நாரிகமும் சமயமும் குன்றி விடுமென்றும் கூறினார்கள். பின்னர் திரு. ச. சச்சிதாநந்தம் பிள்ளையவர்கள் வரவேற்புக் கவி வாசித்து விளக்கிக் கொடுத்தனர். பிறகு மந்திரியார் மகாநாட்டைத் திறந்து வைத்தார்கள். அவர்கள் செய்த சொற்பொழிவில் சிறப்பாக வலியுறுத்தப்பட்டபொருள்கள் :—(1) கடவுள் ஒருவர் உண்டு. (2) இக்கொள்கை யின்றேல் ஒழுக்கம் இல்பொருளாய் விடும். (3) ஒவ்வொரு சமயத்திலும் சீர்கேடான ஒழுக்கங்களுள. (4) அவைகளைக் களைதல் மக்கள் கடன். (5) ஆனால் அடிப்படையான கொள்கைகளை எஞ்ஞான்றும் கைவிடுதல் கூடாது என்பனவாகும்.

இதன் பிறகு திரு. மறை. திருநாவுக்கரசனார் திரு. கா. சுப்பிரமணியம் பிள்ளையவர்களைத் தலைமை வகிக்கும்படி முன் மொழிந்தனர். இதை திரு. நாராயணசாமி முதலியவர் பின், வழி மொழிநதனர். பிறகு திரு. நாராயணசாமி தலைவருக்கு வரவேற்புத்தாளை வாசித்துக் கொடுத்தார். பின்னர் தலைவரவர்கள் அரியதொரு விரிவுரை நிகழ்த்தினர். (இதன் விரிவை மற்றோரிடத்தில் காண்க.)

பிறகு மகாநாட்டைத் திறந்தருளிய மந்திரியார் அவர்கட்கு சமாஜக் காரியதரிசியார் வந்தனம் கூறினர். பிறகு காலைக்கூட்டம் கலைந்தது.

பிற்பகல் 2½ மணிக்கு விஷயாலோசனைக் கூட்டம் கூடித் தீர்மானங்கள் செப்பஞ் செய்யப்பட்டன. மாலை 3 மணிக்கு மகாநாடு மீண்டும் கூடிற்று. முதன் முதலாக திரு. சுரேந்திரநாத் ஆரியா அவர்கள் "நடராஜ தத்துவம்" என்னும் பொருள்பற்றி ஒரு சிறு சொற்பொழிவு நிகழ்த்தினர். பிறகு, திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளை யவர்கள் திருமுகம் வாசிக்கப்பட்டது. பின்னர் கீழ்வரும் தீர்மானங்கள் ஒவ்வொன்றின் இறுதியில் குறிக்கப்பட்ட இளைஞரால் முன்மொழி பின்மொழி பகரப்பட்ட பின்னர் ஏக மனதாக நிறைவேறின. இறுதியில் சமாஜக் காரியதரிசியார் இத்தீர்மானங்

களைச் செயலில் கொணர்தற்கு இளைஞர்களின் கூட்டுறவும் பொருளுதவியும் தேவை யென்பதை நன்கு விளக்கினர். பிறகு திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியார் இளைஞர்கட்குப் பெரிதும் பயன்படக் கூடிய அரிய சொற்பொழி வொன்றை நிகழ்த்தினர். பிறகு தலைவரவர்கள் தமது முடிபுரையை மிக அரிய முறையில் நிகழ்த்தினர். பிறகு சமாஜக் காரியதரிசியார் தலைவர், வரவேற்புக்கழகத் தலைவர் திரு. தி. ரா. பொ. குப்புசாமிப் பிள்ளை, மகாநாட்டுக் காரியதரிசி திரு. தி. கு. கி. நாராயணசாமி முதலிய எல்லா அன்பர்கட்கும் உரிய நன்றி மொழிகள் கூறியபின்னர் கடவுள் வாழ்த்தொலி முழங்க இம்மகாநாடு இறைவன் இன்னருளால் இனிது நிறைவேறிற்று.

## சைவஇளைஞர் மகாநாட்டுத் தீர்மானங்கள்

1. சைவசித்தாந்தக் கோட்பாடுகள் தற்கால ஆராய்ச்சி முடிபுகளுக்கு ஒத்திருக்கின்றன என்றும், சைவசமயம் இந்நூற்றாண்டு வாழ்க்கைக்கும் ஏற்றதாயுள்ளதேயென்றும் சைவப் பெரியார்கள் சிலர் கூறுவதை இனிது விளக்குவன்வான நூல்களை எளிய நடையில் எழுதுவித்து மாணவர்க்குக் கிடைக்கும்படி செய்ய வேண்டுமென்று சைவசித்தாந்த மஹாசமாஜத்தை இம்மகாநாடு வேண்டிக் கொள்ளுகிறது. தி. கி. நாராயணசாமி, மினாக்ஷிசுந்தரம்.

2. சைவ மாணவரனைவரும் தமது சமயத்தின் அடிப்படையான கோட்பாடுகளையும் ஒழுக்கங்களையும் தக்கார் வாயிலாகக் கேட்டறிந்துகொண்டு, அவ் வொழுக்கங்களைத் தாம் கைக்கொள்ளலோடு, தாம் தெளிவாயுணர்ந்து கொண்ட சைவமெய்ச் சரிதங்களையும் கொள்கைகளையும், தமக்கு ஓய்வு கிடைத்த காலங்களில் தமது கிராமங்களில் பிரசாரஞ் செய்ய வேண்டுமென்று இம்மகாநாடு வற்புறுத்துகிறது. மறை-திருநாவுக்கரசு, பொன்னுசாமி.

3. திருப்பாதிரிப்புலியூர் சைவ மகாநாட்டில் ஒப்புக்கொண்டபடி சைவ சமயத்தினருக்கு ஜாதிபேதம் இன்மையால் ஜசைவர்கள் எந்த ஜாதியினராயினும் அவர்கள் சமயம், சமுதாயம் முதலியவைகளில் சமத்துவ உரிமைகளை அநுபவிக்கச் சைவ உலகம் சௌகரியம் செய்து கொடுக்கும்படி இம்மகாநாடு வேண்டுகிறது.

மேலும் இந்து மதத்தைச் சார்ந்த தீண்டப்படாதார் முதலியவகுப்பினர்களைச் சைவ உலகம் இழக்காதிருப்பதற்காக அவர்களுக்குச் சமயம், சமுதாயம் முதலியவைகளில் எல்லா உரிமைகளையும் அளிக்கும்படி சைவர்களை இம்மகாநாடு வற்புறுத்திக் கேட்டுக் கொள்கிறது. கைலைகுரு, ரத்னசாமிப் பிள்ளை.

4. சைவர்கட்குள் நடக்கும் திருமணம் முதலிய எல்லாச் சடங்குகளையும் தூய்மையும் சிக்கனமுமுடைய முறையில் தமிழிலேயே செய்தல் வேண்டுமென்றும், அவ்வாறு அழகுறச் செய்தற்குச் சில சைவரைப் பழக்கும் பொறுப்பைச் சமாஜத்தார் மேற்கொள்ள வேண்டுமென்றும், அத்தகையார் ஏற்பட்டதும் அவர்களைக் கொண்டே சைவர்கள் தம்மில்லச் சடங்குகளை நடத்திக்கொள்ள வேண்டுமென்றும் இம்மகாநாடு கேட்டுக் கொள்கிறது.

திருமண காலத்தில் திருமுறைகள் முதலிய சிறந்த தமிழ் நூல்களைப் பரிசாக அளிக்கும் வழக்கத்தை மேற்கொள்ள வேண்டுமென்று இம்மகாநாடு வற்புறுத்துகிறது. தியாகராஜன், தி. கி. நாராயணசாமி.

5. சைவர் மகாநாடு ஆலய சம்பந்தமாகக் காட்டியுள்ள சீர்திருத்தங்களை(யும்) இம்மகாநாடு பாராட்டுவதோடு, விக்கிரகாராதனையின் தூல நிகழ்ச்சிகளில் கருத்தை மடித்துவிடாமல், இறைவனைப்பற்றிய அறிவும், அவன்பாலும், உயிர்கள்பாலும் அன்பு(ம்) பெருகுதற்கான முறையில் திருக்கோயில்களில் வாரத்திற் கொருமுறை அன்பர்கூட்டத்தில் புனித வழிபாடு நடைபெற ஏற்பாடு செய்தல் அவ

சியமென்று இம்மகாநாடு கருதுகிறது. மறை. திருநாவுக்கரசு, கே. குழந்தைவேலு.

6. ஒவ்வொரு சைவ வாலிபனும் சைவ சித்தாந்த மகாசமாஜத்திலாதல், அதனோடு இணைக்கப்பட்ட யாதாவதொரு சைவசபையிலாதல் உறுப்பினனாய்ச் சேர்ந்து கொண்டு மகாசமாஜத்தை வலுப்படுத்துவதற்காக, அதற்கு ஆயிரக்கணக்கான அங்கத்தவர்களைச் சேர்த்தல், முன்னமேஉள்ள சைவசபைகளை அதனோடு இணைத்தல் முதலிய வழிகளில் தொண்டுசெய்ய வேண்டு மென்று சைவ இளைஞர்களை இம்மகாநாடு வேண்டிக் கொள்கிறது. க. நடேசன், ரா. புருஷோத்தமன்.

7. தேவார புத்தகங்களை மிக்க குறைந்த விலையில் கிடைக்கும்படி செய்தல், சித்தாந்தப் பத்திரிகை நடத்துதல், பல விடங்களில் சொற்பொழிவு செய்வித்தல, சபைகளமைத்தல் முதலிய வழிகளில் சைவசித்தாந்த மகாசமாஜம் சைவப்பாதுகாப்புக்கான பணிகளைச் செய்து வருவதற்காக இம்மகாநாடு தன் நன்றி யறிதலைத் தெரிவிப்பதோடு, சைவ மடாதிபதிகள், இனியும் சும்மாயிராமல் காலத்தின் தேவைகளை நன்கு உணர்ந்து, சைவ போதனைக் கல்லூரி யமைத்தல், சைவ பிரசாரகரை நியமித்தல் தமிழாராய்ச்சி செய்தல் முதலிய தம் சமயக்கடமைகளைத் திறம் படச்செய்ய உடனே தொடங்க வேண்டு மென்று அவர்களை வணக்கமாய் வேண்டிக் கொள்கிறது. ப. இராமநாத பிள்ளை, த. ச. மீனாட்சிசுந்தரம்.

8. மாணவர்கள் பிரமசரிய ஒழுக்கத்திலும், தெய்வநம்பிக்கையிலும் சிறிதும் வழுவாதவர்களாய், இந்நாட்டுக் கசரத்தும் சிலம்பமும் பயின்று உடலையும் நன்றாய் ஓம்பி, உயரிய நோக்கோடு கல்வியைச் சிறக்கக் கற்பதிலேயே தமது கவனத்தைச் செலுத்தவேண்டு மென்று இம்மகாநாடு வற்புறுத்துகிறது. புருஷோத்தமர், நாராயணன்.

9. இக் காலத்தில் கலாசாலைகளிலேனும் வீடுகளிலேனும் கோயில்களிலேனும் ஒழுங்கான சமய போதனை நிறைவேறாமையால் விளையும் கேடுகள் பலவாயிருத்தலால், பாடசாலைகளிலோ அல்லது தக்க பிறவிடங்களிலோ வாரத்திற்கொருமுறை உண்மைச் சைவசமயத்தை விளக்கும் போதனைகள் கிரமமாக நடைபெற்றுவர ஏற்பாடு செய்யும்படி மடாதிபதிகளையும், கோவிலதிகாரிகளையும், சைவசித்தாந்த மகாசமாஜம் போன்ற சைவசபைகளையும் இம்மகாநாடு கேட்டுக் கொள்கிறது. பாலசுந்தர நயினார், சிதம்பரஞ் செட்டியார்.

10. B. A. பட்டம் பெறுவதற்குத் தத்துவ சாஸ்திரப் பிரிவைத் தெரிந்து எடுத்துக் கொள்ளும் சைவ மாணவர்கள் அனைவரும் ‘ சைவ சித்தாந்தம் ’ எனனும் பிரிவை எடுத்துக் கற்றுத்தேர்ந் துபகரிக்க வேண்டுமென்று இம்மகாநாடு வற்புறுத்துகிறது. கலாசாலையதிகாரிகள் இப்பாடத்தைக் கற்பித்தற்கான வசதிகளையும் விரைவில் அமைக்க வேண்டு மென்று அவர்களை வேண்டிக் கொள்கிறது. A. முத்தையா, தி. கி. நாராயணசாமி.

11. புதிதாய் அமைக்கப்பட் டிருக்கும் S. S. L. C. பரீக்ஷைத் திட்டத்தில், அப்பரீக்ஷைக்குச் செல்வோர் தத்தம் தாய்மொழியைத் தம்மிஷ்ட பாடங்களிலொன்றாக எடுக்க வொட்டாதபடி செய்துள்ள புதுத்தடையை நீக்கிவிடும்படி S. S. L. C. போர்டாரையும், அரசாங்கத்தாரையும் இம்மகாநாடு வேண்டிக் கொள்கிறது. தங்கவேலு, இராமச்சந்திரன்.

12. (a) பெரிய கல்லூரிகளிருக்கு மிடங்களில் சைவ மாணவர்கட்கு மாணவரில்லங்களும், ஏற்ற விடங்களில் அநாதிவிடுதிகளும் ஏற்படுத்தச் சைவசித்தாந்த மகாசமாஜத்தார் தீவிரமான முயற்சிகள் செய்ய வேண்டு மெனறு இம்மகாநாடு அவர்களையும் மகாஜனங்களையும் கேட்டுக்கொள்கிறது. (b) (சென்னையிலுள்ள மணலி விடுதி போனறு) சைவசமயிகளால் ஸ்தாபிக்கப்பட்ட அறநிலையங்களில் இனிமேல் சைவமாணவர்களையே சேர்க்க வேண்டுமென்றும், அவர்களனைவரையும் சமத்துவமாகவும் கருணையுடனும் நடத்த வேண்டுமென்றும் விடுதிகளின் தலைவர்களை இம்மகாநாடு வேண்டிக் கொள்ளுகிறது. A. முத்தையா, T. V. ரத்னசாமி.

13. தேவார பாடசாலைகளில் சைவசமயத்தைச் சார்ந்த எல்லாச் சாதிப் பிள்ளைகளை

யும் அறிவு, ஒழுக்கமென்னும் தகுதி யொன்றே கருதிச் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று அப்பாடசாலை நிர்வாகிகளை இம்மகாநாடு வேண்டுகிறது. ந. இராஜமாணிக்கம், ந. இரத்தினவேலு.

14. இறைவன் திருவுருவங்களில் சிறந்தனவற்றையும் இயற்கை வளப்பமிக்க சிவத் தலங்களையும், பேரழகுடைய சிவாலயங்களையும் சிற்பங்களையும் புகைப்படமெடுத்தும் வர்ணபடமாக எழுதுவித்தும் அவற்றைத் தொகுத்து எளிய விலையில் எவர்க்கும் கிடைக்கும்படி செய்ய வேண்டுமென்று மகா சமாஜத்தாரை இம்மகாநாடு வேண்டுகிறது. ச. சிவகுமாரன், வா. தி. மாசிலாமணி.

# இளைஞர்கட்குத் திருமுகம்

[மா. வே. நெல்லையப்ப பிள்ளை]

அன்பார்ந்த சைவ இளைய சகோதரர்களே!

சென்னைச் சைவசித்தாந்த மகாசமாஜக் காரியதரிசி அவர்கள் ஆணையின்படி நீங்கள் உங்களுடைய பல இடங்களிலிருந்தும் பொதுநலத் தொண்டு கருதி உங்கள் மெய் வருத்தத்தையும் பணச் செலவையும் பொருட்படுத்தாது இங்கே வந்து சேர்ந்து சைவ இளைஞர் மகாநாடு கூடியிருக்கிறீர்கள். எல்லாம் வல்ல இறைவனருளால் உங்கள் வரவு நல்வரவு ஆகுக; நற்பயன் விளைவிப்பதாகுக.

2. உங்களிற் சிலர் இன்னம் கல்விச் சாலையில் படிக்கிறவர்களாயிருக்கலாம்; சிலர் இப்பொழுது உலக வாழ்க்கையிற் புகுந்திருக்கலாம். எப்படியிருந்தாலும் நீங்கள் எல்லாரும் உலக வாழ்க்கையைப்பற்றி அநுபவ அறிவு அறிய வேண்டியவர்களாயிருக்கிறீர்கள். ஆதலின் உங்களுக்கு உலகில் தனி வாழ்க்கையிலும் குடும்ப வாழ்க்கையிலும் பொது வாழ்க்கையிலும் (Public life) துன்ப இன்பங்களால் மொத்துண்டு அநுபவமடைந்திருக்கிற முதிய வயது உள்ள நான் இத்தருணத்தில் உலக வாழ்க்கையைப்பற்றிச் சில வார்த்தைகள் சொல்லுதல் பொருத்தமுடையதாயிருக்கும் என்று நினைக்கிறேன். நான் சொல்லுஞ் சொற்களை நீங்கள் அப்படியே ஒப்புக் கொண்டு நடத்தல் வேண்டுமென்று சொல்லவில்லை. நீங்கள் அச்சொற்களிலடங்கியுள்ள கருத்துக்களை உங்களுடைய மனதில் உய்த்து உணர்ந்து அவைகளில் முன்னேற்ற வாழ்க்கைக்கு ஒத்திருப்பவைகளாக அறியப்பட்ட கருத்துக்களைக் கடைப்பிடித்து ஒழுகல் வேண்டும் என்று நான் உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

3. முதலாவது:—இக் காலத்தில் உள்ள எந்தக்கூட்ட மக்களும் தங்கள் முன்னோர்களுடைய வாழ்க்கையின் நாகரிகம் இன்னதென அறிந்து அதிலுள்ள நற்கருத்துக்களையும் நல்ல பழக்க வழக்கங்களையும் தழுவியே உலகில் ஒழுகி வருகிறார்கள். சில ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னே நமது இந்திய நாட்டில் நடைபெற்று வந்த தமிழ் முன்னோர்களுடைய நாகரிகக் கருத்துக்களும் பழக்க வழக்கங்களும் மிக மேலானதாயுள்ளவைகளாக அவைகளை அறிந்த பிற நாட்டு அறிஞர்கள் கூறியிருக்கிறார்கள். அவைகளை நீங்கள் பண்டைத் தமிழ்

நூல்களைப் படிப்பதனாலும் அறிந்தார் வாயிற்கேட்பதினாலும் அறிந்து அவைகளில் தற்கால முன்னேற்ற வாழ்க்கைக்கு ஏற்புடைத்தா யுள்ளவைகளைத் தழுவி நடந்து அவர்களுடைய சந்ததியார்களாகச் சிறப்புடன் வாழ்தல் வேண்டும். அவ்வாறு நீங்கள் ஒழுகுதலினால் அந்நாகரிகத்திலுள்ள சமய நலன், ஒழுக்க நலன் முதலிய நலன்களை அடைதலுமின்றி அந்நலன்களை உங்கள் காலத்திலுள்ள எல்லா மக்களுக்கும் எடுத்துக் காட்டி அவர்களையும் நற்பயன் அடையும்படியாகச் செய்கிறவர்களாகின்றீர்கள்; உங்கள் பின் சந்ததியார்களுக்கும் அந்நலன்களை அறிந்து கைக்கொண்டு நடக்கும்படி வழி காட்டுகிறவர்களாகின்றீர்கள். இந்த முக்கியமான கடனை என்னைப் போன்ற முதியவர்கள் காலத்திலுள்ள தமிழ் மக்கள் பொதுவாய்ச் செய்யவில்லை என்று நான் தலைகுனிந்து உங்கள் முன் சொல்லுகிறேன். இளைஞர்களாகிய நீங்கள் அந்தக்குறையை நீக்கித் தமிழ் நாடு நலம் அடையும்படி செய்ய உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

4. இரண்டாவது:—தற்கால நாகரிக பாதையிலுள்ள ஒரு பெருங்குழியில் நீங்கள் தவறி விழுந்து விடாதபடி விழிப்பாயிருத்தல் வேண்டும். அந்தப் பெருங்குழியாவது ஆடம்பர வாழ்க்கையாகும். ஆடம்பர வாழ்க்கை என்பது பொன்போல மின்னுகின்ற உள்ளீடற்ற போலி வாழ்க்கை. பிறர் மதிக்கவும் பிறராற் பயன் பெறவும் செய்யப்படுகிற பகட்டு வாழ்க்கை அது. அந்த வாழ்க்கை மேற்கு நாட்டு நாகரிகக் கூட்டுறவால் நமது நாட்டுக்கு வந்தது. மேற்கு நாட்டு நாகரிகத்திலும் விடாமுயற்சித் திறன், நேர ஒழுங்கு முதலிய நலன்களை நீங்கள் கைக்கொள்ளல் வேண்டும்; ஆனால் அதிலுள்ள வாழ்க்கை ஆடம்பரத்தை முற்றிலும் நீங்கள் நீக்கல் வேண்டும். அது நமது முன்னோர்களுடைய உண்மையும் எளிமையுமுள்ள வாழ்க்கைக்கு (True & Simple life) முற்றிலும் மாறான அதிகப் பணச்செலவுள்ள சிக்கல் வாழ்க்கை (Expensive and Complicated life). உயர்தர ஆங்கிலக்கல்வி கற்றிருந்தாலும் ஆங்கிலேயர்களுடைய நாகரிகத்தில் சிறிதும் மயங்காது உண்மையாயும் எளிமையாயும் தூய்மையாயுமுள்ள வாழ்க்கையை வாழ்ந்துகொண்டு வருகிற சில தமிழ்ப் பெரியாரை நீங்கள் உங்கள் கண் முன்னே இப்பொழுது பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் அவர்களைப் பார்த்து உங்கள் வாழ்க்கையை உண்மையும் எளிமையும் தூய்மையும் உடையதாக விளங்கும்படி செய்ய நான் உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

5. ஆடம்பர வாழ்க்கை சம்பந்தமாய் நான் உங்களுக்கு ஓர் உண்மை சொல்ல விரும்புகிறேன். ஒருவனுடைய வாழ்க்கையானது தனக்கும் பிறர்க்கும் நற்பயனுடையதா யிருத்தற்கு செல்வம் அதிகார முதலியவற்றால் பெரிய வாழ்க்கை வேண்டப்படுவதில்லை. பெரிய வாழ்க்கையும் நல்லறிவுடன் நடத்தப்படா விட்டால் மிக்க தீமையுடையதாகலாம். நற்பயனுண்டாதல், வாழ்க்கை நடத்தப்படும் விதத்திலிருப்பது, அல்லது வாழ்க்கை பெரியது அல்லது சிறியதாயிருத்தலைப் பொறுத்தது அல்ல. நற்பயன் வாழ்க்கையே இன்பவாழ்க்கை யாகும்.

உங்களில் ஒவ்வொருவரும் பெரிய வாழ்க்கையை அடைதல் உலக சியில் முடியாதது. ஆனால் ஒவ்வொருவரும் உங்கள் நல்லறிவா லும் நன்முயற்சியாலும்நற்பயனுடைய இன்பவாழ்க்கை வாழக்கூடும். அதுவே வாழ்க்கை நலத்துக்கு இன்றி அமை யாது வேண்டப்படுவ தாகும்.

6. மூன்றுவது :— நல்லொழுக் கத் தைப் பற்றிச் சில வார்த்தைகள் கூறி விட்டு என் உரையை முடிவு செய்கி றேன். மக்களுக்குச் சிறப்புடைய அணியாய் விளங்குவது நல்லொழுக் கம் என்று நான் உங்களுக்குக் கூற வேண்டுவதில்லை. ஆனால் நல்லொழுக் கம் நடைமுறையில் தவரு திருப்ப தற்கு அது விழிப்புடன் பாதுகாக்கப் படல்வேண்டும் என்பதை நீங்கள் மன தில் வைத்து ஒழுகல் வேண்டும். நல் லொழுக்கத்துக்கு ஆதாரமா யிருப் பவை எண்ணம் இச்சை செயல் என மூன்றுமே. எண்ணமும் இச்சையும் மனதில் உண்டாவன ; செயல் உடலி னுலுண்டாவது. எண்ணமும் இச் சையும் நல்லனவாயிருந்தால் செயலும் நல்லதாகவே யிருக்கும். ஆதலின் நீங்கள் மனதில் எப்பொழுதும் தீய எண்ணங்களும் தீய இச்சைகளும் தங்குதற்கு இடம் கொடாமல் நல்ல எண்ணங்களும் நல்ல இச்சைகளுமே தங்கும்படி மனதை அடக்கிப் பழக் கம் செய்து கொள்ளுதல் வேண்டும். தீய எண்ணம் அல்லது தீய இச்சை ஒன்று பழைய வாசனையினுலே மன தில் வந்தால் உடனே அதற்கு எதி ரிடையான நல்ல எண்ணத்தை அல் லது நல்ல இச்சையை மனதில் நினை த்துத் தீய எண்ணத்தை அல்லது தீய இச்சையை விலக்கல் வேண்டும். நல்ல மனமே நல்ல வாழ்வுக்குக் காரணமா யிருத்தலால் மனதைப் பழக்கத்தி னுல் தூய்மை யுடையதாயும் திண்மை யுடையதாயும்(Stray) ஆக்கிக்கொள்ள வேண்டும். திண்மையும் தூய்மையும் உடைய மனதினுல் (Stray and pure Mind) ஒருவன் தனக்கும் பிறருக்கும் நற்பயன் வேண்டிய அளவு விளைவித் தல் கூடும். இந்த இயற்கை உண்மை களை அறிந்து நீங்கள் உலகவாழ்வில் எப்பொழுதும் தீமையைவிலக்கி இயன் றவாறு நன்மையைநாடிச் செய்தலிலே கண்ணுங் கருத்துமா யிருத்தல் வேண் டும்.

7. நல்லொழுக்க சம்பந்தமாய் தன் னலம் பிறர் நலம் என்ற மயக்க உணர்ச்சி சாதாரணமாய் மக்களுக் குள் உள்ளது. தன்னல மில்லாது பிறர்நல மில்லை. பிறர்நல மில்லாது தன்னலமில்லை. பிறர் நலம் கெடுத்துத் தன்னலம் தேடிக் கொள்ளுதல் இயற் கையில் இல்லை. இந்த உண்மையை அறிந்து நீங்கள் மக்கட் பொது நலத்தை மேல் நிலையில் வைத்துத் தன்னலத்தை அதற்கு உட்படுத்தி ஒழுகல் வேண்டும். மக்கட் பொது நலம் நாடிச் செய்தலில் நீங்கள் எங்க ளைப்போல் இல்லாமல் சிரத்தையுடைய வர்களா யிருத்தல் வேண்டும். தமிழ் மக்களுடைய வருங்கால நலனும் பிற மக்களுடைய வருங்கால நலனும் இளைஞர்க ளாகிய நீங்கள் ஊக்கத் துடன் பொதுநலத் தொண்டு செய் தலைப் பொறுத்திருக்கிறது. ஆதலின் நீங்கள் மக்கட் பொதுநலத் தொண் டில் ஈடுபட்டு உழைத்துத் தமிழ்நாட் டைச் சிறப்புடைய நாடாகச் செய்யும் பாக்கியத்தைப் பெற்றுக் கொள்ளும்

படி நான் உங்களைத் தாழ்மையாகக் கேட்டுக் கொள்கிறேன்.

8. இறைவனுடைய அருளால், உங்களில் ஒவ்வொருவருக்கும் இன்ப நல்வாழ்வு உண்டாகுக; உலக வாழ்வில் தீயனவற்றை எதிர்த்துச் செல்லுந் திறனும் நல்லனவற்றை நாடிச் செய்யும் ஆற்றலும் உண்டாகுக; சமயத் தொண்டு முதலிய பொது நலத் தொண்டுகளில் ஈடுபட்டு உழைக்கும் மனத்திறனும் செயற்றிறனும் உண்டாகுக.

# " சென்றடையாத திருவுடையான் "

[தாராபுரம் - நா. ஆறுமுகம் பிள்ளை]

" நன்றுடையானைத் தீயதில்லானை
நரைவெள்ளேறு
ஒன்றுடையானை உமையொருபாகம்
உடையானைச்
சென்றடையாத திருவுடையானைச்
சிராப்பள்ளிக்
குன்றுடையானைக் கூறவென்னுள்ளம்
குளிரும்மே " .

என்னும் திருஞானசந்தப் பெருமான் அருளிச் செய்த திரிசிராப்பள்ளித் திருப்பதிக முதற்பாட்டின் மூன்றாம் அடியில் விளங்கும் "சென்றடையாத திருவுடையான்" என்னும் தொடர் மொழிக்குச் சித்தாந்தம் மலர் ௩. இதழ் க, உ இல் திரு. வேள். N. துரைக்கண்ணன் என்பார் " இந்திரன் முதலிய இறையவர்களிடத்துப் போய்ப் பெறக்கூடாத விழுச்செல்வத்தை யுடையான் " என்று உரை வகுத்துள்ளார். ஆயினும், அவர் தம் கட்டுரையின் ஈற்றில் எழுதியுள்ள குறிப்பால் தாம் எழுதிய உரை பொருந்துவதோ அன்றோ என்னும் ஐயமுடையார் என்றே நினைக்கவேண்டி யிருக்கிறது. இவ்வுரையை மறுத்துச் "சித்தாந்தம்" மலர் ௩ இதழ் ௩ இல் திரு. G. கல்யாணம் B, A. என்பார் " தற்போதத்துடன் செல்பவர் அடைய முடியாத மோக்ஷ செல்வத்தையுடையவன் " என்று பொருள் எழுதியுள்ளார். அன்றியும் தாம் எழுதிய மறுப்புக்கு ஆதரவாக முற்கூறியவர் வரைந்துள்ள குறிப்பையும் எடுத்துக் காட்டியிருக்கிறார். இவர் கூறிய இப்பொருள் சாலச்சிறப்புடையதே என்பதற்குப் " பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரன்" என்னும் சிவஞான சித்தியார்த் திருமொழியே போதிய சான்றாம். ஆயினும், இவர் முற்கூறியவர் உரையை மறுக்கும் முறை சிறிதும் பொருத்த மன்றெனத் தோன்றுவதால் அது பற்றி யாராய்வாம்.

'சென்று அடையா' என்னும் சொற்றொடர் 'வானவரிடம் சென்று அடைய முடியா' என்னும் பொருளைத் தரின் வானவருக்கு ஓர் ஏற்றம் நமது சமயாசாரியார் கற்பித்ததாகக் கருதவேண்டி யிருக்கும். " திருச்சிற்றம்பல மேய செல்வன் கழல் ஏத்தும் செல்வம் செல்வமே " என்று முழக்கிய ஒரு பெரியார் * * * வானோரை உயர்த்தி யிருப்பதாகப் பொருள் கொள்வது ஏற்புடைத் தாகுமா? என்று திரு. G. கல்யாணம், B. A.

அவர்கள் கேட்கின்றார். வானவர் உளர் என்ற கொள்கை யுடையார் எல்லாரும் மண்ணோரினும் வானோரே சிறந்தவர் என்று கூறுகின்றனர். அங்ஙனம் கூறற்கேது வென்னையோ வெனின், மக்கட் பிறப்பின ரெல்லாரும் நல் ாப் பயனாகிய இன்பத்தையும் தீ பயனாகிய துன்பத்தையும் அடிக்கடி மாறி மாறி நுகர்கின்றாராகலானும் தேவர்களெல்லாரும் நல்வினைப் பயனாகிய இன்பத்தையே பெரிதும் நுகர்கின்றாராகலானும் என உணர்ந்து கொள்க. தேவர்கள் பெரிதும் இன்பத்தையே நுகர்கின்றார்கள் என்பதைப் "போகம் வேண்டி வேண்டிலேன் புரந்தராதி யின்பமும்" என்னும் மணி மொழியே நன்கு விளக்கும். ஒருவர்பால் இல்லாத சிறப்பை அவர் பால் உளதாக ஏற்றிக்கூறல் வழுவாமே யொழிய அவர் பால் உள்ள உயர்வை எடுத்துக் கூறலால்வரும் இழுக்கென் யா! லம். நம் சைவசமயத் திருமுறைகள் பன்னிரண்டினும் பலப்பல இடங்களில் வானவர் தம் ஏற்றத்தை எடுத்திசைக்கும் தொடர் மொழிகளைக் காணலாம். திரு. G. கல்யாணம் B. A. அவர்கள் எடுத்துக் காட்டிய "தீய அசுரர் பகையுண்டு" என்னும் செய்யுளீற்றிலுள்ள "வானோர்க் கென்னை வளன் உண்டே" என்னும் தொடர் மொழியினும் "வானோர்க்கரிய மருந்தே போற்றி" என்னும் தொடர் மொழியினும் நாம் நாடோறும் நேரிற்கண்டு ஒருவரோடொருவர் அளவளாவி வாழும் மண்ணோரை எடுத்துக் கூறாமல் காண்டற்கரியராய வானோரை எடுத்து மொழிவானேன் என ஒருசிறிது ஆராயினும் மண்ணோரினும் வானோர் ஏற்றமுடையார் எனக் குறித்தற்கேயா மென்பது புலனாகும். "வானேயும் பெறில்வேண்டேன்" "திருமாலும் .... சென்றுணரா" என்னும் தொடர் மொழிகளிலுள்ள உம்மைகள் வானுலகின் சிறப்பையும் திருமாலின் உயர்வையும் குறிக்கவே எழுந்தனவாம். இங்ஙனமெல்லாம் புகழ்ந்து பேசற்கேற்ற பெருநலம் துய்த்தற்கு இவர்கள் அளத்தற்கரிய நிறைவளனுடையராயிருத்தல் வேண்டுமன்றோ? இவர்கள் எவ்வளவு பெருவளன் உடையராயினும் ஆகுக? இவர் தம் ஏற்றத்தை எடுத்து மொழியும் திரு. வேள். N. துரைக் கண்ணன் அவர்களுடைய உரையாற் பெறப்படும் பயன்றான் யாதோ வெனில், கூறுதும்.

மன்னர் மன்னன் ஒருவன்பாற் சென்று ஒரு புலவன் பரிசிலாகப் பெற்ற அரும்பெறன் மாணிக்கமணியின் உயர்வை மொழிய வேண்டுவார் "இது மாணிக்கமணி" என்று கூறிய அளவானே அதன் உயர்வு பெறப்பட மாட்டாது. மற்று, "இது மன்னர் பாலும் சென்று பெறற்கரிய மாணிக்க மணி" என்பரேல், அம்மணியின் உயர்வும் அதை யுடையானாகிய மன்னர் மன்னன்றன் ஏற்றமும் அதைப் பரிசிலாகப் பெற்ற புலவன்றன் புலமைத்திறனும் ஆகிய மூன்றும் இனிது விளங்கும். இது போலவே "சென்றடையாத திருவுடையான்" என்னும் தொடர் மொழிக்குத் திரு. வேள். N. துரைக்கண்ணன் அவர்கள் எழுதிய "இந்திரன் முதலிய இறையவர்களிடத்துப் போய்ப் போய்ப் பெறக் கூடாத விழுச் செல்வத்தை யுடையவன்" என்னும் உரையால் பேரின்பப் பேறாகிய விழுச் செல்வத்தின் உயர்

வும அதனை யுடையானாகிய இறைவன் தன் ஏற்றமும் அதனை யடையும் அடியார் தம் தகுதியும் நன்கு விளங்கும். இதுவே இவ்வுரையாற் பெறப்படும் சிறந்த பயனும். "செங்கணவன்பாற் றிசைமுகன்பாற் றேவர்கள்பா லெங்கு மிலாததோ ரின்பம்" என்னும் திருவாசகத் திருமொழியும் இவ்வுரையின் ஏற்றத்தை இனிது தெளிவுறுத்தும். மேலும், இவ்வுரை பேரின்பப் பேறாகிய விழுச்செல்வம் இந்திரன் முதலிய இறையவரிடத்துப் போய்ப் பெறக் கூடாதது, அதனையுடையான் சிவபெருமானே என்று விளக்கலால், இவ்விந்திரன் முதலிய இறையவரை இவர் தேவர் அவர் தேவர் என்று பேசிப் புலம்பி வணங்கன்மின் ; நினைத்தொறும் காண்டொறும் பேசுந்தோறும் எப்போதும் அனைத்தெலும் புண்ணெக ஆனந்தத் தேன் சொரியும் குனிப்புடையானையே நினைமின், வாழ்த்துமின், வணங்குமின் என அறிவுறுத்தலும் பெறப்படும். இதுகாறும் ஆராய்ந்தவாற்றான் திரு. வேள். N. துரைக்கண்ணன் அவர்கள் தாம் எழுதிய வுரையில் ஐயுற்றாலும் திரு. G. கல்யாணம் அவர்கள் மறுத்தாலும் அவ்வுரை பொருத்தமுடையதென்பதே தேற்றமாம்.

இன்னும் "சென்றடையாத திருவுடையான்" என்னும் இத்தொடர் மொழிக்குச் சிறிதாராய்ந்தால் வேறு பல பொருளும் காணலாம். அவற்றுள் எமக்குத் தோன்றியவை இவை :—

(க) ('பெருங் கருணைத் தடங்கடலாகிய இறைவன் தானே வந்து தந்தாலல்லாமல் எளியேமாகிய நாம் போய் அடையக் கூடாத பேரின்ப விழுச்செல்வத்தைத் (தனக்குடைமையாக) வுடையான் என்பது ஒரு பொருள். இப்பொருள் பொருத்தமுடையதென்பதை "என்னுலறியாப் பதந்தந்தாய், தாயாய் முலையைத் தருவானே தாரா தொழிந்தால் சவலையாய் நாயேன் கழிந்து போவேனோ, தான் வந்து நாயேனைத் தாய்போற் றலை யளித்திட்டு, அண்டமுதலாயினன் அந்தமிலா ஆனந்தம் பண்டைப் பரிசே பழவடியார்க் கீந்தருளும்" என்னும் திருவாசக அருண்மொழிகளெல்லாம பேரின்பச் செல்வத்தைத் தருதல் இறைவன் செயலாகவே வைத்துக் கூறி வலியுறுத்தல் காண்க.

(உ) சென்றடையாத என்பது திருவைத் தழுவாமல் உடையானைத்தழுவுவதாகக் கொண்டு "இந்திரன் முதலிய இமையவர்களும் போய் அடைய முடியாத இறைவன்" எனக்கோடல் மற்றொரு பொருள். "பூவேறு கோனும் புரந்தரனும் பொற்பமைந்த நாவேறு செல்வியும் நாரணனும் நான் மறையும் மாவேறு சோதியும் வானவரும் தாமறியாச் சேவேறு சேவடி, செங்க ணெடுமாலும் சென்றிடந்து காண்பரிய பொங்கு மலர்ப்பாதம், தேவர் கோவறியாத தேவதேவன்" என்னும் மணி மொழிகளெல்லாம் இவ்வுரை கூறற்கேற்ற சான்றுகளாம்.

(ங) மேற்கூறிய படியே "சென்றடையாத" என்பது உடையானைத் தழுவுவதாகவே கொண்டு "(தானே வந்து காட்டினாலன்றி நாமே) சென்று அடைய முடியாத முதல்வன்" என்பது வேறொரு பொருள். "அவனருளாலே அவன்றாள் வணங்கி, அவனருளே கண்ணாகக் காணினல்லால் இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவனிறைவன் என்றெழுதிக் காட்டொணாதே" என்னும் தமிழ்

மறைமொழிகள் இவ்வுரையின் சிறப்பை விளக்கும். திரு. G. கல்யாணம் B. A. அவர்கள் தமதுரைக்கு மேற்கோளாகக்கொண்ட "நானே கருதின் வரநாடார் சும்மா இருந்தால் அவர் தானே அணைவர்" என்னும் திருமொழி யாம் கூறிய இப்பொருளையே அறிவுறுத்தல் காண்க.

(ச) இசசெய்யுளை இளமையிலேயே எல்லாம்வல்ல இறைவனை நேரிற்கண்டு அவனால் பேரின்பப் பேற்றை எளிதிற் பெற்ற நம் திருஞான சம்பந்த வள்ளல் அது பெறுமாறறியாளை இறைவன்பால் அது பெறுமாறு ஆற்றுப்படுத்தும் செய்யுளாகக் கொண்டு, "ஆத! திருவுடையானைச் சிராப்பள்ளிக்குன்றுடையானைக் கூற என்னுள் ளம்குளிரும்? நன்றுடையானைத் தீயது இல்லானை நரைவெள் ஏறு ஒன்று உடையானை உமை ஒரு பாகம் உடையானைச் சென்று அடை" என்றுசொற்களைப் பிரித்து "இறைவனை யறியும் அறிவிலானே! பேரின்பச் செல்வத்தைத் தனக்குடைமையாக உடையவனைத் திரிசிராப்பள்ளிக் குன்றைத் திருக்கோயிலா உடையவனை வழுத்த என் (அடியேன்) மனம் குளிரும். ஆகையால் எல்லா நன்மைகளையும் உடையவனைத் தீமை சிறிதும் இல்லாதவனை மயிலையாகிய வெண்மை நிறம் வாய்ந்த ஆனேற்றை ஊர்தியாக உடையவனை உமையம்மையை ஒருபால் உடையவனைப் போய் அடைவாயாக" (ஏ தேற்றம் அல்லது அசை) என்பது பின்னும் ஒரு பொருள்.

இத்தனை பொருளில் எதுதான் சம்பந்தப் பெருமான் கருத்தை விளக்குவதோ எனில், அதையுணர யாம் வல்லே மல்லேம். செய்யுளியற்றும் ஆசிரியர்கள் ஒரு சொற்றொடரில் ஒரே கருத்தை அமைத்துச் செய்வதுமுண்டு. ஒரு சொற்றொடரிலேயே பல பொருள் தோன்ற அமைத்துச் செய்யுள் செய்வதும் உண்டு. அன்றியும், ஒரே பொருள் அமைத்துத் தாம் செய்த செய்யுளை மறுமுறை நோக்கின் அதில் பல பொருள் தோன்றக் கண்டு தாமே மகிழ்வதும் உண்டு. இத்தகைய செய்யுட்களுக்குச் சிறப்புடையவாய பல பொருளையும் கொள்ளலே நேரிதாம்.

---

# "சென்றடையாத திருவுடையான்"

[ஒ. கோ. கோவிந்தசாமிப் பிள்ளை, பி. ஏ.]

மேற்காட்டியுள்ள சொற்றொடர்க்கு இருவர் வரைந்த உரைகளை இப்பத்திரிகையில் அடியேன் கண்ணுற்றனன். ஆண்டு இருவரும் இருவிதமாகப் பொருள் கூறிப் போந்தனர். ஒருவர் "தேவர்களிடத்து சென்று கிடைக்கப்பெறாத செல்வத்தைத் தன்னிடத்தே யுடையவன்" என்றும் மற்றவர் "தற்போதத்துடன் செல்வார்கள் கிடைக்கப் பெறாத செல்வத்தை யுடையவன்" என்றுங் கூறினர்.

முதற் கண், முந்தியவர் கூறிய உரையை ஆராய்வாம். பாடல்கள் பதினொன்றையும் படித்து அவைகளில் மிளிர்கின்ற கருத்தை உற்று நோக்குமிடத்து சம்பந்தர் உலகத்தினர்க்கு எம்பிரானுடைய அருள் திறமைகளை

யும் குணங்களையும் வெளிப்படுத்தி அவரைப் போற்றினால் சிறந்த செல்வத்தை யடைவது உண்மை என்பதை வெளிப்படுத்தும் எண்ணத்தை யுடையவராய் இருந்ததாகத் தெரிகிறது. எம்பிரானைப் போற்றி யடையுங்கள் என்ற சம்பந்தர் தேவர்கள் ஒரு செல்வத்தைத் தரும் வன்மையுடையவர்கள் என்பதை நினைந்தே இரார் என்பது துணிபு. மேலும்,

> நூறு கோடி பிரமர்க ணொங்கினா
> ஆறு கோடி நாராயண ரங்கனே
> ஏறு கங்கை மணலெண் ணிலிந்திரர்
> ஈறி லாத நல்லீச னொருவனே.

என்ற நாவுக்கரையர் பாட்டினால் தேவர்கள் அழியாத நிலைமையையுடையவர்கள் அல்லர் என்பது வெளிப்படை. அதனால் அவர்களிடத்து சிறந்த செல்வம் கிடையாது என்பது பெற்றாம். எனவே " சென்றடையாத திருவுடையான்" என்று பாடும்போது தேவர்களிடத்து சென்று அடையாத செல்வத்தை யுடையவன் என்று சம்பந்தர் கருதியிரார்.

இனி, தற்போதத்துடன் சென்றவர்கள் கிடைக்கப்பெறாத செல்வத்தை யுடையவன் என்று மற்றவர் கூறின பொருளும் பொருத்த முடையதாகத் தோன்றவில்லை. ஏனெனில் ஒருவன் வேறொருவனிடம் ஒரு பொருள் கருதிச் சென்றால் அவனுக்கு முதன்மையாக அப்பொருளிடத்து இச்சையிருக்கவேண்டும். அவ்விச்சையினால் தற்போதத்துடன் சென்றால் அப்பொருள் கிட்டாது என்பதை அவன் அறிவான். இச்சையும் தற்போதமும் முரண்படுகின்றமையால் தற்போதத்துடன்சென்று என்பது பொருத்த முடையதாகத்தோன்றவில்லை.மேலும் அங்ஙனமே பொருள் கொண்டாலும் தற்போதத்துடன் சென்றவர்க்கும் ஈசன் அருள் புரிந்திருக்கிறான் என்பது,

> " கருத்த னாய்க் கயிலாய மலைதனைத்
> தருக்கினா லெடுத் தானைத் தகரவே
> வருத்தியா ரருள் செய்தவன் "

எனும் அப்பர் பாட்டால் விளங்குகின்றது.

இனி அச்சொற்றொடர்க்குக் கொள்ளத்தக்க பொருள் என்னை எனின் நாரணன், நான்முகன் முதலான தேவர்கள சென்று அடையாத செல்வத்தை யுடையவன் என்பது தான். இதற்குச் சான்று மூவரும் மணிவாசகப் பெருமானும் பாடிய பாக்களில் நிறைந்து கிடக்கின்றது.

> " நடினர் காண்கிலர் நான்முகனும்
> திருமா னயந்தேத்த "

என்றார் சம்பந்தர்.

> " நாடி நாரணன நான்முகன் வானவர்
> தேடியே சறவுந்தெரி யாத தோர்
> கோடி காவன் "

என்றார் திருநாவுக்கரசர்.

> " கண்ணனன் மலரோனுங்
> கீழ்மேலுற நின்றான் "

என்றார் சுந்தரர்.

> " பூவேறு கோனும்
> புரந்தரனும் பொற்பமைந்த
> நாவேறு செல்வியும்
> நாரணனும் நான்மறையும்
> மாவேறு சோதியும்
> வானவருந் தாமறியாச்
> சேவேறு சேவடி "

என்றார் மாணிக்கவாசகனார்.

இதனால் தேவர்களுக்குக் கிட்டாத எம்பெருமான் உலகத்தினருக்குக் கிட்டுவனோ என்ற ஐயம் நமக்கு வேண்

டுவதில்லை. ஏனெனில் சம்பந்தரே முதலடியில் எம்பெருமான் நல்லவர், தீயதில்லாதவர் என்று கூறிப்போயிருக்கின்றார். தேவர்களுடைய அகங்காரம சொல்லொணாதது. பகைமை வாய்ந்தது. இராவணனுடைய செருக்கோ தன்னையன்றி வந்த செருக்கு. எம்பிரானிடத்துப் பகைமை கொண்டதல்ல. இராவணன் சிறந்த சிவனடியான். அதுபற்றியே தான் எம்பெருமான் தேவர்களுக்கும் அரிதாகியும் இராவணனுக்கு எளியவனாகியு மிருந்தார். இங்கு பரஞ்சோதி முனிவர் தம் பழியஞ்சின படலத்தின் துவக்கத்தில் கண்டுள்ள,

> "ஈறிலான் செழியனன்புக்
> கெளியவனாகி மன்றுள்
> மாறியாடிய கூத்தென்
> சொல்வாம் பின்தாமோ
> .............. சொல்லுவாம்"

என்பது கருதற்பாலது.

ஆகவே சென்றடையாத என்ற தொடருக்கு பொருள், தேவர்கள் சென்றடையாத என்பதுதான். இந்த தொடரில் இரண்டு பொருளை சம்பந்தர் மிகவும் அழகாய் அமைத்திருப்பது சாலவும் கருதற்பாலதா யிருக்கின்றது. ஒரு பொருள் எம்பெருமானிடத்து உள்ள செல்வம் தேவர்களாலும் கோரப்பட்ட செல்வம். எனவே அப்படிப்பட்ட செல்வத்தை உலகத்தினரே நாடுங்கள் என்று சொல்வதைப் போன்றிருக்கின்றது. மற்றொரு பொருள் அச் செல்வத்தை யடைய வேண்டு மென்றால் தேவர்கள் சென்ற வண்ணம் செல்லாதீர்கள் என்று சம்பந்தர் சொல்ல வந்த மாதிரியாகத் தெரிகின்றது.

இஃது சைவ சமயத்திடத்துள்ள அன்பின்மிகுதியால் எழுதப் பட்டதேயன்றி மற்ற உரைகளுக்கு மறுப்பாக எழுதப்பட்ட தன்று. இத்தொடர்க்கு இன்னும் பலர் பலபொருள் கூறுவர். அதனை அடியேன் அன்புடன் எதிர் பார்க்கின்றனன்.

---

## "சென்றடையாத திருவுடையான்"

[திருக்குறள் விளக்கவாசிரியர் கி. குப்புச்சாமி முதலியார்]

'நன்றுடையானை' என்பதனை முதலாக வுடைய தேவாரத்தின் மூன்றும் அடியாகிய, "சென்றடையாத திருவுடையானை" என்பதனை இரண்டு முறை நான் பேசினேன். ஆயினும், சைவசித்தாந்த மகாசமாஜத்தின் காரியதரிசி இதைப்பற்றி எழுதித் தரல்வேண்டும் என்றமையால் ஒருவாறு சுருக்கி எழுதுகின்றேன். முதலில் இச்செய்யுளுக்கு உரை காண்போம். அஃதாவது,

நன்றுடையானை - அறக் கடலாகிய அந்தணனை,

தீயதிலானை - மறமென்ப தில்லாத மைந்தனை,

நரைவெள்ளேறு ஒன்றுடையானை - அறவிடையென்னும் விடை யொன்றுடையானை,

உமை யொருபாக முடையானை - அருட்சத்தியை இடப்பாகத்தே யுடையானை,

சென்றடையாத திருவுடையானை - இயல்பாக அமைந்த அருட் செல்வ முடையானை,

சிராப்பள்ளி மேய குன்றுடையானை - திரிசிராப்பள்ளி யென்னு மிடத்தே அமைந்த குன்றத்தில் எழுந்தருளி யிருப்பானை,

கூற - வாக்கால் கூறுதலும்,

என்னுள்ளம் - என் மனமானது,

குளிரும் - மகிழும்.

என்பதாம்.

'அறவாழி அந்தணன்' ஆதலால், 'நன்றுடையானை' என்றும், அழிப்பும் இளைப்பாற்றற் காதலால், 'தீயதிலானை' என்றும், எல்லாம் அழிந்த காலத்தும் அழியாத தருமத்தை விடையாக ஆரோகணித் தமையால், 'நரைவெள்ளேறு ஒன்றுடையானை' என்றும், அருட்சத்தியை இடப்பாகத்துக் கொண்டதுரியங் கடந்த மூர்த்தி ஆதலால், 'உமையொரு பாகம் உடையானை' என்றும், அருண்மூர்த்தியாய் உலகமே உருவினனும் எல்லார்க்கும் எல்லாச் செல்வத்தையுந் தந்து நிற்பவனும் ஆதலால், 'சென்றடையாத திருவுடையானை' என்றும், இவ்விதம் எல்லா உலகமும் ஆன இறைவன் ஆன்மாக்கள் உய்யும் வண்ணம் நிலவுலகத்துத் திருக்கோயில்கள் பல கொண்டிருப்பதில் திரிசிராப்பள்ளியில் உள்ள குன்றில் எழுந்தருளி யிருக்கும் திருமூர்த்தியை வாக்கால் கூற என் மனமானது நிரதிசய இன்பத்தைப் பெற்றதுபோல் மகிழும் என்பார், 'சிராப்பள்ளிக் குன்றுடையானைக் கூற என்னுள்ளங் குளிரும்மே' என்றும் கூறினாராயிற்று.

இனிச் 'சென்றடையாத திருவுடையானை' என்று கூறியது எற்றுக்கெனின், ஏனைய தேவர்கள் இவனை வழிபட்டு அடையவேண்டுவனவற்றை யடைவது போல் அடைதல் இல்லாத செல்வன் அதாவது இயல்பாகவே செல்வம்அமைந்தவன் என்பதாம். இதனலன்றே இறைவனை, "மன்னவன்" என்றனர். இதற்குப் பேருரை கண்ட சிவஞான முனிவரர், "வெண்கொற்றக் குடையும், நவமணி முடியும், சிங்காதனமும், மன்னவர்க்கேயுரிய சிறப்படையாளமாம். அதுபோலப் பிரபஞ்சம் எல்லாவற்றிற்கும் மூலகாரணமாகிய ஒரு பெரு வெண்கொற்றக் குடையும், எவற்றையும் ஒருங்கே ஓரியல்பான் அறியும் பேரறிவாகிய ஒரு பெருஞ்சுடர் முடியும், எவற்றினையும் அங்கங்கே உயிர்க்குயிராய் நின்று செலுத்தும் இயல்பாகிய ஒரு பெருஞ் சிங்காதனமும், பிறர்க்கின்றித் தனக்கே உரிமையாகச் சிறந்தமை பற்றி" என்று விதந்து கூறினர். அன்றியும், "விச்சதின்றியே விளைவு செய்குவாய்" என்பது வித்தின்றி விளைவாய் எனப் பொருள் பட்டுத் "திருமேனி கொள்ளும் முறைமை உணர்த்திய தூஉமாம்" என்றமையால் எல்லாம் இயல்பாகவே அமைந்தவன் என்றும், அவனிடத்துள்ள செல்வம் ஏனைய ஆன்மாக்களாகிய மக்கள் முதல் தேவர் என்பார் வரையும் சென்று அடைந்த செல்வம்போ லல்லாது இயல்பாகவே அமைந்த செல்வம் என்பது பொருள் ஆயிற்று. இதனைச் சுருங்க எழுதவேண்டும் என்றமையால் இதனுடன் விடுக்கின்றேன். இனி, இவ் விஷயத்தையே, ஐந்து பெரியோர்கள் எழுதியும், ஒரு பெரியோர் தலைவராக

அமைந்தும் பேசினர். தலைவராக அமைந்து பேசினோர், "சென்றடையாத திருவுடையான்" என்பதற்கு ஆண்டவன் தானே ஆன்மாக்களிடம் சென்று செல்வத்தைத் தருபவன் என்னும் பொருள்படப் பேசினர். முதலாவது எழுதிய திரு. என். துரைக் கண்ணரும், நான்காவது எழுதிய திரு. ஆறுமுகம்பிள்ளையும், ஒருமனத்தராய் 'ஆன்மாக்கள் ஏனைய தேவர்களிடம் சென்று அடையாத செல்வத்தையுடையான்' என்றனர். இரண்டாவது எழுதிய திரு. ஜி. கலியாணம் என்பவர் 'தற்போதத்தோடு ஆன்மாக்கள் சென்றடையாத செல்வன்' என்றனர். மூன்றாவது எழுதிய திரு பொ. முத்தையப் பிள்ளை ஒருவர் தாம், இறைவனுக்கே ஏற்றினர். மற்றும் கடைசியாக எழுதிய திரு. கோவிந்தசாமி முதலியார் முதல் எழுதியவரையும், இரண்டாவது எழுதியவரையும் மறுத்துத் தன் மதம் நாட்டினர்.

இனி, நான் முடிவாகக் கூறுவது என்னெனின், சமாஜ வருடக் கூட்டத்தில் வழக்கம்போல் காரியதரிசி யவர்கள் கொடுக்கும் விஷயத்தைப் பேசுகின்ற விருத்தனாகிய நான் திருவெண்ணெய் நல்லூரிலும் பேசினேன். பேசியதிவிருந்து இத்துணைச் சித்தாந்த சைவர்கள் பேசியும் எழுதியும் முடித்தார்கள். இவ்வித செயல்களுக்குப் பேசியதுபோல் எழுதியும் தரல்வேண்டும் என்னும் காரியதரிசியின் விருப்பத்தின்படி இதை எழுதினேன்.

[குறிப்பு :—இப்பொருள் பற்றிய ஆராய்ச்சி இதோடு முடிவடையும்.—பத்திராசிரியர்.]

---

# சமயக்கேடு

[காழி. சிவ. கண்ணுசாமி, பி. ஏ.]

**ச**மயமென்றெழுந்த ஒவ்வொன்றற்கும் குறைந்த அளவிலோ விரிந்த அளவிலோ சடங்குகள் ஏற்பட்டிருப்பதைக் காண்கின்றோம். இன்பப் பெருக்காம் இறைவன் பால் இயற்கையானெழும் அன்புப் பெருக்கேதுவாக அனைவரும் அவ்வவர்க்குத் தோன்றியவாறு வழிபாடியற்ற முற்படுவதே இயல்பு. நீராட்டியும், பூச்சொரிந்தும், பலியூட்டியும், ஆடியும், பாடியும், அழுதும், அரற்றியும், விழுந்தும், குதித்தும், நகைத்தும், மெய்ம்மறந்தும் மற்றுமிவ்வாறே நெஞ்சுகந்தபடி வழிபாடியற்றுவோர் தவறாகச் செய்கிறார் என்று பகுத்தறிவு வழியானேக்கிற் கூறுதலியலாது. தத்துவவுணர்வு தடித்துக் கூர்ந்து செல்லாத காலத்து இவையெல்லாம் ஒரு படித்தாய் நோக்கப்பட்டிருத்தல் எளிதிற் பெறப்படும். ஆயினும் அவ்வுணர்வும் அதனானெழுந்த உண்மைப் பரம் பொருளின் ஆராய்ச்சி யறிவும் முனைத்து, முதிர்ந்து, உரங்கொண்டு, அறிவாற்றற் கேற்றவாறு சமய நிலை படிப்படியா யுயர்ந்து, அவ்வுயர்ச்சி ஏதுவாகவும் கருத்து வேறுபாட்டினாலும் பல் வேறு உட்பிரிவு எய்துகின்ற காலத்து ஒவ்வொரு உட்பிரிவும் ஒவ்வொரு விதவழிபாட்டை விலக்கியோ அன்றித் தனக்கென ஏற்றுக்கொண்டோ ஒழுகி வரம்பு கட்டிக்கொள்ளுதல் இயல்பு.

# சிவலிங்கம்

[திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளையவர்கள் பி. ஏ. எழுதியது]

சிவலிங்கம் என்னும் தொடர்மொழி யானது சிவம், லிங்கம் என்னும் இரண்டு சொற்களினது சேர்க்கையா லாகிறது; அது சிவமாகிய லிங்கம் அல்லது சிவத்தைக் காட்டும் லிங்கம் என விரியும்.

சிவம் என்னும் சொல் மங்கலம் அல்லது நன்மை என்று பொருள் படும். 'சிவம் நன்மை, குறுணி, முத்தி' என்பது சூடாமணி நிகண்டு. 'எல்லா உயிர்களுக்கும் எப்பொழு தும் நன்மையைச் செய்தலாற் சிவம்' என்று திருக் கோவையாருக்கு உரை எழுதிய பேராசிரியர் கூறுகின்றார். (358-வது பாட்டு). உண்மை அறிவு இன்பம் (சத்து சித்து ஆனந்தம்) என்னும் இம்மூன்றினது நிலைக்களமே சிவமாகும். எப்பொருள், எக்காலத் தும் இல்பொருள் ஆகாமல் உள்பொரு ளாய் அறிவின்றி நிலைபெற்றுள்ளதா யும் தான் எப்பொரு ளிடத்திலும் பற்றின்றி எல்லாப் பொருள்களும் தன்னைப் பற்றாக உடையனவாயும் உள்ளதோ அது சிவம்; எப்பொருள் அறிவு மயமாயிருந்து எல்லா உயிர் களுடைய அறிவை விளக்குமோ அது சிவம். எப்பொருள் எல்லா உயிர்களும் நுகர்கின்ற இன்பத்துக்கு இடமாய் நிற்குமோ அது சிவம். இலிங்கம் என் பது குறி அல்லது அடையாளம் ஆகும்.

சிவலிங்கம் என்பது சிவத்தைக் காட்டும் குறியாகும். உயிர்கள் சிவத் தை உண்மை அறிவினாலே தான் நேரே தன்னறிவினுள்ளே உணர்ந்து அறிய முடியும். அத்தகுதி வாய்க்கப் பெறுமுன் உயிர்கள் அசசிவத்தினது அருட்சத்தி விளக்கமாகிய உலகில் சிவத்தை அறிதற்குக்குறிகள் அமைந் திருக்கின்றன. அக்குறிகள் பின் வரு மாறு:—

சிவன் எட்டு உருவினன். அட்ட மூர்த்தி, அவன் நீர், நிலம், தீ, கால், வெளி, பகலோன், திங்கள், உயிர் ஆகிய இந்த எட்டுப் பொருள்களையும் உருவங்களாக உடையவன். நீர் நிலம் தீ கால் வெளி என்னும் ஐம்பெரும் பூதங்களாலாகிய உலகம் அவனுடைய உருவம். உலகமாகிய உருவம் சிவத் தைக் காட்டுங் குறியாயுள்ளது.

(1 இருநிலனாய்த் 2 தீயாகி 3 நீருமாகி, 4 இயமானனாய் எறியுங் 5 காற்றுமாகி, அரு நிலைய 6 திங்களாய் 7 ஞாயிறாகி, 8 ஆகாச மாய் அட்டமூர்த்தியாகிப், பெரு நலமும் குற் றமும் பெண்ணும் ஆணும், பிறர் உருவும் தம் உருவும் தாமே யாகி, நெருநலையாய், இன் றாகி நாளையாகி, நிமிர்புன் சடையடிகள் நின்ற வாறே.)

என்பது அப்பர் வாக்கு.

உலகம் சிவத்தினது குறியாயிருத் தலால் அது அண்டலிங்கம் என்று கூறப்படுகின்றது. அவ்வுண்மை,

இலிங்கம தாவ தியாரு மறியார்
இலிங்கம தாவ தெண்டிசை யெல்லாம்
இலிங்கம தாவ தெண்ணெண் கலையும்
இலிங்கம தாக வெடுத்த துலகே.

என்று திருமந்திரத்திற் கூறியிருத்தல் காண்க.

ஐம்பெரும் பூதங்களாலாகிய உயிர் களது உடலும், ஒரு சிறிய உலகம். அந்த உடலும் சிவத்தைக் காட்டும் குறியாதலின் அது 'பிண்ட லிங்கம்' என்று கூறப்படும். அவ்வுண்மை,

மானுட ராக்கை வடிவு சிவலிங்கம்
மானுட ராக்கை வடிவு சிதம்பரம்
மானுட ராக்கை வடிவு சதாசிவம்
மானுட ராக்கை வடிவு திருக்கூத்தே

என்று திருமந்திரத்திற் கூறியிருத்தல் காண்க.

# கேவேடரும் கெளிறும்

[வே. மு. ஸ்ரீநிவாஸ முதலியார்]

(1) திருவாசகம் கீர்த்தித் திருவகவ லிடையே "கேவேடராகிக் கெளிறது படுத்தும்" என்ற அடியினுக்கு இது வரையில் பொருள் கண்ட பெரியார்கள் பலருள் திருவாளர் சாமிநாத பண்டிதர் அவர்கள் திருவாளர் நா. வேதாசலம் பிள்ளை அவர்கள் (மறைமலை அடிகள்) காலஞ்சென்ற திருவாளர் கா. இராமசாமி நாயுடு அவர்கள் ஆகிய இவர்கள் மூவரும் "கேவேடர்" என்ற சொல் "கேவர்த்த" அல்லது கைவர்த்த என்ற வடமொழியின் திரிபெனக் கொண்டு "மீன்வலைஞராகி மீனைப்படுத்தும் என்று பொருள் கொண் டிருக்கின்றனர் என்பதனை அறிஞர் பலர் அறிவர்.

(2) அன்றி, திரு. நா. வேதாசலம் பிள்ளை அவர்கள் தாம் எழுதிய உரை நூலகத்தே "இறைவன் வலைஞராய்ச் சென்று படுத்தது சுறவுமீன் என்று திருவிளையாடல் புராணங் கூறுமாயினும் அடிகள் அதனைக் கெளிற்றுமீன் என்று கூறுதலின் அடிகள் கூற்றே கோள்ளற்பாலதாம் என்று எழுதியுள்ளார்கள்.

(3) பிள்ளை அவர்கள் கூறும் அடிகளால் அருளப்பட்ட திருக்கோவையார் என்னும் நூலகத்தே 187 எண்ணுள்ள பாட்டின்கண் "கார்த்தாங்கந் திரைதோணி சுறுக்கடல்மீன் எறிவோர்" என்று கூறி இருத்தலால் அப்பாட்டின் கவிக் கருத்துக்கேற்பப் பொருள் கொள்ளின், அவ்வடிகளின் கருத்தும் சிவபிரான் வலைஞராகிப் படுத்தது சுறவு மீனே என்பதாகும். இவ்வேதுவினால் பிள்ளை அவர்களின் முடிபு பொய்த்தமையினை அறிஞர் பலர் அறிவர்.

(4) ஸ்ரீ வில்லிபுத்தூர், பாரதம் அருச்சுனன் தவநிலைச் சருக்கம் 81. எண்ணுள்ள "நனைமலர்ச் சிதறி" என்ற பாட்டின் கண் "வினைபடு கேழல் வேட்டை நாம் இன்றே வேடராய் ஆடுதல்வேண்டும் என்று சிவபிரான் கூற்றுகக் கூறி இருத்தலை அறிஞர் பலர் அறிவர்.

(5) ஆகையால் "கேழல் வேடர்" என்ற இவ்விரண்டு சொற்களுங் கூடி மரூஉவின் பாத்தியாய்க் "கேவேடர் எனத் திரிந்து நின்றனவாகக்கொண்டு பன்றி வேட்டையராகிப் பன்றியினைப் படுத்தும் என்று பொருள் கொள்ளுதலே சாலச் சிறப்புடைத்தாகும் என்பதனை, நூற்களைப் புரட்டிப் புரட்டிப் படித்து, இந்தச் சொல்லுக்கு அந்தப் பொருள் அந்தப் பொருளுக்கு இந்தப் பெயர் என்று ஆய்ந்துகொண்டிராமல், 'ஊர்களைச் சுற்றிப் பாருங்கள்' என்று படிப்பவரைப் பழித்துப் புத்திபுகட்ட முற்படும் பண்டிதரல்லா அறிஞர் பலர் ஆய்ந்து கொள்வர் என்ற நம்பிக்கையான் இதனை வெளியிடலானேன்.

(கேழல் - பன்றி) களிறு, கெளிறு - பன்றி)

"எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினும் [அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"

[குறிப்பு:— இச்சொற்றொடர் பற்றி ஒரு பக்கத்து மேற்பட்ட ஆராய்ச்சியுரைகள் வெளியிடப்படா - பத்திராசிரியர்.]

வினைக்குத்தக்க பயனை ஒருவன் அடைகின்றான் என்பதையும் வினை செய்தல் ஒரு பிறவியிலும் அவ்வினையின் பயனை நுகருதல் மற்றொரு பிறவியிலும் நிகழ்தல் கூடுமென்பதே உணராததாகும். தமக்குத் தக்கவற்றை அறிந்து உதவுகின்றார் கடவுள், துன்பத்தைக் கொடுத்தாலும் தம்மைப் பக்குவப்படுத்தி உய்வித்தல் பொருட்டே என்னும் கருத்துக்களை மனதில் பதித்துக்கொள்ளல் வேண்டும் என்பதை வற்புறுத்தவே ஆசிரியர் திருவள்ளுவனார்,

அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும்
செவ்வியான் கேடும்நினைக்கப்படும்.

என்று உறுதி கூறிப் போந்தனர். ஆங்கிலத்திலும் (God knows what is best for us) என்பதும் கடைப்பிடிக்கத் தக்கதே. 'வேண்டுவார் வேண்டியதே ஈவான்' என்ற திருவாக்கிற்குப் பொருளினை ஆய்ந்துகொள்ளல் வேண்டும். வேண்டுவார் என்ற சொல்லானது வேண்டும் தகுதியுடையார் என்று பொருள்படும். "தாமென்றும் மனந் தளராத் தகுதியினால் உலகத்துக்கு ஆமென்று சரண்புகுந்தார் தமைக் காக்கும் கருணையினான்" என்ற திருஞானசம்பந்தப் பெருமான் திருவாக்கினால் எக்காலத்தும் மனந்தளராமையும் தான் மனத்தொடு இறைவன் செயல் யாவும் நன்மையே என்று கருதிச் சரண்புகுதலுமாகிய தகுதியுடையோரே இறைவனது சிறந்த கருணைக்குரியவர் என்பது தெளியப்படும். பயன் கருதாது இறைவனை வழிபட்டால் அது கிடையாத போது நாத்திகம் தலை எடுத்தலின் பயன் கருதாது கடவுளை வழிபடுகென பெரியோர்கள் கூறுவாராயினர். பயன் கருதற்கு ஏது ஆசையாதலின் ஆசையற்ற இடத்திலே தான் தெய்வ உணர்ச்சி நிலைபெறும் என்ற கருத்தினைத் தாயுமானப் பெரியார் "நிராசை இன்றேல் தெய்வம் உண்டோ" என்றார். ஆதலால் இறைவனடிக்குப் பயன் கருதாது அன்பு செலுத்துதலே சிறந்த வழி பாடாகும். காதலற்கு அன்பினால் விளையும் இன்பம் போல இறையன்பினால் அடியார்க்கு இன்பம் விளையும். "இறவாத இன்ப" அன்பு என்பதும் அது. இவ்வாறே நமது சமயக்கருத்துக்கள் பிறவற்றையும் ஆய்ந்து உண்மை தெளிக. ஈண்டு அவற்றை விரிப்பில் பெருகும். சைவத்திலே எவ்வுயிர்க்கும் இரக்கம் வைத்தல் சிறந்த கொள்கையாகத் தழுவப் படுதலானும் ஒழுக்கம்பற்றியே உயர்வு என்பது தமிழ்க் கொள்கை யாதலானும் சைவ இளைஞர் யாவரும், அருள் ஒழுக்கமும், விரிந்த நோக்கமும், குற்றம் பொறுக்கும் குணமும், ஒற்றுமையும், விடாமுயற்சியும் உடையவர்களாய்த் திகழ்தல் வேண்டும்.

சைவத்தின் சிறந்த உண்மைகளை உலகத்தில் வெளிப்படுத்தினால் உலகிலுள்ள அறிஞர் யாவரும் அவற்றை மேற்கொள்வர். "ஞால நின்புகழே மிக வேண்டும்" என்ற நமது பரமாசாரியார் திருவுள்ளக் கருத்தினை யாவரும் நிறைவேற்ற முயல வேண்டும்.

சைவ வொளியானது எங்கும் பரவுதற் பொருட்டு சைவ சித்தாந்தக் கலாசாலை, சைவ நூல் நிலையம், சைவ போதகாசிரியர் நியமனம், சைவர் விடுதி, சைவ நூல் வெளியீடு முதலிய பேரறங்கள் முதலியவற்றையும் சைவ ஆதீனத் தலைவர்களும் பிற சைவச் செல்வர்களும் கோயி லதிகாரிகளும் அமைத்து நன்குநடத்திச் சைவர்க்கும் சைவ இளைஞர்க்கும் பேருதவி புரியுமாறு திருவருள் சுரக்கும் பொருட்டு எல்லாம்வல்ல இறைவனை வழுத்துகிறேன். சுபம்.

தொகுதியோடு கலந்திருத்தலின் அதனையே ஆய்தம் என்றார்.

அது மூலமாகிய எழுத்தொலியினோடு கலந்தே ஒலித்தலின் அதனை சார்பெழுத்தென்றார். எல்லாப் பொருளுக்கும் ஆதாரமாய்த் தோன்றாத அடிப்படியாய் அவற்றொடு சார்ந்து நிற்கும் மெய்ப் பரம்பொருளை யுணர்தலே சார்புணர்தல் என ஆசிரியர் திருவள்ளுவனார் மெய்புணர்தல் அதிகாரத்தில் குறித்தமை காண்க. “சார்புணர்ந்து சார்பு கெட வொழுகின் மற்றழித்துச் சார்தரா சார்தரு நோய்” “ சார்பினால் தோன்றாது தானநுவாய் எப்பொருட்கும், ஏனின்று எஞ்ஞான்றும் இன்பம் தகைத்தோர்” என்ற விடத்தும் இக்கருத்து வலியுறுதல் காண்க. எல்லாப் பொருட்கும் சார்பாகிய முதல்வன் அப்பொருள்களின் இயல் பிலனாய் அவற்றின் வேறான தன்மையுடையனாய் இருத்தலின் தனி முதலெனப் படுவன். அவ்வாறு உயிரொடும் மெய்யொடும் சாராது வேற்றியல்புடைய ஆய்தமானது தனிநிலை எனப்படுதல்காண்க.

இனி எப்பொருட்கும் இன்பம் ஈயும் இறைவனின் வேறாக அவ்வின்பத்தைப்பெறும் உயிர்கள் பல என்பதும் தொல்காப்பியத்துட் போந்த கருத்தேயாகும். “வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன்” என்ற விடத்து உயிர்கள் வினை வசப்பட்டு அறிவு மயங்கப் பெறுவன என்பது குறிப்பானறியக் கிடக்கின்றது. வினைக்கு ஏதுவாக எடுக்கும் உடம்பே மெய்யெனப்படுதலின் உயிர் ஊர்ந்து வரும் எழுத்துக்களை மெய்யெழுத்தெனவும் ஊரும் எழுத்துக்களை உயிரெனவும் குறியீடுசெய்து கொண்டமை மிகவும் வியக்கத்தக்கது. மெய்யென்பதே தத்துவம் என்னும் வடசொல்லின் பொருளாகும். தத்துவக் கூட்டமே உலகமாதலின் மெய்யென்ற விடத்து உலகம் சுட்டப்பட்டதென அறிக. இதுவரை கூறியவற்றால் சைவசித்தாந்தத்துட் போந்த முப்பொருளுண்மை தொல்காப்பிய எழுத்ததிகாரத்துள் அமைந்து கிடக்கின்றது என்பது இனிது புலனாகும். இதனைப்பற்றிய விரிந்த ஆராய்ச்சி பிற்காலத்து நூல்களில் காணப்படும். இப்போது நாம் ஒரு தலையாக உள்ளத்தில் பதித்துக் கொள்வது யாதெனில் எல்லாம்வல்ல முழு முதற் கடவுள் ஒருவன் உண்டென்பதும் அவனன்றி ஓரணுவும் அசையா தென்பதும் ஆகிய முடிந்த உண்மைகளே யாம். இக்கருத்தினையே வடமொழி உபநிடதங்களும் பாரசீகப் பண்டைப் பல்நூல்களும் கிரேக்க தத்துவ நூலும் வெவ்வேறு வகையாகப் பகர்கின்றன. தற்காலத்திலே மேல்நாட்டுத் தத்துவ உணர்ச்சி சான்றவர்கள் அறிவுடையோர் முழுமுதற் பொருளே அறிவில்லாத பொருட் பிண்டமாகிய உலகத்திற்கு ஆதாரமாய் புள்ளதென்பதை முடிவாகக் கைக் கொண்டுள்ளார்கள். இம்முடிந்த வுண்மையை அறியாத பலர் இக்காலத்திலும் முற்காலத்திலும் நாத்திக வாதம் பேசி யொழிந்தனர்.

கடவுள் உண்மை உணர்ச்சிக்குத் தடையாய் நிற்பனவற்றுள் ஒன்று யாதெனில் மக்களது முற்றுப்பெறாத அவாவேயாம். நினைந்ததொன்றுமுடிய வேண்டுமென்று கருதுபவன் கடவுளை வணங்கியும் அது முடிவு பெறாத விடத்து நாத்திக வாதத்தை மேற்கொண்டும் நிற்கின்றான். தான் செய்

தொழில், வணிகம் முதலியவற்றின் சார்பான கலைகளை எல்லாம் தொழிற் கலை எனலாம். ஐம்புலனிற்கும் மன திற்கும் இன்பம் பயக்கவல்ல பாட்டு, இசை, கூத்து, ஓவியம், சிற்பம் முத லிய அழகினைச்சிறப்பிக்கும்கலைகளெல் லாம் கவின் கலை எனப்படும். இனி மெய்க்கலை என்பது தோன்றும் பொ ருள்களின் தன்மைகளை ஆராயும் கலை எனவும் தோன்றும் பொருள்களுக் கெல்லாம் அடிப்படையாயுள்ள முடி வான உண்மைப் பொருளை ஆயும் முடிந்த மெய்க்கலை எனவும் இரு திறப்படும். முன்னவற்றை அறிவியல் நூலின் (Science)பாலனவாகவும் பின் னவற்றைத் தத்துவ நூலின் (Philosaphy) பாலனவாகவும் மேல் நாட் டினர் கருதுவர். இன்னொரு முறை யாகப் பார்க்குமிடத்து உலகத்தின் ஒவ்வொரு பகுதியையும் வகுத்து வகுத்து ஆயும்முறை அறிவியல் நூல் என்றும், எல்லாப் பொருளும் தொக்க பிண்டமாகிய உலகத்திற்கு ஆதாரம் யாதென்று ஆயும் முறை தத்துவநூல் முறையாகவும் கொள்ளப்படும்.

தத்துவநூல் ஆராய்ச்சியில் நமது முன்னோர் தலை சிறந்து விளங்கினர். அஃதே சமய உணர்ச்சிக்கு ஆதார மாக உள்ளது. எக்கலையினும் மெய்க் கலை உயர்ந்ததாலும் அதன் கண்ணும் முடிந்த மெய்ப்பொருளை ஆய்ந்தறியும் சமயக் கலையானது மிக மேம்பாடு உடையது ஆதலானும் சமயக்கலையின் பயனையே கல்வியின் விழுமிய பெரும் பயனாக ஆசிரியர் திருவள்ளுவர் முத லிய பேரறிஞர்கள் அறுதியிட்டு உரைத்தனர்.

கற்றதனா லாய பயனென் கொல்
வாலறிவன்—நற்றாள் தொழா அரெனின்

எழுத்தறியதீரும் இழிதகைமை தீர்ந்தோன்
மொழித் திரத்தின் முட்டறுப்பான் ஆகும்
மொழித் திரத்தின் முட்டறுத்தநல்லோன்
[முதனூற்
பொருளுணர்ந்து கட்டறுத்து வீடு பெறும்.

என்ற விடத்து இலக்கண இலக்கியங் களின் குற்றமற்ற பயிற்சியினது முடி ந்த மெய்ந்நூற் பொருளுணர்ந்து பற்று நீங்கி வீடு பெறுதற்குக் கருவி என்று கூறியது காண்க.

முடிந்த மெய்க்கலையின் சாரமே சைவத்தின் உட்கிடையாம். தென்னாடு டைய சிவனே போற்றி என்பதற் கேற்ப சிவநெறியானது பண்டைத் தமிழரது சமய நெறியாய் நிலவின மையான் அதன் உயிர் கருத்துக்கள் தொல்காப்பியம், திருவள்ளுவர் முத லிய பண்டைத் தமிழ் நூல்களில் பொதிந்து கிடப்பதை வைத்து இறுதி ஊகிக்கப்படும். தொல்காப்பியமானது இப்பொழுதுள்ள வடமொழி வியா கரணமாகிய பாணினியம் இயற்றப் படுதற்கு முன்னே தோன்றி மறைந்த ஐந்திரத்தினோடு ஒத்தகாலத்ததெனக் கருதுமிடத்து அதன் பழமை நன்கு புலனாகும். அத்துணைப் பழமையாகிய காலத்தைக்கடவுள் உயிர்உலகம் என்ற முப்பொருள் உண்மை தமிழ் நாட் டிலே எங்கும் வழங்கிவந்தது என்பது அவற்றின் சார்பாகிய சொற்களை எழுத்துக்களுக்கு உருவகப் பெயர் களாக ஆசிரியர் தொல்காப்பியனார் கொண்டமையால் இனிது விளங்கும். ஆய்தம், உயிர், மெய் என்ற மூன்று சொற்களையும் உற்றுநோக்குக. ஆய்தம் என்பது நுண்ணிது என்று பொருள் படும். எல்லா எழுத்தொலிகளும் தோன்றுதற்கு அடிப்படையாய்உள்ள மூச்சானது நுண்ணிதாய் எழுத்தொலி புலனாதற்கு ஏதுவாகிய காற்றுத்

மையினாலும், அறியாமை யினாலும், வஞ்சகத்தினாலும், பொருள் வருவாய் கருதியும் சமயஉண்மைகளையொதுக்கி உள்ளீடற்ற வெளிச் சடங்குகளையே குறிக்கொண்டு காத்துவர முற்பட்டால் சமயக்கேடு திண்ணமாய் எய்தும் என்று கூறவும் வேண்டுமோ? சமயக்கேடு தொடங்கவே ஒவ்வொரு சமயத்தின் அடிப்படையா யமைந்த பொன்னனைய உயர்ந்த கொள்கையான "இறைவன் திருமுன் எவ்வுயிருஞ் சமம்" என்ற கொள்கைமாறுபட்டு ஒவ்வொன்றிலும் உயர்வு தாழ்வு என்ற வேற்றுமை தோன்றுகிறது. பிறப்பில் வேற்றுமை, பிழைப்பில் வேற்றுமை, வழிபாட்டிலும் வேற்றுமை என்றித் தொடக்கத்தன எத்துணை வேற்றுமைகள்? உண்மை யிது பொய்ம்மை யிது என்றுணர முடியாதபடி சூழ்ச்சிகள் வலுத்து, வேடங்கள் மல்கிச் சமய உணர்ச்சிக்கும் அறிவுக்கும் இன்றியமையாத நேருணர்வு (Straight thinking) கெட்டு விடுகிறது.

"பொய்த்தவ வேடர் கைத்தகப் படுத்தற்கு
வஞ்சச் சொல்லின் வார்வலை போக்கிச்
சமயப் படுகுழி சமைத்தாங் கமைவயின்
மானிட மாக்களை வலியப் புகுத்தும்
மாணு விரதத் தகப்படுத் தாழ்த்தும்
வளை வுணர்வு"

எங்கும் பரநது தலைவிரித்தாடுகிறது.

இதுகாறுங்கூறியவாற்ருன் மாசற்று எழுந்த ஒரு சமயம் குருமார்களின் தன்னலம், தெய்வத் திருவிளையாடல் களில் வஞ்சகத் திரிபு, சமய சாத்திர உண்மைப்பொருளை மறைத்தல் ஆகிய புற வேதுக்களால் எவ்வாறு கேடுறுகின்றது என்பதை ஒருவாறு காட்டினும்.

---

# சைவ இளைஞர் மகாநாடு

## தலைவர் பேருரை

[கா. சுப்பிரமணியம் பிள்ளை எம். ஏ., எம். எல்.]

சைவ இளைஞர் பொருட்டு முதல் முதல் கூட்டப்படும் இம்மகா நாட்டிற்கு என்னைத் தலைமை பூணும்படி கேட்டமைக்குக் காரணம் இளைஞரைப் போல பயிற்சி போதாமை என்பால் காணப்படுதல் போலும். நான் அதற்கு இசைந்தது எதனாலோ எனின் இளைஞர்பாலுள்ள உள்ளக்கிளர்ச்சி, களங்கமின்மை, விடாமுயற்சி முதலிய பல நற்பண்புகளைப் பெற்றுக்கொள்ளுதற்கும் அன்னார்க்கு அறிவுரை பகர வந்துள்ள மாட்சிமை தங்கிய பேரமைச்சர் முதலிய பெரியோரது பயிற்சி மிக்க போதனையின் பயன் கொள்ளுதற்கும் வாய்ப்பு அமைதலின் என்க.

இம்மகா நாட்டைத் திறந்த பேரமைச்சரது அறிவுரைகளின் விளக்கமாக யான் செப்பும் சிற்றுரையைக் கருதுக. இளமைப் பருவமானது எல்லா நலத்திற்கும் வித்திடும் பருவமாதலின் எல்லா நலத்தையும் விளக்க வல்ல கல்வியினை இளமையிற் பயிலுதல் வேண்டுமென்று நமது முன்னோர் கூறினர். 'இளமையிற் கல்வி சிலையிலெழுத்து' என்பதைக் காண்க. கற்கும் கலைகளை எல்லாம் தொழிற்கலை, கவின்கலை, மெய்க்கலை என மூன்றாகப் பிரித்தல் கூடும். உடல் வாழ்க்கை நிலை பெறுதற்கு வேண்டும் ஊதியங் கருதிப் பயிலப்படும் உழவு, கைத்

வினரின் பல பகுதியினரிடத்தும் தோற்றமுறுகிறது. கடவுட் பணியிலேயே என்றென்றும் ஈடுபட்டுக் கிடப்பதனுலோ அன்றி அப்பணி யாற்றுவதில் வேண்டியும் வேண்டாமலும் பல்லாற்ருனும்வரும் நன்பொருள் மிகுதியினுலோ, அன்றியும் எந்தை குருவாகையால் யானுங் குருவாதலைத் தடுப்பார் யாருமிரார் என்ற ஒரு நம்பிக்கையினுலோ மற்றிவை போன்ற எதனுலோ முதன் முதலாகப் பிரித்தமைக்கப்பட்ட குருக் குழாத்தினரிடைக் காணக்கிடந்த உண்மைச் சமயப்பற்று ஒடுங்கி, கடவுட் பணியாற்றும முறைகளிற் பயிலும் பயிற்சிகள் குறைந்து, வெறும் வெளிச சடங்களவானே பணியை முடித்துக்கொண்டு உறங்க விழையும் இழுக்கம் குருமார்களிடத்தும் பெரும்பாலும் அவர்கள் கால்வழி வருவோர்களிடத்தும் குடிகொள்கிறது.

“ சத்தியமின்றித் தனிஞானந் தானின்றி
யொத்த விடயம் விட்டோரு முணர்வின்றிப்
பத்தியுமின்றிப் பரனுண்மை யின்றியூண்
பித்தேறு மூடர் ”

பலர் பெருகிக் குருமார்களா யமைந்து கடவுட் பணியாற்ற முன் வருவரேல் அவர்களை நம்பிக் கடைத்தேறவெண்ணினுல் அது “குருடுங் குருடுங் குருட்டாட்டமாடிக் குருடுங் குருடுங் குழிவிழு’, வதையன்றே ஒக்கும்? இத்தகையோரால் இறைவழிபாட்டிற்குத் துணைக் கருவியாய்க் கோலப்பட்ட சடங்குகள், தன்னலமும் பொருள் வருவாயும் மக்கள் தம் அறியாமையுங் கருதி முதற்கருவியாக மாறிச் சமய வழிபாடெனக் காட்டப் பெறின் ஒரு சமயம் கீழறுபட்டுச் சிதைந்து போவது திண்ணம் என்று கூறவும் வேண்டுமோ?

இவ்வாறு தம்மாட்டுச் சமயப்பற்று அருகி ஊக்கங் குன்றி வருவதையறிந்த காலத்து எங்கே தம்மாற் பிணிப்பு நெகிழ்ந்து விடுமோ வென அஞ்சியவராய்க் குருக்குழாத்தினர் தெய்வத் திருவிளையாடல்களாகவும் அற்புதச் செய்கைகளாகவும் சமய நூல்களிடைக் காணக் கிடக்கும் ஒரு சில மறுக்கொணு உண்மைகளை ஒன்று பலவாகப் பெருக்கியும், காலத்திற் கேற்றவாறும் மக்களறியாமைக்கேற்றவாறும் திரித்தும் கூறியோ அன்றி அவ்வப்போது உண்டானதாகக் காட்டியோ தம் புல்லிய வாழ்க்கைக்கு அரண் கோலிக்கொள்ள முற்படுகின்றனர். இதனைக் கண்ட ஏழைமக்களும் வஞ்சகமறியாது அவையே உண்மை யென நம்பி ஏமுறுகின்றனர். இதனுல் மறுக்கொணுத வையாயெழுந்த அவ்வொரு சில திருவிளையாடல்களும், அற்புதச் செயல்களும் ஊடுருவிப் பார்க்க முயலுவோர் கண்களில் முதலில் வெறும் பகட்டாகவே காணப்பட் டொழிகின்றன. இதைவிட ஒரு சமயத்தின் வேரையறுக்கும் சுரிகையும் வேறுண்டோ?

இறுதியாகக் கூறிய வேதசாத்திர உண்மைப் பொருளை வெளிப்படையாக விளக்கி யறிவு புகட்டாது தன்னலங் கருதி அதனை மறைபொருளாக்கி வைத்துக்கொண்டு வருவதனுலாய தீமைகள் வெளிப்படையாகலின் இங்கு விரிக்காது விடுக்கின்ருேம்.

இவ்வாறு வேலியே பயிரை யழித்ததுபோல் சமய வளர்ச்சிக்கெனத் தேர்ந்து அமைக்கப்பட்டவர்களே மடி

அவ்வாறு ஒவ்வொரு சமய உட்பிரிவும் தனித்துக் கால்கொண்டு தழைத்தோங்கப் புகுங்கால் குறித்த சில ஒழுக்கங்களையும் வழிபாட்டு முறைகளையும் தேர்ந்து மேற்கொண்டு அவைகட்கு மேற்கோளாகப் பலப்பல நூல் விதிகளையும் தேடியமைத்துக்கொண்டு அவ்வழிபாட்டினை முறையே இடைவிடாம லியற்றி வருமாறு ஒரு குழுவினரையும் பிரித்தமைத்துக் கொண்டவுடன் அது ஒரு தனிச் சமயமாக நிலை பெறுகிறது. இவ்வாறே தான் ஒவ்வொரு சமயமும் தனக்கென்றே சடங்குகள் கரணங்கள் என்பனவற்றையும், சமய சாத்திரங்கள், வேதங்கள், ஆகமங்கள் என்பனவாதிய நூல்களையும், கடவுட் பணியாற்றும் ஒரு குழுவினரையும் அமைத்துக் கொண்டுளதென்று கூறலாம்.

இனி, பெருமுயற்சி யெடுத்து இவ்வாறு ஒரு சமயத்தை நிறுவியபின் அம்முயற்சியாளர் தாங்கொண்ட கருமம் முடிவுபெற்றதாகக் கருதி மடியினை மேற்கொண்டு அச்சமயத்தின் பிற்கால நடைமுறையையும் ஆய்ந்து நோக்க வேண்டும் என்றதோர் உணர்ச்சியேயின்றிச் சமய வளர்ச்சியை அதற்கென முன்னர் பிரித்தமைத்த குழுவினராகிய குருமார்களிடம் ஒப்பித்து வாளாவிருந்துவிடல், ஒவ்வொரு சமய வரலாற்றினுங் காணக் கிடைப்பதோர் உண்மையாகும். பசி வேளையில் எதிர்கொண்டழைத்துச் சமைத்த உணவை முன்னிருந்து ஊட்ட வேறெத்தகைய உழைப்புமின்றி அதனை யுட்கொள்ளுவதனாலாய களைப்பு தொண்டருக்கும் சொற்ப நேரமிருக்கு மென்று கூறுவரேல் நீராப் பசிகொண்ட பல்லாயிரம் உயிர்கட்கு ஆராவமுதளிக்கும் ஒரு சமயத்தை நிறுவியதனாலாய களைப்பு எத்துணை சொற்ப காலம் இருக்க வேண்டும்? அதனை ஒரு கற்பகாலமென்றே கணக்கிட்டுக் கொள்ளுதலுந் தவறுமோ? இவ்வாறு களைமலிந்து கிடக்கும் ஒரு கற்ப காலமுழுதும் முன்னெழுந்த சமயமானது தன் சீர்குலைந்து அச்சுக்கெடா திருந்துவருமென்று கொள்ளவுங் கூடுமோ?

இனி, மடி மிகுந்து களைமலிந்து கிடக்கும் ஒரு காலத்தில் ஒவ்வொரு சமயமும் கேடுறுதற்குச் சிறந்த ஏதுக்களாய் இதுகாறும் எந்நாட்டிலும் இருந்து வந்தனவாகக் காணக்கிடப்பனவும் இனியும் இருக்கக் கூடியவையாகக் கருதக்கிடப்பனவும் மூன்றாகும். அவை குருமார்களின் தன்னலம், தெய்வத் திருவிளையாடற்றிரிபுப் பெருக்கம், வேதசாத்திர மறைபொருள் என்பனவே. இவை ஒவ்வொன்றையும் ஒரு சிறிது விளக்குவாம்.

மூன்றினுந் தலையாயது குருமார்களின் தன்னலங்கருதும் இழிதகைமையே. சமயங்கண்ட பெரியார்கள் மாண்டு மடிந்ததாலோ அன்றி மங்கியோய்ந்ததாலோ, கடவுட் பணியாற்றுவதற்கென அவர்களால் முதற்கண் தேர்ந் தமைக்கப்பட்ட குருமார்கள் நாளேற வேறத் தாமே கடவுளர்க்கும் மக்கட்கும் இடையே இருப்பதாகிய தொடர்பை ஆக்கியளித்து அழிக்கும் ஆற்றல் வாய்ந்தவர்களென்று கூறிப் பகடியடிக்க முற்படுவர். அதனைப் பகடியெனக் காணல் வேறு பல அனுவலிற் படிந்துகிடக்கும் ஏழை மாந்தர் கட்கரிதாகும். இப்பகடி தானும் சிறுகச் சிறுக, சமயத்தலைவர்கள், கடவுட் பணியியற்றும் ஆசாரியர்கள், மறைகிளக்கும் ஓதுவார்கள் என்ற இக்குழு

கவோ துக்கத்தின் குறிகளாகவோ தோன்றவில்லை. ஆன்மா வானது, ஸ்தூலதேகத்தோடு இதுகாறும் வைத்திருந்த கூட்டுறவைச் சாசுவதமாக விலக்கிக் கொள்கிறதென்றே தோன்றியது.

ஸ்தூல தேகத்தின் தலையைச்சுற்றி அழகிய, மிருதுவான, பருத்த ஓர் ஒளி சூழ்ந்து கொண்டது. மூளையும் சிறு மூளையும், தங்களுடைய உட்புறங்களை விரித்துக் கொண்டன. அவை தங்கள் தாதுத்தொழில்களைச் செய்யாமல் நின்றொழிவதை நான் பார்த்தேன். உடனே இவைகளுக்கு மின்சார தாதுவும், காந்த தாதுவும் உண்டாகி, கீழ்த்தரப்பட்ட தேக அமைப்புகளில் ஊடுருவிப்பாய்ந்தன. சாதாரண தேகாரோக்கியத்தின் போது, மற்ற சிற்றங்கங்களைவிட மூளைக்கு எவ்வளவு உறுதி உண்டோ அதைவிடப் பதின்மடங்கு அதிகமான உறுதியை அம்மூளையானது மரணத்தறுவாயில் பெற்றது.

## ஜீவன் பிரிவு

பிறகு, மரணம், அதாவது ஸ்தூல தேகத்தினின்று ஜீவன் பிரிவு தொடங்கியது. மின்சாரம், காந்தம், இயக்கம், ஜீவன், உணர்ச்சி ஆகிய இவைகளின் தத்துவங்களை மூளையானது தனக்குள்ளே யிருக்கும் பல அறைகளில் ஆகர்ஷிக்கத் தொடங்கியது. சிரசு, மிகுந்த பிரகாச மடைந்தது. மற்ற இந்திரியங்கள் எவ்வளவுக் கெவ்வளவு குளிர்ச்சி யடைந்தும், இருளடைந்தும் போயினவோ அவ்வளவுக்கவ்வளவு மூளையானது பிரகாசத்தையும் சோபிதத்தையும் அடைந்தது.

மேற்படி ஸ்திரீயின் தலையினின்று எழுந்து அதைச் சூழ்ந்து கொண்டிருந்த பழுத்த நிறமுள்ள தெய்விகச் சூழலில், வேறொரு தலை அமைந்து கொண்டு வருவதை நான் பார்த்தேன். ஆன்ம உணர்ச்சி பெற்றவர்களுக்கே, இந்த இந்திரியாதீதமான நிலைகள் புலனாகு மென்பதையும், ஸ்தூலக் கண்கள் ஸ்தூல வஸ்துக்களையே பார்க்க முடியு மென்பதையும்வாசகர்கள் நினைவிலிருத்திக்கொள்ள வேண்டும். இஃது இயற்கைவிதி. மேலே கூறப்பட்ட புதிய தலையானது, வரவர நன்றாகத்தெரியத் தொடங்கியது. அதனை ஊடுருவிப் பார்க்க முடியாதபடியும், அதனை உற்று நோக்க முடியாதபடியும் அவ்வளவு சிற்றடக்கமாயும் பிரகாசமாயும் அந்தத்தலை இருந்தது. அந்த ஞானத் தலையானது அமைந்து கொண்டிருக்கையில், ஸ்தூலத் தலையைச் சூழ்ந்து கொண்டிருந்த ஒளிச் சூழலானது, கலக்கமடையத் தொடங்கியது. மேற்படிஞானத்தலை நன்றாக அமைந்ததும், இந்த ஒளிச்சூழல் மெதுமெதுவாக மறைய ஆரம்பித்தது. இதனால், மேற்படி ஒளிச்சூழலின் தத்துவங்கள், பிரிக்கக் கூடாதனவா யிருக்கின்றன வென்பதை நான் அறிந்து கொண்டேன். பிறகு மேற்படி ஞானத் தலையானது, எப்படித் தனியாகப் பிரிந்து அமையத் தொடங்கியதோ அப்படியே, படிப்படியாக கழுத்து, புஜங்கள், மார்பு முதலிய எல்லா அவயவங்களும் அமையத் தொடங்கின. இதனால், மனிதனுடைய தெய்விகத் தன்மை அமைவதற்குக் காரணமாயுள்ள எல்லா அணுக்களுக்குள்ளும் ஒருவித ஒருமைப்பாடு நிகழ்வது நன்கு புலனாகிறது.

அந்த ஸ்திரீயின் ஆன்ம தத்துவங்களும், சக்திகளும் ஒற்றுமைப் படுத் தங்களை அமைத்துக் கொண்டதே, அவளுடைய ஆன்ம அமைப்பு வெளிப்படுவதற்கும் ஒழுங்குபடுவதற்கும் காரணமாயிருந்தது. அவளுடைய ஸ்தூல தேகத்தில் காணப்பட்ட குறைகள், அவளுடைய சூக்கும சரீரத்தில் காணப்படவேயில்லை. அதாவது, அவளுடைய ஸ்தூல சரீரம் சரியானபடி அமைவதற்குப் பரம்பரையான தடைகள் என்னென்ன இருந்தனவோ அவையாவும் இப்பொழுது விலகிப் போகின்றன. இதனால், அவளுடைய சூக்கும தேக அமைப்பானது, மற்றப் பிரபஞ்சசிருஷ்டிப் பொருள்களின் போக்குப்படி, மேற்கண்ட தடைகளுக்கு மேற்பட்டதாய், தன்னை விகாசப்படுத்திக் கொள்ள முடிந்தது.

## சூக்கும சரீர அமைப்பு

சூக்கும சரீரமானது, மேற்கூறிய விதமாக அமைந்து கொண்டிருக்கையில், ஸ்தூலசரீரமானது தொந்தரவையும் துன்பத்தையும் அநுபவித்துக் கொண்டு வந்ததாக அறையிலிருந்த மற்றவர்களின் வெளிப் பார்வைக்குத் தென்பட்டது. ஆனால் உண்மையில், தேகத்தின் உட்புறமாயுள்ள உயிர்ச் சக்திகள் மூளைக்குச் சென்று அங்கிருந்து வேறொரு வழியாக அமைவதன் பயனாகவே, மேற்படி துன்பநிலை உண்டாகிறது.

ஸ்தூலதேகத்தின் தலைக்கு நேராக ஜீவனானது கிளம்பியது. ஆனால் ஸ்தூல தேகத்திற்கும் சூக்குமதேகத்திற்கும் நிரந்தரமான பிரிவு ஏற்படுவதற்குச் சற்று முன்னர், உயர்நிலையிலிருக்கும் சூக்கும சரீரத்தின் காலுக்கும், படுத்துக்கிடக்கும் ஸ்தூலதேகத்தின் தலைக்கும் இடையே ஓர் ஒளி அல்லது மின்சார சக்தி ஓடிக்கொண்டிருந்ததை நான் பார்த்தேன். தாழ்ந்த நிலையிலுள்ள ஜீவனானது, உயர் நிலையை அடைவதையே மரணமென்று சொல்லப்படுகிறதென்று அப்பொழுதே தெரிந்து கொண்டேன்; கீழான சரீரத்திற்கும், கீழான வாழ்க்கைக்கும் பதிலாக, உயர்வான சரீரத்தையும் அதற்குரிய சக்திகளையும் ஆனந்தங்களையும் அடைவதையே மரணமென்று கூறுவதாக அறிந்து கொண்டேன். இந்தப் பூவுலகத்தில் ஒரு குழந்தை பிறப்பதும் ஸ்தூல தேகத்தினின்று ஜீவன் பிரிந்து சென்று வேறோர் தேகமாக அமைவதும் எல்லா அம்சங்களிலும் ஒன்றாகவே இருக்கிறது. புதிதாகப் பிறக்கும் குழந்தைக்குக் கொப்பூழ்க்கொடி எப்படி இருக்கிறதோ, அப்படியே சூக்கும சரீரத்திற்கும், மேலே கூறப்பட்ட மின்சார சக்தி நூலானது இருக்கிறது. இந்த மின்சார சக்தி நூலானது, சில நிமிஷங்கள் வரை, ஸ்தூலதேகத்தையும் சூக்கும தேகத்தையும் சம்பந்தப் படுத்தி வைத்துக் கொண்டிருந்தது. பிறகு இந்தநூல் அறுபட்டதும், மேற்படி மின்சார சக்தியின் ஒரு சிறு அம்சம், கீழே படுத்துக் கிடக்கும் ஸ்தூல தேகத்தை வந்து சேர்கிறது. இந்தச் சக்தியானது, தேகத்தின் எல்லாப் பாகங்களிலும் சென்று தங்குவதால், தேகம் உடனே சீர்குலையாமலிருக்கிறது.

ஸ்தூலதேகம நன்றாகக் கெட்டுப் போகத் தொடங்கிய பிறகே, அதனை மண்ணில் புதைக்க வேண்டும். மேலே

நான் குறிப்பிட்ட கொப்பூழ்க் கொடியானது, சில சமயங்களில் அறுபட்டுப் போவதில்லை; ஸ்தூல தேகத்திற்கும் ஜீவனுக்கும் நுண்ணிய சம்பந்தம் இதன் மூலமாக ஏற்பட்டிருக்கிறது. சிலர், இறந்துபோன சில நாட்களுக்குப் பிறகோ அல்லது சில மணி நேரத்திற்குப் பிறகோ,—ஒரு பிரயாணத்தி லிருந்து அமைதிடாகத் திரும்பி வருவதைப் போன்று—உயிர் பெற்றுத் தங்கள் சூட்சும உலக அநுபவங்களைக் கூறுவதன காரணம் இதுவேயாகும். இதனையே சுழுத்தி அவஸ்தை யென்றும, மூடுசென்னியென்றும், தூங்கிக் கொண்டே நடத்தலென்றும், ஆன்ம பரவசமென்றும் பலவிதமாகக் கூறுகின்றனர். இந்த நிலைகளில் பல விதப் பாகுபாடுகள் உண்டு. ஆனால், ஆவியானது, தேகத்தினின்று செல்லாமல் தடுக்கப்பட்டு, சில மணி நேரமோ, அல்லதுசில நிமிஷங்களோ மத்தியமான ஒரு நிலையில் வைக்கப்பட்டிருந்தால், அப்பொழுது மனதில், முன்னைய அநுபவத்தின் ஞாபகம நிலைத்து நிற்பதில்லை. இந்த ஞாபக மறதியே, ஆன்மா அழிவற்றது என்ற கொள்கை மறுக்கப் படுவதற்கு ஆதாரமாகக் காண்பிக்கப் படுகிறது.

நுண்ணிய கொப்பூழ்க் கொடி அல்லது மின்சாரக்கம்பி மூலமாக மட்டும், தேகத்தின் மீது தனது ஆதிக்கத்தை நிலை நிறுத்திக் கொண்டு, ஜீவனானது, ஸ்தூல தேகத்தினின்று அடியோடு பிரிந்துவிட்ட பிறகே, அந்த ஜீவன், இந்தத் தேகத்தையும் அது சம்பந்தமான விஷய வாசனைகளையும், மணிக் கணக்காகவோ, நாட்கணக்காகவோ விடுத்திருக்க முடிகிறது. பிறகு சந்தோஷமான நினைவுகளுடன் பிரபஞ்ச வாழ்க்கைக்குத் திரும்பி வர முடிகிறது.

## ஜீவனின் அநுபவங்கள்

ஆன்மா, ஸ்தூல தேகத்தினின்று பிரிந்தபிறகு என்னென்ன நிலையையடைகிற தென்பதை நான் கூர்மையாகக் கவனித்து வந்தேன். முதலில் பூமிக்கடுத்த நிலையிலுள்ள சிதாமிசத்தைச் சிறிது கஷ்டத்துடனேயே நுகர ஆரம்பித்தது. ஆனால் சில விநாடிகளுக்குள், மிகுந்த சுலபமாகவும், சந்தோஷமாகவும் இயற்கையின் சித்துத் தத்துவங்களை இழுக்கவும வெளிவிடவும் அதற்குச் சாத்தியமாயிற்று. பிரபஞ்ச வாழ்க்கையில் ஈடுபட்டிருந்தபோது அந்தப் பெண்மணிக்கு எந்தவிதமான தேக அமைப்புகள் அமைந்திருந் தனவோ, அதைவிட எல்லா அம்சங்களிலும் அழகுடைய தாயும் அபிவிருத்தி யடைந்ததாயுமுள்ள சூக்கும சரீரம் ஏற்பட்டிருப்பதை நான் இப்பொழுது கண்டேன். அதாவது மரணத்திற்கு முன்னிருந்தவைகளைப்போல் இப்பொழுது இதயம், வயிறு, ஜீரணப்பை, சுவாசப்பை முதலியன யாவும் காணப்பட்டன. இஃது ஆச்சரியமான, ஆனால் ஆறுதல் அளிக்கக்கூடிய உண்மை!

அவளுடைய சூக்கும சரீரத்தில் காணப்பட்ட அபிவிருத்திகள் அதாவது மாற்றங்கள், அவ்வளவு குறிப்பிடத் தக்கனவாகவோ, சமய இயல்பைக் கடக்கக் கூடிய விதமாகவோ இல்லை. மற்றும், அவை அவளுடைய இயற்கைத் தோற்றத்தையோ, உலக இயல்புகளையோ அடியோடு மாற்றவில்லை. அவள் பழையபடியே இருந்தாள். அவளுடைய நண்பர்கள் பார்த்

தால், நோய்வாய்ப்பட்ட ஒரு நண்பர் நம்மைவிட்டுப் பிரிந்துசென்று பிறகு தேகாரோக்கியத்துடன் திரும்பி வந்தால் நாம் எப்படி ஆச்சரியமும் சந்தோஷமும் அடைவோமோ அப்படியே, “ஓ! இப்பொழுது நீ எவ்வளவு நன்றாகக் காணப்படுகிறாய்! எவ்வளவு அபிவிருத்தி யடைந் திருக்கிறாய்!” என்று கூறுவார்கள். சூக்கும சரீ[illegible] [illegible]ரல காணபபட்ட [illegible] கள அவ்வளவு அழகுடையவைகளாக இருந்தன.

சூக்கும உலக வாழ்க்கைக்குரிய புதிய தத்துவங்களுக்கும், உயர்ந்த உணர்ச்சிகளுக்கும் அவள் தன்னைப் பழக்கப்படுத்திக் கொள்வதை நான் பார்த்தேன். புதிய விழிப்புப்பெற்ற, விரைவான விகாசத்தை அடைந்து கொண்டிருக்கிறதான அந்த ஆன்மாவின் உணர்ச்சிகளை நான் குறிப்பாகக் கவனிக்கவில்லை. ஆனால், ஸ்தூலசரீரத்திலிருந்து சூக்கும தேகத்திற்கு மாறுகிறபொழுது அவள் ஒரேவித நிதானத்தைப் படைத்திருந்தாள். பிரபஞ்சத்தைவிட்டு அவள் பிரிந்துசென்றதற்காக அவளுடைய குடும்பத்தினரின் ஓயாத புலம்பலில் அவள் கலந்து கொள்ளவில்லை. சில்லிட்டுப் போன, உயிரற்ற ஓர் உருவத்தைக் கண்டே அவர்கள் அழுகிறார்கள் என்பதை அவள் ஒரே பார்வையில் கண்டுகொண்டாள். அவர்களுக்கு, மரணத்தைப் பற்றிய உண்மையான ஞானமின்மையினாலேயே, ஸ்தூல சரீரத்தின் பிரிவுக்காக வருந்துகிறார்கள் என்பதையுந் தெரிந்து கொண்டாள்.

மனித சமூகத்தைச்சேர்ந்த பெரும்பாலோர் மரணத்தைப்பற்றி மேற்போக்கான ஞானம் படைத்திருப்பதனாலேயே, நண்பர்களோ உறவினரோ ஸ்தூல தேகத்தினின்றும் பிரியும்போது அதிகமாக அழுகிறார்கள். இவர்கள், ஸ்தூல தேகத்தின் மரணம், ஜீவனின் அழிவு என்று கருதுகிறார்கள். ஒரு மனிதன் இயற்கையான மரணத்தை யடைந்தால், ஆன்மா எவ்விததுன்பத்தையும், அநுபவிப்பதில்லை யென்று உண்மை அறிய விழைவோர்க்கு நான் உறுதி கூறுகிறேன். அல்லது ஸ்தூல சரீரமானது, நோயினால் அழிந்து போனாலோ, பிற காரணங்களால் கொலைக்கப்பட்டாலோ, ஆன்மா உரு வழிவதில்லை; தெளிவற்றுப் போவதுமில்லை. உன் அன்பான பார்வைக்குப் பதிலளிக்க முடியாத உயிரற்ற பிணத்தைப் பாராமல், சூக்குமக் கண்கொண்டு நீ பார்த்தால், உன்னெதிரே அதே உருவம், முன்னிலும் அழகாக உயிருடனிருப்பதைக் காண்பாய். ஆதலின், ஆன்மாவானது, இந்தப் பிரபஞ்ச வாழ்க்கையினின்று விடுதலையடைந்து, சூக்கும உலகத்திற்குச் செல்வதைக் குறித்து நாம் மகிழ்ச்சியே யடைய வேண்டும். ஆன்மாவானது, தேகத்தை விட்டுப் பிரிந்து, இதைவிட உயர்ந்த சிறந்த உலகத்தில் வசிக்கச் செல்லும்போது நாம் அழுவதைக் காட்டிலும், உலகத்தில் நடைபெறும் பெரும்பான்மை விவாகங்களுக்காகவே நாம் அழவேண்டும்.

## ஜீவனின் பிரிவு

நான் பார்த்த மாற்றம் ஏற்படுவதற்கு, அதாவது ஸ்தூல தேகத்தினின்று ஜீவன் பிரிந்து சூக்கும தேகத்தை யடைவதற்கு இரண்டரை மணிநேரம் ஆயிற்று. ஸ்தூல சிரசி

னின்று மேலெழுந்து தன்னைப் புனர் நிர்மாணஞ் செய்துகொள்ள ஒவ்வோர் ஜீவனுக்கும் இந்த இரண்டரை மணி நேரமே பிடிக்கிறதென்று சொல்ல முடியாது. மேற்படி ஸ்திரீயின் ஸ்தூல தேகத்தினின்று பிரிந்த ஜீவனானது, தன்னைச் சூழ்ந்துள்ள புதிய தத்துவங்களுக்குப் பழக்கமானதும், தனது மனோசக்தியால் தேகத்தின் மேலிருந்த உயர்நிலையிலிருந்து இறங்கி, அந்த ஸ்திரீ நோயுடன் படுத்துக்கொண்டிருந்த படுக்கை யறையினின்று வெளியே சென்றது. அப்பொழுது கோடைகாலமானதால் எல்லாக் கதவுகளும் திறக்கப்பட்டிருந்தன. அதனால், அந்த ஆன்மா வெளியேறுவதற்கு எவ்வித தடையும் உண்டாகவில்லை. ஸ்தூல தேகத்தில் நாம் எந்தக் காற்றை மூச்சு விடுகிறோமோ, அந்தக் காற்றை சூக்குமசரீரத்தினால் சுலபமாகக் கடந்து விடலாமென்ற உண்மையை அப்பொழுதே நான் முதலில் கண்டேன். ஸ்தூல சரீரத்தி லிருந்துகொண்டு நாம் இந்தப் பூமியை எப்படிக் கடந்து செல்கிறோமோ அப்படியே மேற்படி ஜீவனானது ஆகாயத்தைக் கடந்து சென்றது. வீட்டினின்று வெளியேறியதும், இந்த ஆன்மாவை, சூட்சும உலகத்திலிருந்துவந்த வேறு இரண்டு ஆன்மாக்கள் சந்தித்தன. ஒன்றுக்கொன்று சிறிதுநேரம் அளவளாவியதும், மூன்றும் ஒன்று சேர்ந்து பிரபஞ்சத்தைச் சூழ்ந்திருக்கும் பரமாணு வாகாயத்தின் மூலமாகச் சாய்வாய் மேலேறிச் சென்றன. அவை மூன்றும் இயற்கை யாகவும், சகோதரப் பான்மையுடனும் ஆகாயத்தைக் கடந்தன. ஒரு மலையின் சாரலில் அவை நடந்து செல்வதுபோலவே எனக்குத் தோன்றியது. அவை தொலைதூரம் செல்லும்வரை நான் பார்த்தேன். பிறகு என்னுடைய ஜாக்கிரதா நிலைக்கு நான் வந்துவிட்டேன்.

---

# சான்றோர்க்கணி

[அ. வரதநஞ்சைய பிள்ளை]

இத்தலைத் தொடர் மொழியில், சான்றோராவார் யாவர்? அவர்க்கு அணியாவது யாது? அஃதெவ்வாறு? எனக் கேள்விகளை எழுப்பி முறைப்பட ஆய்ந்து உண்மை காண்பாம்.

இச் சொற்றொடர், ஆசிரியர் வள்ளுவனரால் இல்லற வியலில், நடுவு நிலைமை என்னும் அதிகாரத்தின் கண்ணே,

"கேடும் பெருக்கமு மில்லலல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி"

எனவும்,

"சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ [லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி"

எனவும், வருஞ்செய்யுட்களின் இறுதியிற் கூறப்பெற்றதாம். சான்றோர் சால்புடையோர் சால்பு என்னும் பண்பு நற்குணங்கள் எல்லாம் ஒருங்கு நிரம்பி யமைதலை உணர்த்தும். ஆகவே எல்லா நற்குணங்களும் குறைவின்றி முற்ற நிரம்பிய தூயோராய நல்லோரே சான்றோரெனப் பெறுவர்.

சால்பு என்பதன் தன்மைகளைக் கூற வந்த விடத்தே நம் செந்நாப்போதார்,

"கடனென்ப நல்லவை யெல்லாம் கடனறி
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு" [ந்து

எனப் பொது வகையாற் கூறிப் பின்னர் சிறப்பு வகையாக,

"அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் [வாய்மையோ
டைந்து சால்பூன்றிய தூண்"

"....பிறதீமை சொல்லா நலத்தது சால்பு"

"ஆற்றுவா ராற்றல் பணிதலது சான்றோர்
மாற்றாரை மாற்றும் படை"

"சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி
துலையல்லார் கண்ணுங் கொளல்"

"இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு"

என மொழிந்து விதந்தனர். இவ்வாற்றால், சான்றோர்பால் காணப்படும் சிறப்புச் செயல்களாவன :—

யாவரிடத்தும் மனங்கசிந்த அன்பு பெருக்கலும், தீயசெய்ய நாணலும், பிறர்பாற் கைம்மாறு கருதாது இயன்றகடப்பாடுகளை நாளும் புரிதலும் மன இரக்கம் மிக்குடைத்தாதலும், உண்மையே பேசுதலும் * பிறர் தீமையை வெளியிடாமையும், ஒரு நற்கா யத்தை முற்றுவிக்கும் போது யாவரையும் தாழ்மையுடன் வேண்டித் துணைக் கோடலும், தம்மின் மிக இழிந்தோர்க்கும் தம்மைக் குறைந்தவராகக் காட்டிக் கோடலும், தமக்குத் துன்பம் புரிவோர்க்கும் மாறாக நன்மையே

* பிறர் தீமையை வெளியிடின் எதுமுறுவரோ எனவும், அவரதியல்பு அஃதெனின் இழிவு கூறல் தகாதே என்றும் அஞ்சுதலால்.

செய்தலும், இவைபோன்ற பிறசெயல்களுமாம் எனப்பெறுதும்.

உலக முய்வதற் கெனவே தோன்றித் தமக்கென வாழாப் பிறர்க்குரியாளர்களாகிய இச்சான்றோர் விரும்பும அணிகலன்கள இரண்டு என மேற்றலைப்பிற் கண்டாம். அவற்றுள் ஒன்று, துன்பமோ இன்பமோ தொடரும் போழ்து ஒரே பெற்றிப் பட்டு உள்ளம் சிறிதும் மாறாது செந்நெறி கடைப்பிடித்து ஒழுகுவது. மற்றொன்று, இருவர் வாதிகள் கூற்றுக்களையும நன்கு கேட்டு நீதியை உள்ளவா றுரைத்தல். இவ்விரண்டு அணிகளும், உள்ளங் கோடாமையையே குறிப்பதாகலின், ஆசிரியர் கூறியது கூறல் எற்றுக்கு? என்பது முதல் வினா?

நெஞ்சத்துக் கோடாமையை முன்னும், ஒருபாற் கோடாமையைப் பின்னும் வைத்ததேன்? என்பது இரண்டாம் வினா.

இவ்விரு குறள்களுக்கு மிடையே யுள்ள வேறு, இரண்டு குறள்கள் "ஒழுடையோன் கேடடைவான்" என்றும், நடுநிலைமை யுடையோர் ஒரு கால் பண்டை வினைப்பயததாற் கேடடைய நேரினும், அக்கேடும், உயர்ந்தோரால் பெருஞ் செல்வமெனவே கருதப்பட்டு நன்குமதிப்பைப விளைப்பதாகு மென்றும் முறையே கூறுகின்றன. இவை கொண்டு, கேடும் ஆக்கமும் முன் பிறவி வினைப பயனாக நியதி கூட்டவரு மென்னும் உண்மை கண்டு நடுநிலைமையி னீங்காதொழுக வேண்டுமென ஆசிரியர் குறித்தனரென்பர் ஒரு சாரார்.

அங்ஙனம் நடுவுடையோர், இரு வாதிகளின் வழக்கையுங் கேட்டு நீதி புகல்பவ ரன்றே. அற்றாகவும் ஒரு பாற் கோடாமை வேண்டு மென மறித்துங் கூறிய தென்னை? எனின், முற்கூறியது அவரது நெஞ்சத் திட்பச் செம்மை. பின்னது, உரைக்கும் சொன்னிலை குறித்தது என்பர். நன்று, சமன் செய்து சீர் தூக்குந் துலாக்கோல் எதற்குவமம்? எனின் ஒருபாற் கோடாத உள்ளத் திற்கே ஒப்பாவது என மொழிவர். அங்ஙனமாயின், முற்கூறியதும் நெஞ்சு கோடாமையையே யன்றோ? அதனோடிதனிடை வேற்றுமை காணுமாறில் லையே எனின் முற்கூறி யாங்கே கூறி ஒழிப்பர். ஆதலின், முதற் குறட்கு நுண்ணிய விழுப்பொருள் வேறுளதாகல் வேண்டுமென்க்கருதற்கிடனுண்டு. அஃதாமாறு கூறுதும்:

யாவரும் தம்மிடத் துள்ளவற்றை விட்டு இல்லாத பொருள்களையே ஈட்டுவ தியற்கை. அவ்வாறே பிறவியியல்பாக நாம்பிறக்கும் அந்நாளேஏற்பட்டு, அநுபவித்தன்றி வேறெவ் வகையானும் மாற்றிப் போக்கற் கியலாத வண்ணம் அமைந்துள்ள கேடும் பெருக்கமும் குறித்து அஞ்சுதலும் அகமகிழ்தலும், கேட்டை மாற்றி ஆக்கத்தையே விளைப்போமென முயற்சித்தலும் பயனில் செயலே யாமென வுண்மை தேறி, அவ்வக்காலங்களிற் றத்தங் கடப்பாடுகளை ஒழுங்குறப் புரிந்து செல்லத் துணிவுறும் செப்பமும் திட்பமுமுடைய மன அமைதியொன்றே நம்பாலிதுகாறுமில்லாதது. ஆகலின் அதனையே தேடற்குப் பல்லாற்றானு முயற்சிப்பா மெனக் கருதுதலே சான்றோர்க்கணியாம் எனக் கூறினார் என்க.

இம்மைக்கும் மறுமைக்கும் ஏற்ற பெரும்பயன் இவ்வுள்ளச் செம்மை ஒன்றாலேயே விளையுமாகலின் இஃது முதலில் வைத்தோதப்பட்டது.

சான்றோ ரியல்பு ஈதேயாம் எனப் பெரியபுராணத்தில் அருண்மொழித் தேவரும் அடியார் பெருமை கூறுமிடத்தில், "கேடும் செல்வமும்கெட்ட திருவினர்" எனவும், பிரபுலிங்கலீலை ஆசிரியரும்,

'கேடும் செல்வமும் கீர்த்தியும் நிந்தையும்
வேறற நோக்குதல்.................
கூடுந்தனமை கொளுமனம் நன்மனம்'

என்றுங் கூறிப்போந்தனர்.

சைவ சித்தாந்தத்தில் இருவினை ஒப்பு எனக் கூறப்படும் சிறந்த பக்குவமு மிஃதே. இவ் விருவினையொப்பு உண்டாய வழியே மலபரிபாகம், சத்திநிபாதம் முதலிய வீடுபேற்றிற்கு முன் றோன்றும் காரண காரியங்கள் ஒருதலையா னெய்துவன. ஆசிரியர் கருத்திதுவா யின்மையானே, ஒரு பாற் கோடாது வழக்குரைக்கும் அவரதுலக ஒழுக்கம் பிற்கூறப்பட்டது.

துறவற நெறிக்குரிய இருவினை ஒப்புத் தன்மையை நடுவுநிலைமை கூறும் இல்லற வியலில் ஓதியது சாலாதெனின், நன்று சொன்னாய்! 'ஒன்றினமுடித்தல் தன்னின முடித்தல்' என்னும் உத்திகொண்டு ஆசிரியர் அங்ஙனங் கூறுதல் இயல்பென்க. இங்ஙனமே,

"ஒருமையு ளாமைபோல் ஐந்தடக்க லாற்றின்
எழுமையு மேமாப் புடைத்து"

எனவும்,

"நிலையிற் றிரியா தடங்கியான் றோற்றம்
மலையினு மாணப் பெரிது"

என்றும், துறவுக்குரிய ஐந்தவித்

தொழுகு முறையினையும் அடக்க முடைமை அதிகாரப்பட்ட வழி இல்லற வியலில் வைகதோதிய தூஉங் காண்க.

முறைப்பட இல்லற நெறியில் வழா தொழுகுவோர்க்கே துறவு நெறியும் கைவந்து பயன் பெறுதல் கூடுமென்க.

" காமஞ் சான்ற கடைக்கோட் காலை......
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே "

என்ற தொல்காப்பியனார்க்கு மிஃதே கருத்தாதலாலு மறிக. ஆதலின், இல்லற நெறிக்கே புரித்தெனவரையறை செய்யப் படாதனவாய்த் துறவு நெறிக்கும பயன் படும் பொதுவாய அறங்கள், இவ் விரண்டையும் தனித் தனிக் கூறும் இயல்களுள் அமயம நேர்ந்துழி எவ் விடத்தேனுங் கூறுதற் குரியவெனக் கண்டோம். இனி இதில் ஐயுறவில்லை. இவ்வாறு கேடும் பெருக்கமும் ஒரு நிகரனவென வுண்மை கண்டோருள்ளம் என்றும் துன்பங்காணாது இன்பத்தையே துய்க்குமாற்றால் அவர்க்கும் கேடு ஒரு குறைவாகத் தோன்றாது. உயர்ந்தோரும் அவரது தகுதியின் மேன்மையை நன்குணர்ந்து நன்கு மதிப்பார்களாதலின் பிறர்க்கும் இழிவுகாட்டாது பெரும் பேறாகவே முடியும. நடுவு நிலைமையிற் றிறம்பி ஆக்கம்பெறற்கு முயலவார்க்குஊழின் உதவி யில்வழி அது கூட்டாமையே யன்றி அத்தீய பண்பால் கேடும் வருவிக்கப் படுதல் ஒருதலையே யாகலின் நல்லோர்க்கும் அல்லோர்க்கும் நடுவு நிலைமை விழுமிய பயனை வருவிக்குமெனத் தெரிவித்தற்கே,

" கெடுவல் யானென் பதறிக......"

" கெடுவாக வையாது லகம்......"

என்னும் இரு குறட்களையும் இடைப் பெய்தமைத்ததென்க.

உண்மை இவ்வாறுதலின் இல்லறம் பற்றி ஒழுகுந் தலைமைப் பாடுடையோர், இருவர் வாதிகளின் வழக்கினும் நீதி தேர்ந்துண்மை கூறுக. பரிதண முதலியன வேட்டோ அன்றித் தமர் தம் நண்பர்க்கு நண்பர், தமக்கு வேண்டியோரால் கண்ணோட்ட முடையர் எனப் பல காரணங்களில் ஒன்று கொண்டே, வழக்கல்லா வழக்கை யுரைத்தல் அடாது எனக் கூறியது "சமன் செய்து" என்னுங் குறளென்க.

இதுகாறுங் கூறிப்போந்த வாற்றால் நற்குணங்களெல்லாம் நிரம்பிய சான்றோர்க்கு அழகும் மதிப்புந்தரும் பேரணிகள் இரண்டுள. ஒன்று இருவினைப்பயனாகத் துன்பஇன்பங்கள் முன் அமைந்தபடி எய்துவன வெனப் புறக்கணித்து அவற்றைக் குறித்துத் துன்புறலும் இன்பமடைதலுமிலராய் ஒரு நிலைமைப் பட்ட உள்ளத்தினராதல், மற்றொன்று, உலகியல்புகளில், கோடி கொடுப்பினும் தம்முடைய நாக்கோடாமல் உண்மை ஓதி வழக்குத் தீர்த்தல் என்றும், இவ்வாறன்றி ஓரங் கூறிப் பொருளீட்டுவானேல் அத்தீவினை தீய பயந்தே விடுமாகலின் தப்பாது கேடு தருதலானும், ஒருகால் நடு நிலைமை யுடையார்க்கும் கேடு வருமே எனின் அது கேடாக அவரும் கொள்ளார். உயர்ந்தோரும் இகழாது செல்வத்தோடொக்கு மென மதிப்பர் ஆகலானும் இல்லற துறவறங்கட்குப் பொதுப்பட நிற்கும் நடுவு நிலைமையின் முன்னோதிய அணி சாலச் சிறப்புடையதென்றும், பின்னது இல்லறப்பாங்கிற் குரித்தாய் மறுமைக்கும் பயன்றரும் காரணமாய் அமைவதா மென்றும் அறிகின்றோம்.

# திருவிழாவில் சமயபோதனை

1. திருநாவுக்கரசு சுவாமிகள் திருவவதாரத் தலமாகிய திருவாமூரில் சித்திரைச் சதயத்தன்று ஒரு பெருங் கூட்டம் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்கள் தலைமையில் கூடிற்று. சமாஜக் காரியதரிசியும், திரு. ச. சச்சிதாநந்தம் பிள்ளையவர்களும் அப்பா சுவாமிகள் சரித்திரம், தேவாரம் முதலியவற்றைப்பற்றிச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினர். அப்பர் சுவாமிகள் தேவாரம் சமாஜத்தின் புதிய சுத்தப்பதிப்பு ஊர்வலமாகக் கொண்டுவரப்பட்டு வெளியிடப்பட்டது.

2. காஞ்சீபுரம் என வழங்கும் திருக்கச்சியேகம்பத்தில் நடைபெற்ற பிரஹ்மோத்ஸவத்தில் நமது சமாஜத்தின் சார்பில் ஏழாந்திருநாள் ஒன்பதாந்திருநாள் ஆகிய இரண்டு நாட்களிலும் முறையே "சேக்கிழார் கவிநயம்" "பதிபுண்ணியம்" எனும் பொருள்கள்பற்றி சமாஜத்து வெளியூர் நிர்வாக சபையினருள் ஒருவராகிய காவித்தண்டலம் - சைவத்திருவாளர் வேதாசல முதலியாரவர்கள சொற்பொழிவுகள் நிகழ்த்தினுர்கள்.

3. கூவம் என வழங்கும் திருவிற்கோலத்தில் நடைபெற்ற திருவிழாவில் நான்காம் நாள் ஐந்தாம் நாள் (4, 5-5-30) உத்ஸவங்களில் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள் தலைமையில் சமாஜக் காரியதரிசியார், திரு. பா. கந்தாசிம்ஹம், திரு. கே. வைத்தியநாத முதலியார், திரு. அ. முத்துச்சாமி முதலியார், திரு. விஜய சுந்தசாமி முதலியார், திரு. சு. வை. துரைசாமி முதலியார், திரு. சு. ரா. அண்ணாமலை முதலியாரவர்கள் சொற்பொழிவுகள் நிகழ்த்தினுர்கள். சமாஜத்தின் கிளைச்சபை யொன்று தாபிக்கப்பட்டது.

---

Printed at the Sadhu Press, 12, Ganapathi Mudali Street, Royapettah and Published by M. Balasubramania Mudaliar (Editor-in-charge) for the Saiva Siddhanta Maha Samajam, 150, Govindappa Naicken Street, G. T. Madras.

Registered No. M. 2330.

"SIDDHANTHAM"
Vol. 3—No. 5, 6.

உ
சிவமயம
திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

சைவசித்தாந்த மகாசமாஜத் திங்கள் வெளியீடு

"எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே"

| | | |
|---|---|---|
| மலர் ௩ | பிரமோதூத ஆண்டு வைகாசி ஆனித் திங்கள்<br>1930௵ மே ஜூன்௴ | இதழ் ௫,௬ |

உள்ளுறை



ஆசிரியர் :—ம. பாலசுப்ரஹ்மண்ய முதலியார், B. A., B. L., M. L. C.
உதவி ஆசிரியர் :—கி. குப்புச்சாமி முதலியார்

சைவ சித்தாந்த மகாசமாஜம்,
150, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை.

ஆண்டுச் சந்தா ரூ. 1-8-0. 1930 வெளி நாட்டுக்கு ரூ. 2-0-0.

தனிப் பிரதி அணா 3.

# ஆலங்குடியில் சமாஜத்திய விசேஷ மகாநாடு

திருவிரும்பூளை என்று தேவாரத்தில் பாடல் பெற்றுள்ள ஆலங்குடியில் 1930ஞு ஜூன்மீ 1வ ஞாயிற்றுக்கிழமை (பிரமோதூதஞு வைகாசிமீ கஅவ) மஹாகும்பாபிஷேகம் நடைபெறும். அதையொட்டி சைவசித்தாந்த மகாசமாஜத்தின் விசேஷ மகாநாடு ஒன்று **பண்டிதமணி. சைவத்திருவாளர் – மு. கதிரேசன் செட்டியார் அவர்கள்** தலைமையில் ஜூன்மீ 1வ முதல் மூன்று நாட்கள் வரை நடைபெறும். சைவசமய வளர்ச்சிக்குரிய பல அரிய தீர்மானங்கள் நிறைவேறுவதோடு பல பேரறிஞர்களின் சொற்பொழிவுகளும் நடைபெறும். நமது சமாஜத்தோடு இணைக்கப்பட்ட சபைகள் பல பிரதிநிதிகளை யனுப்புவதோடு செயல் முறைத்திட்டங்களையும் தீர்மானங்களாக எழுதி முன்னதாகவே அனுப்பவேண்டும். நமது சமாஜ அங்கத்தினர் தவறாமல் தாங்கள் வருவதோடு அமையாது பல நண்பர்களையும் சைவப் பற்றுடைய அன்பர்களையும் அழைத்து வருதல்வேண்டும்.

சென்னை,
10-5-1930.

இங்ஙனம் :
ம. பாலசுப்ரஹ்மண்யம், காரியதரிசி.

குறிப்பு :—ஆலங்குடி என்பது நீடாமங்கலம் ஸ்டேஷனிலிருந்து 5 மைல் தூரத்திலும் கும்பகோணம் ஸ்டேஷனிலிருந்து 10 மைல் தூரத்திலும் மோட்டார் போகும் பாதையிலுள்ளது.

## சமாஜத்தின் போஷக உறுப்பினர்

அப்பர் தேவார வெளியீட்டுக்காக நூறு ரூபாய் நன்கொடையாக அளித்த தென்ஆற்காடு உதவி மெடிகல் ஆபீசர் சைவத்திருவாளர் டாக்டர். எஸ். பாலவேலாயுதம் பிள்ளையவர்களையும், திருவிடைமருதூரில் சைவ இளைஞர் மகாநாட்டைத் தமது சொந்தச் செலவில் நடத்திவைத்த சைவத்திருவாளர் தி. நா. போ. குப்புச்சாமி பிள்ளையவர்களையும் நமது சமாஜத்துப் போஷக உறுப்பினர்களாகப் பதிவு செய்துகொண்டதை மிக மகிழ்ச்சியோடு தெரிவிக்கிறோம்.

## சமாஜ அறிக்கை

கோடை விடுமுறைக்காக 1930ஞு மேமீ 10வ முதல் 1930ஞு ஜூலைமீ 10வ வரை சமாஜ ஆபீசு மூடப்படும். சமாஜக்காரியதரிசிக்கு எழுதப்படும் கடிதங்களுக்குப் பதிலெழுதலும், பத்திரிகை, புத்தகம் அனுப்புதல் முதலியனவும் ஜூலைமீ 10வக்குமேல் நடைபெறும்.

இங்ஙனம் :

150, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு,
10—5—1930

ம. பாலசுப்ரஹ்மண்யம்
காரியதரிசி,
சைவ சித்தாந்த மகா சமாஜம்.

உ

சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

" ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானதந் வாணியை உள்நாடு "

| மலர் ௩ | பிரமோதூத ஆண்டு வைகாசி ஆனித் திங்கள் 1930 ஆ மே ஜூன் மீ | இதழ் ரு, ௬ |
| --- | --- | --- |

## இரண்டு அரிய நிகழ்ச்சிகள்

[பத்திராசிரியர்]

பிரமோதூத ஆண்டு பிறந்தவுடன் முதல் திங்களிலேயே நமது சமாஜத்தின் சார்பாக இரண்டு அரிய நிகழ்ச்சிகளைப் பாராட்டாதார் சைவருள் ஒருவருமிலர். இவற்றுள் ஒன்று திருவிடை மருதூரில் நடந்த சைவ இளைஞர் மகாநாடு, மற்றொன்று திருவாமூரில் நடைபெற்ற அப்பர் சுவாமிகள் தேவார வெளியீடு.

இளைஞர் இயக்கம் அரசியல், சமூகப்பணி முதலிய பல துறைகளிலும் செழித்து ஆங்காங்கு பல மகாநாடுகள் நடப்பதை நாம் கண்டதுண்டு. ஆனால் இதுகாறும் இளைஞர்கள் சமயத் துறையிலே ஒரு மகாநாடு நடத்தியதை நாம் கண்டதில்லை. சிறப்பாக " உறங்க வேண்டாம், விழியுங்கள், எழுங்கள் " என்று சமய வல்லுநர் இடித்துக் கூறும் சைவமக்களிடையே சைவ இளைஞர் மகாநாடு ஒன்று மிகச் சிறப்பாகவும் செம்மையாகவும் நடந்தது குறித்து நாம் பெரு மகிழ்ச்சியடைகின்றோம்.

இம்மகா நாட்டிலே நிறைவேறிய தீர்மானங்களும் மிக நல்ல முறையிலே அமைந்திருப்பது போற்றத்தக்கதே. இளங் கன்று பயமறியாது என்று கூறுவது உலகவழக்கு. ஆனால் சைவ இளைஞர்கள் தங்கள் கடமைகளையும் உரிமைகளையும் நன்கு உணர்ந்தவர்களாய் பெரும்பான்மை தாங்கள் முன்னின்று செய்யக் கூடியவை இன்னின்னவென்றும் தங்கள் கூட்டுறவு மிருந்தால் நமது சமாஜம் இன்னின்னபணிகளைச் செம்மையாகச்செய்தல் கூடும் என்றும் தங்கள் தீர்மானங்கள் வாயிலாக நமக்கு விளக்கியுள்ளார்கள். நமதுநாட்டிலே பெரும்பாலும் கடமைகளை மறந்து உரிமைகளை மட்டும் வற்புறுத்துவது வழக்கம். ஆனால்

நமது சைவஇளைஞர்களோ தங்கள் கடமைகளை மிகச்செவ்வையாக உணர்ந்து அவைகளை ஞாபகத்திலிருத்தித் தங்கள் தீர்மானங்களைச் செப்பஞ் செய்து நிறைவேற்றிய முறை முதியோருக்கும் ஒரு பாடத்தைக் கற்பிப்பதாயிற்று.

சைவ இளைஞர்கள் உறங்காது விழித்தெழுந்து முதியோர்களுடன் கலந்து வேலை செய்ய முன்வந்தமைக்கு அவர்கள்பால் என்ஞான்றும் நாம் நன்றியுடையவர்களா யிருக்கின்றோம்.

மேற்கூறிய தகுதிவாய்ந்த இளைஞர் பலரில் எமது நட்புக்குரிய சிலரின் கூட்டுறவே திருவாரூரில் அப்பர் சுவாமிகள் தேவார வெளியீட்டையும் மிகச் செவ்வையாகத் திருவருளின் துணைகொண்டு நடத்தி வைத்தது. சென்ற ஆடிமீ சுவாதியில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம் சமாஜத்தின் பதிப்பு வெளியிடப்பட்டது. அப்பர் சுவாமிகள் திருநக்ஷத்திரமாகிய சித்திரை சதயத திருநாளில் சுவாமிகள் அவதரித்த தலமாகிய திருவாரூரில் சுவாமிகள் தேவாரத்தின் சமாஜ சுத்தப்பதிப்பு வெளியிடப்பட்டது. ஒரு பெரிய மகாநாட்டுக்கு எவ்வளவு மிகுதியாக அன்பர்கள் திரண்டு வருவார்களோ அதற்கும் அதிகமான தொகையினர் அக்கூட்டத்துக்கு வந்திருந்தது சைவ உலகத்தினர் அப்பர் சுவாமிகளை எத்துணை மிகுதியாகப் பாராட்டி வருகின்றனர் என்பதையும் நமது சமாஜ வெளியீட்டினை எத்துணை ஆவலுடன் எதிர் பார்த்திருந்தனர் என்பதையும் ஒருங்கே விளக்குவதாயிற்று. சில செல்வர்களைக்கொண்டு திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் தேவாரத்தை அச்சிடுவதற்குரிய ஏற்பாடுகளும் நடைபெற்றன. விரைவில் அத்தேவாரமும் நமது சமாஜத்தின் சுத்தப்பதிப்பாக வெளிவரும் என்பதில் ஐயமில்லை.

இனி எதிர்காலத்தை நோக்குமிடத்து நமக்கு மீண்டும் மகிழ்ச்சியே உண்டாகிறது. திருவையாறு சப்தஸ்தான உத்ஸவத்தைப்போல் எவ்வகையிலும் தலை சிறந்து விளங்கும் உத்ஸவத்தை நாம் எங்கணும் கண்டதில்லை. அவ்வுத்ஸவத்தில் ஏழு திருப்பதிகளிலும் நமது சமாஜத்தின் சார்பாக சமயப் பணி செய்வதற்குத் திருவாளர்கள் த. வே. உமாமஹேசுவரம் பிள்ளை யவர்களும், ச. சச்சிதாநந்த பிள்ளை யவர்களும் ஏற்பாடு செய்துளளார்கள். பெருந்திரளாக மக்கள் கூடுகின்ற உத்ஸவ காலங்களில் சமயப்பணி நடத்த வேண்டுமென்று அவாவும் சமாஜத்துக்குத் துணை நின்று இப்பெரியார்கள் இத்தகைய ஏற்பாடுகளைச்செய்துள்ளது அனைவர் உள்ளத்தையும் கவர்கின்றது.

இது மட்டுமல்ல. ஆலங்குடியில் நடக்கும் கும்பாபிஷேக காலத்தில் பண்டித மணி - சைவத்திருவாளர் - மு. கதிரேசஞ் செட்டியார் அவர்கள் தலைமையில் நமது சமாஜவிசேஷ மகாநாடு மிகச் சிறப்பாக 1930ஹு ஜூன் மீ 1, 2, 3-ம் தேதிகளில் நடைபெறும். அதுபோது வழக்கம்போல் பல அரிய சொற்பொழிவுகள் நடப்பதுடன் சமயப்பணி விவரங்கள் திட்டங்கள் பலவும் தீர்மானிக்கப்படும்.

எல்லாவற்றையும் உடனிருந்து மிகச் செம்மையாக நடத்திச் சைவ வான் பயிரைத் தழைத்தோங்கச் செய்யும் இறைவன் திருவருளை வழுத்துகின்றோம்.

# சைவ இளைஞர் மகாநாடு

[தி. கு. கி. நாராயணசாமி]

இம்மகாநாடு மிகச்சிறப்பாக 1930-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 18-ந் தேதி வெள்ளிக்கிழமை காலை 9-மணி முதல் மாலை 7-30 மணிவரை நடந்தது. மகாநாட்டைத் திறக்கவந்த மந்திரியார் அவர்களும் தலைமை வகிக்க வந்த திரு-கா. சுப்பிரமணியம் பிள்ளையவர்களும் ஊர்வலமாக அழைத்து வரப்பட்டனர்.

கடவுள் வணக்கம் முடிந்தவுடன் சமாஜக் காரியதரிசியார் சுகாதார மந்திரியார் திரு-எஸ். முத்தையா முதலியார் அவர்களை இம்மகா நாட்டைத் திறந்துவைக்கும்படி வேண்டிக்கொண்டனர். அவ்வாறு வேண்டுங்கால் எக்காலத்திலும் அரசாங்கத்தைச் சேர்ந்த மந்திரிப் பிரதானிகள் எந்த இயக்கங்களை ஆதரித்து எந்தமுறையில் ஒழுகுகின்றார்களோ அஃதேபோல் பொது மக்களும் ஒழுகுவது இயல்பென்றும், ஆகையால் தற்காலத்து மந்திரிமார்களும் எல்லா இயக்கங்களிலும் கலந்து கொள்ளாமல் புரை தீர்ந்த நன்மை பயக்கும் இயக்கங்களையே ஆதரிக்க வேண்டு மென்றும் இன்றேல் தமிழர் நாரிகமும் சமயமும் குன்றி விடுமென்றும் கூறினார்கள். பின்னர் திரு. ச. சச்சிதாநந்தம் பிள்ளையவர்கள் வரவேற்புக் கவி வாசித்து விளக்கிக் கொடுத்தனர். பிறகு மந்திரியார் மகாநாட்டைத் திறந்து வைத்தார்கள். அவர்கள் செய்த சொற்பொழிவில் சிறப்பாக வலியுறுத்தப்பட்டபொருள்கள் :—(1) கடவுள் ஒருவர் உண்டு. (2) இக்கொள்கை யின்றேல் ஒழுக்கம் இல்பொருளாய் விடும். (3) ஒவ்வொரு சமயத்திலும் சீர்கேடான ஒழுக்கங்களுள. (4) அவைகளைக் களைதல் மக்கள் கடன். (5) ஆனால் அடிப்படையான கொள்கைகளை எஞ்ஞான்றும் கைவிடுதல் கூடாது என்பனவாகும்.

இதன் பிறகு திரு. மறை. திருநாவுக்கரசனார் திரு. கா. சுப்பிரமணியம் பிள்ளையவர்களைத் தலைமை வகிக்கும்படி முன் மொழிந்தனர். இதை திரு. நாராயணசாமி முதலியவர் பின், வழி மொழிந்தனர். பிறகு திரு. நாராயணசாமி தலைவருக்கு வரவேற்புத்தாளை வாசித்துக் கொடுத்தார். பின்னர் தலைவரவர்கள் அரியதொரு விரிவுரை நிகழ்த்தினர். (இதன் விரிவை மற்றோரிடத்தில் காண்க.)

பிறகு மகாநாட்டைத் திறந்தருளிய மந்திரியார் அவர்கட்கு சமாஜக் காரியதரிசியார் வந்தனம் கூறினர். பிறகு காலைக்கூட்டம் கலைந்தது.

பிற்பகல் 2½ மணிக்கு விஷயாலோசனைக் கூட்டம் கூடித் தீர்மானங்கள் செப்பஞ் செய்யப்பட்டன. மாலை 3 மணிக்கு மகாநாடு மீண்டும் கூடிற்று. முதன் முதலாக திரு. சுரேந்திரநாத் ஆரியா அவர்கள் "நடராஜ தத்துவம்" என்னும் பொருள்பற்றி ஒரு சிறு சொற்பொழிவு நிகழ்த்தினர். பிறகு, திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளை யவர்கள் திருமுகம் வாசிக்கப் பட்டது. பின்னர் கீழ்வரும் தீர்மானங்கள் ஒவ்வொன்றின் இறுதியில் குறிக்கப்பட்ட இளைஞரால் முன்மொழி பின்மொழி பகரப்பட்ட பின்னர் ஏக மனதாக நிறைவேறின. இறுதியில் சமாஜக் காரியதரிசியார் இத்தீர்மானங்

களைச் செயலில் கொணர்தற்கு இளைஞர்களின் கூட்டுறவும் பொருளுதவியும் தேவை யென்பதை நன்கு விளக்கினர். பிறகு திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியார் இளைஞர்கட்குப் பெரிதும் பயன்படக் கூடிய அரிய சொற்பொழி வொன்றை நிகழ்த்தினர். பிறகு தலைவரவர்கள் தமது முடிபுரையை மிக அரிய முறையில் நிகழ்த்தினர். பிறகு சமாஜக் காரியதரிசியார் தலைவர், வரவேற்புக்கழகத் தலைவர் திரு. தி. ரா. பொ. குப்புசாமிப் பிள்ளை, மகாநாட்டுக் காரியதரிசி திரு. தி. கு. கி. நாராயணசாமி முதலிய எல்லா அன்பர்கட்கும் உரிய நன்றி மொழிகள் கூறியபின்னர் கடவுள் வாழ்த்தொலி முழங்க இம்மகாநாடு இறைவன் இன்னருளால் இனிது நிறைவேறிற்று.

## சைவஇளைஞர் மகாநாட்டுத் தீர்மானங்கள்

1. சைவசித்தாந்தக் கோட்பாடுகள் தற்கால ஆராய்ச்சி முடிபுகளுக்கு ஒத்திருக்கின்றன என்றும், சைவசமயம் இந்நூற்றாண்டு வாழ்க்கைக்கும் ஏற்றதாயுள்ளதேயென்றும் சைவப் பெரியார்கள் சிலர் கூறுவதை இனிது விளக்குவனவான நூல்களை எளிய நடையில் எழுதுவித்து மாணவர்க்குக் கிடைக்கும்படி செய்ய வேண்டுமென்று சைவசித்தாந்த மஹாசமாஜத்தை இம்மகாநாடு வேண்டிக் கொள்ளுகிறது. தி. கி. நாராயணசாமி, மினாக்ஷிசுந்தரம்.

2. சைவ மாணவரனைவரும் தமது சமயத்தின் அடிப்படையான கோட்பாடுகளையும் ஒழுக்கங்களையும் தக்கார் வாயிலாகக் கேட்டறிந்துகொண்டு, அவ வொழுக்கங்களைத் தாம் கைக்கொள்ளலோடு, தாம் தெளிவாயுணர்ந்து கொண்ட சைவமெய்ச் சரிதங்களையும் கொள்கைகளையும், தமக்கு ஓய்வு கிடைத்த காலங்களில் தமது கிராமங்களில் பிரசாரஞ் செய்ய வேண்டுமென்று இம்மகாநாடு வற்புறுத்துகிறது. மறை-திருநாவுக்கரசு, பொன்னுசாமி.

3. திருப்பாதிரிப்புலியூர் சைவ மகாநாட்டில் ஒப்புக்கொண்டபடி சைவ சமயத்தினருக்கு ஜாதிபேதம் இன்மையால் சைவர்கள் எந்த ஜாதியினராயினும் அவர்கள் சமயம், சமுதாயம் முதலியவைகளில் சமத்துவ உரிமைகளை அநுபவிக்கச் சைவ உலகம் சௌகரியம் செய்து கொடுக்கும்படி இம்மகாநாடு வேண்டுகிறது.

மேலும் இந்து மதத்தைச் சார்ந்த தீண்டப்படாதார் முதலியவகுப்பினர்களைச் சைவ உலகம் இழக்காதிருப்பதற்காக அவர்களுக்குச் சமயம், சமுதாயம் முதலியவைகளில் எல்லா உரிமைகளையும் அளிக்கும்படி சைவர்களை இம்மகாநாடு வற்புறுத்திக் கேட்டுக் கொள்கிறது. கைலைகுரு, ரத்னசாமிப் பிள்ளை.

4. சைவர்கட்குள் நடக்கும் திருமணம் முதலிய எல்லாச் சடங்குகளையும் தூய்மையும் சிக்கனமுமுடைய முறையில் தமிழிலேயே செய்தல் வேண்டுமென்றும், அவ்வாறு அழகுறச் செய்தற்குச் சில சைவரைப் பழக்கும் பொறுப்பைச் சமாஜத்தார் மேற்கொள்ள வேண்டுமென்றும், அத்தகையார் ஏற்பட்டதும் அவர்களைக் கொண்டே சைவர்கள் தம்மில்லச் சடங்குகளை நடத்திக்கொள்ள வேண்டுமென்றும் இம்மகாநாடு கேட்டுக் கொள்கிறது.

திருமண காலத்தில் திருமுறைகள் முதலிய சிறந்த தமிழ் நூல்களைப் பரிசாக அளிக்கும் வழக்கத்தை மேற்கொள்ள வேண்டுமென்று இம்மகாநாடு வற்புறுத்துகிறது. தியாகராஜன், தி. கி. நாராயணசாமி.

5. சைவர் மகாநாடு ஆலய சம்பந்தமாகக் காட்டியுள்ள சீர்திருத்தங்களை(யும்) இம்மகாநாடு பாராட்டுவதோடு, விக்கிரகாராதனையின் மூல நிகழ்ச்சிகளில் கருத்தை மடித்துவிடாமல், இறைவனைப்பற்றிய அறிவும், அவன்பாலும், உயிர்கள்பாலும் அன்பு(ம்) பெருகுதற்கான முறையில் திருக்கோயில்களில் வாரத்திற் கொருமுறை அன்பர்கூட்டத்தில் புனித வழிபாடு நடைபெற ஏற்பாடு செய்தல் அவ

சியமென்று இம்மகாநாடு கருதுகிறது. மறை. திருநாவுக்கரசு, கே. குழந்தைவேலு.

6. ஒவ்வொரு சைவ வாலிபனும் சைவ சித்தாந்த மகாசமாஜத்திலாதல், அதனோடு இணைக்கப்பட்ட யாதாவதொரு சைவசபையிலாதல் உறுப்பினனாய்ச் சேர்ந்து கொண்டு மகாசமாஜத்தை வலுப்படுத்துவதற்காக, அதற்கு ஆயிரக்கணக்கான அங்கத்தவர்களைச் சேர்த்தல், முன்னமேஉள்ள சைவசபைகளை அதனோடு இணைத்தல் முதலிய வழிகளில் தொண்டுசெய்ய வேண்டு மென்று சைவ இளைஞர்களை இம்மகாநாடு வேண்டிக் கொள்கிறது. க. நடேசன, ரா. புருஷோத்தமன.

7. தேவார புத்தகங்களை மிக்க குறைந்த விலையில் கிடைக்கும்படி செய்தல், சித்தாந்தப் பத்திரிகை நடத்துதல், பல விடங்களில் சொற்பொழிவு செய்வித்தல், சபைகளமைத்தல் முதலிய வழிகளில் சைவசித்தாந்த மகாசமாஜம் சைவப்பாதுகாப்புக்கான பணிகளைச் செய்து வருவதற்காக இம்மகாநாடு தன் நன்றி யறிதலைத் தெரிவிப்பதோடு, சைவ மடாதிபதிகள், இனியும் சும்மாயிராமல் காலத்தின் தேவைகளை நன்கு உணர்ந்து, சைவ போதனைக் கல்லூரி யமைத்தல், சைவ பிரசாரகரை நியமித்தல் தமிழாராய்ச்சி செய்தல் முதலிய தம் சமயக்கடமைகளைத் திறம் படச்செய்ய உடனே தொடங்க வேண்டு மென்று அவர்களை வணக்கமாய் வேண்டிக் கொள்கிறது. ப. இராமநாத பிள்ளை, த. ச. மீனாட்சிசுந்தரம்.

8. மாணவர்கள் பிரமசரிய ஒழுக்கத்திலும், தெய்வநம்பிக்கையிலும் சிறிதும் வழுவாதவர்களாய், இந்நாட்டுக் கசரத்தும் சிலம்பமும் பயின்று உடலையும் நன்றாய் ஓம்பி, உயரிய நோக்கோடு கல்வியைச் சிறக்கக் கற்பதிலேயே தமது கவனத்தைச் செலுத்தவேண்டு மென்று இம்மகாநாடு வற்புறுத்துகிறது. புருஷோத்தமர், நாராயணன்.

9. இக் காலத்தில் கலாசாலைகளிலேனும் வீடுகளிலேனும் கோயில்களிலேனும் ஒழுங்கான சமய போதனை நிறைவேறாமையால் விளையும் கேடுகள் பலவாயிருத்தலால், பாடசாலைகளிலோ அல்லது தக்க பிறவிடங்களிலோ வாரத்திற்கொருமுறை உண்மைச் சைவசமயத்தை விளக்கும் போதனைகள் கிரமமாக நடைபெற்றுவர ஏற்பாடு செய்யும்படி மடாதிபதிகளையும், கோவிலதிகாரிகளையும், சைவசித்தாந்த மகாசமாஜம் போன்ற சைவசபைகளையும் இம்மகாநாடு கேட்டுக் கொள்கிறது. பாலசுந்தர நயினர், சிதம்பரஞ் செட்டியார்.

10. B. A. பட்டம் பெறுவதற்குத் தத்துவ சாஸ்திரப் பிரிவைத் தெரிந்து எடுத்துக் கொள்ளும் சைவ மாணவர்கள் அனைவரும் 'சைவ சித்தாந்தம்' எனனும் பிரிவை எடுத்துக் கற்றுத்தேர்ந் துபகரிக்க வேண்டுமென்று இம்மகாநாடு வற்புறுத்துகிறது. கலாசாலையதிகாரிகள் இப்பாடத்தைக் கற்பித்தற்கான வசதிகளையும் விரைவில் அமைக்க வேண்டு மென்று அவர்களை வேண்டிக் கொள்கிறது. A. முத்தையா, தி. கி. நாராயணசாமி.

11. புதிதாய் அமைக்கப்பட் டிருக்கும் S. S. L. C. பரீக்ஷைத் திட்டத்தில், அப்பரீக்ஷைக்குச் செல்வோர் தத்தம் தாய்மொழியைத் தம்மிஷ்ட பாடங்களிலொன்றாக எடுக்க வொட்டாதபடி செய்துள்ள புதுத்தடையை நீக்கிவிடும்படி S. S. L. C. போர்டாரையும், அரசாங்கத்தாரையும் இம்மகாநாடு வேண்டிக் கொள்கிறது. தங்கவேலு, இராமச்சந்திரன.

12. (a) பெரிய கல்லூரிகளிருக்கு மிடங்களில் சைவ மாணவர்கட்கு மாணவரில்லங்களும், ஏற்ற விடங்களில் அநாதிவிடுதிகளும் ஏற்படுத்தச் சைவசித்தாந்த மகாசமாஜத்தார் தீவிரமான முயற்சிகள் செய்ய வேண்டு மென்று இம்மகாநாடு அவர்களையும் மகாஜனங்களையும் கேட்டுக்கொள்கிறது. (b) (சென்னையிலுள்ள மணலி விடுதி போன்று) சைவசமயிகளால் ஸ்தாபிக்கப்பட்ட அறநிலையங்களில் இனிமேல் சைவமாணவர்களையே சேர்க்க வேண்டுமென்றும், அவர்களனைவரையும் சமத்துவமாகவும் கருணையுடனும் நடத்த வேண்டுமென்றும் விடுதிகளின் தலைவர்களை இம்மகாநாடு வேண்டிக் கொள்ளுகிறது. A. முத்தையா, T. V. ரத்னசாமி.

13. தேவார பாடசாலைகளில் சைவசமயத்தைச் சார்ந்த எல்லாச் சாதிப் பிள்ளைகளை

யும் ஒழுக் யொன்றே ச் வேண்டுமென்று அப்பாடசாலை நிர்வாகிகளை இம்மகாநாடு வேண்டுகிறது. ந. இராஜமாணிக்கம், ந. இரத்தினவேலு.

14. இறைவன் திருவுருவங்களில் சிறந்தனவற்றையும் இயற்கை வளப்பமிக்க சிவத் பேரழகுடைய களையும் சிற்பங்களையும் புகைப்பட மெடுத்தும் வர்ணபடமாக எழுதுவித்தும் அவற்றைத் தொகுத்து எளிய விலையில் எவர்க்கும் கிடைக்கும்படி செய்ய வேண்டுமென்று மகா சமாஜத்தாரை இம்மகாநாடு வேண்டுகிறது. ச. சிவகுமாரன், வா. தி. மாசிலாமணி.

# இளைஞர்கட்குத் திருமுகம்

[மா. வே. நெல்லையப்ப பிள்ளை]

அன்பார்ந்த சைவ இளைய சகோதரர்களே!

சென்னைச் சைவசித்தாந்த மகாசமாஜக் காரிய தரிசி அவர்கள் ஆணையின்படி நீங்கள் உங்களுடைய பல இடங்களிலிருந்தும் பொதுநலத் தொண்டு கருதி உங்கள் மெய் வருத்தத்தையும் பணச் செலவையும் பொருட்பு இங்கே வந்து சேர்ந்து சைவ நர் மகாநாடு கூடி யிருக்கிறீர்கள். எல்லாம் வல்ல இறைவனருளால் உங்கள் வரவு நல்வரவு ஆகுக; நற்பயன் பொருத்தமுடையதாயிருக்கும் என்று நினைக்கிறேன். நான் சொல்லுஞ் சொற்களை நீங்கள் அப்படியே ஒப்புக்கொண்டு நடத்தல் வேண்டுமென்று சொல்லவில்லை. நீங்கள் அச்சொற்களிலடங்கியுள்ள கருத்துக்களை உங்களுடைய மனதில் உய்த்து உணர்ந்து அவைகளில் முன்னேற்ற வாழ்க்கைக்கு ஒத்திருப்பவைகளாக அறியப்பட்ட கருத்துக்களைக் கடைப்பிடித்து ஒழுகல் வேண்டும் என்று நான் உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

2. உங்களிற் சிலர் இன்னம் சாலையில் படிக்கிறவர்களா யிருக்கலாம்; சிலர் இப்பொழுது உலக வாழ்க்கையிற் புகுந்திருக்கலாம். எப்படியிருந்தாலும் நீங்கள் எல்லாரும் உலக வாழ்க்கையைபபறறி அநுபவ அறிய வேண்டியவர்களா யிருக்கிறீர்கள். ஆதலின் உங்களுக்கு உலகில் தனி வாழ்க்கையிலும் ம்ப வாழக்கையிலும் பொது வாழ்க்கையிலும் (Public life) துன்ப இன்பங்களால் மொத்துண்டு அநுபவமடைந்திருக்கிற முதிய வயது உள்ள நான் இத்தருணத்தில் உலக வாழ்க்கையைப்பற்றிச் சில வார்த்தைகள் சொல்லுதல்

3. முதலாவது:—இக் கால ல உள்ள எந்தக்கூட்ட மக்களும் தஙகள முன்னோர்களுடைய வாழ்க்கையின் நாகரிகம் இன்னதென அறிந்து அதிலுள்ள நற்கருத்துக்களையும் நல்ல பழக்க யும் உலகில் ஒழுகி வருகிறார்கள். சில ரம் ஆண்டுகளுக்கு முன்னே நமது இந்திய நாட்டில் நடைபெற்று வந்த தமிழ் முன்னோர்களுடைய நாகரிகக் கருத்துக்களும் பழக்க வழக்கங்களும் மிக மேலானதா யுள்ளவைகளாக அவைகளை அறிந்த பிற நாட்டு அறிஞர்கள் கூறி யிருக்கிறார்கள். அவைகளை நீங்கள் பண்டைத் தமிழ்

நூல்களைப் படிப்பதனாலும் அறிந்தார் வாயிற்கேட்பதினாலும் அறிந்து அவைகளில் தற்கால முன்னேற்ற வாழ்க்கைக்கு ஏற்புடைத்தா யுள்ளவைகளைத் தழுவி நடந்து அவர்களுடைய சந்ததியார்களாகச் சிறப்புடன் வாழ்தல் வேண்டும். அவ்வாறு நீங்கள் ஒழுகுதலினால் அந்நாகரிகத்திலுள்ள சமய நலன், ஒழுக்க நலன் முதலிய நலன்களை அடைதலுமின்றி அந்நலன்களை உங்கள் காலத்திலுள்ள எல்லா மக்களுக்கும் எடுத்துக் காட்டி அவர்களையும் நற்பயன் அடையும்படியாகச் செய்கிறவர்களாகின்றீர்கள்; உங்கள் பின் சந்ததியார்களுக்கும் அந்நலன்களை அறிந்து கைக்கொண்டு நடக்கும்படி வழி காட்டுகிறவர்களாகின்றீர்கள். இந்த முக்கியமான கடனை என்னைப் போன்ற முதியவர்கள் காலத்திலுள்ள தமிழ் மக்கள் பொதுவாய்ச் செய்யவில்லை என்று நான் தலைகுனிந்து உங்கள் முன் சொல்லுகிறேன். இளைஞர்களாகிய நீங்கள் அந்தக்குறையை நீக்கித் தமிழ் நாடு நலம் அடையும்படி செய்ய உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

4. இரண்டாவது:—தற்கால நாகரிக பாதையிலுள்ள ஒரு பெருங்குழியில் நீங்கள் தவறி விழுந்து விடாதபடி விழிப்பாயிருத்தல் வேண்டும். அந்தப் பெருங்குழியாவது ஆடம்பர வாழ்க்கையாகும். ஆடம்பர வாழ்க்கை என்பது பொன்போல மின்னுகின்ற உள்ளீடற்ற போலி வாழ்க்கை. பிறர் மதிக்கவும் பிறரால் பயன் பெறவும் செய்யப்படுகிற பகட்டு வாழ்க்கை அது. அந்த வாழ்க்கை மேற்கு நாட்டு நாகரிகக் கூட்டுறவால் நமது நாட்டுக்கு வந்தது. மேற்கு நாட்டு நாகரிகத்திலும் விடாமுயற்சித் திறன், நேர ஒழுங்கு முதலிய நலன்களை நீங்கள் கைக்கொள்ளல் வேண்டும்; ஆனால் அதிலுள்ள வாழ்க்கை ஆடம்பரத்தை முற்றிலும் நீங்கள் நீக்கல் வேண்டும். அது நமது முன்னோர்களுடைய உண்மையும் எளிமையுமுள்ள வாழ்க்கைக்கு (True & Simple life) முற்றிலும் மாறான அதிகப் பணச்செலவுள்ள சிக்கல் வாழ்க்கை (Expensive and Complicated life). உயர்தர ஆங்கிலக்கல்வி கற்றிருந்தாலும் ஆங்கிலேயர்களுடைய நாகரிகத்தில் சிறிதும் மயங்காது உண்மையாயும் எளிமையாயும் தூய்மையாயுமுள்ள வாழ்க்கையை வாழ்ந்துகொண்டு வருகிற சில தமிழ்ப் பெரியாரை நீங்கள் உங்கள் கண் முன்னே இப்பொழுது பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் அவர்களைப் பார்த்து உங்கள் வாழ்க்கையை உண்மையும் எளிமையும் தூய்மையும் உடையதாக விளங்கும்படி செய்ய நான் உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

5. ஆடம்பர வாழ்க்கை சம்பந்தமாய் நான் உங்களுக்கு ஓர் உண்மை சொல்ல விரும்புகிறேன். ஒருவனுடைய வாழ்க்கையானது தனக்கும் பிறர்க்கும் நற்பயனுடையதா யிருத்தற்கு செல்வம் அதிகார முதலியவற்றால் பெரிய வாழ்க்கை வேண்டப்படுவதில்லை. பெரிய வாழ்க்கையும் நல்லறிவுடன் நடத்தப்படா விட்டால் மிக்க தீமையுடையதாகலாம். நற்பயனுண்டாதல், வாழ்க்கை நடத்தப்படும் விதத்திலிருப்பது, அல்லது வாழ்க்கை பெரியது அல்லது சிறியதாயிருத்தலைப் பொறுத்தது அல்ல. நற்பயன் வாழ்க்கையே இன்பவாழ்க்கை யாகும்.

உங்களில் ஒவ்வொருவரும் பெரிய வாழ்க்கையை அடைதல் உலக நிகழ்ச்சியில் முடியாதது. ஆனால் நீங்கள் ஒவ்வொருவரும் உங்கள் நல்லறிவாலும் நன்முயற்சியாலும்நற்பயனுடைய இன்பவாழ்க்கை வாழக்கூடும். அதுவே வாழ்க்கை நலத்துக்கு இன்றி அமையாது வேண்டப்படுவ தாகும்.

6. மூன்ருவது :— நல்லொழுக் கத்தைப் பற்றிச் சில வார்த்தைகள் கூறிவிட்டு என் உரையை முடிவு செய்கிறேன். மக்களுக்குச் சிறப்புடைய அணியாய் விளங்குவது நல்லொழுக்கம் என்று நான் உங்களுக்குக் கூற வேண்டுவதில்லை. ஆனால் நல்லொழுக்கம் நடைமுறையில் தவறு திருப்பதற்கு அது விழிப்புடன் பாதுகாக்கப்படல்வேண்டும் என்பதை நீங்கள் மனதில் வைத்து ஒழுகல் வேண்டும். நல்லொழுக்கத்துக்கு ஆதாரமா யிருப்பவை எண்ணம் இச்சை செயல் என மூன்றுமே. எண்ணமும் இச்சையும் மனதில் உண்டாவன ; செயல் உடலினலுண்டாவது. எண்ணமும் இச்சையும் நல்லனவாயிருந்தால் செயலும் நல்லதாகவே யிருக்கும். ஆதலின் நீங்கள் மனதில் எப்பொழுதும் தீய எண்ணங்களும் தீய இச்சைகளும் தங்குதற்கு இடம் கொடாமல் நல்ல எண்ணங்களும் நல்ல இச்சைகளுமே தங்கும்படி மனதை அடக்கிப் பழக்கம் செய்து கொள்ளுதல் வேண்டும். தீய எண்ணம் அல்லது தீய இச்சை ஒன்று பழைய வாசனையினலே மனதில் வந்தால் உடனே அதற்கு எதிரிடையான நல்ல எண்ணத்தை அல்லது நல்ல இச்சையை மனதில் நினைத்துத் தீய எண்ணத்தை அல்லதுதீய இச்சையை விலக்கல் வேண்டும். நல்ல மனமே நல்ல வாழ்வுக்குக் காரணமா யிருத்தலால் மனதைப் பழக்கத்தினல் தூய்மை யுடையதாயும் திண்மை யுடையதாயும்(Stray) ஆக்கிக்கொள்ள வேண்டும். திண்மையும் தூய்மையும் உடைய மனதினல் (Stray and pure Mind) ஒருவன் தனக்கும் பிறருக்கும் நற்பயன் வேண்டிய அளவு விளைவித்தல் கூடும். இந்த இயற்கை உண்மைகளை அறிந்து நீங்கள் உலகவாழ்வில் எப்பொழுதும் தீமையைவிலக்கி இயன்றவாறு நன்மையைநாடிச் செய்தலிலே கண்ணுங் கருத்துமா யிருத்தல் வேண்டும்.

7. நல்லொழுக்க சம்பந்தமாய் தன்னலம் பிறர் நலம் என்ற மயக்க உணர்ச்சி சாதாரணமாய் மக்களுக்குள் உள்ளது. தன்னல மில்லாது பிறர்நல மில்லை. பிறர்நல மில்லாது தன்னலமில்லை. பிறர் நலம் கெடுத்துத் தன்னலம் தேடிக் கொள்ளுதல் இயற்கையில் இல்லை. இந்த உண்மையை அறிந்து நீங்கள் மக்கட் பொது நலத்தை மேல் நிலையில் வைத்துத் தன்னலத்தை அதற்கு உட்படுத்தி ஒழுகல் வேண்டும். மக்கட் பொது நலம் நாடிச் செய்தலில் நீங்கள் எங்களைப்போல் இல்லாமல் சிரத்தையுடையவர்களா யிருத்தல் வேண்டும். தமிழ் மக்களுடைய வருங்கால நலனும் பிற மக்களுடைய வருங்கால நலனும் இளைஞர்க ளாகிய நீங்கள் ஊக்கத்துடன் பொதுநலத் தொண்டு செய்தலைப் பொறுத்திருக்கிறது. ஆதலின் நீங்கள் மக்கட் பொதுநலத் தொண்டில் ஈடுபட்டு உழைத்துத் தமிழ்நாட்டைச் சிறப்புடைய நாடாகச் செய்யும் பாக்கியத்தைப் பெற்றுக் கொள்ளும்

படி நான் உங்களைத் தாழ்மையாகக் கேட்டுக் கொள்கிறேன்.

8. இறைவனுடைய அருளால், உங்களில் ஒவ்வொருவருக்கும் இன்ப நல் வாழ்வு உண்டாகுக; உலக வாழ்வில் தீயனவற்றை எதிர்த்துச் செல்லுந் திறனும் நல்லனவற்றை நாடிச் செய்யும் ஆற்றலும் உண்டாகுக; சமயத் தொண்டு முதலிய பொது நலத் தொண்டுகளில் ஈடுபட்டு உழைக்கும் மனத்திறனும் செயற்றிறனும் உண்டாகுக.

---

# "சென்றடையாத திருவுடையான்"

[தாராபுரம் - நா. ஆறுமுகம் பிள்ளை]

"நன்றுடையானைத் தீயதில்லானை
நரைவெள்ளேறு
ஒன்றுடையானை உமையொருபாகம்
உடையானைச்
சென்றடையாத திருவுடையானைச்
சிராப்பள்ளிக்
குன்றுடையானைக் கூறவென்னுள்ளம்
குளிரும்மே"

என்னும் திருஞானசந்தப் பெருமான் அருளிச் செய்த திரிசிராப்பள்ளித் திருப்பதிக முதற்பாட்டின் மூன்றும் அடியில் விளங்கும் "சென்றடையாத திருவுடையான்" என்னும் தொடர் மொழிக்குச் சித்தாந்தம் மலர் ௩. இதழ் க, உ இல் திரு. வேள். N. துரைக்கண்ணன் என்பார் "இந்திரன் முதலிய இறையவர்களிடத்துப் போய்ப் பெறக்கூடாத விழுச்செல்வத்தை யுடையான்" என்று உரை வகுத்துள்ளார். ஆயினும், அவர் தம் கட்டுரையின் ஈற்றில் எழுதியுள்ள குறிப்பால் தாம் எழுதிய உரை பொருந்துவதோ அன்றோ என்னும் ஐயமுடையார் என்றே நினைக்கவேண்டி யிருக்கிறது. இவ்வுரையை மறுத்துச் "சித்தாந்தம்" மலர் ௩ இதழ் ௩ இல் திரு. G. கல்யாணம் B, A. என்பார் "தற்போதத்துடன் செல்பவர் அடைய முடியாத மோக்ஷ செல்வத்தையுடையவன்" என்று பொருள் எழுதியுள்ளார். அன்றியும் தாம் எழுதிய மறுப்புக்கு ஆதரவாக முற்கூறியவர் வரைந்துள்ள குறிப்பையும் எடுத்துக் காட்டியிருக்கிறார். இவர் கூறிய இப்பொருள் சாலச்சிறப்புடையதே என்பதற்குப் "பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரன்" என்னும் சிவஞான சித்தியார்த் திருமொழியே போதிய சான்றாம். ஆயினும், இவர் முற்கூறியவர் உரையை மறுக்கும் முறை சிறிதும் பொருத்தமன்றெனத் தோன்றுவதால் அது பற்றி யாராய்வாம்.

'சென்று அடையா' என்னும் சொற்றொடர் 'வானவரிடம் சென்று அடைய முடியா' என்னும் பொருளைத் தரின் வானவருக்கு ஓர் ஏற்றம் நமது சமயாசாரியார் கற்பித்ததாகக் கருதவேண்டி யிருக்கும். "திருச்சிற்றம்பல மேய செல்வன் கழல் ஏத்தும் செல்வம் செல்வமே" என்று முழக்கிய ஒரு பெரியார் * * * வானோரை உயர்த்தி யிருப்பதாகப் பொருள் கொள்வது ஏற்புடைத் - தாகுமா? என்று திரு. G. கல்யாணம், B. A.

அவர்கள் கேட்கின்றார். வானவர் உளர் என்ற கொள்கை யுடையார் எல்லாரும் மண்ணோரினும் வானோரே சிறந்தவா என்று கூறுகின்றனர். அங்ஙனம் கூறற்கேது வென்னையோ வெனின், மக்கட் பிறப்பின ரெல்லாரும் நல்வினைப் பயனாகிய இன்பத்தையும் தீவினைப் பயனாகிய துன்பத்தையும் அடிக்கடி மாறி மாறி நுகர்கின்றாராக லானும்தேவர்களெல்லாரும் நல்வினைப் பயனாகிய இன்பத்தையே பெரிதும் நுகர்கின்றாராகலானும் என உணர்ந்து கொள்க. தேவர்கள் பெரிதும் இன்பத்தையே நுகர்கின்றார்கள் என்பதைப் "போகம் வேண்டி வேண்டிலேன் புரந்தராதி யின்பமும்" என்னும் மணி மொழியே நன்கு விளக்கும். ஒருவர்பால் இல்லாத சிறப்பை அவர் பால் உளதாக ஏற்றிக்கூறல் வழுவாமே யொழிய அவர் பால் உள்ள உயர்வை எடுத்துக் கூறலால்வரும் இழுக்கென்னையோ! அறிகிலேம். நம் சைவசமயத் திருமுறைகள் பன்னிரண்டினும் பலப்பல இடங்களில் வானவர் தம் ஏற்றத்தை எடுத்திசைக்கும் தொடர் மொழிகளைக் காணலாம். திரு. G. கல்யாணம் B. A. அவர்கள் எடுத்துக் காட்டிய "தீய அசுரர் பகையுண்டு" என்னும் செய்யுளீற்றிலுள்ள "வானோர்க் கென்னை வளன் உண்டே" என்னும் தொடர் மொழியினும் "வானோர்க்கரிய மருந்தே போற்றி" என்னும் தொடர் மொழியினும் நாம் நாடோறும் நேரிற்கண்டு ஒருவரோடொருவர் அளவளாவி வாழும் மண்ணோரை எடுத்துக் கூறாமல் காண்டற்கரியராய வானோரை எடுத்து மொழிவானேன் என ஒரு சிறிது ஆராயினும் மண்ணோரினும் வானோர் ஏற்றமுடையார் எனக் குறித்தற்கேயா மென்பது புலனாகும். "வானேயும் பெறில்வேண்டேன்" "திருமாலும் .... சென்றுணரா" என்னும் தொடர் மொழிகளிலுள்ள உம்மைகள் வானுலகின் சிறப்பையும் திருமாலின் உயர்வையும் குறிக்கவே எழுந்தனவாம். இங்ஙனமெல்லாம் புகழ்ந்து பேசற்கேற்ற பெருநலம் துய்த்தற்கு இவர்கள் அளத்தற்கரிய நிறைவளனுடையராயிருத்தல் வேண்டுமன்றோ? இவர்கள் எவ்வளவு பெருவளன் உடையராயினும் ஆகுக? இவர் தம் ஏற்றத்தை எடுதது மொழியும் திரு. வேள். N. துரைக் கண்ணன் அவர்களுடைய உரையாற் பெறப்படும் பயன்றான் யாதோ வெனில், கூறுதும்.

மன்னர் மன்னன் ஒருவன்பாற் சென்று ஒரு புலவன் பரிசிலாகப் பெற்ற அரும்பெறன் மாணிக்கமணியின் உயர்வை மொழிய வேண்டுவார் "இது மாணிக்கமணி" என்று கூறிய அளவானே அதன் உயர்வு பெறப்படமாட்டாது. மற்று, "இது மன்னர் பாலும் சென்று பெறற்கரிய மாணிக்க மணி" என்பரேல், அம்மணியின் உயர்வும் அதை யுடையானாகிய மன்னர் மன்னன்றன் ஏற்றமும் அதைப் பரிசிலாகப் பெற்ற புலவன்றன் புலமைத்திறனும் ஆகிய மூன்றும் இனிது விளங்கும். இது போலவே "சென்றடையாத திருவுடையான்" என்னும் தொடர் மொழிக்குத் திரு. வேள். N. துரைக்கண்ணன் அவர்கள் எழுதிய "இந்திரன் முதலிய இறையவர்களிடத்துப் போய்ப் போய்ப் பெறக் கூடாத விழுச் செல்வத்தை யுடையவன்" என்னும் உரையால் பேரின்பப் பேறாகிய விழுச் செல்வத்தின் உயர்

வும் அதனை யுடையானாகிய இறைவன் தன் ஏற்றமும் அதனை யடையும் அடியார் தம் தகுதியும் நன்கு விளங்கும். இதுவே இவ்வுரையாற் பெறப்படும் சிறந்த பயனும். “செங்கணவன்பாற் றிசைமுகன்பாற் றேவர்கள்பா லெங்குமிலாததோ ரின்பம்” என்னும் திருவாசகத் திருமொழியும் இவ்வுரையின் ஏற்றத்தை இனிது தெளிவுறுத்தும். மேலும், இவ்வுரை பேரின்பப் பேருகிய விழுச்செல்வம் இந்திரன் முதலிய இறையவரிடத்துப் போய்ப் பெறக் கூடாதது, அதனையுடையான் சிவபெருமானே என்று விளக்கலால், இவ்விந்திரன் முதலிய இறையவரை இவர் தேவர் அவர் தேவர் என்று பேசிப் புலம்பி வணங்கன்மின் ; நினைத்தொறும் காண்டொறும் பேசுந்தோறும் எப்போதும் அனைத்தெலும் புண்ணெக ஆனந்தத் தேன் சொரியும் குனிப்புடையானையே நினைமின், வாழ்த்துமின், வணங்குமின் என அறிவுறுத்தலும் பெறப்படும். இதுகாறும் ஆராய்ந்தவாற்றான் திரு. வேள். N. துரைக்கண்ணன் அவர்கள் தாம் எழுதிய வுரையில் ஐயுற்றாலும் திரு. G. கல்யாணம் அவர்கள் மறுத்தாலும் அவ்வுரை பொருத்தமுடையதென்பதே தேற்றமாம்.

இன்னும் “ -யாத திருவுடையான்” என்னும் இத்தொடர் மொழிக்குச் சிறிதாராய்ந்தால் வேறு பல பொருளும் காணலாம். அவற்றுள் எமக்குத் தோன்றியவை இவை :—

(க) (‘பெருங் கருணைத் தடங்கடலாகிய இறைவன் தானே வந்து தந்தாலல்லாமல் எளியேமாகிய நாம் போய் அடையக் கூடாத பேரின்ப விழுச்செல்வத்தைத் (தனக்குடைமையாக) வுடையான் என்பது ஒரு பொருள். இப்பொருள் பொருத்தமுடையதென்பதை “என்னாலறியாப் பதந்தந்தாய், தாயாய் முலையைத் தருவானே தாரா தொழிந்தால் சவலையாய் நாயேன் கழிந்து போவேனோ, தான் வந்து நாயேனைத் தாய்போற் றலை யளித்திட்டு, அண்டமுதலாயினை அந்தமிலா ஆனந்தம் பண்டைப் பரிசே பழவடியார்க் கீந்தருளும்” என்னும் திருவாசக அருண்மொழிகளெல்லாம் பேரின்பச் செல்வத்தைத் தருதல் இறைவன் செயலாகவே வைத்துக் கூறி வலியுறுத்தல் காண்க.

(உ) சென்றடையாத என்பது திருவைத் தழுவாமல் உடையானைத்தழுவுவதாகக் கொண்டு “இந்திரன் முதலிய இமையவர்களும் போய் அடைய முடியாத இறைவன்” எனக்கோடல் மற்றொரு பொருள். “பூவேறு கோனும் புரந்தரனும் பொற்பமைந்த நாவேறு செல்வியும் நாரணனும் நான் மறையும் மாவேறு சோதியும் வானவரும் தாமறியாச் சேவேறு சேவடி, செங்க ணெடுமாலும் சென்றிடந்து காண்பரிய பொங்கு மலர்ப்பாதம், தேவர் கோவறியாத தேவதேவன்” என்னும் மணி மொழிகளெல்லாம் இவ்வுரை கூறற்கேற்ற சான்றுகளாம்.

(ங) மேற்கூறிய படியே “சென்றடையாத” என்பது உடையானைத் தழுவுவதாகவே கொண்டு “(தானே வந்து காட்டினாலன்றி நாமே) சென்று அடைய முடியாத முதல்வன்” என்பது வேறொரு பொருள். “அவனருளாலே அவன்றாள் வணங்கி, அவனருளே கண்ணாகக் காணினல்லால் இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவனிறைவன் என்றெழுதிக் காட்டொணாதே” என்னும் தமிழ்

மறைமொழிகள் இவ்வுரையின் சிறப்பை விளக்கும். திரு. G. கல்யாணம் B. A. அவர்கள் தமதுரைக்கு மேற்கோளாகக்கொண்ட "நானே கருதின் வரநாடார் சும்மா இருந்தால் அவர் தானே அணைவர்" என்னும் திருமொழி யாம் கூறிய இப்பொருளையே அறிவுறுத்தல் காண்க.

(ச) இச்செய்யுளை இளமையிலேயே எல்லாம்வல்ல இறைவனை நேரிற்கண்டு அவனால் பேரின்பப் பேற்றை எளிதிற் பெற்ற நம் திருஞான சம்பந்த வள்ளல் அது பெறுமாறறியானை இறைவன்பால் அது பெறுமாறு ஆற்றுப்படுத்தும் செய்யுளாகக் கொண்டு, "ஆத! திருவுடையானைச் சிராப்பள்ளிக்குன்றுடையானைக் கூற என்னுள்ளம்குளிரும்? நன்றுடையானைத் தீயது இல்லானை நரைவெள் ஏறு ஒன்று உடையானை உமை ஒரு பாகம் உடையானைச் சென்று அடை" என்றுசொற்களைப் பிரித்து "இறைவனை யறியும் அறிவிலானே! பேரின்பச் செல்வத்தைத் தனக்குடைமையாக உடையவனைத் திரிசிராப்பள்ளிக் குன்றைத் திருக்கோயிலா உடையவனை வழுத்த என் (அடியேன்) மனம் குளிரும். ஆகையால் எல்லா நன்மைகளையும் உடையவனைத் தீமை சிறிதும் இல்லாதவனை மயிலையாகிய வெண்மை நிறம் வாய்ந்த ஆனேற்றை ஊர்தியாக உடையவனை உமையம்மையை• ஒருபால் உடையவனைப் போய் அடைவாயாக" (ஏ தேற்றம் அல்லது அசை) என்பது பின்னும் ஒரு பொருள்.

இத்தனை பொருளில் எதுதான் சம்பந்தப் பெருமான் கருத்தை விளக்குவதோ எனில், அதையுணர யாம் வல்லேம் அல்லேம். செய்யுளியற்றும் ஆசிரியர்கள் ஒரு சொற்றொடரில் ஒரே கருத்தை அமைத்துச் செய்வதுமுண்டு. ஒரு சொற்றொடரிலேயே பல பொருள் தோன்ற அமைத்துச் செய்யுள் செய்வதும் உண்டு. அன்றியும், ஒரே பொருள் அமைத்துத் தாம் செய்த செய்யுளை மறுமுறை நோக்கின் அதில் பல பொருள் தோன்றக் கண்டு தாமே மகிழ்வதும் உண்டு. இத்தகைய செய்யுட்களுக்குச் சிறப்புடையவாய பல பொருளையும் கொள்

## "சென்றடையாத திருவுடையான்"

[ஒ. கோ. கோவிந்தசாமிப் பிள்ளை, பி. ஏ.]

மேற்காட்டியுள்ள சொற்றொடர்க்கு இருவர் வரைந்த உரைகளை இப்பத்திரிகையில் அடியேன் கண்ணுற்றனன். ஆண்டு இருவரும் இருவிதமாகப் பொருள் கூறிப் போந்தனர். ஒருவர்' "தேவர்களிடத்து சென்று கிடைக்கப்பெறாத செல்வத்தைத் தன்னிடத்தே யுடையவன்" என்றும் மற்றவர் "தற்போதத்துடன் செல்வார்கள் கிடைக்கப் பெறாத செல்வத்தை யுடையவன்" என்றுங் கூறினர்.

முதற் கண், முந்தியவர் கூறிய உரையை ஆராய்வாம். பாடல்கள் பதினொன்றையும் படித்து அவைகளில் மிளிர்கின்ற கருத்தை உற்று நோக்குமிடத்து சம்பந்தர் உலகத்தினர்க்கு எம்பிரானுடைய அருள் திறமைகளை

யும் குணங்களையும் வெளிப்படுத்தி அவரைப் போற்றினால் சிறந்த செல்வத்தை யடைவது உண்மை என்பதை வெளிப்படுத்தும் எண்ணத்தை யுடையவராய் இருந்ததாகத் தெரிகிறது. எம்பிரானைப் போற்றி யடையுங்கள் என்ற சம்பந்தர் தேவர்கள் ஒரு செல்வத்தைத் தரும் வன்மையுடையவர்கள் என்பதை நினைந்தே இரார் என்பது துணிபு. மேலும்,

நூறு கோடி பிரமர்க ளொங்கினர்
ஆறு கோடி நாராயண ரங்கனே
ஏறு கங்கை மணலெண் ணிலிந்திரர்
ஈறி லாத நல்லீச னொருவனே.

என்ற நாவுக்கரையர் பாட்டினால் தேவர்கள் அழியாத நிலைமையையுடையவர்கள் அல்லர் என்பது வெளிப்படை. அதனால் அவர்களிடத்து சிறந்த செல்வம் கிடையாது என்பது பெற்றாம். எனவே " சென்றடையாத திருவுடையான்" என்று பாடும்போது தேவர்களிடத்து சென்று அடையாத செல்வத்தை யுடையவன் என்று சம்பந்தர் கருதியிரார்.

இனி, தற்போதத்துடன் சென்றவர்கள் கிடைக்கப்பெறாத செல்வத்தை யுடையவன் என்று மற்றவர் கூறின பொருளும் பொருத்த முடையதாகத் தோன்றவில்லை. ஏனெனில் ஒருவன் வேறொருவனிடம் ஒரு பொருள் கருதிச் சென்றால் அவனுக்கு முதன்மையாக அப்பொருளிடத்து இச்சையிருக்கவேண்டும். அவ்விச்சையினால் தற்போதத்துடன் சென்றால் அப்பொருள் கிட்டாது என்பதை அவன் அறிவான். இச்சையும் தற்போதமும் முரண்படுகின்றமையால் தற்போதத்துடன்சென்று என்பது பொருத்த முடையதாகத்தோன்றவில்லை.மேலும் அங்ஙனமே பொருள் கொண்டாலும் தற்போதத்துடன் சென்றவர்க்கும் ஈசன் அருள் புரிந்திருக்கிறான் என்பது,

" கருத்த னாய்க் கயிலாய மலைதனைத்
தருக்கினா லெடுத் தானைத் தகாவே
வருத்தியா ரருள் செய்தவன "

எனும் அப்பர் பாட்டால் விளங்குகின்றது.

இனி அச்சொற்றொடர்க்குக் கொள்ளத்தகக பொருள் என்னை எனின் நாரணன், நான்முகன் முதலான தேவர்கள் சென்று அடையாத செல்வத்தை யுடையவன் என்பது தான். இதற்குச் சான்று மூவரும் மணிவாசகப் பெருமானும் பாடிய பாக்களில் நிறைந்து கிடக்கின்றது.

" நாடினர் காண்கிலர் நான்முகனுந்
திருமா லயந்தேத்த "

என்றார் சம்பந்தர்.

" நாடி நாரணன் நான்முகன் வானவர்
தேடியே சறவுந்தெரி யாத தோர்
கோடி காவன் "

என்றார் திருநாவுக்கரசர்.

" கண்ணனும் மலரோனுங்
கீழ்மேலுற நின்றான் "

என்றார் சுந்தரர்.

" பூவேறு கோனும்
புரந்தரனும் பொற்பமைந்த
நாவேறு செல்வியும்
நாரணனும் நான்மறையும்
மாவேறு சோதியும்
வானவருந் தாமறியாச்
சேவேறு சேவடி "

என்றார் மாணிக்கவாசகனார்.

இதனால் தேவர்களுக்குக் கிட்டாத எம்பெருமான் உலகத்தினருக்குக் கிட்டுவனோ என்ற ஐயம் நமக்கு வேண்

டுவதில்லை. ஏனெனில் சம்பந்தரே முதலடியில் எம்பெருமான் நல்லவர், தீயதில்லாதவர் என்று கூறிப்போ யிருக்கின்றார். தேவர்களுடைய அகங் காரம் சொல்லொணாதது. பகைமை வாய்ந்தது. இராவணனுடைய செருக் கோ தன்னையன்றி வந்த செருக்கு. எம பிரானிடத்துப் பகைமை கொண்ட தல்ல. இராவணன் சிறந்த சிவனடி யான். அதுபற்றியே தான் எமபெரு மான் தேவர்களுக்கும் அரிதாகியும் இராவணனுக்கு எளியவனாகியு மிருந் தார். இங்கு பரஞ்சோதி முனிவர் தம் பழியஞ்சின படலத்தின் துவக் கத்தில் கண்டுள்ள,

"ஈறிலான செழியனைபுக்
கெளியவனாகி மன்றுள்
மாறியாடிய கூத்தென்
சொல்வரம் பின்தாமோ
............... சொல்லுவாம்"

என்பது கருதற்பாலது.

ஆகவே சென்றடையாத என்ற தொடருக்கு பொருள், தேவர்கள் சென்றடையாத என்பதுதான். இந்த தொடரில் இரண்டு பொருளை சம்பந் தர் மிகவும் அழகாய் அமைத்திருப் பது சாலவும் கருதற்பாலதா யிருக் கின்றது. ஒரு பொருள் எம்பெருமா னிடத்து உள்ள செல்வம் தேவர்களா லும் கோரப்பட்ட செல்வம். எனவே அப்படிப்பட்ட செல்வத்தை உலகத் தினரே நாடுங்கள் என்று சொல்வ தைப் போன்றிருக்கின்றது. மற்றொரு பொருள் அச் செல்வத்தை யடைய வேண்டு மென்றால தேவர்கள் சென்ற வண்ணம் செல்லாதீர்கள் என்று சம் பந்தர் சொல்ல வநத மாதிரியாகத் தெரிகின்றது.

இஃது சைவ சமயத்திடத்துள்ள அன்பின்மிகுதியால் எழுதப் பட்டதே யன்றி மற்ற உரைகளுக்கு மறுப்பாக எழுதப்பட்ட தன்று. இத்தொடர்க்கு இன்னும் பலர் பலபொருள் கூறுவர். அதனை அடியேன் அன்புடன் எதிர் பார்க்கின்றனன்.

---

# "சென்றடையாத திருவுடையான்"

[திருக்குறள் விளக்கவாசிரியர் - கி. குப்புசாமி முதலியார்]

'நன்றுடையானை' என்பதனை முத லாக வுடைய தேவாரத்தின் மூன்றாம் அடியாகிய, "சென்றடை யாத திருவுடையானை" என்பதனை இரண்டு முறை நான் பேசினேன். ஆயினும், சைவசித்தாந்த மகாசமாஜத் தின் காரியதரிசி இதைப்பற்றி எழு தித் தரல்வேண்டும் என்றமையால் ஒருவாறு சுருக்கி எழுதுகின்றேன். முதலில் இச்செய்யுளுக்கு உரை காண் போம். அஃதாவது,

நன்றுடையானை - அறக் கடலாகிய அந்தணனை,

தீயதிலானை - மறமென்ப தில்லாத மைந்தனை,

நரைவெள்ளேறு ஒன்றுடையானை - அறவிடையென்னும் விடை யொன் றுடையானை,

உமை யொருபாக முடையானை - அருட்சத்தியை இடப்பாகத்தே யுடை யானை,

சென்றடையாத திருவுடையானை - இயல்பாக அமைந்த அருட் செல்வ முடையானை,

சிராப்பள்ளி மேய குன்றுடையானை - திரிசிராப்பள்ளி யென்னு மிடத்தே அமைந்த குன்றத்தில் எழுந் தருளி யிருப்பானை,

கூற - வாக்கால் கூறுதலும்,

என்னுள்ளம் - என் மனமானது,

குளிரும் - மகிழும்.

என்பதாம்.

‘அறவாழி அந்தணன்’ ஆதலால், ‘நன்றுடையானை’ என்றும், அழிப்பும் இளைப்பாற்றற் காதலால், ‘தீயதி லானை’ என்றும், எல்லாம் அழிந்த காலத்தும் அழியாத தருமத்தை விடையாக ஆரோகணித் தமையால், ‘நரைவெள்ளேறு ஒன்றுடையானை’ என்றும், அருட்சத்தியை இடப்பாகத் துக் கொண்டதுரியங் கடந்த மூர்த்தி ஆதலால், ‘உமையொரு பாகம் உடை யானை’ என்றும், அருண்மூர்த்தியாய் உலகமே உருவினனும் எல்லார்க்கும் எல்லாச் செல்வத்தையுந் தந்து நிறப வனும் ஆதலால், ‘சென்றடையாத திருவுடையானை’ என்றும், இவ்விதம் எல்லா உலகமும் ஆன இறைவன் ஆன் மாக்கள் உய்யும் வண்ணம் நிலவுலகத் துத் திருக்கோயில்கள் பல கொண் டிருப்பதில் திரிசிராப்பள்ளியில் உள்ள குன்றில் எழுந்தருளி யிருக்கும் திரு மூர்த்தியை வாக்கால் கூற என் மன மானது நிரதிசய இன்பத்தைப் பெற் றதுபோல் மகிழும் என்பார், ‘சிராப் பள்ளிக் குன்றுடையானைக் கூற என் னுள்ளங் குளிரும்மே’ என்றும் கூறினா ராயிற்று.

இனிச் ‘சென்றடையாத திருவுடை யானை’ என்று கூறியது எற்றுக் கெனின், ஏனைய தேவர்கள் இவனை வழிபட்டு அடையவேண்டுவனவற்றை யடைவது போல் அடைதல் இல்லாத செல்வன் அதாவது இயல்பாகவே செல்வம்அமைநதவன் என்பதாம். இத னாலன்றே இறைவனை, “மன்னவன்” என்றனர். இதற்குப் பேருரை கண்ட சிவஞான முனிவரர், “வெண்கொற் றக் குடையும், நவமணி முடியும், சிங் காதனமும், மன்னவர்க்கேயுரிய சிறப் படையாளமாம். அதுபோலப் பிர பஞ்சம எல்லாவற்றிற்கும் மூலகாரண மாகிய ஒரு பெரு வெண்கொற்றக் குடையும், எவற்றையும் ஒருங்கே ஓரியல்பான் அறியும் பேரறிவாகிய ஒரு பெருஞ்சுடர் முடியும், எவற்றினை யும் அங்கங்கே உயிர்க்குயிராய் நின்று செலுத்தும் இயல்பாகிய ஒரு பெருஞ் சிங்காதனமும், பிறர்க்கின்றித் தனக் கே உரிமையாகச் சிறந்தமை பற்றி” என்று விதந்து கூறினர். அன்றியும், “விச்சதின்றியே விளைவு செய்கு வாய்” என்பது வித்தின்றி விளைவாய் எனப் பொருள் பட்டுத் “திருமேனி கொள்ளும் முறைமை உணர்த்திய தூஉமாம்” என்றமையால் எல்லாம் இயல்பாகவே அமைந்தவன் என்றும், அவனிடத்துள்ள செல்வம் ஏனைய ஆன்மாக்களாகிய மக்கள் முதல் தேவர் என்பார் வரையும் சென்று அடை ந்த செல்வம்போ லல்லாது இயல் பாகவே அமைந்த செல்வம் என்பது பொருள் ஆயிற்று. இதனைச் சுருங்க எழுதவேண்டும் என்றமையால் இத னுடன் விடுக்கின்றேன். இனி, இவ் விஷயத்தையே, ஐந்து பெரியோர்கள் எழுதியும், ஒரு பெரியோர் தலைவராக

அமைந்தும் பேசினர். தலைவராக அமைந்து பேசினோர், "சென்றடையாத திருவுடையான்" என்பதற்கு ஆண்டவன் தானே ஆன்மாக்களிடம் சென்று செல்வத்தைத் தருபவன் என்னும் பொருள்படப் பேசினர். முதலாவது எழுதிய திரு. என். துரைக்கண்ணரும், நான்காவது எழுதிய திரு. ஆறுமுகம்பிள்ளையும், ஒருமனத்தராய் 'ஆன்மாக்கள் ஏனைய தேவர்களிடம் சென்று அடையாத செல்வத்தையுடையான்' என்றனர். இரண்டாவது எழுதிய திரு. ஜி. கலியாணம் என்பவர் 'தற்போதத்தோடு ஆன்மாக்கள் சென்றடையாத செல்வன்' என்றனர். மூன்றாவது எழுதிய திரு பொ. முத்தையப் பிள்ளை ஒருவர் தாம், இறைவனுக்கே ஏற்றினர். மற்றும் கடைசியாக எழுதிய திரு. கோவிந்தசாமி முதலியார் முதல் எழுதியவரையும், இரண்டாவது எழுதியவரையும் மறுத்துத் தன் மதம் நாட்டினர்.

இனி,நான் முடிவாகக் கூறுவது என்னெனின், சமாஜ வருடக் கூட்டத்தில் வழக்கம்போல் காரியதரிசியவர்கள் கொடுக்கும் விஷயத்தைப் பேசுகின்ற விருத்தனாகிய நான் திருவெண்ணெய் நல்லூரிலும் பேசினேன். பேசியதிலிருந்து இத்துணைச் சித்தாந்த சைவர்கள் பேசியும் எழுதியும் முடித்தார்கள். இவ்வித செயல்களுக்குப் பேசியது போல் எழுதியும் தரல்வேண்டும் என்னும் காரியதரிசியின் விருப்பத்தின்படி இதை எழுதினேன்.

[குறிப்பு :—இப்பொருள் பற்றிய ஆராய்ச்சி இதோடு முடிவடையும்.—பத்திராசிரியர்.]

---

# சமயக்கேடு

[காழி. சிவ. கண்ணுசாமி, பி. ஏ.]

**ச**மயமென் றெழுந்த ஒவ்வொன்றற்கும் குறைந்த அளவிலோ விரிந்த அளவிலோ சடங்குகள் ஏற்பட்டிருப்பதைக் காண்கின்றோம். இன்பப் பெருக்காம் இறைவன் பால் இயற்கையாவெழும் அன்புப் பெருக்கேதுவாக அனைவரும் அவ்வவர்க்குத் தோன்றியவாறு வழிபாடியற்ற முற்படுவதே இயல்பு. நீராட்டியும், பூச்சொரிந்தும், பலியூட்டியும், ஆடியும், பாடியும், அழுதும், அரற்றியும், விழுந்தும், குதித்தும், நகைத்தும், மெய்ம்மறந்தும் மற்றுமிவ்வாறே நெஞ்சுகந்தபடி வழிபாடியற்றுவோர் தவறுகச் செய்கிறார் என்று பகுத்தறிவு வழியானேக்கிற் கூறுதலியலாது. தத்துவவுணர்வு தடித்துக் கூர்ந்து செல்லாத காலத்து இவையெல்லாம் ஒரு படித்தாய் நோக்கப்பட்டிருத்தல் எளிதிற் பெறப்படும். ஆயினும் அவ்வுணர்வும் அதனானெழுந்த உண்மைப் பரம்பொருளின் ஆராய்ச்சியறிவும் முனைத்து, முதிர்ந்து, உரங்கொண்டு, அறிவாற்றற் கேற்றவாறு சமய நிலை படிப்படியாயுயர்ந்து, அவ்வுயர்ச்சி ஏதுவாகவும் கருத்து வேறுபாட்டினாலும் பல் வேறு உட்பிரிவு எய்துகின்ற காலத்து ஒவ்வொரு உட்பிரிவும் ஒவ்வொரு விதவழிபாட்டை விலக்கியோ அன்றித் தனக்கென ஏற்றுக்கொண்டோ ஒழுகிவரம்பு கட்டிக்கொள்ளுதல் இயல்பு.

அவ்வாறு ஒவ்வொரு சமய உட்பிரிவும் தனித்துக் கால்கொண்டு தழைத்தோங்கப் புகுங்கால் குறித்த சில ஒழுக்கங்களையும் வழிபாட்டு முறைகளையும் தேர்ந்து மேற்கொண்டு அவைகட்கு மேற்கோளாகப் பலப்பல நூல் விதிகளையும் தேடியமைத்துக்கொண்டு அவ்வழிபாட்டினை முறையே இடைவிடாம வியற்றி வருமாறு ஒரு குழுவினரையும் பிரித்தமைத்துக் கொண்டவுடன் அது ஒரு தனிச் சமயமாக நிலை பெறுகிறது. இவ்வாறே தான் ஒவ்வொரு சமயமும் தனக்கென்றே சடங்குகள் கரணங்கள் என்பனவற்றையும், சமய சாத்திரங்கள், வேதங்கள், ஆகமங்கள் என்பனவாதிய நூல்களையும், கடவுட் பணியாற்றும் ஒரு குழுவினரையும் அமைத்துக் கொண்டுளதென்று கூறலாம்.

இனி, பெருமுயற்சி யெடுத்து இவ்வாறு ஒரு சமயத்தை நிறுவியபின் அம்முயற்சியாளர் தாங்கொண்ட கருமம் முடிவுபெற்றதாகக் கருதி மடியினை மேற்கொண்டு அச்சமயத்தின் பிற்கால நடைமுறையையும் ஆய்ந்து நோக்க வேண்டும் என்றதோர் உணர்ச்சியேயின்றிச் சமய வளர்ச்சியை அதற்கென முன்னர் பிரித்தமைத்த குழுவினராகிய குருமார்களிடம் ஒப்பித்து வாளாவிருந்துவிடல், ஒவ்வொரு சமய வரலாற்றினுங் காணக் கிடைப்பதோர் உண்மையாகும். பசி வேளையில் எதிர்கொண்டழைத்துச் சமைத்த உணவை முன்னிருந்து ஊட்ட வேறெத்தகைய உழைப்புமின்றி அதனை யுட்கொள்ளுவதனாலாய களைப்பு தொண்டருக்கும் சொற்ப நேரமிருக்கு மென்று கூறுவரேல் தீராப் பசிகொண்ட பல்லாயிரம் உயிர்கட்கு ஆராவமுதளிக்கும் ஒரு சமயத்தை நிறுவியதனாலாய களைப்பு எத்துணை சொற்ப காலம் இருக்க வேண்டும்? அதனை ஒரு கற்பகாலமென்றே கணக்கிட்டுக் கொள்ளுதலுங் தவறுமோ? இவ்வாறு களைமலிந்து கிடக்கும் ஒரு கற்ப காலமுழுதும் முன்னெழுந்த சமயமானது தன் சீர்குலைந்து அச்சுக்கெடா திருந்துவருமென்று கொள்ளவுங் கூடுமோ?

இனி, மடி மிகுந்து களைமலிந்து கிடக்கும் ஒரு காலத்தில் ஒவ்வொரு சமயமும் கேடுறுதற்குச் சிறந்த ஏதுக்களாய் இதுகாறும் எந்நாட்டிலும் இருந்து வந்தனவாகக் காணக்கிடப்பனவும் இனியும் இருக்கக் கூடியவையாகக் கருதக்கிடப்பனவும் மூன்றுகும். அவை குருமார்களின் தன்னலம், தெய்வத் திருவிளையாடற்றிரிபுப் பெருக்கம், வேதசாத்திர மறைபொருள் என்பனவே. இவை ஒவ்வொன்றையும் ஒரு சிறிது விளக்குவாம்.

மூன்றினுந் தலையாயது குருமார்களின் தன்னலங்கருதும் இழிதகைமையே. சமயங்கண்ட பெரியார்கள் மாண்டு மடிந்ததாலோ அன்றி மங்கியோய்ந்ததாலோ, கடவுட் பணியாற்றுவதற்கென அவர்களால் முதற்கண் தேர்ந்தமைக்கப்பட்ட குருமார்கள் நாளேற வேறத் தாமே கடவுளர்க்கும் மக்கட்கும் இடையே இருப்பதாகிய தொடர்பை ஆக்கியளித்து அழிக்கும் ஆற்றல் வாய்ந்தவர்களென்று கூறிப் பகடியடிக்க முற்படுவர். அதனைப் பகடியெனக் காணல் வேறு பல அலுவலிற் படிந்துகிடக்கும் ஏழை மாந்தர் கட்கரிதாகும். இப்பகடி தானும் சிறு கச சமய வாகள, கடவுட ப யற்றும் ஆசாரியர்கள், மறைகிளக்கும் ஓதுவார்கள் என்ற இக்குழு

வினரின் பல பகுதியினரிடத்தும் தோற்றமுறுகிறது. கடவுட் பணியிலேயே என்றென்றும் ஈடுபட்டுக் கிடப்பதனாலோ அன்றி அப்பணியாற்றுவதில் வேண்டியும் வேண்டாமலும் பல்லாற்றானும்வரும் நன்பொருள் மிகுதியினாலோ, அன்றியும் எந்தை குருவாகையால் யானுங் குருவாதலைத் தடுப்பார் யாருமிரார் என்ற ஒரு நம்பிக்கையினாலோ மற்றிவை போன்ற எதனாலோ முதன் முதலாகப் பிரித்தமைக்கப்பட்ட குருக் குழாத்தினரிடைக் காணக்கிடந்த உண்மைச் சமயப்பற்று ஒடுங்கி, கடவுட் பணியாற்றும முறைகளிற் பயிலும் பயிற்சிகள் குறைந்து, வெறும் வெளிச் சடங்கள வானே பணியை முடித்துக்கொண்டு உறங்க விழையும் இழுக்கம் குருமார்களிடத்தும் பெரும்பாலும் அவர்கள் கால்வழி வருவோர்களிடத்தும் குடிகொள்கிறது.

“ சத்தியமின்றித் தனிஞானந் தானின்றி
யொத்த விடயம் விட்டோரு முணர்வின்றிப்
பத்தியுமின்றிப் பரனுண்மை யின்றியூண்
பித்தேறு மூடர் ”

பலர் பெருகிக் குருமார்களா யமைந்து கடவுட் பணியாற்ற முன் வருவரேல் அவர்களை நம்பிக் கடைத்தேற வெண்ணினால் அது “ குருடுங் குருடுங் குருட்டாட்டமாடிக் குருடுங் குருடுங் குழிவிழு ’, வதையன்றோ ஒக்கும் ? இத்தகையோரால் இறைவழிபாட்டிற்குத் துணைக் கருவியாய்க் கோலப்பட்ட சடங்குகள், தன்னலமும் பொருள் வருவாயும் மக்கள் தம் அறியாமையுங் கருதி முதற்கருவியாக மாறிச் சமய வழிபாடெனக் காட்டப் பெறின் ஒரு சமயம் கீழறுபட்டுச் சிதைந்து போவது திண்ணம் என்று கூறவும் வேண்டுமோ?

இவ்வாறு தம்மாட்டுச் சமயப்பற்று அருகி ஊக்கங் குன்றி வருவதை யறிந்த காலத்து எங்கே தம்மாற் பிணிப்பு நெகிழ்ந்து விடுமோவென அஞ்சியவராய்க் குருக்குழாத்தினர் தெய்வத் திருவிளையாடல்களாகவும் அற்புதச் செய்கைகளாகவும் சமய நூல்களிடைக் காணக் கிடக்கும் ஒரு சில மறுக்கொணா உண்மைகளை ஒன்று பலவாகப் பெருக்கியும், காலத்திற்கேற்றவாறும் மக்களறியாமைக்கேற்றவாறும் திரித்தும் கூறியோ அன்றி அவ்வப்போது உண்டானதாகக் காட்டியோ தம் புல்லிய வாழ்க்கைக்கு அரண் கோலிக்கொள்ள முற்படுகின்றனர். இதனைக் கண்ட ஏழைமக்களும் வஞ்சகமறியாது அவையே உண்மையென நம்பி ஏமுறுகின்றனர். இதனால் மறுக்கொணாதவையா யெழுந்த அவ்வொரு சில திருவிளையாடல்களும், அற்புதச் செயல்களும் ஊடுருவிப் பார்க்க முயலுவோர் கண்களில் முதலில் வெறும் பகட்டாகவே காணப்பட்டொழிகின்றன. இதைவிட ஒரு சமயத்தின் வேரையறுக்கும் சுரிகையும் வேறுண்டோ ?

யோகக் கூறிய வேதசாத்திர உண்மைப் பொருளை வெளிப்படையாக விளக்கி யறிவு புகட்டாது தன்னலங் கருதி அதனை மறைபொருளாக்கி வைத்துக்கொண்டு வருவதனாலாய தீமைகள் வெளிப்படையாகலின் இங்கு விரிக்காது விடுக்கின்றாம்.

இவ்வாறு வேலியே பயிரை யழித்ததுபோல் சமய வளர்ச்சிக்கெனத் தேர்ந்து அமைக்கப்பட்டவர்களே மடி

மையினாலும், அறியாமை யினாலும், வஞ்சத்தினாலும், பொருள் வருவாய் கருதியும் சமயஉண்மைகளையொதுக்கி உள்ளீடற்ற வெளிச் சடங்குகளையே குறிக்கொண்டு காத்துவர முற்பட்டால் சமயக்கேடு திண்ணமாய் எய்தும் என்று கூறவும் வேண்டுமோ? சமயக்கேடு தொடங்கவே ஒவ்வொரு சமயத்தின் அடிப்படையா யமைந்த பொன்னனைய உயர்ந்த கொள்கையான "இறைவன் திருமுன் எவ்வுயிருஞ் சமம்" என்ற கொள்கைமாறுபட்டு ஒவ்வொன்றிலும் உயர்வு தாழ்வு என்ற வேற்றுமை தோன்றுகிறது. பிறப்பில் வேற்றுமை, பிழைப்பில் வேற்றுமை, வழிபாட்டிலும் வேற்றுமை என்றித் தொடக்கத்தன எத்துணை வேற்றுமைகள்? உண்மை யிது பொய்ம்மை யிது என்றுணர முடியாதபடி சூழ்ச்சிகள் வலுத்து, வேடங்கள் மல்கிச் சமய உணர்ச்சிக்கும் அறிவுக்கும் இன்றியமையாத நேருணர்வு (Straight thinking) கெட்டு விடுகிறது.

"பொய்த்தவ வேடர் கைத்தகப் படுத்தற்கு
வஞ்சச் சொல்லின் வார்வலை போக்கிச்
சமயப் படுகுழி சமைத்தாங் கமைவயின்
மானிட மாக்களை வலியப் புகுத்தும்
மாறு விரதத் தகப்படுத் தாழ்த்தும்
வளை வுணர்வு"

எங்கும் பரந்து தலைவிரித்தாடுகிறது.

இதுகாறுங்கூறியவாற்றான் மாசற்று எழுந்த ஒரு சமயம் குருமார்களின் தன்னலம், தெய்வத் திருவிளையாடல்களில் வஞ்சகத் திரிபு, சமய சாத்திர உண்மைப்பொருளை மறைத்தல் ஆகிய புற வேதுக்களால் எவ்வாறு கேடுறுகின்றது என்பதை ஒருவாறு காட்டினும்.

---

# சைவ இளைஞர் மகாநாடு

## தலைவர் பேருரை

[கா. சுப்பிரமணியம் பிள்ளை எம். ஏ., எம். எல்.]

**சை**வ இளைஞர் பொருட்டு முதல் முதல் கூட்டப்படும் இம்மகா நாட்டிற்கு என்னைத் தலைமை பூணும்படி கேட்டமைக்குக் காரணம் இளைஞரைப் போல பயிற்சி போதாமை என்பால் காணப்படுதல் போலும். நான்அதற்கு இசைந்தது எதனாலோ எனின் இளைஞர்பாலுள்ள உள்ளக்கிளர்ச்சி, களங்கமின்மை, விடாமுயற்சி முதலிய பல நற்பண்புகளைப் பெற்றுக்கொள்ளுதற்கும் அன்னார்க்கு அறிவுரை பகர வந்துள்ள மாட்சிமை தங்கிய பேரமைச்சர் முதலிய பெரியோரது பயிற்சி மிக்க போதனையின் பயன் கொள்ளுதற்கும் வாய்ப்பு அமைதலின் என்க.

இம்மகா நாட்டைத் திறந்த பேரமைச்சரது அறிவுரைகளின் விளக்கமாக யான் செப்பும் சிற்றுரையைக் கருதுக. இளமைப் பருவமானது எல்லா நலத்திற்கும் வித்திடும் பருவமாதலின் எல்லா நலத்தையும் விளக்க வல்ல கல்வியினை இளமையிற் பயிலுதல் வேண்டுமென்று நமது முன்னோர் கூறினர். 'இளமையிற் கல்வி சிலையிலெழுத்து' என்பதைக் காண்க. கற்கும் கலைகளை எல்லாம் தொழிற்கலை, கவின்கலை, மெய்க்கலை என மூன்றாகப் பிரித்தல் கூடும். உடல் வாழ்க்கை நிலை பெறுதற்கு வேண்டும் ஊதியங் கருதிப் பயிலப்படும் உழவு, கைத்

தொழில், வணிகம் முதலியவற்றின் சார்பான கலைகளை எல்லாம் தொழிற் கலை எனலாம். ஐம்புலனிற்கும் மனதிற்கும் இன்பம் பயக்கவல்ல பாட்டு, இசை, கூத்து, ஓவியம், சிற்பம் முதலிய அழகினைச்சிறப்பிக்கும்கலைகளெல்லாம் கவின் கலை எனப்படும். இனி மெய்க்கலை என்பது தோன்றும் பொருள்களின் தன்மைகளை ஆராயும் கலை எனவும் தோன்றும் பொருள்களுக்கெல்லாம் அடிப்படையாயுள்ள முடிவான உண்மைப் பொருளை ஆயும் முடிந்த மெய்க்கலை எனவும் இருதிறப்படும். முன்னவற்றை அறிவியல் நூலின் (Science)பாலனவாகவும் பின்னவற்றைத் தத்துவ நூலின் (Philosaphy) பாலனவாகவும் மேல் நாட்டினர் கருதுவர். இன்னொரு முறையாகப் பார்க்குமிடத்து உலகத்தின் ஒவ்வொரு பகுதியையும் வகுத்து வகுத்து ஆயும்முறை அறிவியல் நூல் என்றும், எல்லாப் பொருளும் தொக்க பிண்டமாகிய உலகத்திற்கு ஆதாரம் யாதென்று ஆயும் முறை தத்துவநூல் முறையாகவும் கொள்ளப்படும்.

தத்துவநூல் ஆராய்ச்சியில் நமது முன்னோர் தலை சிறந்து விளங்கினர். அஃதே சமய உணர்ச்சிக்கு ஆதாரமாக உள்ளது. எக்கலையினும் மெய்க் கலை உயர்ந்ததாலும் அதன் கண்ணும் முடிந்தமெய்ப்பொருளை ஆய்ந்தறியும் சமயக் கலையானது மிக மேம்பாடு உடையது ஆதலானும் சமயக்கலையின் பயனையே கல்வியின் விழுமிய பெரும் பயனாக ஆசிரியர் திருவள்ளுவர் முதலிய பேரறிஞர்கள் அறுதியிட்டு

கற்றதனா லாய பயனென் கொல்
வாலறிவன்—நற்றாள் தொழா அரெனின்

எழுத்தறியதீரும் இழிதகைமை தீர்ந்தோன்
மொழித் திரத்தின் முட்டறுப்பான் ஆகும்
மொழித் திரத்தின் முட்டறுத்தனல்லோன்
[முதனூற்
பொருளுணர்ந்து கட்டறுத்து வீடு பெறும்.

என்ற விடத்து இலக்கண இலக்கியங்களின் குற்றமற்ற பயிற்சியினது முடிந்த மெய்ந்நூற் பொருளுணர்ந்து பற்று நீங்கி வீடு பெறுதற்குக் கருவி என்று கூறியது காண்க.

முடிந்த மெய்க்கலையின் சாரமே சைவத்தின் உட்கிடையாம். தென்னுடைய சிவனே போற்றி என்பதற்கேற்ப சிவநெறியானது பண்டைத் தமிழரது சமய நெறியாய் நிலவினமையான் அதன் உயிர் கருத்துக்கள் தொல்காப்பியம், திருவள்ளுவர் முதலிய பண்டைத் தமிழ் நூல்களில் பொதிந்துகிடப்பதை வைத்து இறுதி ஊகிக்கப்படும். தொல்காப்பியமானது இப்பொழுதுள்ள வடமொழி வியாகரணமாகிய பாணினியம் இயற்றப் படுதற்கு முன்னே தோன்றி மறைந்த ஐந்திரத்தினோடு ஒத்தகாலத்ததெனக் கருதுமிடத்து அதன் பழமை நன்கு புலனாகும். அத்துணைப் பழமையாகிய காலத்தைக்கடவுள் உயிர்உலகம் என்ற முப்பொருள் உண்மை தமிழ் நாட்டிலே எங்கும் வழங்கிவந்தது என்பது அவற்றின் சார்பாகிய சொற்களை எழுத்துக்களுக்கு உருவகப் பெயர்களாக ஆசிரியர் தொல்காப்பியனார் கொண்டமையால் இனிது விளங்கும். ஆய்தம், உயிர், மெய் என்ற மூன்று சொற்களையும் உற்றுநோக்குக. ஆய்தம் என்பது நுண்ணிது என்று பொருள் படும். எல்லா எழுத்தொலிகளும் தோன்றுதற்கு அடிப்படையாய்உள்ள மூச்சானது நுண்ணிதாய் எழுத்தொலி புலனாதற்கு ஏதுவாகிய காற்றுத்

தொகுதியோடு கலந்திருத்தலின் அதனையே ஆய்தம் என்றார்.

அது மூலமாகிய எழுத்தொலியினோடு கலந்தே ஒலித்தலின் அதனை சார்பெழுத்தென்றார். எல்லாப் பொருளுக்கும் ஆதாரமாய்த் தோன்றாத அடிப்படியாய் அவற்றோடு சார்ந்து நிற்கும் மெய்ப் பரம்பொருளை யுணர்தலே சார்புணர்தல் என ஆசிரியர் திருவள்ளுவனார் மெய்யுணர்தல் அதிகாரத்தில் குறித்தமை காண்க. "சார்பினால் தோன்றாது தானருவாய் எப்பொருட்கும், ஏனின்று எஞ்ஞான்றும் ன்பம தகைத்தோர்" என்ற ம் இக்கருத்து வலியுறுதல் காண்க. எல்லாப் பொருட்கும் சார்பாகிய முதல்வன் அப்பொருள்களின் இயல் பிலனாய் அவற்றின் வேறான தன்மையுடையனாய் இருத்தலின் தனி முதலெனப் படுவன். அவ்வாறு உயிரொடும் மெய்யொடும் சாராது வேற்றியல்புடைய ஆய்தமானது தனிநிலை எனப்படுதல்காண்க.

இனி எப்பொருட்கும் இன்பம் ஈயும் இறைவனின் வேறாக அவ்வின்பத்தைப்பெறும் உயிர்கள் பல என்பதும் தொல்காப்பியத்துட் போந்த கருத்தேயாகும். "வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன்" என்ற விடத்து உயிர்கள் வினை வசப்பட்டு அறிவு மயங்கப் பெறுவன என்பது குறிப்பானறியக் கிடக்கின்றது. வினைக்கு ஏதுவாக எடுக்கும் உடம்பே மெய்யெனப்படுதலின் உயிர் ஊர்ந்து வரும் எழுத்துக்களை மெய்யெழுத்தெனவும் ஊரும் எழுத்துக்களை உயிரெனவும் குறியீடுசெய்து கொண்டமை மிகவும் வியக்கத்தக்கது. மெய்யென்பதே தத்துவம் என்னும் வடசொல்லின் பொருளாகும். தத்துவக் கூட்டமே உலகமாதலின் மெய்யென்ற விடத்து உலகம் சுட்டப்பட்டதென அறிக. இதுவரை கூறியவற்றால் சைவசித்தாந்தத்துட் போந்த முப்பொருளுண்மை தொல்காப்பிய எழுத்ததிகாரத்துள் அமைந்து கிடக்கின்றது என்பது இனிது புலனாகும். இதனைப்பற்றிய விரிந்த ஆராய்ச்சி பிற்காலத்து நூல்களில் காணப்படும்.

)ப்போது நாம் ஒரு யாக உளத்தில் பதித்துக் கொள்வது யாதெனில் எல்லாம்வல்ல முழு முதற் கடவுள் ஒருவன் உண்டென்பதும் அவனன்றி ஓரணுவும் அசையாதென்பதும முடிந்த உண்மைகளேயாம். க்கருத்தினையே வடமொழி உபநிடதங்களும் பாரசீகப் பண்டைப் பல்நூல்களும் கிரேக்க தத்துவ நூலும் வெவ்வேறு வகையாகப் பகர்கின்றன. தற்காலத்திலே மேல்நாட்டுத் தத்துவ உணர்ச்சி சான்றவர்கள் அறிவுடையோர் முழுமுதற் பொருளே அறிவில்லாத பொருட் பிண்டமாகிய உலகத்திற்கு ஆதாரமாய் புள்ளதென்பதை முடிவாகக் கைக் கொண்டுள்ளார்கள். இம்முடிந்த வுண்மையை அறியாத பலர் இக்காலத்திலும் முற்காலத்திலும் ாத்திக வாதம் பேசி யொழிந்தனர்.

கடவுள் உண்மை உணர்ச்சிக்குத் தடையாய் நிற்பனவற்றுள் ஒன்று யாதெனில் மக்களது முற்றுப்பெறாத அவாவேயாம். நினைந்ததொன்றுமுடிய வேண்டுமென்று கருதுபவன் கடவுளை வணங்கியும் அது முடிவு பெறாதவிடத்து நாத்திக வாதத்தை மேற்கொண்டும் நிற்கின்றான். தான் செய்

ஏக்குத்தக்க பயனை ஒருவன் அடை கின்றான் என்பதையும் வினை செய்தல் ஒரு பிறவியிலும் அவ்வினையின் பயனை நுகருதல் மற்றொரு பிறவியிலும் நிகழ்தல் கூடுமென்பதே உணராத தாகும். தமக்குத் தக்கவற்றை அறிந்து உதவுகின்றார் கடவுள், துன்பத்தைக் கொடுத்தாலும் தம்மைப் பக்குவப் படுத்தி உய்வித்தல் பொருட்டே என் கருத்துக்களை மனதில் பதித் க்கொள்ளல் வேண்டும் என்பதை வற்புறுத்தவே ஆசிரியர் திருவள்ளுவ னார்,

அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும்
செவ்வியான் கேடும்நினைக்கப்படும்.

என்று உறுதி கூறிப் போந்தனர். ஆங் கிலத்திலும் (God knows what is best for us) என்பதும் கடைப்பிடிக் கத் தக்கதே. 'வேண்டுவார் வேண்டி யதே ஈவான்' என்ற திருவாக்கிற்குப் பொருளினை ஆய்ந்துகொள்ளல் வேண் டும். வேண்டுவார் என்ற சொல் லானது வேண்டும் தகுதியுடையார் என்று பொருள்படும். "தாமென்றும் மனந் தளராத் தகுதியினால் உலகத் துக்கு ஆமென்று சரண்புகுந்தார் தமைக் காக்கும் கருணையினன்" என்ற திருஞானசம்பந்தப் பெருமான் திரு வாக்கினால் எக்காலத்தும் மனந்தளரா மையும் தான் மனத்தொடு இறைவன் செயல் யாவும் நன்மையே என்று கருதிச் சரண்புகுதலுமாகிய தகுதி யுடையோரே இறைவனது சிறந்த கருணைக்குரியவர் என்பது தெளி யப்படும். பயன் கருதாது இறை வனை வழிபட்டால் அது கிடையாத போது நாத்திகம் தலை எடுத்தலின் பயன் கருதாது கடவுளை வழிபடு கென பெரியோர்கள் கூறுவாராயி னர். பயன் கருதற்கு ஏது ஆசை யாதலின் ஆசையற்ற இடத்திலே தான் தெய்வ உணர்ச்சி நிலைபெறும் என்ற கருத்தினைத் தாயுமானப் பெரி யார் "நிராசை இன்றேல் தெய்வம் உண்டோ" என்றார். ஆதலால் இறைவ னடிக்குப் பயன் கருதாது அன்பு செலுத்துதலே சிறந்த வழி பாடா கும். காதலற்கு அன்பினால் விளையும் இன்பம் போல இறையன்பினால் அடி யார்க்கு இன்பம் விளையும். "இறவாத இன்ப" அன்பு என்பதும் அது. இவ் வாறே நமது சமயக்கருத்துக்கள் பிற வற்றையும் ஆய்ந்து உண்மை தெளிக. ஈண்டு அவற்றை விரிப்பில் பெருகும். சைவத்திலே எவ்வுயிர்க்கும் இரக்கம் வைத்தல் சிறந்த கொள்கையாகத் தழுவப் படுதலானும் ஒழுக்கம்பற் றியே உயர்வு என்பது தமிழ்க் கொள் கை யாதலானும் சைவ இளைஞர் யாவ ரும், அருள் ஒழுக்கமும், விரிந்த நோக்கமும், குற்றம் பொறுக்கும் குணமும், ஒற்றுமையும், விடாமுயற்சி யும் உடையவர்களாய்த் திகழ்தல் வேண்டும்.

சைவத்தின் சிறந்த உண்மைகளை உலகத்தில் வெளிப்படுத்தினால் உலகி லுள்ள அறிஞர் யாவரும் அவற்றை மேற்கொள்வர். "ஞால நின்புகழே மிக வேண்டும்" என்ற நமது பரமா சாரியார் திருவுள்ளக் கருத்தினை யாவ ரும் நிறைவேற்ற முயல வேண்டும்.

சைவ வொளியானது எங்கும் பரவு தற் பொருட்டு சைவ சித்தாந்தக் கலா சாலை, சைவ நூல் நிலையம், சைவ போதகாசிரியர் நியமனம், சைவர் விடுதி, சைவ நூல் வெளியீடு முதலிய பேரறங்கள் முதலியவற்றையும் சைவ ஆதீனத் தலைவர்களும் பிற சைவச் செல்வர்களும் கோயி லதிகாரிகளும் அமைத்து நன்குநடத்திச் சைவர்க்கும் சைவ இளைஞர்க்கும் பேருதவி புரியு மாறு திருவருள் சுரக்கும் பொருட்டு எல்லாம்வல்ல இறைவனை வழுத்து r. சுபம்.

# கேவேடரும் கெளிறும்

[வே. மு. ஸ்ரீநிவாஸ முதலியார்]

(1) திருவாசகம் கீர்த்தித் திருவகவ லிடையே "கேவேடராகிக் கெளிறது படுத்தும்" என்ற அடியினுக்கு இது வரையில் பொருள் கண்ட பெரியார் கள் பலருள் திருவாளர் சாமிநாத பண்டிதர் அவர்கள் திருவாளர் நா. வேதாசலம் பிள்ளை அவர்கள் (மறை மலை அடிகள்) காலஞ்சென்ற திரு வாளர் கா. இராமசாமி நாயுடு அவர் கள் ஆகிய இவர்கள் மூவரும் "கே வேடர்" என்ற சொல் "கேவர்த்த" அல்லது கைவர்த்த என்ற வடமொழி யின் திரிபெனக் கொண்டு "மீன்வலை ஞராகி மீனைப்படுத்தும் என்று பொருள் கொண் டிருக்கின்றனர் என்பதனை அறிஞர் பலர் அறிவர்.

(2) அன்றி, திரு. நா. வேதாசலம் பிள்ளை அவர்கள் தாம் எழுதிய உரை நூலகத்தே "இறைவன் வலைஞனாய்ச் சென்று படுத்தது சுறவுமீன் என்று திரு விளையாடல் புராணங் கூறுமாயினும் அடிகள் அதனைக் கெளிற்றுமீன் என்று கூறுதலின் அடிகள் கூற்றே கோள்ளற் பாலதாம் என்று எழுதியுள்ளார்கள்.

(3) பிள்ளை அவர்கள் கூறும் அடிக ளால் அருளப்பட்ட திருக்கோவையார் என்னும் நூலகத்தே 187 எண்ணுள்ள பாட்டின்கண் "கார்த்தாங்கந் திரை தோணி சுறுக்கடல்மீன் எறிவோர்" என்று கூறி இருத்தலால் அப்பாட் டின் கவிக் கருத்துக்கேற்பப் பொருள் கொள்ளின், அவ்வடிகளின் கருத்தும் சிவபிரான் வலைஞனாகிப் படுத்தது சுறவு மீனே என்பதாகும். இவ்வேதுவினால் பிள்ளை அவர்களின் முடிபு பொய்த் தமையினை அறிஞர் பலர் அறிவர்.

(4) ஸ்ரீ வில்லிபுத்தூர், பாரதம் அருச்சுனன் தவநிலைச் சருக்கம் 81. எண்ணுள்ள "நனைமலர்ச் சிதறி" என்ற பாட்டின் கண் "வினைபடு கேழல் வேட்டை நாம் இன்றே வேட ராய் ஆடுதல்வேண்டும் என்று சிவ பிரான் கூற்றாகக் கூறி இருத்தலை அறிஞர் பலர் அறிவர்.

(5) ஆகையால் "கேழல் வேடர்" என்ற இவ்விரண்டு சொற்களுங் கூடி மரூஉவின் பாத்தியாய்க் "கேவேடர் எனத் திரிந்து நின்றனவாகக்கொண்டு பன்றி வேட்டையராகிப் பன்றியினைப் படுத்தும் என்று பொருள் கொள்ளு தலே சாலச் சிறப்புடைத்தாகும் என் பதனை, நூற்களைப் புரட்டிப் புரட்டிப் படித்து, இந்தச் சொல்லுக்கு அந்தப் பொருள் அந்தப் பொருளுக்கு இந்தப் பெயர் என்று ஆய்ந்துகொண்டிராமல், 'ஊர்களைச் சுற்றிப் பாருங்கள்' என்று படிப்பவரைப் பழித்துப் புத்திபுகட்ட முற்படும் பண்டிதரல்லா அறிஞர் பலர் ஆய்ந்து கொள்வர் என்ற நம் பிக்கையான் இதனை வெளியிடலா னேன்.

(கேழல் - பன்றி) களிறு, கெளிறு - பன்றி)

"எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினும் [அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"

[குறிப்பு :— இச்சொற்றொடர் பற்றி ஒரு பக்கத்து மேற்பட்ட ஆராய்ச்சியுரைகள் வெளியிடப்படா - பத்திராசிரியர்.]

# சிவலிங்கம்

[திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளையவர்கள் பி. ஏ. எழுதியது]

சிவலிங்கம் என்னும் தொடர்மொழியானது சிவம், லிங்கம் என்னும் இரண்டு சொற்களினது சேர்க்கையாலாகிறது; அது சிவமாகிய லிங்கம் அல்லது சிவத்தைக் காட்டும் லிங்கம் என விரியும்.

சிவம் என்னும் சொல் மங்கலம் அல்லது நன்மை என்று பொருள்படும். 'சிவம் நன்மை, குறுணி, முத்தி' என்பது சூடாமணி நிகண்டு. 'எல்லா உயிர்களுக்கும் எப்பொழுதும் நன்மையைச் செய்தலாற் சிவம்' என்று திருக் கோவையாருக்கு உரை எழுதிய பேராசிரியர் கூறுகின்றார். (358-வது பாட்டு). உண்மை அறிவு இன்பம் (சத்து சித்து ஆனந்தம்) என்னும் இம்மூன்றினது நிலைக்களமே சிவமாகும். எப்பொருள், எக்காலத்தும் இல்பொருள் ஆகாமல் உள்பொருளாய் அறிவின்றி நிலைபெற்றுள்ளதாயும் தான் எப்பொருளிடத்திலும் பற்றின்றி எல்லாப் பொருள்களும் தன்னைப் பற்றாக உடையனவாயும் உள்ளதோ அது சிவம்; எப்பொருள் அறிவு மயமாயிருந்து எல்லா உயிர்களுடைய அறிவை விளக்குமோ அது சிவம். எப்பொருள் எல்லா உயிர்களும் நுகர்கின்ற இன்பத்துக்கு இடமாய் நிற்குமோ அது சிவம். இலிங்கம் என்பது குறி அல்லது அடையாளம் ஆகும்.

சிவலிங்கம் என்பது சிவத்தைக் காட்டும் குறியாகும். உயிர்கள் சிவத்தை உண்மை அறிவினாலே தான் நேரே தன்னறிவினுள்ளே உணர்ந்து அறிய முடியும். அத்தகுதி வாய்க்கப் பெறுமுன் உயிர்கள் அச்சிவத்தினது அருட்சத்தி விளக்கமாகிய உலகில் சிவத்தை அறிதற்குக்குறிகள் அமைந்திருக்கின்றன. அக்குறிகள் பின் வருமாறு:—

சிவன் எட்டு உருவினன். அட்டமூர்த்தி, அவன் நீர், நிலம், தீ, கால், வெளி, பகலோன், திங்கள், உயிர் ஆகிய இந்த எட்டுப் பொருள்களையும் உருவங்களாக உடையவன். நீர் நிலம் தீ கால் வெளி என்னும் ஐம்பெரும் பூதங்களாலாகிய உலகம் அவனுடைய உருவம். உலகமாகிய உருவம் சிவத்தைக் காட்டுங் குறியாயுள்ளது.

(1 இருநிலனாய்த் 2 தீயாகி 3 நீருமாகி, 4 இயமானனாய் எறியுங் 5 காற்றுமாகி, அருநிலைய 6 திங்களாய் 7 ஞாயிறாகி, 8 ஆகாசமாய் அட்டமூர்த்தியாகிப், பெரு நலமும் குற்றமும் பெண்ணும் ஆணும், பிறர் உருவும் தம் உருவும் தாமே யாகி, நெருநலையாய், இன்றாகி நாளையாகி, நிமிர்புன் சடையடிகள் நின்ற வாறே.)

என்பது அப்பர் வாக்கு.

உலகம் சிவத்தினது குறியாயிருத்தலால் அது அண்டலிங்கம் என்று கூறப்படுகின்றது. அவ்வுண்மை,

இலிங்கம தாவ தியாரு மறியார்
இலிங்கம தாவ தெண்டிசை யெல்லாம்
இலிங்கம தாவ தெண்ணெண் கலையும்
இலிங்கம தாக வெடுத்த துலகே.

என்று திருமந்திரத்திற் கூறியிருத்தல் காண்க.

ஐம்பெரும் பூதங்களாலாகிய உயிர்களது உடலும், ஒரு சிறிய உலகம். அந்த உடலும் சிவத்தைக் காட்டும் குறியாதலின் அது 'பிண்டலிங்கம்' என்று கூறப்படும். அவ்வுண்மை,

மானுட ராக்கை வடிவு சிவலிங்கம்
மானுட ராக்கை வடிவு சிதம்பரம்
மானுட ராக்கை வடிவு சதாசிவம்
மானுட ராக்கை வடிவு திருக்கூத்தே

என்று திருமந்திரத்திற் கூறியிருத்தல் காண்க.

கவோ துக்கத்தின் குறிகளாகவோ தோன்றவில்லை. ஆன்மா வானது, ஸ்தூலதேகத்தோடு இதுகாறும் வைத திருந்த கூட்டுறவைச் சாசுவதமாக விலக்கிக் கொள்கிறதென்றே தோன்றி யது.

ஸ்தூல தேகத்தின் தலையைச்சுற்றி அழகிய, மிருதுவான, பருத்த ஓர் ஒளி சூழ்ந்து கொண்டது. மூளையும் சிறு மூளையும், தங்களுடைய உட்புறங்களை விரித்துக் கொண்டன. அவை தங்கள் தாதுத்தொழில் களைச் செய்யாமல் நின்றொழிவதை நான் பார்த்தேன். உடனே இவை களுக்கு மின்சார தாதுவும், காந்த தாதுவும் உண்டாகி, கீழ்த்தரப் பட்ட தேக அமைப்புகளில் ஊடுரு விப்பாய்ந்தன. சாதாரண தேகா ரோக்கியத்தின் போது, மற்ற சிற் றங்கங்களைவிட மூளைக்கு எவ்வளவு உறுதி உண்டோ அதைவிடப் பதின் மடங்கு அதிகமான உறுதியை அம் மூளையானது மரணத்தறுவாயில் பெற் றது.

## ஜீவன் பிரிவு

பிறகு, மரணம், அதாவது ஸ்தூல தேகத்தினின்று ஜீவன் பிரிவு தொ டங்கியது. மின்சாரம், காந்தம், இயக்கம், ஜீவன், உணர்ச்சி ஆகிய இவைகளின் தத்துவங்களை மூளையா னது தனக்குள்ளே யிருக்கும் பல அறைகளில் ஆகர்ஷிக்கத் தொடங்கி யது. சிரசு, மிகுந்த பிரகாச மடைந் தது. மற்ற இந்திரியங்கள் எவ்வள வுக் கெவ்வளவு குளிர்ச்சி யடைந்தும், இருளடைந்தும் போயினவோ அவ் வளவுக்கவ்வளவு மூளையானது பிர காசத்தையும் சோபிதத்தையும் அடை ந்தது.

மேற்படி ஸ்திரீயின் தலையினின்று எழுந்து அதைச் சூழ்ந்து கொண் டிருந்த பழுத்த நிறமுள்ள தெய்விகச் சூழலில், வேறொரு தலை அமைந்து கொண்டு வருவதை நான் பார்த்தேன். ஆன்ம உணர்ச்சி பெற்றவர்களுக்கே, இந்த இந்திரியாதீதமான நிலைகள் புல னாகு மென்பதையும், ஸ்தூலக் கண்கள் ஸ்தூல வஸ்துக்களையே பார்க்க முடியு மென்பதையுமவாசகர்கள்நினைவிலிருத் திக்கொள்ள வேண்டும். இஃது இயற் கைவிதி. மேலே கூறப்பட்ட புதிய தலையானது, வரவர நன்றாகத்தெரியத் தொடங்கியது. அதனை ஊடுருவிப் பார்க்க முடியாதபடியும், அதனை உற்று நோக்க முடியாதபடியும் அவ் வளவு சிற்றடக்கமாயும் பிரகாசமாயும் அந்தத்தலை இருந்தது. அந்த ஞானத் தலையானது அமைந்து கொண்டிருக் கையில், ஸ்தூலத் தலையைச் சூழ்ந்து கொண்டிருந்த ஒளிச் சூழலானது, கலக்கமடையத் தொடங்கியது. மேற் படிஞானத்தலை நன்றாக அமைந்ததும், இந்த ஒளிச்சூழல் மெதுமெதுவாக மறைய ஆரம்பித்தது. இதனால், மேற் படி ஒளிச்சூழலின் தத்துவங்கள், பிரிக்கக் கூடாதனவா யிருக்கின்றன வென்பதை நான் அறிந்து கொண் டேன். பிறகு மேற்படி ஞானத் தலையானது, எப்படித் தனியாகப் பிரிந்து அமையத் தொடங்கியதோ அப்படியே, படிப்படியாக கழுத்து, புஜங்கள், மார்பு முதலிய எல்லா அவயவங்களும் அமையத் தொடங் கின. இதனால், மனிதனுடைய தெய் விகத் தன்மை அமைவதற்குக் காரணமாயுள்ள எல்லா அணுக் களுக்குள்ளும் ஒருவித ஒருமைப் பாடு நிகழ்வது நன்கு புலனாகிறது.

அந்த ஸ்திரீயின் ஆன்ம தத்துவங்களும், சக்திகளும் ஒற்றுமைப் பட்டுத் தங்களை அமைத்துக் கொண்டதே, அவளுடைய ஆன்ம அமைப்பு வெளிப்படுவதற்கும் ஒழுங்குபடுவதற்கும் காரணமாயிருந்தது. அவளுடைய ஸ்தூல தேகத்தில் காணப்பட்ட குறைகள், அவளுடைய சூக்கும சரீரத்தில் காணப்படவேயில்லை. அதாவது, அவளுடைய ஸ்தூல சரீரம் சரியானபடி அமைவதற்குப் பரம்பரையான தடைகள் என்னென்ன இருந்தனவோ அவையாவும் இப்பொழுது விலகிப் போகின்றன. இதனால், அவளுடைய சூக்கும தேக அமைப்பானது, மற்றப் பிரபஞ்சசிருஷ்டிப் பொருள்களின் போக்குப்படி, மேற்கண்ட தடைகளுக்கு மேற்பட்டதாய், தன்னை விகாசப்படுத்திக் கொள்ள முடிந்தது.

## சூக்கும சரீர அமைப்பு

சூக்கும சரீரமானது, மேற்கூறிய விதமாக அமைந்து கொண்டிருக்கையில், ஸ்தூலசரீரமானது தொந்தரவையும் துன்பத்தையும் அநுபவித்துக் கொண்டு வந்ததாக அறையிலிருந்த மற்றவர்களின் வெளிப் பார்வைக்குத் தென்பட்டது. ஆனால் உண்மையில், தேகத்தின் உட்புறமாயுள்ள உயிர்ச் சக்திகள் மூளைக்குச் சென்று அங்கிருந்து வேறொரு வடிவாக அமைவதன் பயனாகவே, மேற்படி துன்பநிலை உண்டாகிறது.

ஸ்தூலதேகத்தின் தலைக்கு நேராக ஜீவனானது கிளம்பியது. ஆனால் ஸ்தூல தேகத்திற்கும் சூக்குமதேகத்திற்கும் நிரந்தரமான பிரிவு ஏற்படுவதற்குச் சற்று முன்னர், உயர்நிலையிலிருக்கும் சூக்கும சரீரத்தின் காலுக்கும், படுத்துக்கிடக்கும் ஸ்தூலதேகத்தின் தலைக்கும் இடையே ஓர் ஒளி அல்லது மின்சார சக்தி ஓடிக்கொண்டிருந்ததை நான் பார்த்தேன். தாழ்ந்த நிலையிலுள்ள ஜீவனானது, உயர் நிலையை அடைவதையே மரணமென்று சொல்லப்படுகிறதென்று அப்பொழுதே தெரிந்து கொண்டேன்; கீழான சரீரத்திற்கும், கீழான வாழ்க்கைக்கும் பதிலாக, உயர்வான சரீரத்தையும் அதற்குரிய சகதிகளையும் ஆனந்தங்களையும் அடைவதையே மரணமென்று கூறுவதாக அறிந்து கொண்டேன். இந்தப் பூவுலகத்தில் ஒரு குழந்தை பிறப்பதும் ஸ்தூல தேகத்தினின்று ஜீவன் பிரிந்து சென்று வேறோர் தேகமாக அமைவதும் எல்லா அம்சங்களிலும் ஒன்றாகவே இருக்கிறது. புதிதாகப் பிறக்கும் குழந்தைக்குக் கொப்பூழ்க்கொடி எப்படி இருக்கிறதோ, அப்படியே சூக்கும சரீரத்திற்கும், மேலே கூறப்பட்ட மின்சார சக்தி நூலானது இருக்கிறது. இந்த மின்சார சக்தி நூலானது, சில நிமிஷங்கள் வரை, ஸ்தூலதேகத்தையும் சூக்கும தேகத்தையும் சம்பந்தப் படுத்தி வைத்துக் கொண்டிருந்தது. பிறகு இந்தநூல் அறுபட்டதும், மேற்படி மின்சார சக்தியின் ஒரு சிறு அம்சம், கீழே படுத்துக் கிடக்கும் ஸ்தூல தேகத்தை வந்து சேர்கிறது. இந்தச் சக்தியானது, தேகத்தின் எல்லாப் பாகங்களிலும் சென்று தங்குவதால், தேகம் உடனே சீர்குலையாமலிருக்கிறது.

ஸ்தூலதேகம் நன்றாகக் கெட்டுப் போகத் தொடங்கிய பிறகே, அதனை மண்ணில் புதைக்க வேண்டும். மேலே

நான் குறிப்பிட்ட கொப்பூழ்க் கொடியானது, சில சமயங்களில் அறுபட்டுப் போவதில்லை; ஸ்தூல தேகத்திற்கும் ஜீவனுக்கும் நுண்ணிய சம்பந்தம் இதன் மூலமாக ஏற்பட்டிருக்கிறது. சிலர், இறந்துபோன சில நாட்களுக்குப் பிறகோ அல்லது சில மணி நேரத்திற்குப் பிறகோ,—ஒரு பிரயாணத்திலிருந்து அமைதியாகத் திரும்பி வருவதைப் போன்று—உயிர் பெற்றுத் தங்கள் சூட்சும உலக அனுபவங்களைக் கூறுவதனகாரணம இதுவேயாகும். இதனையே சுழுத்தி அவஸ்தை யென்றும, மூடிசன்னியென்றும், தூங்கிக் கொண்டே நடத்தலென்றும், ஆன்ம பரவசமென்றும் பலவிதமாகக் கூறுகின்றனர். இந்த நிலைகளில் பல விதப் பாகுபாடுகள் உண்டு. ஆனால், ஆவியானது, தேகத்தினின்று செல்லாமல் தடுக்கப்பட்டு, சில மணி நேரமோ, அல்லதுசில நிமிஷங்களோ மத்தியமான ஒரு நிலையில் வைக்கப்பட்டிருந்தால், அப்பொழுது மனதில், முன்னைய அநுபவத்தின் ஞாபகம் நிலைத்து நிற்பதில்லை. இந்த ஞாபக மறதியே, ஆன்மா அழிவற்றதுஎன்ற கொள்கை மறுக்கப் படுவதற்கு ஆதாரமாகக் காண்பிக்கப் படுகிறது.

நுண்ணிய கொப்பூழ்க் கொடி அல்லது மின்சாரக்கம்பி மூலமாக மட்டும், தேகத்தின் மீது தனது ஆதிக்கத்தை நிலை நிறுத்திக் கொண்டு, ஜீவனானது, ஸ்தூல தேகத்தினின்று அடியோடு பிரிந்துவிட்ட பிறகே, அந்த ஜீவன், இந்தத் தேகத்தையும் அது சம்பந்தமான விஷய வாசனைகளையும், மணிக் கணக்காகவோ, நாட்கணக்காகவோ விடுத்திருக்க முடிகிறது. பிறகு சந்தோஷமான நினைவுகளுடன் பிரபஞ்ச வாழ்க்கைக்குத் திரும்பி வர முடிகிறது.

### ஜீவனின் அநுபவங்கள்

ஆன்மா, ஸ்தூல தேகத்தினின்று பிரிந்தபிறகு என்னென்ன நிலையை யடைகிற தென்பதை நான் கூர்மையாகக் கவனித்து வந்தேன். முதலில் பூமிக்கடுத்த நிலையிலுள்ள சிதாமிசத்தைச் சிறிது கஷ்டத்துடனேயே நுகர ஆரம்பித்தது. ஆனால் சில விநாடிகளுக்குள், மிகுந்த சுலபமாகவும், சந்தோஷமாகவும் இயற்கையின் சித்துத் தத்துவங்களை இழுக்கவும் வெளிவிடவும் அதற்குச சாத்தியமாயிற்று. பிரபஞ்ச வாழ்க்கையில் ஈடுபட்டிருந்தபோது அந்தப் பெண்மணிக்கு எந்தவிதமான தேக அமைப்புகள் அமைந்திருந் தனவோ, அதைவிட எல்லா அம்சங்களிலும் அழகுடைய தாயும் அபிவிருத்தி யடைந்ததாயுமுள்ள சூக்ஷ்ம சரீரம் ஏற்பட்டிருப்பதை நான் இப்பொழுது கண்டேன். அதாவது மரணத்திற்கு முன்னிருந்தவைகளைப்போல் இப்பொழுது இதயம், வயிறு, ஜீரணப்பை, சுவாசப்பை முதலியன யாவும் காணப்பட்டன. இஃது ஆச்சரியமான, ஆனால் ஆறுதல் அளிக்கக்கூடிய உண்மை!

அவளுடைய சூக்ஷ்ம சரீரத்தில் காணப்பட்ட அபிவிருத்திகள் அதாவது மாற்றங்கள், அவ்வளவு குறிப்பிடத் தக்கனவாகவோ, சமய இயல்பைக் கடக்கக் கூடிய விதமாகவோ இல்லை. மற்றும், அவை அவளுடைய இயற்கைத் தோற்றத்தையோ, உலக இயல்புகளையோ அடியோடு மாற்றவில்லை. அவள் பழையபடியே இருந்தாள். அவளுடைய நண்பர்கள் பார்த்

தால், நோய்வாய்ப்பட்ட ஒரு நண்பர் நம்மைவிட்டுப் பிரிந்துசென்று பிறகு தேகாரோக்கியத்துடன் திரும்பி வந்தால் நாம் எப்படி ஆச்சரியமும் சந்தோஷமும் அடைவோமோ அப்படியே, "ஓ! இப்பொழுது நீ எவ்வளவு நன்முகக் காணப்படுகிறாய்! எவ்வளவு அபிவிருத்தி யடைந் திருக்கிறாய்!" என்று கூறுவார்கள். சூக்கும சரீரத்தில் காணப்பட்ட அபிவிருத்திகள் அவ்வளவு அழகுடையவைகளாக இருந்தன.

சூக்கும உலக வாழ்க்கைக்குரிய புதிய தத்துவங்களுக்கும், உயர்ந்த உணர்ச்சிகளுக்கும் அவள் தனனைப் பழக்கப்படுத்திக் கொள்வதை நான் பார்த்தேன். புதிய விழிப்புப்பெற்ற, விரைவான விகாசத்தை அடைநது கொண்டிருக்கிறதான அந்த ஆன்மாவின் உணர்ச்சிகளை நான் குறிப்பாகக் கவனிக்கவில்லை. ஆனுல், ஸ்தூலசரீரத்திலிருந்து சூக்கும தேகத்திற்கு மாறுகிறபொழுது அவள் ஒரேவித நிதானத்தைப் படைத்திருந்தாள். பிரபஞ்சத்தைவிட்டு அவள் பிரிந்துசென்றதற்காக அவளுடைய குடும்பதினரின் ஓயாத புலம்பலில் அவள் கலந்து கொள்ளவில்லை. சில்விட்டுப் போன, உயிரற்ற ஓர் உருவத்தைக் கண்டே அவர்கள் அழுகிறார்கள் என்பதை அவள் ஒரே பார்வையில் கண்டுகொண்டாள். அவர்களுக்கு, மரணத்தைப் பற்றிய உண்மையான ஞானமின்மையினுலேயே, ஸ்தூல சரீரத்தின் பிரிவுக்காக வருந்துகிறார்கள் என்பதையுந் தெரிந்து கொண்டாள்.

மனித சமூகத்தைச்சேர்ந்த பெரும்பாலோர் மரணத்தைப்பற்றி மேற்போக்கான ஞானம் படைத்திருப்பதனுலேயே, நண்பர்களோ உறவினரோ ஸ்தூல தேகத்தினின்றும் பிரியும்போது அதிகமாக அழுகிறார்கள். இவர்கள், ஸ்தூல தேகத்தின் மரணம், ஜீவனின் அழிவு என்று கருதுகிறார்கள். ஒரு மனிதன் இயற்கையான மரணத்தை யடைந்தால், ஆன்மா எவ்வித துன்பத்தையும், அநுபவிப்பதில்லை யென்று உண்மை அறிய விழைவோர்க்கு நான் உறுதி கூறுகிறேன். அல்லது ஸ்தூல சரீரமானது, நோயினுல் அழிந்து போனுலோ, பிற காரணங்களால் குலைக்கப்பட்டாலோ, ஆன்மா உரு வழிவதில்லை; தெளிவற்றுப் போவதுமில்லை. உன் அன்பான பார்வைக்குப் பதிலளிக்க முடியாத உயிரற்ற பிணத்தைப் பாராமல், சூக்குமக் கண்கொண்டு நீ பார்த்தால், உன்னெதிரே அதே உருவம், முன்னிலும் அழகாக உயிருடனிருப்பதைக் காண்பாய். ஆதலின், ஆன்மாவானது, இந்தப் பிரபஞ்ச வாழ்க்கையினின்று விடுதலையடைந்து, சூக்கும உலகத்திற்குச் செல்வதைக் குறித்து நாம் மகிழ்ச்சியே யடைய வேண்டும். ஆன்மாவானது, தேகத்தை விட்டுப் பிரிந்து, இதைவிட உயர்ந்த சிறந்த உலகத்தில் வசிக்கச் செல்லும்போது நாம அழுவதைக் காட்டிலும், உலகத்தில் நடைபெறும் பெரும்பான்மை விவாகங்களுக்காகவே நாம் அழவேண்டும்.

## ஜீவனின் பிரிவு

நான் பார்த்த மாற்றம ஏற்படுவதற்கு, அதாவது ஸ்தூல தேகத்தினின்று ஜீவன் பிரிந்து சூக்கும தேகத்தை யடைவதற்கு இரண்டரை மணிநேரம் ஆயிற்று. ஸ்தூல சிரசி

னின்று மேலெழுந்து தன்னைப் புனர் நிர்மாணஞ் செய்துகொள்ள ஒவ்வோர் ஜீவனுக்கும் இந்த இரண்டரை மணி நேரமே பிடிக்கிறதென்று சொல்ல முடியாது. மேற்படி ஸ்திரீயின் ஸ்தூல தேகத்தினின்று பிரிந்த ஜீவனானது, தன்னைச் சூழ்ந்துள்ள புதிய தத்துவங்களுக்குப் பழக்கமானதும், தனது மனோசக்தியால் தேகத்தின் மேலிருந்த உயர்நிலையிலிருந்து இறங்கி, அந்த ஸ்திரீ நோயுடன் படுத்துக்கொண்டிருந்த படுக்கை யறையினின்று வெளியே சென்றது. அப்பொழுது கோடைகாலமானதால் எல்லாக் கதவுகளும் திறக்கப்பட்டிருந்தன. அதனால், அந்த ஆன்மா வெளியேறுவதற்கு எவ்வித தடையும் உண்டாகவில்லை. ஸ்தூல தேகத்தில் நாம் எந்தக் காற்றை மூச்சு விடுகிறோமோ, அந்தக் காற்றை சூக்கும சரீரத்தினால் சுலபமாகக் கடந்து விடலாமென்ற உண்மையை அப்பொழுதே நான் முதலில் கண்டேன். ஸ்தூல சரீரத்திலிருந்து கொண்டு நாம இந்தப் பூமியை எப்படிக் கடந்து செல்கிறோமோ அப்படியே மேற்படி ஜீவனானது ஆகாயத்தைக் கடந்து சென்றது. வீட்டினின்று வெளியேறியதும், இந்த ஆன்மாவை, சூட்சும உலகத்திலிருந்துவந்த வேறு இரண்டு ஆன்மாக்கள் சந்தித்தன. ஒன்றுக்கொன்று சிறிதுநேரம் அளவளாவியதும, மூன்றும் ஒன்று சேர்ந்து பிரபஞ்சத்தைச் சூழ்ந்திருக்கும் பரமாணு வாகாயத்தின் மூலமாகச் சாய்வாய் மேலேறிச் சென்றன. அவை மூன்றும் இயற்கை யாகவும், சகோதரப் பான்மையுடனும் ஆகாயத்தைக் கடந்தன. ஒரு மலையின் சாரலில் அவை நடந்து செல்வதுபோலவே எனக்குத் தோன்றியது. அவை தொலைதூரம் செல்லும்வரை நான் பார்த்தேன். பிறகு என்னுடைய ஜாக்கிரதா நிலைக்கு நான் வந்துவிட்டேன்.

---

# சான்றோர்க்கணி

[அ. வரதநஞ்சைய பிள்ளை]

இத்தலைத் தொடர் மொழியில், சான்றோராவார் யாவர்? அவர்க்கு அணியாவது யாது? அஃதெவ்வாறு? எனக் கேள்விகளை எழுப்பி முறைப்பட ஆய்ந்து உண்மை காண்பாம்.

இச் சொற்றொடர், ஆசிரியர் வள்ளுவனாரால் இல்லற வியலில், நடுவு நிலைமை என்னும் அதிகாரத்தின் கண்ணே,

"கேடும் பெருக்கமு மில்லலல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி"

எனவும்,

"சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ
[லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி"

எனவும், வருஞ்செய்யுட்களின் இறுதியிற் கூறப்பெற்றதாம். சான்றோர் சால்புடையோர் சால்பு என்னும் பண்பு நற்குணங்கள் எல்லாம் ஒருங்கு நிரம்பி யமைதலை உணர்த்தும். ஆகவே எல்லா நற்குணங்களும் குறைவின்றி முற்ற நிரம்பிய தூயோராய நல்லோரே சான்றோரெனப் பெறுவர்.

சால்பு என்பதன் தன்மைகளைக் கூற வந்த விடத்தே நம் செந்நாப்போதார்,

"கடனென்ப நல்லவை யெல்லாம் கடனறி
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு" [ஙஅ

எனப் பொது வகையாற் கூறிப் பின்னர் சிறப்பு வகையாக,

"அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் [வாய்மையோ
டைந்து சால்பூன்றிய தூண்"

".....பிறர்தீமை சொல்லா நலத்தது சால்பு"

"ஆற்றுவா ராற்றல் பணிதலது சான்றோர்
மாற்றாரை மாற்றும் படை"

"சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி
துலையல்லார் கண்ணுங் கொளல்"

"இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு"

என மொழிந்து விதந்தனர். இவ்வாற்றால், சான்றோர்பால் காணப்படும் சிறப்புச் செயல்களாவன :—

யாவரிடத்தும் மனங்கசிந்த அன்பு பெருக்கலும், தீயசெய்ய நாணலும், பிறர்பாற் கைம்மாறு கருதாது இயன்றகடப்பாடுகளை நாளும் புரிதலும் மன இரக்கம் மிக்குடைத்தாதலும், உண்மையே பேசுதலும் * பிறர் தீமையை வெளியிடாமையும், ஒரு நற்காரியத்தை முற்றுவிக்கும் போது யாவரையும் தாழ்மையுடன் வேண்டித் துணைக் கோடலும், தம்மின் மிக இழிந்தோர்க்கும் தம்மைக் குறைந்தவராகக் காட்டிக் கோடலும், தமக்குத் துன்பம் புரிவோர்க்கும் மாறாக நன்மையே செய்தலும், இவைபோன்ற பிறசெயல்களுமாம் எனப்பெறுதும்.

உலக முய்வதற் கெனவே தோன்றித் தமக்கென வாழாப் பிறர்க்குரியாளர்களாகிய இச்சான்றோர் விரும்பும் அணிகலன்கள இரண்டு என மேற்றலைப்பிற் கண்டாம். அவற்றுள் ஒன்று, துன்பமோ இன்பமோ தொடரும போழ்து ஒரே பெற்றிப் பட்டு உள்ளம் சிறிதும மாறாது செந்நெறி கடைப்பிடித்து ஒழுகுவது. மற்றொன்று, இருவர் வாதிகள் கூற்றுக்களையும் நன்கு கேட்டு நீதியை உள்ளவா றுரைத்தல். இவ்விரண்டு அணிகளும், உள்ளங் கோடாமையையே குறிப்பதாகலின், ஆசிரியர் கூறியது கூறல் எற்றுக்கு? என்பது முதல் வினா?

நெஞ்சத்துக் கோடாமையை முன்னும், ஒருபாற் கோடாமையைப் பின்னும் வைத்ததேன்? என்பது இரண்டாம் வினா.

இவ்விரு குறள்களுக்கு மிடையேயுள்ள வேறு, இரண்டு குறள்கள் "ஓரமுடையோன் கேடடைவான்" என்றும், நடுநிலைமை யுடையோர் ஒரு கால் பண்டை வினைப்பயத்தாற் கேடடைய நேரினும், அக்கேடும், உயர்ந்தோரால் பெருஞ் செல்வமெனவே கருதப்பட்டு நன்குமதிப்பப் விளைப்பதாகு மென்றும் முறையே கூறுகின்றன. இவை கொண்டு, கேடும் ஆக்கமும் முன் பிறவி வினைப் பயனாகு நியதி கூட்டவரு மென்னும் உண்மை கண்டு நடுநிலைமையி னீங்காதொழுக வேண்டுமென ஆசிரியர் குறித்தன ரென்பர் ஒரு சாரார்.

---

* பிறர் தீமையை வெளியிடின் எதுமுறுவரோ என்றும், அவரதியல்பு அஃதெனின் இழிவு கூறல் தகாதே என்றும் அஞ்சுதலால்.

அங்ஙனம் நடுவுடையோர், இரு வாதிகளின் வழக்கையுங் கேட்டு நீதி புகல்பவ ரன்றே. அற்றாகவும் ஒரு பாற் கோடாமை வேண்டு மென மறித்துங் கூறிய தென்னை ? எனின், முற்கூறியது அவரது நெஞ்சத் திட்பச் செம்மை. பின்னது, உரைக்கும் சொன்னிலை குறித்தது என்பர். நன்று, சமன் செய்து சீர் தூக்குந் துலாக்கோல் எதற்குவமம் ? எனின் ஒருபாற் கோடாத உள்ளத் திற்கே ஒப்பாவது என மொழிவர். அங்ஙனமாயின், முற்கூறியதும் நெஞ்சு கோடாமையையே யன்றோ ? அதனோடிதனிடை வேற்றுமை காணுமாறில்லையே எனின் முற்கூறி யாங்கே கூறி ஒழிப்பர். ஆதலின், முதற் குறட்கு நுண்ணிய விழுப்பொருள் வேறுளதாதல் வேண்டுமெனக்கருதற்கிடனுண்டு. அஃதாமாறு கூறுதும்:

யாவரும் தம்மிடத் துள்ளவற்றை விட்டு இல்லாத பொருள்களையே ஈட்டுவ தியற்கை. அவ்வாறே பிறவியியல் பாக நாம்பிறக்கும் அந்நாளேஎற்பட்டு, அநுபவித்தன்றி வேறெவ் வகையானும் மாற்றிப் போக்கற் கியலாத வண்ணம் அமைந்துள்ள கேடும் பெருக்கமும் குறித்து அஞ்சுதலும் அகமகிழ்தலும், கேட்டை மாற்றி ஆக்கத்தையே விளைப்போமென முயற்சித்தலும் பயனில் செயலே யாமென வுண்மை தேறி, அவ்வக்காலங்களிற் றத்தங் கடப்பாடுகளை ஒழுங்குறப் புரிந்து செல்லத் துணிவுறும் செப்பமும் திட்பமுமுடைய மன அமைதியொன்றே நம்பாலி துகாறுமில்லாதது. ஆகலின் அதனையே தேடற்குப் பல்லாற்றானு முயற்சிப்பா மெனக் கருதுதலே சான்றோர்க்கணியாம் எனக் கூறினர் என்க.

இம்மைக்கும் மறுமைக்கும் ஏற்ற பெரும்பயன் இவ்வுள்ளச் செம்மை ஒன்றாலேயே விளையுமாகலின் இஃது முதலில் வைத்தோதப்பட்டது.

சான்றோ ரியல்பு ஈதேயாம் எனப் பெரியபுராணத்தில் அருண்மொழித் தேவரும் அடியார் பெருமை கூறுமிடத்தில், "கேடும் செல்வமும்கெட்ட திருவினார்" எனவும், பிரபுலிங்கலீலை ஆசிரியரும்,

'கேடும் செல்வமும் கீர்த்தியும் நிந்தையும்
வேறற நோக்குதல்.................
கூடுந்தன்மை கொளுமனம் நன்மனம்'

என்றுங் கூறிப்போந்தனர்.

சைவ சித்தாந்தத்தில் இருவினை ஒப்பு எனக் கூறப்படும் சிறந்த பக்குவமு மிஃதே. இவ் விருவினையொப்பு உண்டாய வழியே மலபரிபாகம், சத்திநிபாதம் முதலிய வீடுபேற்றிற்கு முன் றோன்றும் காரண காரியங்கள் ஒருதலையா னெய்துவன. ஆசிரியர் கருத்திதுவா யின்மையானே, ஒருபாற் கோடாது வழக்குரைக்கும் அவரதுலக ஒழுக்கம் பிற்கூறப்பட்டது.

துறவற நெறிக்குரிய இருவினை ஒப்புத் தன்மையை நடுவுநிலைமை கூறும் இல்லற வியலில் ஓதியது சாலாதெனின், நன்று சொன்னாய்! 'ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல்' என்னும் உத்திகொண்டு ஆசிரியர் அங்ஙனங் கூறுதல் இயல்பென்க. இங்ஙனமே,

"ஒருமையு ளாமைபோல் ஐந்தடக்க லாற்றின்
எழுமையு மேமாப் புடைத்து"

எனவும்,

"நிலையிற் றிரியா தடங்கியான் றோற்றம்
மலையினு மாணப் பெரிது"

என்றும், துறவுக்குரிய ஐந்தவித்

தொழுகு முறையினையும் அடக்க முடைமை அதிகாரப்பட்ட வழி இல்லற வியலில் வைத்து ஓதியவாறுங் காண்க.

முறைப்பட இல்லற நெறியில் வழாதொழுகுவோர்க்கே துறவு நெறியும் கைவந்து பயன் பெறுதல் கூடுமென்க.

"காமஞ் சான்ற கடைக்கோட் காலை......
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே"

என்ற தொல்காப்பியனார்க்கு மிஃதே கருத்தாதலாலு மறிக. ஆதலின், இல்லற நெறிக்கே யுரித்தெனவரையறை செய்யப் படாதனவாய்த் துறவு நெறிக்கும் பயன படும் பொதுவாய அறங்கள், இவ் விரண்டையும் தனித் தனிக் கூறும் இயல்களுள் அமையப் போந்துழி எவ்விடத்தேனுங் கூறுதற் குரியவெனக் கண்டோம். இனி இதில் ஐயுறவில்லை. இவ்வாறு கேடும் பெருக்கமும் ஒரு நிகரனவென வுண்மை கண்டோருள்ளம் என்றும் துன்பங்காணுது இன்பத்தையே துய்க்குமாற்றால் அவர்க்கும் கேடு ஒரு குறைவாகத் தோன்றாது. உயர்ந்தோரும் அவரது தகுதியின் மேன்மையை நன்குணர்ந்து நன்கு மதிப்பார்களாதலின் பிறர்க்கும் இழிவுகாட்டாது பெரும் பேறாகவே முடியும். நடுவு நிலைமையிற் றிறம்பி ஆக்கம்பெறற்கு முயல்வார்க்குஊழின் உதவி யில்வழி அது கூட்டாமையே யன்றி அததீய பண்பால் கேடும் வருவிக்கப் படுதல் ஒருதலையே யாகலின் நல்லோர்க்கும் அல்லோர்க்கும் நடுவு நிலைமை விழுமிய பயனை வருவிக்குமெனத் தெரிவித்தற்கே,

"கெடுவல் யான் என்பதறிக......"

"கெடுவாக வையாது லகம்......"

என்னும் இரு குறட்களையும் இடைப் பெய்தமைத்ததென்க.

உண்மை இவ்வாறாதலின் இல்லறம் பற்றி ஒழுகுந் தலைமைப் பாடுடையோர், இருவர் வாதிகளின வழக்கினும நீதி தேர்ந்துண்மை கூறுக. பரிதனை முதலியன கேட்டோ அன்றித் தமர் தம நண்பர்க்கு நண்பர், தமக்கு வேண்டியோரால கண்ணோட்ட முடையர் எனப் பல காரணங்களில் ஒன்று கொண்டோ, வழக்கல்லா வழக்கை யுரைத்தல் அடாது எனக் கூறியது "சமன் செய்து" என்னுங் குறளென்க.

இதுகாறுங் கூறிப்போந்த வாற்றால் நற்குணங்களெல்லாம நிரமபிய சான்றோர்க்கு அழகும் மதிப்புந்தரும் பேரணிகள் இரண்டுள. ஒன்று இருவினைப்பயனாகத் துன்பஇன்பங்கள் முன் அமைத்தபடி எய்துவன வெனப் புறக் கணித்து அவற்றைக் குறித்துத் துன்புறலும இன்பமடைதலுமிலராய் ஒரு நிலைமைப் பட்ட உள்ளத்தினராதல், மற்றொன்று, உலகியல்புகளில், கோடி கொடுப்பினும் தமமுடைய நாக்கோடாமல் உண்மை ஓதி வழக்குத் தீர்த்தல் என்றும, இவ்வாறன்றி ஓரங் கூறிப் பொருளீட்டுவரேல் அத்தீவினை தீய பயந்தே விடுமாகலின் தப்பாது கேடு தருதலானும், ஒருகால் நடு நிலைமையுடையார்க்கும கேடு வருமே எனின் அது கேடாக அவரும் கொள்ளார். உயர்ந்தோரும் இகழாது செல்வத்தோடொக்கு மென மதிப்பர் ஆகலானும் இல்லற துறவறங்கட்குப் பொதுப்பட நிற்கும் நடுவு நிலைமையின் முன்னோதிய அணி சாலச் சிறப்புடையதென்றும், பின்னது இல்லறப்பாங்கிற் குரித்தாய் மறுமைக்கும் பயன்றரும் காரணமாய் அமைவதா மென்றும் அறிகின்றாம்.

# திருவிழாவில் சமயபோதனை

1. திருநாவுக்கரசு சுவாமிகள் திருவவதாரத தலமாகிய திருவாமூரில் சித்திரைச் சதயத்தன்று ஒரு பெருங் கூட்டம் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்கள் தலைமையில் கூடிற்று. சமாஜக் காரியதரிசியும், திரு. ச. சச்சிதாநந்தம் பிள்ளையவர்களும் அப்பர் சுவாமிகள் சரித்திரம், தேவாரம் முதலியவற்றைப்பற்றிச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினர். அப்பர் சுவாமிகள் தேவாரம் சமாஜத்தின் புதிய சுத்தப்பதிப்பு ஊர்வலமாகக் கொண்டுவரப்பட்டு வெளியிடப்பட்டது.

2. காஞ்சீபுரம் என வழங்கும் திருக்கச்சியேகம்பத்தில் நடைபெற்ற பிரஹ்மோத்ஸவத்தில் நமது சமாஜத்தின் சாரபில் ஏழாந்திருநாள் ஒன்பதாந்திருநாள் ஆகிய இரண்டு நாட்களிலும் முறையே "சேக்கிழார் கவிநயம்" "பதிபுண்ணியம்" எனும் பொருள்கள்பற்றி சமாஜத்து வெளியூர் நிர்வாக சபையினருள் ஒருவராகிய காவித்தண்டலம் - சைவத்திருவாளர் வேதாசல முதலியாரவர்கள சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள்.

3. கூவம் என வழங்கும் திருவிற்கோலத்தில் நடைபெற்ற திருவிழாவில் நான்காம் நாள் ஐந்தாம் நாள் (4, 5–5–30) உத்ஸவங்களில் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள் தலைமையில் சமாஜக் காரியதரிசியார், திரு. பா. கந்தநரசிம்ஹம், திரு. கே. வைத்தியநாத முதலியார், திரு. அ. முத்துச்சாமி முதலியார், திரு. விஜய கந்தசாமி முதலியார், திரு. சு. வை. துரைசாமி முதலியார், திரு. சு. ரா. அண்ணாமலை முதலியாரவர்கள் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள். சமாஜத்தின் கிளைச்சபை யொன்று தாபிக்கப்பட்டது.

---

# அப்பர் சுவாமிகள் தேவாரம்

## சமாஜத்தின் சுத்தப்பதிப்பு வெளிவந்து விட்டது

பிரதி ஒன்றின் விலை அணு பத்து

ஐம்பது பிரதிகட்குக் குறையாமல் முன் பணம் கொடுத்து வாங்குவோருக்கு ரூபாய் ஒன்றுக்கு இரண்டணு வீதம் கழிவு தரப்படும். வி. பி.யில் பிரதிகளை அனுப்ப இயலாது. புத்தகங்களைப் பெற விரும்புவோர் புத்தகக் கிரயம், தபாற்கூலி, ரிஜிஸ்தர் செலவு, பார்சல் செலவு முதலியவற்றிற்குத் தேவையான தொகையைக் கீழ்க்குறித்த வண்ணம் முன் பண மாகவே அனுப்ப வேண்டும்.

கிரயம், தபாற்கூலி, ரிஜிஸ்தர், பார்சல் செலவுள்பட

| | | | |
|---|---|---|---|
| ஒரு புத்தகம் பெறுவதற்கு | ரூபா 1—0—0 | 5 புத்தகங்கள் பெறுவதற்கு | ரூபா 4 4 0 |
| 2 புத்தகங்கள் ,, | ,, 1 13 0 | 10 புத்தகங்கள் ,, | ,, 8 2 0 |

பத்து புத்தகங்கட்குமேலாயின் ரயில்வே பார்சலாகப் பெற்றுக்கொள்வதுதான் இலகுவான வழியாகும்.

இஙஙனம் :

150, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை.
10—5—1930

ம. பாலசுப்ரஹ்மண்யம், காரியதரிசி.
சைவ சித்தாந்த மகா சமாஜம்.

---

சைவ சித்தாந்த மகா சமாஜத்தில்

## விற்பனைக்குரிய புத்தகங்களின் அட்டவணை

| புத்தகம் | ரூ. | அ. |
|---|---|---|
| "சித்தாந்தம்" மலர் ஒன்று (பைண்டு பிரதி) | 2 | 0 |
| "சித்தாந்தம்" மலர் இரண்டு (பைண்டு பிரதி) | 2 | 0 |
| சுந்தரர் தேவாரம் | 0 | 4 |
| அப்பர் தேவாரம் | 0 | 10 |
| திருவாசகம் (கலிக்கா) | 0 | 4 |
| திருக்குறள் விளக்கம் - அறத்துப்பால். | 3 | 4 |
| ௸ பொருட்பால். | 4 | 8 |
| ௸ காமத்துப்பால். | 1 | 12 |
| ௸ தொகுப்புரை. | 0 | 8 |
| புலால்மறுத்தலுக்கு 50 காரணங்கள் | 0 | 2 |
| சர்வமத சம்மதம் | 0 | 2 |
| திருநாளைப்போவார் தீக்குளித்ததேன். | 0 | 2 |
| நள்ளிரவில் நகர்க்காட்சி | 0 | 2 |
| கடவுள் | 0 | 2 |
| பண்மயத்த மொழிப்பாவை | 0 | 2 |
| சமயத்தின் சாரம் | 0 | 2 |
| சமய வளர்ச்சி | 0 | 2 |
| சுயமரியாதை சம்பாஷணை | 0 | 2 |
| திருஞானசம்பந்தர் (நாடகம்) | 0 | 8 |
| சைவப் பெரியார் தனிக்கூட்டத் தீர்மானங்கள் | 0 | 2 |
| சங்க நூல்களும் சைவமும் | 0 | 2 |
| சைவர் மகாநாடு, திருப்பாதிரிப்புலியூர். | 0 | 8 |
| அறுசமயப் பகுதி | 0 | 2 |
| அறுபத்துமூன்று நாயன்மார் சரித்திர உண்மை | 0 | 4 |
| சிவஞானபோதம் | 0 | 2 |
| அஷ்டப்பிரகரணம் | 3 | 0 |
| சிவார்ச்சனு சந்திரிகை | 1 | 8 |
| சைவபூஷணம் | 1 | 0 |
| சைவ சித்தாந்த பரிபாஷை | 0 | 8 |
| சிவஞான சித்தியார் மூலமும் பொழிப்புரையும் | 2 | 8 |
| சிவஞான போதச் சிற்றுரை விளக்கம் | 3 | 8 |
| சர்வஞானேத்தரம் | 1 | 8 |
| தசகாரிய விளக்கம் | 0 | 8 |
| The Grace of Lord Siva (ஆங்கிலத்தில்) | 0 | 4 |
| திருக்குறட் சாரம் | 0 | 8 |
| ௸ (கலிக்கோ) | 0 | 10 |
| ஆசார ஒழுக்கமுறை | 0 | 4 |
| சிவார்ச்சனைத் திருமந்திரம் | 0 | 1½ |

சுந்தரர் தேவாரம் மொத்தமாக வாங்குவோர்க்கு ரூபாய் ஒன்றுக்கு ஐந்து பிரதிகள் வீதம் கொடுக்கப்படும். மேற்கண்ட விலைகள் புத்தகக் கிரயம் மட்டுந்தான். தபாற்கூலி வேறு. பார்சல் செலவு, தபாற்கூலி, வி. பி. செலவு முதலியன வாங்குவோரே செலுத்தவேண்டும்.

மேலேகண்ட அட்டவணையிலுள்ள புத்தகங்கள் தேவையாயின், சமாஜ ஆண்டுவிழா முதலிய கூட்டங்கள் நடக்குமிடங்களிலும் பெறலாம்; கீழ்வரும் விலாசத்துக்கு முன்பணம் அனுப்பியும் பெற்றுக்கொள்ளலாம்.

ம. பாலசுப்ரஹ்மண்ய முதலியார், காரியதரிசி.
சைவ சித்தாந்த மகா சமாஜம்,
150, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை.

Printed at the Sadhu Press, 12, Ganapathi Mudali Street, Royapettah and Published by M. Balasubramania Mudaliar (Editor-in-charge) for the Saiva Siddhanta Maha Samajam, 150, Govindappa Naicken Street, G. T. Madras.

Registered No. M. 2330.

" SIDDHANTHAM "
Vol. 3—No. 5, 6.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

சைவசித்தாந்த மகாசமாஜத் திங்கள் வெளியீடு

" எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே "

| மலர் ங | பிரமோதூத ஆண்டு வைகாசி ஆனித் திங்கள் 1930ஹு மே ஜூன்மீ | இதழ் ரு,சு |
|---|---|---|

| உள்ளுறை | பக்கம் |
|---|---|


ஆசிரியர் :—ம. பாலசுப்ரஹ்மண்ய முதலியார், B. A., B. L., M. L. C.
உதவி ஆசிரியர் :—கி. குப்புச்சாமி முதலியார்

சைவ சித்தாந்த மகாசமாஜம்,
150, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை.

ஆண்டுச் சந்தா ரூ. 1-8-0. 1930 வெளி நாட்டுக்கு ரூ. 2-0-0.

தனிப் பிரதி அணா 3.

# ஆலங்குடியில் சமாஜத்திய விசேஷ மகாநாடு

திருவிரும்பூளை என்று தேவாரத்தில் பாடல் பெற்றுள்ள ஆலங்குடியில் 1930ஆு ஜூன்மீ 1உ ஞாயிற்றுக்கிழமை (பிரமோதூதஆு வைகாசிமீ கஅஉ) மஹாகும்பாபிஷேகம் நடைபெறும். அதையொட்டி சைவசித்தாந்த மகாசமாஜத்தின் விசேஷ மகாநாடு ஒன்று **பண்டிதமணி. சைவத்திருவாளர் – மு. கதிரேசன் செட்டியார் அவர்கள்** தலைமையில் ஜூன்மீ 1உ முதல் **மூன்று நாட்கள்** வரை நடைபெறும். சைவசமய வளர்ச்சிக்குரிய பல அரிய தீர்மானங்கள் நிறைவேறுவதோடு பல பேரறிஞர்களின் சொற்பொழிவுகளும் நடைபெறும். நமது சமாஜத்தோடு இணைக்கப்பட்ட சபைகள் பல பிரதிநிதிகளை யனுப்புவதோடு செயல் முறைத்திட்டங்களையும் தீர்மானங்களாக எழுதி முன்னதாகவே அனுப்பவேண்டும். நமது சமாஜ அங்கத்தினர் தவறாமல் தாங்கள் வருவதோடு அமையாது பல நண்பர்களையும் சைவப் பற்றுடைய அன்பர்களையும் அழைத்து வருதல்வேண்டும்.

சென்னை,
10-5-1930.

இங்ஙனம்:
ம. பாலசுப்ரஹ்மண்யம், காரியதரிசி.

குறிப்பு:—ஆலங்குடி என்பது நீடாமங்கலம் ஸ்டேஷனிலிருந்து 5 மைல் தூரத்திலும் கும்பகோணம் ஸ்டேஷனிலிருந்து 10 மைல் தூரத்திலும் மோட்டார் போகும் பாதையிலுள்ளது.

## சமாஜத்தின் போஷக உறுப்பினர்

அப்பர் தேவார வெளியீட்டுக்காக நூறு ரூபாய் நன்கொடையாக அளித்த தென்ஆற்காடு உதவி மெடிகல் ஆபீசர் சைவத்திருவாளர் டாக்டர். எஸ். பாலவேலாயுதம் பிள்ளையவர்களையும், திருவிடைமருதூரில் சைவ இளைஞர் மகாநாட்டைத் தமது சொந்தச் செலவில் நடத்திவைத்த சைவத்திருவாளர் தி. ரா. பொ. குப்புச்சாமி பிள்ளையவர்களையும் நமது சமாஜத்துப் போஷக உறுப்பினர்களாகப் பதிவு செய்துகொண்டதை மிக மகிழ்ச்சியோடு தெரிவிக்கிறோம்.

## சமாஜ அறிக்கை

கோடை விடுமுறைக்காக 1930ஆு மேமீ 10உ முதல் 1930ஆு ஜூலைமீ 10உ வரை சமாஜ ஆபீசு மூடப்படும். சமாஜக்காரியதரிசிக்கு எழுதப்படும் கடிதங்களுக்குப் பதிலெழுதலும், பத்திரிகை, புத்தகம் அனுப்புதல் முதலியனவும் ஜூலைமீ 10உக்குமேல் நடைபெறும்.

150, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு,
10—5—1930

இங்ஙனம்:
ம. பாலசுப்ரஹ்மண்யம்
காரியதரிசி,
சைவ சித்தாந்த மகா சமாஜம்.

சிவமயம்
திருச்சிற்றம்பலம்


# சித்தாந்தம்

"ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானகுரு வாணியை உள்நாடு"

| மலர் ௩ | பிரமோதூத ஆண்டு வைகாசி ஆனித் திங்கள் 1930 ஆம் மே ஜூன் மீ | இதழ் ரு, ௬ |
|---|---|---|


## இரண்டு அரிய நிகழ்ச்சிகள்

[பத்திராசிரியர்]

பிரமோதூத ஆண்டு பிறந்தவுடன் முதல் திங்களிலேயே நமது சமாஜத்தின் சார்பாக இரண்டு அரிய நிகழ்ச்சிகளைப் பாராட்டாதார் சைவருள் ஒருவருமிலர். இவற்றுள் ஒன்று திருவிடைமருதூரில் நடந்த சைவ இளைஞர் மகாநாடு, மற்றொன்று திருவாரூரில் நடைபெற்ற அப்பர் சுவாமிகள் தேவார வெளியீடு.

இளைஞர் இயக்கம் அரசியல், சமூகப்பணி முதலிய பல துறைகளிலும் செழித்து ஆங்காங்கு பல மகாநாடுகள் நடப்பதை நாம் கண்டதுண்டு. ஆனால் இதுகாறும் இளைஞர்கள் சமயத் துறையிலே ஒரு மகாநாடு நடத்தியதை நாம் கண்டதில்லை. சிறப்பாக "உறங்க வேண்டாம், விழியுங்கள், எழுங்கள்" என்று சமய வல்லுநர் இடித்துக் கூறும் சைவமக்களிடையே சைவ இளைஞர் மகாநாடு ஒன்று மிகச் சிறப்பாகவும் செம்மையாகவும் நடந்தது குறித்து நாம் பெரு மகிழ்ச்சியடைகின்றோம்.

இம்மகா நாட்டிலே நிறைவேறிய தீர்மானங்களும் மிக நல்ல முறையிலே அமைந்திருப்பது போற்றத்தக்கதே. இளங் கன்று பயமறியாது என்று கூறுவது உலகவழக்கு. ஆனால் சைவ இளைஞர்கள் தங்கள் கடமைகளையும் உரிமைகளையும் நன்கு உணர்ந்தவர்களாய் பெரும்பான்மை தாங்கள் முன்னின்று செய்யக் கூடியவை இன்னின்னவென்றும் தங்கள் கூட்டுறவு மிருந்தால் நமது சமாஜம் இன்னின்ன பணிகளைச் செம்மையாகச் செய்தல் கூடும் என்றும் தங்கள் தீர்மானங்கள் வாயிலாக நமக்கு விளக்கியுள்ளார்கள். நமதுநாட்டிலே பெரும்பாலும் கடமைகளை மறந்து உரிமைகளை மட்டும் வற்புறுத்துவது வழக்கம். ஆனால்

நமது சைவஇளைஞர்களோ தங்கள் கடமைகளை மிகச்செவ்வையாக உணர்ந்து அவைகளை ஞாபகத்திலிருத்தித் தங்கள் தீர்மானங்களைச் செப்பஞ் செய்து நிறைவேற்றிய முறை முதியோருக்கும் ஒரு பாடத்தைக் கற்பிப்பதாயிற்று.

சைவ இளைஞர்கள் உறங்காது விழித்தெழுந்து முதியோர்களுடன் கலந்து வேலை செய்ய முன்வந்தமைக்கு அவர்கள்பால் எஞ்ஞான்றும் நாம் நன்றியுடையவர்களா யிருக்கின்றோம்.

மேற்கூறிய தகுதிவாய்ந்த இளைஞர் பலரில் எமது நட்புக்குரிய சிலரின் கூட்டுறவே திருவாமூரில் அப்பர் சுவாமிகள் தேவார வெளியீட்டையும் மிகச் செவ்வையாகத் திருவருளின் துணைகொண்டு நடத்தி வைத்தது. சென்ற ஆடிமீ சுவாதியில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம் சமாஜத்தின் பதிப்பு வெளியிடப்பட்டது. அப்பர் சுவாமிகள் திருநக்ஷத்திரமாகிய சித்திரை சதயத் திருநாளில் சுவாமிகள் அவதரித்த தலமாகிய திருவாமூரில் சுவாமிகள் தேவாரத்தின் சமாஜ சுத்தப்பதிப்பு வெளியிடப்பட்டது. ஒரு பெரிய மகாநாட்டுக்கு எவ்வளவு மிகுதியாக அன்பர்கள் திரண்டு வருவார்களோ அதற்கும் அதிகமான தொகையினர் அக்கூட்டத்துக்கு வந்திருந்தது சைவ உலகத்தினர் அப்பர் சுவாமிகளை எத்துணை மிகுதியாகப் பாராட்டி வருகின்றனர் என்பதையும் நமது சமாஜ வெளியீட்டினை எத்துணை ஆவலுடன் எதிர் பார்த்திருந்தனர் என்பதையும் ஒருங்கே விளக்குவதாயிற்று. சில செல்வர்களைக்கொண்டு திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் தேவாரத்தை அச்சிடு வதற்குரிய ஏற்பாடுகளும் நடைபெற்றன. விரைவில் அத்தேவாரமும் நமது சமாஜத்தின் சுத்தப்பதிப்பாக வெளிவரும் என்பதில் ஐயமில்லை.

இனி எதிர்காலத்தை நோக்குமிடத்து நமக்கு மீண்டும் மகிழ்ச்சியே உண்டாகிறது. திருவையாறு சப்தஸ்தான உத்ஸவத்தைப்போல் எவ்வகையிலும் தலை சிறந்து விளங்கும் உத்ஸவத்தை நாம் எங்கணும் கண்டதில்லை. அவ்வுத்ஸவத்தில் ஏழு திருப்பதிகளிலும் நமது சமாஜத்தின் சார்பாக சமயப் பணி செய்வதற்குத் திருவாளர்கள் த. வே. உமாமகேசுவரம் பிள்ளை யவர்களும், ச. சச்சிதாநந்த பிள்ளை யவர்களும் ஏற்பாடு செய்துள்ளார்கள். பெருந்திரளாக மக்கள் கூடுகின்ற உத்ஸவ காலங்களில் சமயப்பணி நடத்த வேண்டுமென்று அவாவும் சமாஜத்துக்குத் துணை நின்று இப்பெரியார்கள் இத்தகைய ஏற்பாடுகளைச்செய்துள்ளது அனைவர் உள்ளத்தையும் கவர்கின்றது.

இது மட்டுமல்ல. ஆலங்குடியில் நடக்கும் கும்பாபிஷேக காலத்தில் பண்டித மணி - சைவத்திருவாளர் - மு. கதிரேசஞ் செட்டியார் அவர்கள் தலைமையில் நமது சமாஜவிசேஷ மகாநாடு மிகச் சிறப்பாக 1930ஆு ஜூன் மீ 1, 2, 3-ம் தேதிகளில் நடைபெறும். அதுபோது வழக்கம்போல் பல அரிய சொற்பொழிவுகள் நடப்பதுடன் சமயப்பணி விவரங்கள் திட்டங்கள் பலவும் தீர்மானிக்கப்படும்.

எல்லாவற்றையும் உடனிருந்து மிகச் செம்மையாக நடத்திச் சைவ வான் பயிரைத் தழைத்தோங்கச் செய்யும் இறைவன் திருவருளை வழுத்துகின்றோம்.

# சைவ இளைஞர் மகாநாடு

[தி. கு. கி. நாராயணசாமி]

இம்மகாநாடு மிகச்சிறப்பாக 1930-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 18-ந் தேதி வெள்ளிக்கிழமை காலை 9-மணி முதல் மாலை 7-30 மணிவரை நடந்தது. மகாநாட்டைத் திறக்கவந்த மந்திரியார் அவர்களும் தலைமை வகிக்க வந்த திரு-கா. சுப்பிரமணியம் பிள்ளையவர்களும் ஊர்வலமாக அழைத்து வரப்பட்டனர்.

கடவுள் வணக்கம் முடிந்தவுடன் சமாஜக் காரியதரிசியார் சுகாதார மந்திரியார் திரு-எஸ். முத்தையா முதலியார் அவர்களை இம்மகா நாட்டைத் திறந்துவைக்கும்படி வேண்டிக்கொண்டனர். அவ்வாறு வேண்டுங்கால் எக்காலத்திலும் அரசாங்கத்தைச் சேர்ந்த மந்திரிப் பிரதானிகள் எந்த இயக்கங்களை ஆதரித்து எந்தமுறையில் ஒழுகுகின்றார்களோ அங்ஙேபோல் பொது மக்களும் ஒழுகுவது இயல்பென்றும், ஆகையால் தற்காலத்து மந்திரிமார்களும் எல்லா இயக்கங்களிலும் கலந்து கொள்ளாமல் புரை தீர்ந்த நன்மை பயக்கும் இயக்கங்களையே ஆதரிக்க வேண்டு மென்றும் இன்றேல் தமிழர் நாரிகமும் சமயமும் குன்றி விடுமென்றும் கூறினார்கள். பின்னர் திரு. ச. சச்சிதாநந்தம் பிள்ளையவர்கள் வரவேற்புக் கவி வாசித்து விளக்கிக் கொடுத்தனர். பிறகு மந்திரியார் மகாநாட்டைத் திறந்து வைத்தார்கள். அவர்கள் செய்த சொற்பொழிவில் சிறப்பாக வலியுறுத்தப்பட்டபொருள்கள் :—(1) கடவுள் ஒருவர் உண்டு. (2) இக்கொள்கை யின்றேல் ஒழுக்கம் இல்பொருளாய் விடும். (3) ஒவ்வொரு சமயத்திலும் சீர்கேடான ஒழுக்கங்களுள. (4) அவைகளைக் களைதல் மக்கள் கடன். (5) ஆனால் அடிப்படையான கொள்கைகளை எஞ்ஞான்றும் கைவிடுதல் கூடாது என்பனவாகும்.

இதன் பிறகு திரு. மறை. திருநாவுக்கரசனார் திரு. கா. சுப்பிரமணியம் பிள்ளையவர்களைத் தலைமை வகிக்கும்படி முன் மொழிந்தனர். இதை திரு. நாராயணசாமி முதலியவர் பின், வழி மொழிந்தனர். பிறகு திரு. நாராயணசாமி தலைவருக்கு வரவேற்புத்தாளை வாசித்துக் கொடுத்தார். பின்னர் தலைவரவர்கள் அரியதொரு விரிவுரை நிகழ்த்தினர். (இதன் விரிவை மற்றோரிடத்தில் காண்க.)

பிறகு மகாநாட்டைத் திறந்தருளிய மந்திரியார் அவர்கட்கு சமாஜக் காரியதரிசியார் வந்தனம் கூறினர். பிறகு காலைக்கூட்டம் கலைந்தது.

பிற்பகல் 2½ மணிக்கு விஷயாலோசனைக் கூட்டம் கூடித் தீர்மானங்கள் செப்பஞ் செய்யப்பட்டன. மாலை 3 மணிக்கு மகாநாடு மீண்டும் கூடிற்று. முதன் முதலாக திரு. சுரேந்திரநாத் ஆரியா அவர்கள் "நடராஜ தத்துவம்" என்னும் பொருள்பற்றி ஒரு சிறு சொற்பொழிவு நிகழ்த்தினர். பிறகு, திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளை யவர்கள் திருமுகம் வாசிக்கப் பட்டது. பின்னர் கீழ்வரும் தீர்மானங்கள் ஒவ்வொன்றின் இறுதியில் குறிக்கப்பட்ட இளைஞரால் முன்மொழி பின்மொழி பகரப்பட்ட பின்னர் ஏக மனதாக நிறைவேறின. இறுதியில் சமாஜக் காரியதரிசியார் இத்தீர்மானங்

களைச் செயலில் கொணர்தற்கு இளைஞர்களின் கூட்டுறவும் பொருளுதவியும் தேவையென்பதை நன்கு விளக்கினர். பிறகு திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியார் இளைஞர்கட்குப் பெரிதும் பயன்படக் கூடிய அரிய சொற்பொழிவொன்றை நிகழ்த்தினர். பிறகு தலைவரவர்கள் தமது முடிபுரையை மிக அரிய முறையில் நிகழ்த்தினர். பிறகு சமாஜக் காரியதரிசியார் தலைவர், வரவேற்புக்கழகத் தலைவர் திரு. தி. ரா. பொ. குப்புசாமிப் பிள்ளை, மகாநாட்டுக் காரியதரிசி திரு. தி. கு. கி. நாராயணசாமி முதலிய எல்லா அன்பர்கட்கும் உரிய நன்றிமொழிகள் கூறியபின்னர் கடவுள் வாழ்த்தொலி முழங்க இம்மகாநாடு இறைவன் இன்னருளால் இனிது நிறைவேறிற்று.

## சைவஇளைஞர் மகாநாட்டுத் தீர்மானங்கள்

1. சைவசித்தாந்தக் கோட்பாடுகள் தற்கால ஆராய்ச்சி முடிபுகளுக்கு ஒத்திருக்கின்றன என்றும், சைவசமயம் இந்நூற்றாண்டு வாழ்க்கைக்கும் ஏற்றதாயுள்ளதேயென்றும் சைவப் பெரியார்கள் சிலர் கூறுவதை இனிது விளக்குவனவான நூல்களை எளிய நடையில் எழுதுவித்து மாணவர்க்குக் கிடைக்கும்படி செய்ய வேண்டுமென்று சைவசித்தாந்த மஹாசமாஜத்தை இம்மகாநாடு வேண்டிக் கொள்ளுகிறது. தி. கி. நாராயணசாமி, மீனாக்ஷிசுந்தரம்.

2. சைவ மாணவரனைவரும் தமது சமயத்தின் அடிப்படையான கோட்பாடுகளையும் ஒழுக்கங்களையும் தக்கார் வாயிலாகக் கேட்டறிந்துகொண்டு, அவ்வொழுக்கங்களைத் தாம் கைக்கொள்ளலோடு, தாம் தெளிவாயுணர்ந்து கொண்ட சைவமெய்ச் சரிதங்களையும் கொள்கைகளையும், தமக்கு ஓய்வு கிடைத்த காலங்களில் தமது கிராமங்களில் பிரசாரஞ் செய்ய வேண்டுமென்று இம்மகாநாடு வற்புறுத்துகிறது. மறை-திருநாவுக்கரசு, பொன்னுசாமி.

3. திருப்பாதிரிப்புலியூர் சைவ மகாநாட்டில் ஒப்புக்கொண்டபடி சைவ சமயத்தினருக்கு ஜாதிபேதம் இன்மையால் சைவர்கள் எந்த ஜாதியினராயினும் அவர்கள் சமயம், சமுதாயம் முதலியவைகளில் சமத்துவ உரிமைகளை அநுபவிக்கச் சைவ உலகம் சௌகரியம் செய்து கொடுக்கும்படி இம்மகாநாடு வேண்டுகிறது.

மேலும் இந்து மதத்தைச் சார்ந்த தீண்டப்படாதார் முதலியவகுப்பினர்களைச் சைவ உலகம் இழக்காதிருப்பதற்காக அவர்களுக்குச் சமயம், சமுதாயம் முதலியவைகளில் எல்லா உரிமைகளையும் அளிக்கும்படி சைவர்களை இம்மகாநாடு வற்புறுத்திக் கேட்டுக் கொள்கிறது. கைலைகுரு, ரத்னசாமிப் பிள்ளை.

4. சைவர்கட்குள் நடக்கும் திருமணம் முதலிய எல்லாச் சடங்குகளையும் தூய்மையும் சிக்கனமுமுடைய முறையில் தமிழிலேயே செய்தல் வேண்டுமென்றும், அவ்வாறு அழகுறச் செய்தற்குச் சில சைவரைப் பழக்கும் பொறுப்பைச் சமாஜத்தார் மேற்கொள்ள வேண்டுமென்றும், அத்தகையார் ஏற்பட்டதும் அவர்களைக் கொண்டே சைவர்கள் தம்மில்லச் சடங்குகளை நடத்திக்கொள்ள வேண்டுமென்றும் இம்மகாநாடு கேட்டுக் கொள்கிறது.

திருமண காலத்தில் திருமுறைகள் முதலிய சிறந்த தமிழ் நூல்களைப் பரிசாக அளிக்கும் வழக்கத்தை மேற்கொள்ள வேண்டுமென்று இம்மகாநாடு வற்புறுத்துகிறது. தியாகராஜன், தி. கி. நாராயணசாமி.

5. சைவர் மகாநாடு ஆலய சம்பந்தமாகக் காட்டியுள்ள சீர்திருத்தங்களை(யும்) இம்மகாநாடு பாராட்டுவதோடு, விக்கிரகாராதனையின் தூல நிகழ்ச்சிகளில் கருத்தை மடித்துவிடாமல், இறைவனைப்பற்றிய அறிவும், அவன்பாலும், உயிர்கள்பாலும் அன்பு(ம்) பெருகுதற்கான முறையில் திருக்கோயில்களில் வாரத்திற் கொருமுறை அன்பர்கூட்டத்தில் புனித வழிபாடு நடைபெற ஏற்பாடு செய்தல் அவ

சியமென்று இம்மகாநாடு கருதுகிறது. மறை. திருநாவுக்கரசு, கே. குழந்தைவேலு.

6. ஒவ்வொரு சைவ வாலிபனும் சைவ சித்தாந்த மகாசமாஜத்திலாதல், அதனோடு இணைக்கப்பட்ட யாதாவதொரு சைவசபையிலாதல் உறுப்பினனாய்ச் சேர்ந்து கொண்டு மகாசமாஜத்தை வலுப்படுத்துவதற்காக, அதற்கு ஆயிரக்கணக்கான அங்கத்தவர்களைச் சேர்த்தல், முன்னமேஉள்ள சைவசபைகளை அதனோடு இணைத்தல் முதலிய வழிகளில் தொண்டுசெய்ய வேண்டு மென்று சைவ இளைஞர்களை இம்மகாநாடு வேண்டிக் கொள்கிறது. க. நடேசன், ரா. புருஷோத்தமன்.

7. தேவார புத்தகங்களை மிக்க குறைந்த விலையில் கிடைக்கும்படி செய்தல், சித்தாந்தப் பத்திரிகை நடத்துதல், பல விடங்களில் சொற்பொழிவு செய்வித்தல், சபைகளமைத்தல் முதலிய வழிகளில் சைவசித்தாந்த மகாசமாஜம் சைவப்பாதுகாப்புக்கான பணிகளைச் செய்து வருவதற்காக இம்மகாநாடு தன் நன்றி யறிதலைத் தெரிவிப்பதோடு, சைவ மடாதிபதிகள், இனியும் சும்மாயிராமல் காலத்தின் தேவைகளை நன்கு உணர்ந்து, சைவ போதனைக் கல்லூரி யமைத்தல், சைவ பிரசாரகரை நியமித்தல் தமிழாராய்ச்சி செய்தல் முதலிய தம் சமயக்கடமைகளைத் திறம் படச்செய்ய உடனே தொடங்க வேண்டு மென்று அவர்களை வணக்கமாய் வேண்டிக கொள்கிறது. ப. இராமநாத பிள்ளை, த. ச. மீனாட்சிசுந்தரம்.

8. மாணவர்கள் பிரமசரிய ஒழுக்கத்திலும், தெய்வநம்பிக்கையிலும் சிறிதும் வழுவாதவர்களாய், இந்நாட்டுக் கசரத்தும் சிலம்பமும் பயின்று உடலையும் நன்றாய் ஓம்பி, உயரிய நோக்கோடு கல்வியைச் சிறக்கக் கற்பதிலேயே தமது கவனத்தைச் செலுத்தவேண்டு மென்று இம்மகாநாடு வற்புறுத்துகிறது. புருஷோத்தமர், நாராயணன்.

9. இக் காலத்தில் கலாசாலைகளிலேனும் வீடுகளிலேனும் கோயில்களிலேனும் ஒழுங்கான சமய போதனை நிறைவேறாமையால் விளையும் கேடுகள் பலவாயிருத்தலால், பாடசாலைகளிலோ அல்லது தக்க பிறவிடங்களிலோ வாரத்திற்கொருமுறை உண்மைச் சைவசமயத்தை விளக்கும் போதனைகள் கிரமமாக நடைபெற்றுவர ஏற்பாடு செய்யும்படி மடாதிபதிகளையும், கோவிலதிகாரிகளையும், சைவசித்தாந்த மகாசமாஜம் போன்ற சைவசபைகளையும் இம்மகாநாடு கேட்டுக் கொள்கிறது. பாலசுந்தர நயினார், சிதம்பரஞ் செட்டியார்.

10. B. A. பட்டம் பெறுவதற்குத் தத்துவ சாஸ்திரப் பிரிவைத் தெரிந்து எடுத்துக் கொள்ளும் சைவ மாணவர்கள் அனைவரும் 'சைவ சித்தாந்தம்' என்னும் பிரிவை எடுத்துக் கற்றுத்தேர்ந் துபகரிக்க வேண்டுமென்று இம்மகாநாடு வற்புறுத்துகிறது. கலாசாலையதிகாரிகள் இப்பாடத்தைக் கற்பித்தற்கான வசதிகளையும் விரைவில் அமைக்க வேண்டு மென்று அவர்களை வேண்டிக் கொள்கிறது. A. முத்தையா, தி. கி. நாராயணசாமி.

11. புதிதாய் அமைக்கப்பட் டிருக்கும் S. S. L. C. பரீக்ஷைத் திட்டத்தில், அப்பரீக்ஷைக்குச் செல்வோர் தத்தம் தாய்மொழியைத் தம்மிஷ்ட பாடங்களிலொன்றாக எடுக்க வொட்டாதபடி செய்துள்ள புதுத்தடையை நீக்கிவிடும்படி S. S. L. C. போர்டாரையும், அரசாங்கத்தாரையும் இம்மகாநாடு வேண்டிக் கொள்கிறது. தங்கவேலு, இராமச்சந்திரன்.

12. (a) பெரிய கல்லூரிகளிருக்கு மிடங்களில் சைவ மாணவர்கட்கு மாணவரில்லங்களும், ஏற்ற விடங்களில் அநாதிவிடுதிகளும் ஏற்படுத்தச் சைவசித்தாந்த மகாசமாஜத்தார தீவிரமான முயற்சிகள் செய்ய வேண்டு மென்று இம்மகாநாடு அவர்களையும் மகா ஜனங்களையும் கேட்டுக்கொள்கிறது. (b) (சென்னையிலுள்ள மனவி விடுதி போன்று) சைவசமயிகளால் ஸ்தாபிக்கப்பட்ட அறநிலையங்களில் இனிமேல் சைவமாணவர்களையே சேர்க்க வேண்டுமென்றும், அவர்களனைவரையும் சமத்துவமாகவும் கருணையுடனும் நடத்த வேண்டுமென்றும் விடுதிகளின் தலைவர்களை இம்மகாநாடு வேண்டிக் கொள்ளுகிறது. A. முத்தையா, T. V. ரத்னசாமி.

13. தேவார பாடசாலைகளில் சைவசமயத்தைச் சார்ந்த எல்லாச் சாதிப் பிள்ளைகளை

யும் அறிவு, ஒழுக்கமென்னும் தகுதி யொன்றே கருதிச் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று அப்பாடசாலை நிர்வாகிகளை இம்மகாநாடு வேண்டுகிறது. ந. இராஜமாணிக்கம், ந. இரத்தினவேலு.

14. இறைவன் திருவுருவங்களில் சிறந்தனவற்றையும் இயற்கை வளப்பமிக்க சிவத்தலங்களையும், பேரழகுடைய சிவாலயங்களையும் சிற்பங்களையும் புகைப்பட மெடுத்தும் வர்ணபடமாக எழுதுவித்தும் அவற்றைத் தொகுத்து எளிய விலையில் எவர்க்கும் கிடைக்கும்படி செய்ய வேண்டுமென்று மகா சமாஜத்தாரை இம்மகாநாடு வேண்டுகிறது. ச. சிவகுமாரன், வா. தி. மாசிலாமணி.

---

# இளைஞர்கட்குத் திருமுகம்

[மா. வே. நெல்லையப்ப பிள்ளை]

அன்பார்ந்த சைவ இளைய சகோதரர்களே!

சென்னைச் சைவசித்தாந்த மகாசமாஜக் காரியதரிசி அவர்கள் ஆணையின் படி நீங்கள் உங்களுடைய பல இடங்களிலிருந்தும் பொதுநலத் தொண்டு கருதி உங்கள் மெய் வருத்தத்தையும் பணச் செலவையும் பொருட்படுத்தாது இங்கே வந்து சேர்ந்து சைவ இளைஞர் மகாநாடு கூடியிருக்கிறீர்கள். எல்லாம் வல்ல இறைவனருளால் உங்கள் வரவு நல்வரவு ஆகுக; நற்பயன் விளைவிப்பதாகுக.

2. உங்களிற் சிலர் இன்னம் கல்விச் சாலையில் படிக்கிறவர்களா யிருக்கலாம்; சிலர் இப்பொழுது உலக வாழ்க்கையிற் புகுந்திருக்கலாம். எப்படி யிருந்தாலும் நீங்கள் எல்லாரும் உலக வாழ்க்கையைப்பற்றி அநுபவ அறிவு அறிய வேண்டியவர்களா யிருக்கிறீர்கள். ஆதலின் உங்களுக்கு உலகில் தனி வாழ்க்கையிலும் குடும்ப வாழ்க்கையிலும் பொது வாழ்க்கையிலும் (Public life) துன்ப இன்பங்களால் மொத்துண்டு அநுபவமடைந்திருக்கிற முதிய வயது உள்ள நான் இத்தருணத்தில் உலக வாழ்க்கையைப்பற்றிச் சில வார்த்தைகள் சொல்லுதல் பொருத்தமுடையதாயிருக்கும் என்று நினைக்கிறேன். நான் சொல்லுஞ் சொற்களை நீங்கள் அப்படியே ஒப்புக்கொண்டு நடத்தல் வேண்டுமென்று சொல்லவில்லை. நீங்கள் அச்சொற்களிலடங்கியுள்ள கருத்துக்களை உங்களுடைய மனதில் உய்த்து உணர்ந்து அவைகளில் முன்னேற்ற வாழ்க்கைக்கு ஒத்திருப்பவைகளாக அறியப்பட்ட கருத்துக்களைக் கடைப்பிடித்து ஒழுகல் வேண்டும் என்று நான் உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

3. முதலாவது :—இக் காலத்தில் உள்ள எந்தக்கூட்ட மக்களும் தங்கள் முன்னோர்களுடைய வாழ்க்கையின் நாகரிகம் இன்னதென அறிந்து அதிலுள்ள நற்கருத்துக்களையும் நல்ல பழக்க வழக்கங்களையும் தழுவியே உலகில் ஒழுகி வருகிறார்கள். சில ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னே நமது இந்திய நாட்டில் நடைபெற்று வந்த தமிழ் முன்னோர்களுடைய நாகரிகக் கருத்துக்களும் பழக்க வழக்கங்களும் மிக மேலானதா யுள்ளவைகளாக அவைகளை அறிந்த பிற நாட்டு அறிஞர்கள் கூறி யிருக்கிறார்கள். அவைகளை நீங்கள் பண்டைத் தமிழ்

நூல்களைப் படிப்பதனாலும் அறிந்தார் வாயிற்கேட்பதினாலும் அறிந்து அவைகளில் தற்கால முன்னேற்ற வாழ்க்கைக்கு ஏற்புடைத்தா யுள்ளவைகளைத் தழுவி நடந்து அவர்களுடைய சந்ததியார்களாகச் சிறப்புடன் வாழ்தல் வேண்டும். அவ்வாறு நீங்கள் ஒழுகுதலினால் அந்நாகரிகத்திலுள்ள சமய நலன், ஒழுக்க நலன் முதலிய நலன்களை அடைதலுமின்றி அந்நலன்களை உங்கள் காலத்திலுள்ள எல்லா மக்களுக்கும் எடுத்துக் காட்டி அவர்களையும் நற்பயன் அடையும்படியாகச் செய்கிறவர்களாகின்றீர்கள்; உங்கள் பின் சந்ததியார்களுக்கும் அந்நலன்களை அறிந்து கைக்கொண்டு நடக்கும்படி வழி காட்டுகிறவர்களாகின்றீர்கள். இந்த முக்கியமான கடனை என்னைப் போன்ற முதியவர்கள் காலத்திலுள்ள தமிழ் மக்கள் பொதுவாய்ச் செய்யவில்லை என்று நான் தலைகுனிந்து உங்கள் முன் சொல்லுகிறேன். இளைஞர்களாகிய நீங்கள் அந்தக்குறைவை நீக்கித் தமிழ் நாடு நலம் அடையும்படி செய்ய உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

4. இரண்டாவது:—தற்கால நாகரிக பாதையிலுள்ள ஒரு பெருங்குழியில் நீங்கள் தவறி விழுந்து விடாதபடி விழிப்பாயிருத்தல் வேண்டும். அந்தப் பெருங்குழியாவது ஆடம்பர வாழ்க்கையாகும். ஆடம்பர வாழ்க்கை என்பது பொன்போல மின்னுகின்ற உள்ளீடற்ற போலி வாழ்க்கை. பிறர் மதிக்கவும் பிறராற் பயன் பெறவும் செய்யப்படுகிற பகட்டு வாழ்க்கை அது. அந்த வாழ்க்கை மேற்கு நாட்டு நாகரிகக் கூட்டுறவால் நமது நாட்டுக்கு வந்தது. மேற்கு நாட்டு நாகரிகத்திலும் விடாமுயற்சித் திறன், நேர ஒழுங்கு முதலிய நலன்களை நீங்கள் கைக்கொள்ளல் வேண்டும்; ஆனால் அதிலுள்ள வாழ்க்கை ஆடம்பரத்தை முற்றிலும் நீங்கள் நீக்கல் வேண்டும். அது நமது முன்னோர்களுடைய உண்மையும் எளிமையுமுள்ள வாழ்க்கைக்கு (True & Simple life) முற்றிலும் மாறான அதிகப் பணச்செலவுள்ள சிக்கல் வாழ்க்கை (Expensive and Complicated life). உயர்தர ஆங்கிலக்கல்வி கற்றிருந்தாலும் ஆங்கிலேயர்களுடைய நாகரிகத்தில் சிறிதும் மயங்காது உண்மையாயும் எளிமையாயும் தூய்மையாயுமுள்ள வாழ்க்கையை வாழ்ந்துகொண்டு வருகிற சில தமிழ்ப் பெரியாரை நீங்கள் உங்கள் கண் முன்னே இப்பொழுது பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் அவர்களைப் பார்த்து உங்கள் வாழ்க்கையை உண்மையும் எளிமையும் தூய்மையும் உடையதாக விளங்கும்படி செய்ய நான் உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

5. ஆடம்பர வாழ்க்கை சம்பந்தமாய் நான் உங்களுக்கு ஓர் உண்மை சொல்ல விரும்புகிறேன். ஒருவனுடைய வாழ்க்கையானது தனக்கும் பிறர்க்கும் நற்பயனுடையதா யிருத்தற்கு செல்வம் அதிகார முதலியவற்றால் பெரிய வாழ்க்கை வேண்டப்படுவதில்லை. பெரிய வாழ்க்கையும் நல்லறிவுடன் நடத்தப்படா விட்டால் மிக்க தீமையுடைய தாகலாம். நற்பயனுண்டாதல், வாழ்க்கை நடத்தப்படும் விதத்திலிருப்பது, அல்லது வாழ்க்கை பெரியது அல்லது சிறியதாயிருத்தலைப் பொறுத்தது அல்ல. நற்பயன் வாழ்க்கையே இன்பவாழ்க்கை யாகும்.

களில் ஒவ்வொருவரும் பெரிய வாழ்க்கையை அடைதல் உலக நிகழ்ச்சியில் முடியாதது. ஆனால் நீங்கள் ஒவ்வொருவரும் உங்கள் நல்லறிவாலும் நன்முயற்சியாலும்நற்பயனுடைய இன்பவாழ்க்கை வாழக்கூடும். அதுவே வாழ்க்கை நலத்துக்கு இன்றி அமையாது வேண்டப்படுவ தாகும்.

6. மூன்றாவது :— நல்லொழுக் கத்தைப் பற்றிச் சில வார்த்தைகள் கூறிவிட்டு என் உரையை முடிவு செய்கிறேன். மக்களுக்குச் சிறப்புடைய அணியாய் விளங்குவது நல்லொழுக்கம் என்று நான் உங்களுக்குக் கூற வேண்டுவதில்லை. ஆனால் நல்லொழுக்கம் நடைமுறையில் தவறா திருப்பதற்கு அது விழிப்புடன் பாதுகாக்கப் படல்வேண்டும் என்பதை நீங்கள் மனதில் வைத்து ஒழுகல் வேண்டும். நல்லொழுக்கத்துக்கு ஆதாரமா யிருப்பவை எண்ணம் இச்சை செயல் என மூன்றுமே. எண்ணமும் இச்சையும் மனதில் உண்டாவன; செயல் உடலினாலுண்டாவது. எண்ணமும் இச்சையும் நல்லனவாயிருந்தால் செயலும் நல்லதாகவே யிருக்கும். ஆதலின் நீங்கள் மனதில் எப்பொழுதும் தீய எண்ணங்களும் தீய இச்சைகளும் தங்குதற்கு இடம் கொடாமல் நல்ல எண்ணங்களும் நல்ல இச்சைகளுமே தங்கும்படி மனதை அடக்கிப் பழக்கம் செய்து கொள்ளுதல் வேண்டும். தீய எண்ணம் அல்லது தீய இச்சை ஒன்று பழைய வாசனையினாலே மனதில் வந்தால் உடனே அதற்கு எதிரிடையான நல்ல எண்ணத்தை அல்லது நல்ல இச்சையை மனதில் நினைத்துத் தீய எண்ணத்தை அல்லது தீய இச்சையை விலக்கல் வேண்டும். நல்ல மனமே நல்ல வாழ்வுக்குக் காரணமா யிருத்தலால் மனதைப் பழக்கத்தினால் தூய்மை யுடையதாயும் திண்மை யுடையதாயும்(Stray) ஆக்கிக்கொள்ள வேண்டும். திண்மையும் தூய்மையும் உடைய மனதினால் (Stray and pure Mind) ஒருவன் தனக்கும் பிறருக்கும் நற்பயன் வேண்டிய அளவு விளைவித்தல் கூடும். இந்த இயற்கை உண்மைகளை அறிந்து நீங்கள் உலகவாழ்வில் எப்பொழுதும் தீமையைவிலக்கி இயன்றவாறு நன்மையைநாடிச் செய்தலிலே கண்ணுங் கருத்துமா யிருத்தல் வேண்டும்.

7. நல்லொழுக்க சம்பந்தமாய் தன்னலம் பிறர் நலம் என்ற மயக்க உணர்ச்சி சாதாரணமாய் மக்களுக்குள் உள்ளது. தன்னல மில்லாது பிறர்நல மில்லை. பிறர்நல மில்லாது தன்னலமில்லை. பிறர் நலம் கெடுத்துத் தன்னலம் தேடிக் கொள்ளுதல் இயற்கையில் இல்லை. இந்த உண்மையை அறிந்து நீங்கள் மக்கட் பொது நலத்தை மேல் நிலையில் வைத்துத் தன்னலத்தை அதற்கு உட்படுத்தி ஒழுகல் வேண்டும். மக்கட் பொது நலம் நாடிச் செய்தலில் நீங்கள் எங்களைப்போல் இல்லாமல் சிரத்தையுடையவர்களா யிருத்தல் வேண்டும். தமிழ் மக்களுடைய வருங்கால நலனும் பிற மக்களுடைய வருங்கால நலனும் இளைஞர்க ளாகிய நீங்கள் ஊக்கத்துடன் பொதுநலத் தொண்டு செய்தலைப் பொறுத்திருக்கிறது. ஆதலின் நீங்கள் மக்கட் பொதுநலத் தொண்டில் ஈடுபட்டு உழைத்துத் தமிழ்நாட்டைச் சிறப்புடைய நாடாகச் செய்யும் பாக்கியத்தைப் பெற்றுக் கொள்ளும்

படி நான் உங்களைத் தாழ்மையாகக் கேட்டுக் கொள்கிறேன்.

8. இறைவனுடைய அருளால், உங்களில் ஒவ்வொருவருக்கும் இன்ப நல் வாழ்வு உண்டாகுக; உலக வாழ்வில் தீயனவற்றை எதிர்த்துச் செல்லுந் திறனும் நல்லனவற்றை நாடிச் செய்யும் ஆற்றலும் உண்டாகுக; சமயத் தொண்டு முதலிய பொது நலத் தொண்டுகளில் ஈடுபட்டு உழைக்கும் மனத்திறனும் செயற்றிறனும் உண்டாகுக.

---

# " சென்றடையாத திருவுடையான் "

[தாராபுரம் - நா. ஆறுமுகம் பிள்ளை]

" நன்றுடையானைத் தீயதில்லானை
நரைவெள்ளேறு
ஒன்றுடையானை உமையொருபாகம்
உடையானைச்
சென்றடையாத திருவுடையானைச்
சிராப்பள்ளிக்
குன்றுடையானைக் கூறவென்னுள்ளம்
குளிரும்மே "

என்னும் திருஞானசந்தப் பெருமான் அருளிச் செய்த திரிசிராப்பள்ளித் திருப்பதிக முதற்பாட்டின் மூன்றும் அடியில் விளங்கும் "சென்றடையாத திருவுடையான் " என்னும் தொடர் மொழிக்குச் சித்தாந்தம் மலர் ௩. இதழ் ௧, ௨ இல் திரு. வேள். N. துரைக்கண்ணன் என்பார் " இந்திரன் முதலிய இன்றயவர்க ளிடத்துப் போய்ப் பெறக்கூடாத விழுச்செல்வத்தை யுடையான் " என்று உரை வகுத்துள்ளார். ஆயினும், அவர் தம் கட்டுரையின் ஈற்றில் எழுதியுள்ள குறிப்பால் தாம் எழுதிய உரை பொருந்துவதோ அன்றோ என்னும் ஐயமுடையார் என்றே நினைக்கவேண்டி யிருக்கிறது. இவ்வுரையை மறுத்துச் "சித்தாந்தம்" மலர் ௩ இதழ் ௩ இல் திரு. G. கல்யாணம் B, A. என்பார் " தற்போதத்துடன் செல்பவர் அடைய முடியாத மோக்ஷ செல்வத்தையுடையவன் " என்று பொருள் எழுதியுள்ளார். அன்றியும் தாம் எழுதிய மறுப்புக்கு ஆதரவாக முற்கூறியவர் வரைந்துள்ள குறிப்பையும் எடுத்துக் காட்டியிருக்கிறார். இவர் கூறிய இப்பொருள் சாலச்சிறப்புடையதே என்பதற்குப் " பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரன்" என்னும் சிவஞான சித்தியார்த் திருமொழியே போதிய சான்றும். ஆயினும், இவர் முற்கூறியவர் உரையை மறுக்கும் முறை சிறிதும் பொருத்தமன்றெனத் தோன்றுவதால் அது பற்றி யாராய்வாம்.

'சென்று அடையா' என்னும் சொற்றொடர் 'வானவரிடம் சென்று அடைய முடியா' என்னும் பொருளைத் தரின் வானவருக்கு ஓர் ஏற்றம் நமது சமயாசாரியார் கற்பித்ததாகக் கருதவேண்டி யிருக்கும். " திருச்சிற்றம்பல மேய செல்வன் கழல் ஏத்தும் செல்வம் செல்வமே " என்று முழக்கிய ஒரு பெரியார் * * * வானோரை உயர்த்தி யிருப்பதாகப் பொருள் கொள்வது ஏற்புடைத் தாகுமா? என்று திரு. G. கல்யாணம், B. A.

அவர்கள் கேட்கின்றார். வானவர் உளர் என்ற கொள்கை யுடையார் எல்லாரும் மண்ணோரினும் வானோரே சிறந்தவர் என்று கூறுகின்றனர். அங்ஙனம கூறற்கேது வென்னையோ வெனின், மக்கட் பிறப்பின ரெல்லாரும் நல்வினைப் பயனாகிய இன்பத்தையும் தீவினைப் பயனாகிய துன்பத்தையும் அடிக்கடி மாறி மாறி நுகர்கின்றாராக லானும்தேவர்களெல்லாரும் நல்வினைப் பயனாகிய இன்பத்தையே பெரிதும் நுகர்கின்றாராகலானும் என உணர்ந்து கொள்க. தேவர்கள் பெரிதும் இன்பத்தையே நுகர்கின்றார்கள் என்பதைப் "போகம் வேண்டி வேண்டிலேன் புரந்தராதி யின்பமும்" என்னும் மணி மொழியே நன்கு விளக்கும. ஒருவர்பால் இல்லாத சிறப்பை அவா பால் உளதாக ஏற்றிக்கூறல் வழுவாமே யொழிய அவர் பால் உள்ள உயர்வை எடுத்துக் கூறலால்வரும் இழுக்கென்னையோ! அறிகிலேம். நம் சைவசமயத் திருமுறைகள் பன்னிரண்டினும் பலப்பல இடங்களில் வானவர் தம் ஏற்றத்தை எடுத்திசைக்கும் தொடர் மொழிகளைக் காணலாம். திரு. G. கல்யாணம் B. A. அவர்கள் எடுத்துக் காட்டிய "தீய அசுரர் பகையுண்டு" என்னும் செய்யுளீற்றிலுள்ள "வானோர்க் கென்னை வளன் உண்டே" என்னும் தொடர் மொழியினும் "வானோர்க்கரிய மருந்தே போற்றி" என்னும் தொடர் மொழியினும் நாம் நாடோறும் நேரிற்கண்டு ஒருவரோடொருவர் அளவளாவி வாழும் மண்ணோரை எடுத்துக் கூறாமல் காண்டற்கரியராய வானோரை எடுத்து மொழி வானேன் என ஒருசிறிது ஆராயினும் மண்ணோரினும் வானோர் ஏற்றமுடையார் எனக் குறித்தற்கேயா மென்பது புலனாகும். "வானையும் பெறில்வேண்டேன்" "திருமாலும் .... சென்றணரா" என்னும் தொடர் மொழிகளினுள்ள உம்மைகள் வானுலகின் சிறப்பையும் திருமாலின் உயர்வையும் குறிக்கவே எழுந்தனவாம். இங்ஙனமெல்லாம் புகழ்ந்து பேசற்கேற்ற பெருநலம் துய்த்தற்கு இவர்கள் அளத்தற்கரிய நிறைவளனுடையராயிருத்தல் வேண்டுமன்றோ? இவர்கள் எவ்வளவு பெருவளன் உடையராயினும் ஆகுக? இவர் தம் ஏற்றத்தை எடுத்து மொழியும் திரு. வேள். N. துரைக் கண்ணன் அவர்களுடைய உரையாற் பெறப்படும் பயன்றான் யாதோ வெனில், கூறுதும்.

மன்னர் மன்னன் ஒருவன்பாற் சென்று ஒரு புலவன் பரிசிலாகப் பெற்ற அரும்பெறன் மாணிக்கமணியின் உயர்வை மொழிய வேண்டுவார் "இது மாணிக்கமணி" என்று கூறிய அளவானே அதன் உயர்வு பெறப்படமாட்டாது. மற்று, "இது மன்னர் பாலும் சென்று பெறற்கரிய மாணிக்கமணி" என்பரேல், அம்மணியின் உயர்வும் அதை யுடையானாகிய மன்னர் மன்னன்றன் ஏற்றமும் அதைப் பரிசிலாகப் பெற்ற புலவன்றன் புலமைத்திறனும் ஆகிய மூன்றும் இனிது விளங்கும். இது போலவே "சென்றடையாத திருவுடையான்" என்னும் தொடர் மொழிக்குத் திரு. வேள். N. துரைக்கண்ணன் அவர்கள் எழுதிய "இநதிரன் முதலிய இறையவர்களிடத்துப் போய்ப் போய்ப் பெறக் கூடாத விழுச் செல்வத்தை யுடையவன்" என்னும் உரையால் பேரின்பப் பேறாகிய விழுச் செல்வத்தின் உயர்

வும் அதனை யுடையானாகிய இறைவன் தன் ஏற்றமும் அதனை யடையும் அடியார் தம் தகுதியும் நன்கு விளங்கும். இதுவே இவ்வுரையாற் பெறப்படும் சிறந்த பயனும். "செங்கணவன்பாற் றிசைமுகன்பாற் றேவர்கள்பாலெங்கு மிலாததோ ரின்பம்" என்னும் திருவாசகத் திருமொழியும் இவ்வுரையின் ஏற்றத்தை இனிது தெளிவுறுத்தும். மேலும், இவ்வுரை பேரின்பப் பேறாகிய விழுச்செல்வம் இந்திரன் முதலிய இறையவரிடத்துப் போய்ப் பெறக் கூடாதது, அதனையுடையான் சிவபெருமானே என்று விளக்கலால், இவ்விந்திரன் முதலிய இறையவரை இவர் தேவர் அவர் தேவர் என்று பேசிப் புலம்பி வணங்கன்மின்; நினைத்தொறும் காண்டொறும் பேசுந்தோறும் எப்போதும் அனைத்தெலும் புண்ணெக ஆனந்தத் தேன் சொரியும் குனிப்புடையானையே நினைமின், வாழ்த்துமின், வணங்குமின் என அறிவுறுத்தலும் பெறப்படும். இதுகாறும் ஆராய்ந்தவாற்றான் திரு. வேள். N. துரைக்கண்ணன் அவர்கள் தாம் எழுதிய வுரையில் ஐயுற்றாலும் திரு. G. கல்யாணம் அவர்கள் மறுத்தாலும் அவ்வுரை பொருத்தமுடையதென்பதே தேற்றமாம்.

இன்னும் "சென்றடையாத திருவுடையான்" என்னும் இத்தொடர் மொழிக்குச் சிறிதாராய்ந்தால் வேறு பல பொருளும காணலாம். அவற்றுள் எமக்குத் தோன்றியவை இவை :—

(க) ("பெருங் கருணைத் தடங்கடலாகிய இறைவன் தானே வந்து தந்தாலல்லாமல் எளியேமாகிய நாம் போய் அடையக் கூடாத பேரின்ப விழுச்செல்வத்தைத் (தனக்குடைமையாக) வுடையான் என்பது ஒரு பொருள். இப்பொருள் பொருத்தமுடையதென்பதை "என்னாலறியாப் பதந்தந்தாய், தாயாய் முலையைத் தருவானே தாரா தொழிந்தால் சவலையாய் நாயேன் கழிந்து போவேனே, தான் வந்து நாயேனைத் தாய்போற் றலை யளித்திட்டு, அண்டமுதலாயினான் அந்தமிலா ஆனந்தம் பண்டைப் பரிசே பழவடியார்க் கீந்தருளும்" என்னும் திருவாசக அருண்மொழிகளெல்லாம் பேரின்பச் செல்வத்தைத் தருதல் இறைவன் செயலாகவே வைத்துக் கூறி வலியுறுத்தல் காண்க.

(உ) சென்றடையாத என்பது திருவைத் தழுவாமல் உடையானைத்தழுவுவதாகக் கொண்டு "இந்திரன் முதலிய இமையவர்களும் போய் அடைய முடியாத இறைவன்" எனக்கோடல் மற்றொரு பொருள். "பூவேறு கோனும் புரந்தரனும் பொற்பமைந்த நாவேறு செல்வியும் நாரணனும் நான் மறையும் மாவேறு சோதியும் வானவரும் தாமறியாச் சேவேறு சேவடி, செங்கணெடுமாலும் சென்றிடந்து காண்பரிய பொங்கு மலர்ப்பாதம், தேவர் கோவறியாத தேவதேவன்" என்னும் மணிமொழிகளெல்லாம் இவ்வுரை கூறற்கேற்ற சான்றுகளாம்.

(ங) மேற்கூறிய படியே "சென்றடையாத" என்பது உடையானைத் தழுவுவதாகவே கொண்டு "(தானே வந்து காட்டினாலன்றி நாமே) சென்று அடைய முடியாத முதல்வன்" என்பது வேறொரு பொருள். "அவனருளாலே அவன்றாள் வணங்கி, அவனருளே கண்ணாகக் காணினல்லால் இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவனிறைவன் என்றெழுதிக் காட்டொணாதே" என்னும் தமிழ்

மறைமொழிகள் இவ்வுரையின் சிறப்பை விளக்கும். திரு. G. கல்யாணம் B. A. அவர்கள் தமதுரைக்கு மேற்கோளாகக்கொண்ட "நானே கருதின் வரநாடார் சும்மா இருந்தால் அவர் தானே அணைவர்" என்னும் திருமொழி யாம் கூறிய இப்பொருளையே அறிவுறுத்தல் காண்க.

(ச) இச்செய்யுளை இளமையிலேயே எல்லாம்வல்ல இறைவனை நேரிற்கண்டு அவனால் பேரின்பப் பேற்றை எளிதிற் பெற்ற நம் திருஞான சம்பந்த வள்ளல் அது பெறுமாறறியானை இறைவன்பால் அது பெறுமாறு ஆற்றுப்படுத்தும் செய்யுளாகக் கொண்டு, "ஆத! திருவுடையானைச் சிராப்பள்ளிக்குன்றுடையானைக் கூற என்னுள்ளம்குளிரும்? நன்றுடையானைத் தீயது இல்லானை நரைவெள் ஏறு ஒன்று உடையானை உமை ஒரு பாகம் உடையானைச் சென்று அடை" என்றுசொற்களைப் பிரித்து "இறைவனை யறியும் அறிவிலானே! பேரின்பச் செல்வத்தைத் தனக்குடைமையாக உடையவனைத் திரிசிராப்பள்ளிக் குன்றைத் திருக்கோயிலா உடையவனை வழுத்த என் (அடியேன்) மனம் குளிரும். ஆகையால் எல்லா நன்மைகளையும் உடையவனைத் தீமை சிறிதும் இல்லாதவனை மயிலையாகிய வெண்மை நிறம் வாய்ந்த ஆனேற்றை ஊர்தியாக உடையவனை உமையம்மையை ஒரு பால் உடையவனைப் போய் அடைவாயாக" (ஏ தேற்றம் அல்லது அசை) என்பது பின்னும் ஒரு பொருள்.

இத்தனை பொருளில் எதுதான் சம்பந்தப் பெருமான் கருத்தை விளக்குவதோ எனில், அதையுணர யாம் வல்லேம் அல்லேம். செய்யுளியற்றும் ஆசிரியர்கள் ஒரு சொற்றொடரில் ஒரே கருத்தை அமைத்துச் செய்வதுமுண்டு. ஒரு சொற்றொடரிலேயே பல பொருள் தோன்ற அமைத்துச் செய்யுள் செய்வதும் உண்டு. அன்றியும், ஒரே பொருள் அமைத்துத் தாம் செய்த செய்யுளை மறுமுறை நோக்கின் அதில் பல பொருள் தோன்றக் கண்டு தாமே மகிழ்வதும் உண்டு. இத்தகைய செய்யுட்களுக்குச் சிறப்புடையவாய பல பொருளையும் கொள்ளலே நேரிதாம்.

## "சென்றடையாத திருவுடையான்"

[ஒ. கோ. கோவிந்தசாமிப் பிள்ளை, பி. ஏ.]

மேற்காட்டியுள்ள சொற்றொடர்க்கு இருவர் வரைந்த உரைகளை இப்பத்திரிகையில் அடியேன் கண்ணுற்றனன். ஆண்டு இருவரும் இருவிதமாகப் பொருள் கூறிப் போந்தனர். ஒருவர் "தேவர்களிடத்து சென்று கிடைக்கப்பெறாத செல்வத்தைத் தன்னிடத்தே யுடையவன்" என்றும் மற்றவர் "தற்போதத்துடன் செல்வார்கள் கிடைக்கப் பெறாத செல்வத்தை யுடையவன்" என்றுங் கூறினர்.

முதற் கண், முந்தியவர் கூறிய உரையை ஆராய்வாம். பாடல்கள் பதினொன்றையும் படித்து அவைகளில் மிளிர்கின்ற கருத்தை உற்று நோக்குமிடத்து சம்பந்தர் உலகத்தினர்க்கு எம்பிரானுடைய் அருள் திறமைகளை

யும் குணங்களையும் வெளிப்படுத்தி அவரைப் போற்றினால் சிறந்த செல்வத்தை யடைவது உண்மை என்பதை வெளிப்படுத்தும் எண்ணத்தை யுடையவராய் இருந்ததாகத் தெரிகிறது. எம்பிரானைப் போற்றி யடையுங்கள் என்ற சம்பந்தர் தேவர்கள் ஒரு செல்வத்தைத் தரும் வன்மையுடையவர்கள் என்பதை நினைந்தே இரார் என்பது துணிபு. மேலும்,

நூறு கோடி பிரமர்க ணொங்கினர்
ஆறு கோடி நாராயண ரங்கனே
ஏறு கங்கை மணலெண் ணிலிந்திரர்
ஈறி லாத நஷீச ளொருவனே.

என்ற நாவுக்கரையர் பாட்டினால் தேவர்கள் அழியாத நிலைமையையுடையவர்கள் அல்லர் என்பது வெளிப்படை. அதனால் அவர்களிடத்து சிறந்த செல்வம் கிடையாது என்பது பெற்றும். எனவே "சென்றடையாத திருவுடையான்" என்று பாடும்போது தேவர்களிடத்து சென்று அடையாத செல்வத்தை யுடையவன் என்று சம்பந்தர் கருதியிரார்.

இனி, தற்போதத்துடன் சென்றவர்கள் கிடைக்கப்பெருத செல்வத்தை யுடையவன் என்று மற்றவர் கூறின பொருளும் பொருத்த முடையதாகத் தோன்றவில்லை. ஏனெனில் ஒருவன் வேறொருவனிடம் ஒரு பொருள் கருதிச் சென்ருல் அவனுக்கு முதன்மையாக அப்பொருளிடத்து இச்சையிருக்கவேண்டும். அவ்விச்சையினால் தற்போதத்துடன் சென்ருல் அப்பொருள் கிட்டாது என்பதை அவன் அறிவான். இச்சையும் தற்போதமும் முரண்படுகின்றமையால் தற்போதத்துடன்சென்று என்பது பொருத்த முடையதாகத்தோன்றவில்லை.மேலும் அங்ஙனமே பொருள் கொண்டாலும் தற்போதத்துடன் சென்றவர்க்கும் ஈசன் அருள் புரிந்திருக்கிருனென்பது,

"கருத்த னாய்க் கயிலாய மலைதனைத்
தருக்கினா லெடுத் தானைத் தகரவே
வருத்தியா ரருள் செய்தவன்"

எனும் அப்பர் பாட்டால் விளங்குகின்றது.

இனி அச்சொற்றொடர்க்குக் கொள்ளத்தக்க பொருள் என்னை எனின் நாராணன், நான்முகன் முதலான தேவர்கள் சென்று அடையாத செல்வத்தையுடையவன் என்பது தான். இதற்குச் சான்று மூவரும் மணிவாசகப் பெருமானும் பாடிய பாக்களில் நிறைந்து கிடக்கின்றது.

"நாடினர் காண்கிலர் நான்முகனுந்
திருமா லயந்தேத்த"

என்ருர் சம்பந்தர்.

"நாடி நாரணன் நான்முகன் வானவர்
தேடியே சறவுந்தெரி யாத தோர்
கோடி காவன்"

என்ருர் திருநாவுக்கரசர்.

"கண்ணன் மலரோனுங்
கீழ்மேலுற நின்ருன்"

என்ருர் சுந்தரர்.

"பூவேறு கோனும்
புரந்தரனும் பொற்பமைந்த
நாவேறு செல்வியும்
நாரணனும் நான்மறையும்
மாவேறு சோதியும்
வானவருந் தாமறியாச்
சேவேறு சேவடி"

என்ருர் மாணிக்கவாசகனுர்.

இதனால் தேவர்களுக்குக் கிட்டாத எம்பெருமான் உலகத்தினருக்குக் கிட்டுவனே என்ற ஐயம் நமக்கு வேண்

டுவதில்லை. ஏனெனில் சம்பந்தரே முதலடியில் எம்பெருமான் நல்லவர், தீயதில்லாதவர் என்று கூறிப்போயிருக்கின்றார். தேவர்களுடைய அகங்காரம் சொல்லொணாதது. பகைமை வாய்ந்தது. இராவணனுடைய செருக்கோ தன்னையன்றி வந்த செருக்கு. எமபிரானிடத்துப் பகைமை கொண்டதல்ல. இராவணன் சிறந்த சிவனடியான். அதுபற்றியே தான் எம்பெருமான் தேவர்களுக்கும் அரிதாகியும் இராவணனுக்கு எளியவனாகியு மிருந்தார். இங்கு பரஞ்சோதி முனிவர் தம் பழியஞ்சின படலத்தின் துவக்கத்தில் கண்டுள்ள,

"ஈறிலான் செழியனன்புக்
கெளியவனாகி மன்றுள்
மாறியாடிய கூத்தென
சொல்வரம் பின்றாமோ
............... சொல்லுவாம்"

என்பது கருதற்பாலது.

ஆகவே சென்றடையாத என்ற தொடருக்கு பொருள், தேவர்கள் சென்றடையாத என்பதுதான். இந்த தொடரில் இரண்டு பொருளை சம்பந்தர் மிகவும் அழகாய் அமைத்திருப்பது சாலவும் கருதற்பாலதா யிருக்கின்றது. ஒரு பொருள் எம்பெருமானிடத்து உள்ள செல்வம தேவர்களாலும் கோரப்பட்ட செல்வம். எனவே அப்படிப்பட்ட செல்வத்தை உலகத்தினரே நாடுங்கள் என்று சொல்வதைப் போன்றிருக்கின்றது. மற்றொரு பொருள் அச் செல்வத்தை யடையவேண்டு மென்றால் தேவர்கள் சென்ற வண்ணம செல்லாதீர்கள் என்று சம்பந்தர் சொல்ல வந்த மாதிரியாகத் தெரிகின்றது.

இஃது சைவ சமயத்திடத்துள்ள அன்பின்மிகுதியால் எழுதப் பட்டதேயன்றி மற்ற உரைகளுக்கு மறுப்பாக எழுதப்பட்ட தன்று. இத்தொடர்க்கு இன்னும் பலர் பலபொருள் கூறுவர். அதனை அடியேன் அன்புடன் எதிர் பார்க்கின்றனன்.

---

## "சென்றடையாத திருவுடையான்"

[திருக்குறள் விளக்கவாசிரியர் - கி. குப்புச்சாமி முதலியார்]

'நன்றுடையானை' என்பதனை முதலாக வுடைய தேவாரத்தின் மூன்றும் அடியாகிய, "சென்றடையாத திருவுடையானை" என்பதனை இரண்டு முறை நான் பேசினேன். ஆயினும், சைவசித்தாந்த மகாசமாஜத்தின் காரியதரிசி இதைப்பற்றி எழுதித் தரல்வேண்டும் என்றமையால் ஒருவாறு சுருக்கி எழுதுகின்றேன். முதலில் இச்செய்யுளுக்கு உரை காண்போம். அஃதாவது,

நன்றுடையானை - அறக் கடலாகிய அந்தணனை,

தீயதிலானை - மறமென்ப தில்லாத மைந்தனை,

நரைவெள்ளேறு ஒன்றுடையானை - அறவிடையென்னும் விடை யொன்றுடையானை,

உமை யொருபாக முடையானை - அருட்சத்தியை இடப்பாகத்தே யுடையானை,

சென்றடையாத திருவுடையானை - இயல்பாக அமைந்த அருட் செல்வ முடையானை,

சிராப்பள்ளி மேய குன்றுடையானை - திரிசிராப்பள்ளி யென்னு மிடத்தே அமைந்த குன்றத்தில் எழுந் தருளி யிருப்பானை,

கூற - வாக்கால் கூறுதலும்,

என்னுள்ளம் - என் மனமானது,

குளிரும் - மகிழும்.

என்பதாம்.

‘ அறவாழி அந்தணன் ’ ஆதலால், ‘ நன்றுடையானை ’ என்றும், அழிப்பும் இளைப்பாற்றற் காதலால், ‘ தீயதி லானை ’ என்றும், எல்லாம் அழிந்த காலத்தும் அழியாத தருமத்தை விடையாக ஆரோகணித் தமையால், ‘ நரைவெள்ளேறு ஒன்றுடையானை ’ என்றும், அருட்சத்தியை இடப்பாகத் துக் கொண்டதுரியங் கடந்த மூர்த்தி ஆதலால், ‘ உமையொரு பாகம் உடையானை ’ என்றும், அருண்மூர்த்தியாய் உலகமே உருவினனும் எல்லார்க்கும் எல்லாச் செல்வத்தையுந் தநது நிற்ப வனும் ஆதலால், ‘ சென்றடையாத திருவுடையானை ’ என்றும், இவ்விதம் எல்லா உலகமும் ஆன இறைவன் ஆன் மாக்கள் உய்யும் வண்ணம் நிலவுலகத் துத் திருக்கோயில்கள் பல கொண் டிருப்பதில் திரிசிராப்பள்ளியில் உள்ள குன்றில் எழுந்தருளி யிருக்கும் திரு மூர்த்தியை வாக்கால் கூற என் மன மானது நிரதிசய இன்பத்தைப் பெற் றதுபோல் மகிழும் என்பார், ‘ சிராப் பள்ளிக் குன்றுடையானைக் கூற என் னுள்ளங் குளிரும்மே’ என்றும் கூறினு ராயிற்று.

இனிச் ‘சென்றடையாத திருவுடை யானை’ என்று கூறியது எற்றுக் கெனின், ஏனைய தேவர்கள் இவனை வழிபட்டு அடையவேண்டுவனவற்றை யடைவது போல் அடைதல் இல்லாத செல்வன் அதாவது இயல்பாகவே செல்வம்அமைந்தவன் என்பதாம். இத னுலன்றோ இறைவனை, “மன்னவன்” என்றனர். இதற்குப் பேருரை கண்ட சிவஞான முனிவரர், “வெண்கொற் றக் குடையும், நவமணி முடியும், சிங் காதனமும், மன்னவர்க்கேயுரிய சிறப் படையாளமாம். அதுபோலப் பிர பஞ்சம் எல்லாவற்றிற்கும் மூலகாரண மாகிய ஒரு பெரு வெண்கொற்றக் குடையும், எவற்றையும் ஒருங்கே ஓரியல்பான் அறியும் பேரறிவாகிய ஒரு பெருஞ்சுடர் முடியும், எவற்றினை யும் அங்கங்கே உயிர்க்குயிராய் நின்று செலுத்தும் இயல்பாகிய ஒரு பெருஞ் சிங்காதனமும், பிறர்க்கின்றித் தனக் கே உரிமையாகச் சிறந்தமை பற்றி” என்று விதந்து கூறினர். அன்றியும், “ விச்சதின்றியே விளைவு செய்கு வாய் ” என்பது வித்தின்றி விளைவாய் எனப் பொருள் பட்டுத் “திருமேனி கொள்ளும் முறைமை உணர்த்திய தூஉமாம் ” என்றமையால் எல்லாம் இயல்பாகவே அமைந்தவன் என்றும், அவனிடத்துள்ள செல்வம் ஏனைய ஆன்மாக்களாகிய மக்கள் முதல் தேவர் என்பார் வரையும் சென்று அடை ந்த செல்வம்போ லல்லாது இயல் பாகவே அமைந்த செல்வம் என்பது பொருள் ஆயிற்று. இதனைச் சுருங்க எழுதவேண்டும் என்றமையால் இத னுடன் விடுக்கின்றேன். இனி, இவ் விஷயத்தையே, ஐந்து பெரியோர்கள் எழுதியும், ஒரு பெரியோர் தலைவராக

அமைந்தும் பேசினர். தலைவராக அமைந்து பேசினோர், "சென்றடையாத திருவுடையான்" என்பதற்கு ஆண்டவன் தானே ஆன்மாக்களிடம் சென்று செல்வத்தைத் தருபவன் என்னும் பொருள்படப் பேசினர். முதலாவது எழுதிய திரு. என். துரைக்கண்ணனும், நான்காவது எழுதிய திரு. ஆறுமுகம்பிள்ளையும், ஒருமனத்தராய் 'ஆன்மாக்கள் ஏனைய தேவர்களிடம் சென்று அடையாத செல்வத்தையுடையான்' என்றனர். இரண்டாவது எழுதிய திரு. ஜி. கலியாணம் என்பவர் 'தற்போதத்தோடு ஆன்மாக்கள் சென்றடையாத செல்வன்' என்றனர். மூன்றாவது எழுதிய திரு பொ. முத்தையப் பிள்ளை ஒருவர் தாம், இறைவனுக்கே ஏற்றினர். மற்றும் கடைசியாக எழுதிய திரு. கோவிந்தசாமி முதலியார் முதல் எழுதியவரையும், இரண்டாவது எழுதியவரையும் மறுத்துத் தன் மதம் நாட்டினர்.

இனி, நான் முடிவாகக் கூறுவது என்னெனின், சமாஜ வருடக் கூட்டத்தில் வழக்கம்போல் காரியதரிசி யவர்கள் கொடுக்கும் விஷயத்தைப் பேசுகின்ற விருத்தனாகிய நான் திருவெண்ணெய் நல்லூரிலும் பேசினேன். பேசியதி லிருந்து இத்துணைச் சித்தாந்த சைவர்கள் பேசியும் எழுதியும் முடித்தார்கள். இவ்வித செயல்களுக்குப் பேசியதுபோல் எழுதியும் தரல்வேண்டும் என்னும் காரியதரிசியின் விருப்பத்தின்படி இதை எழுதினேன்.

[குறிப்பு :—இப்பொருள் பற்றிய ஆராய்ச்சி இதோடு முடிவடையும்.—பத்திராசிரியர்.]

---

# சமயக்கேடு

[காழி. சிவ. கண்ணுசாமி, பி. ஏ.]

சமயமென் றெழுந்த ஒவ்வொன்றற்கும் குறைந்த அளவிலோ விரிந்த அளவிலோ சடங்குகள் ஏற்பட்டிருப்பதைக் காண்கின்றோம். இன்பப் பெருக்காம் இறைவன் பால் இயற்கையானெழும் அன்புப் பெருக்கேதுவாக அனைவரும் அவ்வவர்க்குத் தோன்றியவாறு வழிபாடியற்ற முற்படுவதே இயல்பு. நீராட்டியும், பூச்சொரிந்தும், பலியூட்டியும், ஆடியும், பாடியும், அழுதும், அரற்றியும், விழுந்தும், குதித்தும், நகைத்தும், மெய்ம்மறந்தும் மற்றுமிவ்வாறே நெஞ்சுகந்தபடி வழிபாடியற்றுவோர் தவறுகச் செய்கிறார் என்று பகுத்தறிவு வழியானேக்கிற் கூறுதலியலாது. தத்துவவுணர்வு தடித்துக் கூர்ந்து செல்லாத காலத்து இவையெல்லாம் ஒரு படித்தாய் நோக்கப்பட்டிருத்தல் எளிதிற் பெறப்படும். ஆயினும் அவ்வுணர்வும் அதனனெழுந்த உண்மைப் பரம்பொருளின் ஆராய்ச்சி யறிவும் முனைத்து, முதிர்ந்து, உரங்கொண்டு, அறிவாற்றற் கேற்றவாறு சமய நிலை படிப்படியா யுயர்ந்து, அவ்வுயர்ச்சி ஏதுவாகவும் கருத்து வேறுபாட்டினாலும் பல் வேறு உட்பிரிவு எய்துகின்ற காலத்து ஒவ்வொரு உட்பிரிவும் ஒவ்வொரு விதவழிபாட்டை விலக்கியோ அன்றித் தனக்கென ஏற்றுக்கொண்டோ ஒழுகி வரம்பு கட்டிக்கொள்ளுதல் இயல்பு.

அவ்வாறு ஒவ்வொரு சமய உட்பிரி வும் தனித்துக் கால்கொண்டு தழைத் தோங்கப் புகுங்கால் குறித்த சில ஒழுக்கங்களையும் வழிபாட்டு முறை களையும் தேர்ந்து மேற்கொண்டு அவை கட்கு மேற்கோளாகப் பலப்பல நூல் விதிகளையும் தேடியமைத்துக்கொண்டு அவ்வழிபாட்டினை முறையே இடை விடாம லியற்றி வருமாறு ஒரு குழு வினரையும் பிரித்தமைத்துக் கொண்ட வுடன் அது ஒரு தனிச் சமயமாக நிலை பெறுகிறது. இவ்வாறே தான் ஒவ்வொரு சமயமும் தனக்கென்றே சடங்குகள் கரணங்கள் என்பனவற் றையும், சமய சாத்திரங்கள், வேதங் கள், ஆகமங்கள் என்பனவாதிய நூல் களையும், கடவுட் பணியாற்றும் ஒரு குழுவினரையும் அமைத்துக் கொண் டுளதென்று கூறலாம்.

இனி, பெருமுயற்சி யெடுத்து இவ் வாறு ஒரு சமயத்தை நிறுவியபின் அம்முயற்சியாளர் தாங்கொண்ட கரு மம் முடிவுபெற்றதாகக் கருதி மடியினை மேற்கொண்டு அச்சமயத்தின் பிற்கால நடைமுறையையும் ஆய்ந்து நோக்க வேண்டும் என்றதோர் உணர்ச்சியே யின்றிச் சமய வளர்ச்சியை அதற் கென முன்னர் பிரித்தமைத்த குழு வினராகிய குருமார்களிடம் ஒப்பித்து வாளாவிருந்துவிடல், ஒவ்வொரு சமய வரலாற்றினுங் காணக் கிடைப்பதோர் உண்மையாகும். பசி வேளையில் எதிர் கொண்டழைத்துச் சமைத்த உணவை முன்னிருந்து ஊட்ட வேறெத்தகைய உழைப்புமின்றி அதனை யுட்கொள்ளு வதனாலாய களைப்பு தொண்டருக்கும் சொற்ப நேரமிருக்கு மென்று கூறுவ ரேல் தீராப் பசிகொண்ட பல்லாயிரம் உயிர்கட்கு ஆராவமுதளிக்கும் ஒரு சமயத்தை நிறுவியதனாலாய களைப்பு எத்துணை சொற்ப காலம் இருக்க வேண்டும்? அதனை ஒரு கற்பகால மென்றே கணக்கிட்டுக் கொள்ளுத லுந் தவறுமோ? இவ்வாறு களை மலிந்து கிடக்கும் ஒரு கற்ப காலமுழு தும் முன்னெழுந்த சமயமானது தன் சீர்குலைந்து அச்சுக்கெடா திருந்துவரு மென்று கொள்ளவுங் கூடுமோ?

இனி, மடி மிகுந்து களைமலிந்து கிடக்கும் ஒரு காலத்தில் ஒவ்வொரு சமயமும் கேடுறுதற்குச் சிறந்த ஏதுக் களாய் இதுகாறும் எந்நாட்டிலும் இருந்து வந்தனவாகக் காணக்கிடப் பனவும் இனியும் இருக்கக் கூடியவை யாகக் கருதக்கிடப்பனவும் மூன்று கும். அவை குருமார்களின் தன்ன லம், தெய்வத் திருவிளையாடற்றிரிபுப் பெருக்கம், வேதசாத்திர மறைபொ ருள் என்பனவே. இவை ஒவ்வொன் றையும் ஒரு சிறிது விளக்குவாம்.

மூன்றினுந் தலையாயது குருமார் களின் தன்னலங்கருதும் இழிதகை மையே. சமயங்கண்ட பெரியார்கள் மாண்டு மடிந்ததாலோ அன்றி மங்கி யோய்ந்ததாலோ, கடவுட் பணியாற் றுவதற்கென அவர்களால் முதற்கண் தேர்ந் தமைக்கப்பட்ட குருமார்கள் நாளேற வேறத் தாமே கடவுளர்க்கும் மக்கட்கும் இடையே இருப்பதாகிய தொடர்பை ஆக்கியளித்து அழிக்கும் ஆற்றல் வாய்ந்தவர்களென்று கூறிப் பகடியடிக்க முற்படுவர். அதனைப் பகடியெனக் காணல் வேறு பல அலு வலிற் படிந்துகிடக்கும் ஏழை மாந்தர் கட்கரிதாகும். இப்பகடி தானும் சிறு கச் சிறுக, சமயத்தலைவர்கள், கடவுட் பணியியற்றும் ஆசாரியர்கள், மறை கிளக்கும் ஓதுவார்கள் என்ற இக்குழு

வினரின் பல பகுதியினரிடத்தும் தோற்றமுறுகிறது. கடவுட் பணியிலேயே என்றென்றும் ஈடுபட்டுக் கிடப்பதனாலோ அன்றி அப்பணியாற்றுவதில் வேண்டியும் வேண்டாமலும் பல்லாற்றானும்வரும் நன்பொருள் மிகுதியினாலோ, அன்றியும் எந்தை குருவாகையால் யானுங் குருவாதலைத் தடுப்பார் யாருமிரார் என்ற ஒரு நம்பிக்கையினாலோ மற்றிவை போன்ற எதனாலோ முதன் முதலாகப் பிரித்தமைக்கப்பட்ட குருக் குழாத்தினரிடைக் காணக்கிடந்த உண்மைச் சமயப்பற்று ஒடுங்கி, கடவுட் பணியாற்றும முறைகளிற் பயிலும் பயிற்சிகள் குறைந்து, வெறும் வெளிச் சடங்களவானே பணியை முடித்துக்கொண்டு உறங்க விழையும் இழுக்கம் குருமார்களிடத்தும் பெரும்பாலும் அவர்கள் கால்வழி வருவோர்களிடத்தும் குடிகொள்கிறது.

“ சத்தியமின்றித் தனிஞானந் தானின்றி
யொத்த விடயம் விட்டோரு முணர்வின்றிப்
பத்தியுமின்றிப் பரனுண்மை யின்றியூண்
பித்தேறு மூடர் ”

பலர் பெருகிக் குருமார்களா யமைந்து கடவுட் பணியாற்ற முன் வருவோரேல் அவர்களை நம்பிக் கடைத்தேற வெண்ணினால் அது “ குருடுங் குருடுங் குருட்டாட்டமாடிக் குருடுங் குருடுங் குழிவிழு ’, வதையன்றே ஒக்கும்? இத்தகையோரால் இறைவழிபாட்டிற்குத் துணைக் கருவியாய்க் கோலப்பட்ட சடங்குகள், தன்னலமும் பொருள் வருவாயும் மக்கள் தம் அறியாமையுங் கருதி முதற்கருவியாக மாறிச் சமய வழிபாடெனக் காட்டப்பெறின் ஒரு சமயம் கீழறுபட்டுச் சிதைந்து போவது திண்ணம் என்று கூறவும் வேண்டுமோ?

இவ்வாறு தம்மாட்டுச் சமயப்பற்று அருகி ஊக்கங் குன்றி வருவதையறிந்த காலத்து எங்கே தம்மாற் பிணிப்பு நெகிழ்ந்து விடுமோ வென அஞ்சியவராய்க் குருக்குழாத்தினர் தெய்வத் திருவிளையாடல்களாகவும் அற்புதச் செய்கைகளாகவும் சமய நூல்களிடைக் காணக் கிடக்கும் ஒரு சில மறுக்கொணு உண்மைகளை ஒன்று பலவாகப் பெருக்கியும், காலத்திற் கேற்றவாறும் மக்களறியாமைக்கேற்றவாறும் திரித்தும் கூறியோ அன்றி அவ்வப்போது உண்டானதாகக் காட்டியோ தம் புல்லிய வாழ்க்கைக்கு அரண் கோலிக்கொள்ள முற்படுகின்றனர். இதனைக் கண்ட ஏழைமக்களும் வஞ்சகமறியாது அவையே உண்மை யென நம்பி ஏமுறுகின்றனர். இதனால் மறுக்கொணுத வையாயெழுந்த அவ்வொரு சில திருவிளையாடல்களும், அற்புதச் செயல்களும் ஊடுருவிப் பார்க்க முயலுவோர் கண்களில் முதலில் வெறும் பகட்டாகவே காணப்பட் டொழிகின்றன. இதைவிட ஒரு சமயத்தின் வேரையறுக்கும் சுரிகையும் வேறுண்டோ?

இறுதியாகக் கூறிய வேதசாத்திர உண்மைப் பொருளை வெளிப்படையாக விளக்கி யறிவு புகட்டாது தன்னலங் கருதி அதனை மறைபொருளாக்கி வைத்துக்கொண்டு வருவதனாலாய தீமைகள் வெளிப்படையாகலின் இங்கு விரிக்காது விடுக்கின்றும்.

இவ்வாறு வேலியே பயிரை யழித்ததுபோல் சமய வளர்ச்சிக்கெனத் தேர்ந்து அமைக்கப்பட்டவர்களே மடி

மையினாலும், அறியாமை யினாலும், வஞ்சகத்தினாலும், பொருள் வருவாய் கருதியும் சமயஉண்மைகளையொதுக்கி உள்ளீடற்ற வெளிச் சடங்குகளையே குறிக்கொண்டு காத்துவர முற்பட்டால் சமயக்கேடு திண்ணமாய் எய்தும் என்று கூறவும் வேண்டுமோ? சமயக்கேடு தொடங்கவே ஒவ்வொரு சமயத்தின் அடிப்படையா யமைந்த பொன்னனைய உயர்ந்த கொள்கையான "இறைவன் றிருமுன் எவ்வுயிருஞ் சமம்" என்ற கொள்கைமாறுபட்டு ஒவ்வொன்றிலும் உயர்வு தாழ்வு என்ற வேற்றுமை தோன்றுகிறது. பிறப்பில் வேற்றுமை, பிழைப்பில் வேற்றுமை, வழிபாட்டிலும் வேற்றுமை என்றித் தொடக்கத்தன எத்துணை வேற்றுமைகள்? உண்மை யிது பொய்ம்மை யிது என்றுணர முடியாதபடி சூழ்சசிகள் வலுத்து, வேடங்கள் மல்கிச் சமய உணர்ச்சிக்கும் அறிவுக்கும் இன்றியமையாத நேருணர்வு (Straight thinking) கெட்டு விடுகிறது.

"பொய்த்தவ வேடர் கைத்தகப் படுத்தற்கு
வஞ்சச் சொல்லின் வார்வலை போக்கிச்
சமயப் படுகுழி சமைத்தாங் கமைவயின்
மானிட மாக்களை வலியப் புகுத்தும்
மாணு விரதத் தகப்படுத் தாழ்த்தும்
வளை வுணர்வு"

எங்கும் பரந்து தலைவிரித்தாடுகிறது.

இதுகாறுங்கூறியவாற்ருன் மாசற்று எழுந்த ஒரு சமயம் குருமார்களின் தன்னலம், தெய்வத் திருவிளையாடல்களில் வஞ்சகத் திரிபு, சமய சாத்திர உண்மைப்பொருளை மறைத்தல் ஆகிய புற வேதுக்களால் எவ்வாறு கேடுறுகின்றது என்பதை ஒருவாறு காட்டினும்.

## சைவ இளைஞர் மகாநாடு

### தலைவர் பேருரை

[கா. சுப்பிரமணியம் பிள்ளை எம். ஏ., எம். எல்.]

**சை**வ இளைஞர் பொருட்டு முதல் முதல் கூட்டப்படும் இம்மகா நாட்டிற்கு என்னைத் தலைமை பூணும்படி கேட்டமைக்குக் காரணம் இளைஞரைப் போல பயிற்சி போதாமை என்பால் காணப்படுதல் போலும். நான் அதற்கு இசைந்தது எதனுலோ எனின் இளைஞர்பாலுள்ள உள்ளக்கிளர்ச்சி, களங்கமின்மை, விடாமுயற்சி முதலிய பல நற்பண்புகளைப் பெற்றுக்கொள்ளுதற்கும் அன்னார்க்கு அறிவுரை பகர வந்துள்ள மாட்சிமை தங்கிய பேரமைச்சர் முதலிய பெரியோரது பயிற்சி மிக்க போதனையின் பயன் கொள்ளுதற்கும் வாய்ப்பு அமைதலின் என்க.

இம்மகா நாட்டைத் திறந்த பேரமைச்சரது அறிவுரைகளின் விளக்கமாக யான் செப்பும் சிற்றுரையைக் கருதுக. இளமைப் பருவமானது எல்லா நலத்திற்கும் வித்திடும் பருவமாதலின் எல்லா நலத்தையும் விளக்க வல்ல கல்வியினை இளமையிற் பயிலுதல் வேண்டுமென்று நமது முன்னோர் கூறினர். 'இளமையிற் கல்வி சிலையினெழுத்து' என்பதைக் காண்க. கற்கும் கலைகளை எல்லாம் தொழிற்கலை, கவின்கலை, மெய்க்கலை என மூன்றுகப் பிரித்தல் கூடும். உடல் வாழ்க்கை நிலை பெறுதற்கு வேண்டும் ஊதியங் கருதிப் பயிலப்படும் உழவு,

தொழில், வணிகம் முதலியவற்றின் சார்பான கலைகளை எல்லாம் தொழிற் எனலாம். ஐம்புலனிற்கும் மன ம ரின்பம் பயக்கவல்ல பாட்டு, இசை, கூத்து, ஓவியம், சிற்பம் முதலிய அழகினைச்சிறப்பிக்குங்கலைகளெல்லாம் கவின் கலை எனப்படும். இனி மெய்க்கலை என்பது தோன்றும் பொருள்களின் தன்மைகளை ஆராயும் கலை எனவும் தோன்றும் பொருள்களுக்கெல்லாம் அடிப்படையாயுள்ள முடிவான உண்மைப் பொருளை ஆயும் முடிந்த மெய்க்கலை எனவும் இரு திறப்படும். முன்னவற்றை அறிவியல் நூலின் (Science)பாலனவாகவும் பின்னவற்றைத் தத்துவ நூலின் (Philosaphy) பாலனவாகவும் மேல் நாட்டினர் கருதுவர். இன்னொரு முறையாகப் பார்க்குமிடத்து உலகத்தின் ஒவ்வொரு பகுதியையும் வகுத்து வகுத்து ஆயும்முறை அறிவியல் நூல் என்றும், எல்லாப் பொருளும் தொக்க பிண்டமாகிய உலகத்திற்கு ஆதாரம் யாதென்று ஆயும் முறை தத்துவநூல் முறையாகவும் கொள்ளப்படும்.

தத்துவநூல் ஆராய்ச்சியில் நமது முன்னோர் தலை சிறந்து விளங்கினர். அஃதே சமய உணர்ச்சிக்கு ஆதாரமாக உள்ளது. எக்கலையினும் மெய்க்கலை உயர்ந்ததாலும் அதன் கண்ணும் முடிந்த மெய்ப்பொருளை ஆய்ந்தறியும் சமயக் கலையானது மிக மேம்பாடு உடையது ஆதலானும் சமயக்கலையின் பயனையே கல்வியின் விழுமிய பெரும் பயனாக ஆசிரியர் திருவள்ளுவர் முதலிய பேரறிஞர்கள் அறுதியிட்டு உரைத்தனர்.

கற்றதனா லாய பயனென் கொல்
வாலறிவன்—நற்றாள் தொழா அரெனின்

யத் இழிதகைமை தீர்ந்தோன்
மொழித் திரத்தின் முட்டறுப்பான் ஆகும்
மொழித் திரத்தின் முட்டறுத்தனல்லோன்
[முதனூற்
பொருளுணர்ந்து கட்டறுத்து வீடு பெறும்.

என ற வ் லக்கண 'யங்களின் குற்றமற்ற பயிற்சியினது முடிந்த மெய்ந்நூற் பொருளுணர்ந்து பற்று நீங்கி வீடு பெறுதற்குக் கருவி என்று கூறியது காண்க.

முடிந்த மெய்க்கலையின் சாரமே சைவத்தின் உட்கிடையாம். தென்னாடுடைய சிவனே போற்றி என்பதற்கேற்ப சிவநெறியானது பண்டைத் தமிழரது சமய நெறியாய் நிலவினமையான் அதன் உயிர் கருத்துக்கள் தொல்காப்பியம், திருவள்ளுவர் முதலிய பண்டைத் தமிழ் நூல்களில் பொதிந்து கிடப்பதை வைத்து இறுதி ஊகிக்கப்படும். தொல்காப்பியமானது இப்பொழுதுள்ள வடமொழி வியாகரணமாகிய பாணினியம் இயற்றப்படுதற்கு முன்னே தோன்றி மறைந்த ஐந்திரத்தினோடு ஒத்தகாலத்ததெனக் கருதுமிடத்து அதன் பழமை நன்கு புலனாகும். அத்துணைப் பழமையாகிய காலத்தைக்கடவுள் உயிர்உலகம் என்ற முப்பொருள் உண்மை தமிழ் நாட்டிலே எங்கும் வழங்கிவந்தது என்பது அவற்றின் சார்பாகிய சொற்களை எழுத்துக்களுக்கு உருவகப் பெயர்களாக ஆசிரியர் தொல்காப்பியனார் கொண்டமையால் இனிது விளங்கும். ஆய்தம், உயிர், மெய் என்ற மூன்று சொற்களையும் உற்றுநோக்குக. ஆய்தம் என்பது நுண்ணிது என்று பொருள் படும். எல்லா எழுத்தொலிகளும் தோன்றுதற்கு அடிப்படையாய்உள்ள மூச்சானது நுண்ணிதாய் எழுத்தொலி புலனாதற்கு ஏதுவாகிய காற்றுத்

தொகுதியோடு கலந்திருத்தலின் அதனையே ஆய்தம் என்றார்.

அது மூலமாகிய எழுத்தொலியி னோடு கலந்தே ஒலித்தலின் அதனை சார்பெழுத்தென்றார். எல்லாப் பொரு ளுக்கும் ஆதாரமாய்த் தோன்றாத அடிப்படியாய் அவற்றோடு சார்ந்து நிற்கும் மெய்ப் பரம்பொருளை யுணர் தலே சார்புணர்தல் என ஆசிரியர் திருவள்ளுவனார் மெய்யுணர்தல் அதி காரத்தில் குறித்தமை காண்க. " சார்புணர்ந்து சார்பு கெட வொழுகின் மற்றழித்துச் சார்தரா சார்தரு நோய் " — என்றவிடத்தும் இக்கருத்து வலியுறு தல் காண்க. எல்லாப் பொருட்கும் சார்பாகிய முதல்வன் அப்பொருள் களின் இயல் பிலனாய் அவற்றின் வேறான தன்மையுடையனாய் இருத் தலின் தனி முதலெனப் படுவன். அவ்வாறு உயிரொடும் மெய்யொடும் சாராது வேற்றியல்புடைய ஆய்த மானது தனிநிலை எனப்படுதல்காண்க.

இனி எப்பொருட்கும் இன்பம் ஈயும் இறைவனின் வேறாக அவ்வின் பத்தைப்பெறும் உயிர்கள் பல என்ப தும் தொல்காப்பியத்துட் போந்த கருத்தேயாகும். " வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன் " என்றவிடத்து உயிர்கள் வினை வசப் பட்டு அறிவு மயங்கப் பெறுவன என் பது குறிப்பானறியக் கிடக்கின்றது. வினைக்கு ஏதுவாக எடுக்கும் உடம்பே மெய்யெனப்படுதலின் உயிர் ஊர்ந்து வரும் எழுத்துக்களை மெய்யெழுத் தெனவும் ஊரும் எழுத்துக்களை உயி ரெனவும் குறியீடுசெய்து கொண் டமை மிகவும் வியக்கத்தக்கது. மெய் யென்பதே தத்துவம் என்னும் வட சொல்லின் பொருளாகும். தத்துவக் கூட்டமே உலகமாதலின் மெய் யென்ற விடத்து உலகம் சுட்டப் பட்டதென அறிக. இதுவரை கூறிய வற்றால் சைவசித்தாந்தத்துட் போந்த முப்பொருளுண்மை தொல்காப்பிய எழுத்ததிகாரத்துள் அமைந்து கிடக் கின்றது என்பது இனிது புலனாகும். இதனைப்பற்றிய விரிந்த ஆராய்ச்சி பிற்காலத்து நூல்களில் காணப்படும். இப்போது நாம் ஒரு தலையாக உள் ளத்தில் பதித்துக் கொள்வது யாதெ னில் எல்லாம்வல்ல முழு முதற் கட வுள் ஒருவன் உண்டென்பதும் அவ னன்றி ஓரணுவும் அசையா தென்ப தும் ஆகிய முடிந்த உண்மைகளே யாம். இக்கருத்தினையே வடமொழி உபநிடதங்களும் பாரசீகப் பண்டைப் பல்நூல்களும் கிரேக்க தத்துவநூலும் வெவ்வேறு வகையாகப் பகர்கின்றன. தற்காலத்திலே மேல்நாட்டுத் தத்துவ உணர்ச்சி சான்றவர்கள் அறிவுடை யோர் முழுமுதற் பொருளே அறிவில் லாத பொருட் பிண்டமாகிய உலகத் திற்கு ஆதாரமாய் யுள்ளதென்பதை முடிவாகக் கைக் கொண்டுள்ளார்கள். இம்முடிந்த வுண்மையை அறியாத பலர் இக்காலத்திலும் முற்காலத்தி லும் நாத்திக வாதம் பேசி யொழிந்த னர்.

கடவுள் உண்மை உணர்ச்சிக்குத் தடையாய் நிற்பனவற்றுள் ஒன்று யாதெனில் மக்களது முற்றுப்பெறாத அவாவேயாம். நினைந்ததொன்று முடிய வேண்டுமென்று கருதுபவன் கடவுளை வணங்கியும் அது முடிவு பெறாத விடத்து நாத்திக வாதத்தை மேற் கொண்டும் நிற்கின்றான். தான் செய்

வினைக்குத்தக்க பயனை ஒருவன் அடைகின்முன் என்பதையும் வினை செய்தல் ஒரு பிறவியிலும் அவ்வினையின் பயனை நுகருதல் மற்ருெரு பிறவியிலும் நிகழ்தல் கூடுமென்பதே உணராததாகும். தமக்குத் தக்கவற்றை அறிந்து உதவுகின்ருர் கடவுள், துன்பத்தைக் கொடுத்தாலும் தம்மைப் பக்குவப் படுத்தி உய்வித்தல் பொருட்டே என்னும் கருத்துக்களை மனதில் பதித்துக்கொள்ளல் வேண்டும் என்பதை வற்புறுத்தவே ஆசிரியர் திருவள்ளுவனர்,

அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும்
செவ்வியான் கேடும்நினைக்கப்படும்.

என்று உறுதி கூறிப் போந்தனர். ஆங்கிலத்திலும் (God knows what is best for us) என்பதும் கடைப்பிடிக்கத் தக்கதே. 'வேண்டுவார் வேண்டியதே ஈவான்' என்ற திருவாக்கிற்குப் பொருளினை ஆய்ந்துகொள்ளல் வேண்டும். வேண்டுவார் என்ற சொல்லானது வேண்டும் தகுதியுடையார் என்று பொருள்படும். "தாமென்றும் மனந் தளராத் தகுதியினல் உலகத்துக்கு ஆமென்று சரண்புகுந்தார் தமைக் காக்கும் கருணையினன்" என்ற திருஞானசம்பந்தப் பெருமான் திருவாக்கினல் எக்காலத்தும் மனந்தளராமையும் தான் மனத்தொடு இறைவன் செயல் யாவும் நன்மையே என்று கருதிச் சரண்புகுதலுமாகிய தகுதியுடையோரே இறைவனது சிறந்த கருணைக்குரியவர் என்பது தெளிப்படும். பயன் கருதாது இறைவனை வழிபட்டால் அது கிடையாத போது நாத்திகம் தலை எடுத்தலின் பயன் கருதாது கடவுளை வழிபடுக என பெரியோர்கள் கூறுவாராயினர். பயன் கருதற்கு ஏது ஆசையாதலின் ஆசையற்ற இடத்திலே தான் தெய்வ உணர்ச்சி நிலைபெறும் என்ற கருத்தினைத் தாயுமானப் பெரியார் "நிராசை இன்றேல் தெய்வம் உண்டோ" என்ருர். ஆதலால் இறைவனடிக்குப் பயன் கருதாது அன்பு செலுத்துதலே சிறந்த வழி பாடாகும். காதலற்கு அன்பினல் விளையும் இன்பம் போல இறையன்பினல் அடியார்க்கு இன்பம் விளையும். "இறவாத இன்ப" அன்பு என்பதும் அது. இவ்வாறே நமது சமயக்கருத்துக்கள் பிறவற்றையும் ஆய்ந்து உண்மை தெளிக. ஈண்டு அவற்றை விரிப்பில் பெருகும். சைவத்திலே எவ்வுயிர்க்கும் இரக்கம் வைத்தல் சிறந்த கொள்கையாகத் தழுவப் படுதலானும் ஒழுக்கம்பற்றியே உயர்வு என்பது தமிழ்க் கொள்கை யாதலானும் சைவ இளைஞர் யாவரும், அருள் ஒழுக்கமும், விரிந்த நோக்கமும், குற்றம் பொறுக்கும் குணமும், ஒற்றுமையும், விடாமுயற்சியும் உடையவர்களாய்த் திகழ்தல் வேண்டும்.

சைவத்தின் சிறந்த உண்மைகளை உலகத்தில் வெளிப்படுத்தினல் உலகிலுள்ள அறிஞர் யாவரும் அவற்றை மேற்கொள்வர். "ஞால நின்புகழே மிக வேண்டும்" என்ற நமது பரமாசாரியார் திருவுள்ளக் கருத்தினை யாவரும் நிறைவேற்ற முயல வேண்டும்.

சைவ வொளியானது எங்கும் பரவுதற் பொருட்டு சைவ சித்தாந்தக் கலாசாலை, சைவ நூல் நிலையம், சைவ போதகாசிரியர் நியமனம், சைவர் விடுதி, சைவ நூல் வெளியீடு முதலிய பேரறங்கள் முதலியவற்றையும் சைவ ஆதீனத் தலைவர்களும் பிற சைவச் செல்வர்களும் கோயி லதிகாரிகளும் அமைத்து நன்குநடத்திச் சைவர்க்கும் சைவ இளைஞர்க்கும் பேருதவி புரியுமாறு திருவருள் சுரக்கும் பொருட்டு எல்லாம்வல்ல இறைவனை வழுத்துகிறேன். சுபம்.

# கேவேடரும் கெளிறும்

[வே. மு. ஸ்ரீநிவாஸ முதலியார்]

(1) திருவாசகம் கீர்த்தித் திருவகவ லிடையே "கேவேடராகிக் கெளிறது படுத்தும்" என்ற அடியினுக்கு இது வரையில் பொருள் கண்ட பெரியார்கள் பலருள் திருவாளர் சாமிநாத பண்டிதர் அவர்கள் திருவாளர் நா. வேதாசலம் பிள்ளை அவர்கள் (மறைமலை அடிகள்) காலஞ்சென்ற திருவாளர் கா. இராமசாமி நாயுடு அவர்கள் ஆகிய இவர்கள் மூவரும் "கேவேடர்" என்ற சொல் "கேவர்த்த" அல்லது கைவர்த்த என்ற வடமொழியின் திரிபெனக் கொண்டு "மீன்வலைஞராகி மீனைப்படுத்தும் என்று பொருள் கொண் டிருக்கின்றனர் என்பதனை அறிஞர் பலர் அறிவர்.

(2) அன்றி, திரு. நா. வேதாசலம் பிள்ளை அவர்கள் தாம் எழுதிய உரை நூலகத்தே "இறைவன் வலைஞனாய்ச் சென்று படுத்தது சுறவுமீன் என்று திருவிளையாடல் புராணங் கூறுமாயினும் அடிகள் அதனைக் கெளிற்றுமீன் என்று கூறுதலின் அடிகள் கூற்றே கோள்ளற்பாலதாம் என்று எழுதியுள்ளார்கள்.

(3) பிள்ளை அவர்கள் கூறும் அடிகளால் அருளப்பட்ட திருக்கோவையார் என்னும் நூலகத்தே 187 எண்ணுள்ள பாட்டின்கண் "கார்த்தாங்கந் திரை தோணி சுறுக்கடல்மீன் எறிவோர்" என்று கூறி இருத்தலால் அப்பாட்டின் கவிக் கருத்துக்கேற்பப் பொருள் கொள்ளின், அவ்வடிகளின் கருத்தும் சிவபிரான் வலைஞனாகிப் படுத்தது சுறவு மீனே என்பதாகும். இவ்வேதுவினால் பிள்ளை அவர்களின் முடிபு பொய்த்தமையினை அறிஞர் பலர் அறிவர்.

(4) ஸ்ரீ வில்லிபுத்தூர், பாரதம் அருச்சுனன் தவநிலைச் சருக்கம் 81. எண்ணுள்ள "நனைமலர்ச் சிதறி" என்ற பாட்டின் கண் "வினைபடு கேழல் வேட்டை நாம் இன்றே வேடராய் ஆடுதல்வேண்டும் என்று சிவபிரான் கூற்றுகக் கூறி இருத்தலை அறிஞர் பலர் அறிவர்.

(5) ஆகையால் "கேழல் வேடர்" என்ற இவ்விரண்டு சொற்களுங் கூடி மரூஉவின் பாத்தியாய்க் "கேவேடர் எனத் திரிந்து நின்றனவாகக்கொண்டு பன்றி வேட்டையராகிப் பன்றியினைப் படுத்தும் என்று பொருள் கொள்ளுதலே சாலச் சிறப்புடைத்தாகும் என்பதனை, நூற்களைப் புரட்டிப் புரட்டிப் படித்து, இந்தச் சொல்லுக்கு அந்தப் பொருள் அந்தப் பொருளுக்கு இந்தப் பெயர் என்று ஆய்ந்துகொண்டிராமல், 'ஊர்களைச் சுற்றிப் பாருங்கள்' என்று படிப்பவரைப் பழித்துப் புத்திபுகட்டமுற்படும் பண்டிதரல்லா அறிஞர் பலர் ஆய்ந்து கொள்வர் என்ற நம்பிக்கையான் இதனை வெளியிடலானேன்.

(கேழல் - பன்றி) களிறு, கெளிறு - பன்றி)

"எப்பொருள் யார்யார் வாய்க்கேட்பினும் [அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"

[குறிப்பு:— இச்சொற்றொடர் பற்றி ஒரு பக்கத்து மேற்பட்ட ஆராய்ச்சியுரைகள் வெளியிடப்படா - பத்திராசிரியர்.]

# சிவலிங்கம்

[திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளையவர்கள் பி. ஏ. எழுதியது]

சிவலிங்கம் என்னும் தொடர்மொழி யானது சிவம், லிங்கம் என்னும் இரண்டு சொற்களினது சேர்க்கையா லாகிறது; அது சிவமாகிய லிங்கம் அல்லது சிவத்தைக் காட்டும் லிங்கம் என விரியும்.

சிவம் என்னும் சொல் மங்கலம் அல்லது நன்மை என்று பொருள் படும். 'சிவம் நன்மை, குறுணி, முத்தி' என்பது சூடாமணி நிகண்டு. 'எல்லா உயிர்களுக்கும் எப்பொழு தும் நன்மையைச் செய்தலாற் சிவம்' என்று திருக் கோவையாருக்கு உரை எழுதிய பேராசிரியர் கூறுகின்றார். (358-வது பாட்டு). உண்மை அறிவு இன்பம் (சத்து சித்து ஆனந்தம்) என்னும் இம்மூன்றினது நிலைக்களமே சிவமாகும். எப்பொருள், எக்காலத் தும் இல்பொருள் ஆகாமல் உள்பொரு ளாய் அறிவின்றி நிலைபெற்றுள்ளதா யும் தான் எப்பொரு ளிடத்திலும் பற்றின்றி எல்லாப் பொருள்களும் தன்னைப் பற்றுக உடையனவாயும் உள்ளதோ அது சிவம்; எப்பொருள் அறிவு மயமாயிருந்து எல்லா உயிர் களுடைய அறிவை விளக்குமோ அது சிவம். எப்பொருள் எல்லா உயிர்களும் நுகர்கின்ற இன்பத்துக்கு இடமாய் நிற்குமோ அது சிவம். இலிங்கம் என் பது குறி அல்லது அடையாளம் ஆகும்.

சிவலிங்கம் என்பது சிவத்தைக் காட்டும் குறியாகும். உயிர்கள் சிவத் தை உண்மை அறிவினாலே தான் நேரே தன்னறிவினுள்ளே உணர்ந்து அறிய முடியும். அத்தகுதி வாய்க்கப் பெறுமுன் உயிர்கள் அச்சிவத்தினது அருட்சத்தி விளக்கமாகிய உலகில் சிவத்தை அறிதற்குக்குறிகள் அமைந் திருக்கின்றன. அக்குறிகள் பின் வரு மாறு:—

சிவன் எட்டு உருவினன். அட்ட மூர்த்தி, அவன் நீர், நிலம், தீ, கால், வெளி, பகலோன், திங்கள், உயிர் ஆகிய இந்த எட்டுப் பொருள்களையும் உருவங்களாக உடையவன். நீர் நிலம் தீ கால் வெளி என்னும் ஐம்பெரும் பூதங்களாலாகிய உலகம் அவனுடைய உருவம். உலகமாகிய உருவம் சிவத் தைக் காட்டுங் குறியாயுள்ளது.

(1 இருநிலனாய்த் 2 தீயாகி 3 நீருமாகி, 4 இயமானனாய் எறியுங் 5 காற்றுமாகி, அரு நிலைய 6 திங்களாய் 7 ஞாயிறாகி, 8 ஆகாச மாய் அட்டமூர்த்தியாகிப், பெரு நலமுங் குற் றமும் பெண்ணும் ஆணும், பிறர் உருவும் தம் உருவும் தாமே யாகி, நெருநலையாய், இன் றாகி நாளையாகி, நிமிர்புன் சடையடிகள் நின்ற வாறே.)

என்பது அப்பர் வாக்கு.

உலகம் சிவத்தினது குறியாயிருத் தலால் அது அண்டலிங்கம் என்று கூறப்படுகின்றது. அவ்வுண்மை,

இலிங்கம தாவ தியாரு மறியார்
இலிங்கம தாவ தெண்டிசை யெல்லாம்
இலிங்கம தாவ தெண்ணெண் கலையும்
இலிங்கம தாக வெடுத்த துலகே.

என்று திருமந்திரத்திற் கூறியிருத்தல் காண்க.

ஐம்பெரும் பூதங்களாலாகிய உயிர் களது உடலும், ஒரு சிறிய உலகம். அந்த உடலும் சிவத்தைக் காட்டும் குறியாதலின் அது 'பிண்ட லிங்கம்' என்று கூறப்படும். அவ்வுண்மை,

மானுட ராக்கை வடிவு சிவலிங்கம்
மானுட ராக்கை வடிவு சிதம்பரம்
மானுட ராக்கை வடிவு சதாசிவம்
மானுட ராக்கை வடிவு திருக்கூத்தே

என்று திருமந்திரத்திற் கூறியிருத்தல் காண்க.

கவோ துக்கத்தின் குறிகளாகவோ தோன்றவில்லை. ஆன்மா வானது, ஸ்தூலதேகத்தோடு இதுகாறும் வைத்திருந்த கூட்டுறவைச் சாசுவதமாக விலக்கிக்கொள்கிறதென்றே தோன்றியது.

ஸ்தூல தேகத்தின் தலையைச்சுற்றி அழகிய, மிருதுவான, பருத்த ஓர் ஒளி சூழ்ந்து கொண்டது. மூளையும் சிறு மூளையும், தங்களுடைய உட்புறங்களை விரித்துக் கொண்டன. அவை தங்கள் தாதுத்தொழில்களைச் செய்யாமல் நின்றொழிவதை நான் பார்த்தேன். உடனே இவைகளுக்கு மின்சார தாதுவும், காந்த தாதுவும் உண்டாகி, கீழ்த்தரப்பட்ட தேக அமைப்புகளில் ஊடுருவிப்பாய்ந்தன. சாதாரண தேகாரோக்கியத்தின் போது, மற்ற சிற்றங்கங்களைவிட மூளைக்கு எவ்வளவு உறுதி உண்டோ அதைவிடப் பதின்மடங்கு அதிகமான உறுதியை அம்மூளையானது மரணத்தறுவாயில் பெற்றது.

## ஜீவன் பிரிவு

பிறகு, மரணம், அதாவது ஸ்தூல தேகத்தினின்று ஜீவன் பிரிவு தொடங்கியது. மின்சாரம், காந்தம், இயக்கம், ஜீவன், உணர்ச்சி ஆகிய இவைகளின் தத்துவங்களை மூளையானது தனக்குள்ளே யிருக்கும் பல அறைகளில் ஆகர்ஷிக்கத் தொடங்கியது. சிரசு, மிகுந்த பிரகாச மடைந்தது. மற்ற இந்திரியங்கள் எவ்வளவுக் கெவ்வளவு குளிர்ச்சி யடைந்தும், இருளடைந்தும் போயினவோ அவ்வளவுக்கவ்வளவு மூளையானது பிரகாசத்தையும் சோபிதத்தையும் அடைந்தது.

மேற்படி ஸ்திரீயின் தலையினின்று எழுந்து அதைச் சூழ்ந்து கொண்டிருந்த பழுத்த நிறமுள்ள தெய்விகச் சூழலில், வேறொரு தலை அமைந்து கொண்டு வருவதை நான் பார்த்தேன். ஆன்ம உணர்ச்சி பெற்றவர்களுக்கே, இந்த இந்திரியாதீதமான நிலைகள் புலனாகு மென்பதையும், ஸ்தூலக் கண்கள் ஸ்தூல வஸ்துக்களையே பார்க்க முடியு மென்பதையும்வாசகர்கள்நினைவிலிருத்திக்கொள்ள வேண்டும். இஃது இயற்கைவிதி. மேலே கூறப்பட்ட புதிய தலையானது, வரவர நன்றாகத்தெரியத் தொடங்கியது. அதனை ஊடுருவிப் பார்க்க முடியாதபடியும், அதனை உற்று நோக்க முடியாதபடியும் அவ்வளவு சிற்றடக்கமாயும் பிரகாசமாயும் அந்தத்தலை இருந்தது. அந்த ஞானத் தலையானது அமைந்து கொண்டிருக்கையில், ஸ்தூலத் தலையைச் சூழ்ந்து கொண்டிருந்த ஒளிச் சூழலானது, கலக்கமடையத் தொடங்கியது. மேற்படிஞானத்தலை நன்றாக அமைந்ததும், இந்த ஒளிச்சூழல் மெதுமெதுவாக மறைய ஆரம்பித்தது. இதனால், மேற்படி ஒளிச்சூழலின் தத்துவங்கள், பிரிக்கக் கூடாதனவா யிருக்கின்றன வென்பதை நான் அறிந்து கொண்டேன். பிறகு மேற்படி ஞானத் தலையானது, எப்படித் தனியாகப் பிரிந்து அமையத் தொடங்கியதோ அப்படியே, படிப்படியாக கழுத்து, புஜங்கள், மார்பு முதலிய எல்லா அவயவங்களும் அமையத் தொடங்கின. இதனால், மனிதனுடைய தெய்விகத் தன்மை அமைவதற்குக் காரணமாயுள்ள எல்லா அணுக்களுக்குள்ளும் ஒருவித ஒருமைப்பாடு நிகழ்வது நன்கு புலனாகிறது.

அந்த ஸ்திரீயின் ஆன்ம தத்துவங்களும், சக்திகளும் ஒற்றுமைப் படுத் தங்களை அமைத்துக் கொண்டதே, அவளுடைய ஆன்ம அமைப்பு வெளிப்படுவதற்கும் ஒழுங்குபடுவதற்கும் காரணமாயிருந்தது. அவளுடைய ஸ்தூல தேகத்தில் காணப்பட்ட குறைகள், அவளுடைய சூக்கும சரீரத்தில் காணப்படவேயில்லை. அதாவது, அவளுடைய ஸ்தூல சரீரம் சரியானபடி அமைவதற்குப் பரம்பரையான தடைகள் என்னென்ன இருந்தனவோ அவையாவும் இப்பொழுது விலகிப் போகின்றன. இதனால், அவளுடைய சூக்கும தேக அமைப்பானது, மற்றப் பிரபஞ்சசிருஷ்டிப் பொருள்களின் போக்குப்படி, மேற்கண்ட தடைகளுக்கு மேற்பட்டதாய், தன்னை விகாசப்படுத்திக் கொள்ள முடிந்தது.

## சூக்கும சரீர அமைப்பு

சூக்கும சரீரமானது, மேற்கூறிய விதமாக அமைந்து கொண்டிருக்கையில், ஸ்தூலசரீரமானது தொந்தரவையும் துன்பத்தையும் கொண்டு வந்ததாக மற்றவர்களின் வெளிப் பார்வைக்குத் தென்பட்டது. ஆனால் உண்மையில், தேகத்தின் உட்புறமாயுள்ள உயிர்ச் சக்திகள் மூளைக்குச் சென்று அங்கிருந்து வேறொரு வடிவாக அமைவதன் பயனாகவே, மேற்படி துன்பநிலை உண்

ஸ்தூலதேகத்தின் தலைக்கு நேராக ஜீவனானது கிளம்பியது. ஆனால் ஸ்தூல தேகத்திற்கும் சூக்குமதேகத்திற்கும் நிரந்தரமான பிரிவு ஏற்படுவதற்குச் சற்று முன்னர், உயர்நிலையிலிருக்கும் சூக்கும சரீரத்தின் காலுக்கும், படுத்துக்கிடக்கும் ஸ்தூலதேகத்தின் தலைக்கும் இடையே ஓர் ஒளி அல்லது மின்சார சக்தி ஓடிக்கொண்டிருந்ததை நான் பார்த்தேன். தாழ்ந்த நிலையிலுள்ள ஜீவனானது, உயர் நிலையை அடைவதையே மரணமென்று சொல்லப்படுகிறதென்று அப்பொழுதே தெரிந்து கொண்டேன்; கீழான சரீரத்திற்கும், கீழான வாழ்க்கைக்கும் பதிலாக, உயர்வான சரீரத்தையும் அதற்குரிய சக்திகளையும் ஆனந்தங்களையும் அடைவதையே மரணமென்று கூறுவதாக அறிந்து கொண்டேன். இந்தப் பூவுலகத்தில் ஒரு குழந்தை பிறப்பதும் ஸ்தூல தேகத்தினின்று ஜீவன் பிரிந்து சென்று வேறோர் தேகமாக அமைவதும் எல்லா அமிசங்களிலும் ஒன்றாகவே இருக்கிறது. புதிதாகப் பிறக்கும் குழந்தைக்குக் கொப்பூழ்க்கொடி எப்படி இருக்கிறதோ, அப்படியே சூக்கும சரீரத்திற்கும், மேலே கூறப்பட்ட மின்சார சக்தி நூலானது இருக்கிறது. இந்த மின்சார சக்தி நூலானது, சில நிமிஷங்கள் வரை, ஸ்தூலதேகத்தையும் சூக்கும தேகத்தையும் சம்பந்தப் படுத்தி வைத்துக் கொண்டிருந்தது. பிறகு இந்தநூல் அறுபட்டதும், மேற்படி மின்சார சக்தியின் ஒரு சிறு அமிசம், கீழே படுத்துக் கிடக்கும் ஸ்தூல தேகத்தை வந்து சேர்கிறது. இந்தச் சக்தியானது, தேகத்தின் எல்லாப் பாகங்களிலும் சென்று தங்குவதால், தேகம் உடனே சீர்குலையாமலிருக்கிறது.

ஸ்தூலதேகம் நன்றாகக் கெட்டுப் போகத் தொடங்கிய பிறகே, அதனை மண்ணில் புதைக்க வேண்டும். மேலே

நான் குறிப்பிட்ட கொப்பூழ்க் கொடியானது, சில சமயங்களில் அறுபட்டுப் போவதில்லை ; ஸ்தூல தேகத்திற்கும் ஜீவனுக்கும் நுண்ணிய சம்பந்தம் இதன் மூலமாக ஏற்பட்டிருக்கிறது. சிலர், இறந்துபோன சில நாட்களுக்குப் பிறகோ அல்லது சில மணி நேரத்திற்குப் பிறகோ,—ஒரு பிரயாணத்திலிருந்து அமைதியாகத் திரும்பி வருவதைப் போன்று—உயிர் பெற்றுத் தங்கள் சூட்சும உலக அநுபவங்களைக் கூறுவதனகாரணம இதுவே யாகும். இதனையே சுழுத்தி அவஸ்தை யென்றும், மூடுசன்னியென்றும், தூங்கிக் கொண்டே நடத்தலென்றும், ஆன்ம பரவசமென்றும் பலவிதமாகக் கூறுகின்றனர். இந்த நிலைகளில் பல விதப் பாகுபாடுகள் உண்டு. ஆனால், ஆவியானது, தேகத்தினின்று செல்லாமல் தடுக்கப்பட்டு, சில மணி நேரமோ, அல்லதுசில நிமிஷங்களோ மத்தியமான ஒரு நிலையில் வைக்கப்பட்டிருந்தால், அப்பொழுது மனதில், முன்னைய அநுபவத்தின் ஞாபகம் நிலைத்து நிற்பதில்லை. இந்த ஞாபக மறதியே, ஆன்மா அழிவற்றது என்ற கொள்கை மறுக்கப் படுவதற்கு ஆதாரமாகக் காண்பிக்கப் படுகிறது.

நுண்ணிய கொப்பூழ்க் கொடி அல்லது மின்சாரக்கம்பி மூலமாக மட்டும், தேகத்தின் மீது தனது ஆதிக்கத்தை நிலை நிறுத்திக் கொண்டு, ஜீவனானது, ஸ்தூல தேகத்தினின்று அடியோடு பிரிந்துவிட்ட பிறகே, அந்த ஜீவன், இந்தத் தேகத்தையும் அது சம்பந்தமான விஷய வாசனைகளையும், மணிக் கணக்காகவோ, நாட்கணக்காகவோ விடுத்திருக்க முடிகிறது. பிறகு சந்தோஷமான நினைவுகளுடன் பிரபஞ்ச வாழ்க்கைக்குத் திரும்பி வர முடிகிறது.

### ஜீவனின் அநுபவங்கள்

ஆன்மா, ஸ்தூல தேகத்தினின்று பிரிந்தபிறகு என்னென்ன நிலையை யடைகிற தென்பதை நான் கூர்மையாகக் கவனித்து வந்தேன். முதலில் பூமிக்கடுத்த நிலையிலுள்ள சிதாமிசத்தைச் சிறிது கஷ்டத்துடனேயே நுகர ஆரம்பித்தது. ஆனால் சில விநாடிகளுக்குள், மிகுந்த சுலபமாகவும், சந்தோஷமாகவும் இயற்கையின் சித்துத் தத்துவங்களை இழுக்கவும் வெளிவிடவும் அதற்குச சாத்தியமாயிற்று. பிரபஞ்ச வாழ்க்கையில் ஈடுபட்டிருந்தபோது அந்தப் பெண்மணிக்கு எந்தவிதமான தேக அமைப்புகள் அமைந்திருந் தனவோ, அதைவிட எல்லா அமிசங்களிலும் அழகுடைய தாயும் அபிவிருத்தி யடைந்ததாயுமுள்ள சூக்கும சரீரம் ஏற்பட்டிருப்பதை நான் இப்பொழுது கண்டேன். அதாவது மரணத்திற்கு முன்னிருந்தவைகளைப்போல் இப்பொழுது இதயம், வயிறு, ஜீரணப்பை, சுவாசப்பை முதலியன யாவும் காணப்பட்டன. இஃது ஆச்சரியமான, ஆனால் ஆறுதல் அளிக்கக்கூடிய உண்மை !

அவனுடைய 5ம சரீரத்தில் காணப்பட்ட 5த்திகள் அதா மாற்றஙகள், அவ்வளவு ப பிடத் தக்கனவாகவோ, சமய இயல்பைக் கடக்கக் கூடிய விதமாகவோ இல்லை. மற்றும், அவை அவளுடைய இயற்கைத் தோற்றத்தையோ, உலக இயல்புகளையோ அடியோடு மாற்றவில்லை. அவள் பழையபடியே இருந்தாள். அவளுடைய நண்பர்கள் பார்த்

தால், நோய்வாய்ப்பட்ட ஒரு நண்பர் நம்மைவிட்டுப் பிரிந்துசென்று பிறகு தேகாரோக்கியத்துடன் திரும்பி வந்தால் நாம் எப்படி ஆச்சரியமும் சந்தோஷமும் அடைவோமோ அப்படியே, "ஓ! இப்பொழுது நீ எவ்வளவு நன்றாகக் காணப்படுகிறாய்! எவ்வளவு அபிவிருத்தி யடைந் திருக்கிறாய்?" என்று கூறுவார்கள். சூக்கும சரீரத்தில் காணப்பட்ட அபிவிருத்திகள் அவ்வளவு அழகுடையவைகளாக இருந்தன.

சூக்கும உலக வாழ்க்கைக்குரிய புதிய தத்துவங்களுக்கும், உயர்ந்த உணர்ச்சிகளுக்கும் அவள் தன்னைப் பழக்கப்படுத்திக் கொள்வதை நான் பார்த்தேன். புதிய விழிப்புப்பெற்ற, விரைவான விகாசத்தை அடைந்து கொண்டிருக்கிறதான அந்த ஆன்மாவின் உணர்ச்சிகளை நான் குறிப்பாகக் கவனிக்கவில்லை. ஆனால், ஸ்தூலசரீரத்திலிருந்து சூக்கும தேகத்திற்கு மாறுகிறபொழுது அவள் ஒரேவித நிதானத்தைப் படைத்திருந்தாள். பிரபஞ்சத்தைவிட்டு அவள் பிரிந்துசென்றதற்காக அவளுடைய குடும்பத்தினரின் ஓயாத புலம்பலில் அவள் கலந்து கொள்ளவில்லை. சில்லிட்டுப் போன, உயிரற்ற ஓர் உருவத்தைக் கண்டே அவர்கள் அழுகிறார்கள் என்பதை அவள் ஒரே பார்வையில் கண்டுகொண்டாள். அவர்களுக்கு, மரணத்தைப் பற்றிய உண்மையான ஞானமின்மையினாலேயே, ஸ்தூல சரீரத்தின் பிரிவுக்காக வருந்துகிறார்கள் என்பதையுந் தெரிந்து கொண்டாள்.

மனித சமூகத்தைச்சேர்ந்த பெரும்பாலோர் மரணத்தைப்பற்றி மேற்போக்கான ஞானம் படைத்திருப்பதனாலேயே, நண்பர்களோ உறவினரோ ஸ்தூல தேகத்தினின்றும் பிரியும்போது அதிகமாக அழுகிறார்கள். இவர்கள், ஸ்தூல தேகத்தின் மரணம், ஜீவனின் அழிவு என்று கருதுகிறாகள். ஒரு மனிதன் இயற்கையான மரணத்தை யடைந்தால், ஆன்மா எவ்விததுன்பத்தையும், அநுபவிப்பதில்லை யென்று உண்மை அறிய விழைவோர்க்கு நான் உறுதி கூறுகிறேன். அல்லது ஸ்தூல சரீரமானது, நோயினால் அழிந்து போனாலோ, பிற காரணங்களால் குலைக்கப்பட்டாலோ, ஆன்மா உரு வழிவதில்லை; தெளிவற்றுப் போவதுமில்லை. உன் அன்பான பார்வைக்குப் பதிலளிக்க முடியாத உயிரற்ற பிணத்தைப் பாராமல், சூக்குமக் கண் கொண்டு நீ பார்த்தால், உன்னெதிரே அதே உருவம், முன்னிலும் அழகாக உயிருடனிருப்பதைக் காண்பாய். ஆதலின், ஆன்மாவானது, இந்தப் பிரபஞ்ச வாழ்க்கையினின்று விடுதலையடைந்து, சூக்கும உலகத்திற்குச் செல்வதைக் குறித்து நாம் மகிழ்ச்சியே யடைய வேண்டும். ஆன்மாவானது, தேகத்தை விட்டுப் பிரிந்து, இதைவிட உயர்ந்த சிறந்த உலகத்தில் வசிக்கச் செல்லும்போது நாம் அழுவதைக் காட்டிலும், உலகத்தில் நடைபெறும் பெரும்பான்மை விவாகங்களுக்காகவே நாம் அழவேண்டும்.

## ஜீவனின் பிரிவு

நான் பார்த்த மாற்றம் ஏற்படுவதற்கு, அதாவது ஸ்தூல தேகத்தி ஜீவன் பிரிந்து சூக்கும யடைவதற்கு இரண்டரை மணிநேரம் ஆயிற்று. ஸ்தூல சிரசி

னின்று மேலெழுந்து தன்னைப் புனர் நிர்மாணஞ் செய்துகொள்ள ஒவ்வோர் ஜீவனுக்கும் இந்த இரண்டரை மணி நேரமே பிடிக்கிறதென்று சொல்ல முடியாது. மேற்படி ஸ்திரீயின் ஸ்தூல தேகத்தினின்று பிரிந்த ஜீவனானது, தன்னைச் சூழ்ந்துள்ள புதிய தத்துவங்களுக்குப் பழக்கமானதும், தனது மனோசக்தியால் தேகத்தின் மேலிருந்த உயர்நிலையிலிருந்து இறங்கி, அந்த ஸ்திரீ நோயுடன் படுத்துக்கொண்டிருந்த படுக்கை யறையினின்று வெளியே சென்றது. அப்பொழுது கோடைகாலமானதால் எல்லாக் கதவுகளும் திறக்கப்பட்டிருந்தன. அதனால், அந்த ஆன்மா வெளி தடையும் உண்டாகவில்லை. ஸ்தூல தேகத்தில் நாம் எந்தக் காற்றை மூச்சு விடுகிறோமோ, அந்தக் காற்றை சூக்கும சரீரத்தினால் சுலபமாகக் கடந்து விடலாமென்ற உண்மையை அப்பொழுதே நான் முதலில் கண்டேன். ஸ்தூல சரீரத்திலிருந்துகொண்டு நாம் இந்தப் பூமியை எப்படிக் கடந்து செல்கிறோமோ அப்படியே மேற்படி ஜீவனானது ஆகாயத்தைக் கடந்து சென்றது. வீட்டினின்று வெளியேறியதும், இந்த ஆன்

வேறு இரண்டு ஆன்மாக்கள் சந்தித்தன. ஒன்றுக்கொன்று சிறிதுநேரம் அளவளாவியதும், மூன்றும் ஒன்று சேர்ந்து பிரபஞ்சத்தைச் சூழ்ந்திருக்கும் பரமாணு வாகாயத்தின் மூலமாகச் சாய்வாய் மேலேறிச் சென்றன. அவை மூன்றும் இயற்கை யாகவும், சகோதரப் பான்மையுடனும் ஆகாயத்தைக் கடந்தன. ஒரு மலையின் சாரலில் அவை நடந்து செல்வதுபோலவே எனக்குத் தோன்றியது. அவை தொலைதூரம் செல்லும்வரை நான் பார்த்தேன். பிறகு என்னுடைய ஜாக்கிரதா நிலைக்கு நான் வந்துவிட்டேன்.

# சான்றோர்க்கணி

[அ. வரதநஞ்சைய பிள்ளை]

இத்தலைத் தொடர் மொழியில், சான்றோராவார் யாவர்? அவர்க்கு அணியாவது யாது? அஃதெவ்வாறு? எனக் கேள்விகளை எழுப்பி முறைப்பட ஆய்ந்து உண்மை காண்பாம்.

இச் சொற்றொடர், ஆசிரியர் வள்ளுவனாரால் இல்லற வியலில், நடுவு நிலைமை என்னும் அதிகாரத்தின் கண்ணே,

“கேடும் பெருக்கமு மில்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி”

எனவும்,

“சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ [லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி”

எனவும், வருஞ்செய்யுட்களின் இறுதியிற் கூறப்பெற்றதாம். சான்றோர் சால்புடையோர் சால்பு என்னும் பண்பு நற்குணங்கள் எல்லாம் ஒருங்கு நிரம்பி யமைதலை உணர்த்தும். ஆகவே எல்லா நற்குணங்களும் குறைவின்றி முற்ற நிரம்பிய தூயோராய நல்லோரே சான்றோரெனப் பெறுவர்.

சால்பு என்பதன் தன்மைகளைக் கூற வந்த விடத்தே நம் செந்நாப்போதார்,

"கடனென்ப நல்லவை யெல்லாம் கடனறி
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு" [ந்து

எனப் பொது வகையாற் கூறிப் பின்னர் சிறப்பு வகையாக,

"அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம்
[வாய்மையோ
டைந்து சால்பூன் றிய

"....பிறர்தீமை சொல்லா நலத்தது சால்பு"

"ஆற்றுவா ராற்றல் பணிதலது சான்றோர்
மாற்றாரை மாற்றும் படை"

"சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி
துலையல்லார் கண்ணுங் கொளல்"

"இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு"

என மொழிந்து விதந்தனர். இவ்வாற்றால், சான்றோர்பால் காணப்படும் சிறப்புச் செயல்களாவன :—

யாவரிடத்தும் மனங்கசிந்த அன்பு பெருக்கலும், தீயசெய்ய நாணலும், பிறர்பாற் கைம்மாறு கருதாது இயன்றஉதவிகளை நாளும் புரிதலும் மன இரக்கம் மிக்குடைத்தாதலும், உண்மையே பேசுதலும் * பிறர் தீமையை வெளியிடாமையும், ஒரு நற்காரியத்தை முற்றுவிக்கும் போது யாவரையும் தாழ்மையுடன் வேண்டித் துணைக்கோடலும், தம்மின் மிக இழிந்தோர்க்கும் தம்மைக் குறைந்தவராகக் காட்டிக் கோடலும், தமக்குத் துன்பம் புரிவோர்க்கும் மாறாக நன்மையே செய்தலும், இவைபோன்ற பிறசெயல்களுமாம் எனப்பெறுதும்.

உலக முய்வதற் கெனவே தோன்றித் தமக்கென வாழாப் பிறர்க்குரியாளர்களாகிய இச்சான்றோர் விரும்பும் அணிகலன்கள இரண்டு என மேற்றலைப்பிற் கண்டாம். அவற்றுள் ஒன்று, துன்பமோ இன்பமோ தொடரும போழ்து ஒரே பெற்றிப் பட்டு உள்ளம் சிறிதும் மாறாது செந்நெறி கடைப்பிடித்து ஒழுகுவது. மற்றொன்று, இருவர் வாதிகள் கூற்றுக்களையும் நன்கு கேட்டு நீதியை உள்ளவா றுரைத்தல். இவ்விரண்டு அணிகளும், உள்ளங் கோடாமையையே குறிப்பதாகலின், ஆசிரியர் கூறியது கூறல் எற்றுக்கு? என்பது முதல் வினா?

நெஞ்சததுக் கோடாமையை முன்னும், ஒருபாற் கோடாமையைப் பின்னும் வைத்ததேன்? என்பது இரண்டாம் வினா.

இவ்விரு குறள்களுக்கு மிடையே யுள்ள வேறு, இரண்டு குறள்கள் "ஓரமுடையோன் கேடடைவான்" என்றும், நடுநிலைமை யுடையோர் ஒரு கால் பண்டை வினைப்பயத்தாற் கேடடைய நேரினும், அக்கேடும், உயர்ந்தோரால் பெருஞ் செல்வமெனவே கருதப்பட்டு நன்குமதிப்படைய விளைப்பதாகு மென்றும் முறையே கூறுகின்றன. இவை கொண்டு, கேடும் ஆக்கமும் முன் பிறவி வினைப் பயனை நியதி கூட்டவரு மென்னும் உண்மை கண்டு நடுநிலைமையி னீங்காதொழுக வேண்டுமென ஆசிரியர் குறித்தன ரென்பர் ஒரு சாரார்.

* பிறர் தீமையை வெளியிடின் எதமுறுவரோ என்றும், அவரதியல்பு அஃதெனின் இழிவு கூறல் தகாதே என்றும் அஞ்சுதலால்.

அங்ஙனம் நடுவுடையோர், இரு வாதிகளின் வழக்கையுங் கேட்டு நீதி புகல்வ ரன்றோ. அற்றாகவும் ஒரு பாற் கோடாமை வேண்டு மென மறித்துங் கூறிய தென்னை ? எனின், முற்கூறியது அவரது நெஞ் சத் திட்பச் செம்மை.

உரைக்கும் சொன்னிலை

என்பர். நன்று, சமன் செய்து சீர் தூக்குந் துலாக்கோல் எதற்குவமம் ? எனின் ஒருபாற் கோடாத உள்ளத் திற்கே ஒப்பாவது என மொழிவர். அங்ஙனமாயின், முற்கூறியதும நெஞ்சு கோடாமையையே யன்றோ ? அதனோ டிதனிடை வேற்றுமை காணுமாறில் லையே எனின் முற்கூறி யாங்கே கூறி ஒழிப்பர். ஆதலின், முதற் குறட்கு நுண்ணிய விழுப்பொருள் வேறுளதா கல் வேண்டுமெனக்கருதற்கிடனுண்டு. அஃதாமாறு கூறுதும்:

யாவரும் தம்மிடத் துள்ளவற்றை விட்டு இல்லாத பொருள்களையே நாட் டுவ தியற்கை. அவ்வாறே பிறவியியல் பாக நாம்பிறக்கும் அந்நாளேஏற்பட்டு, அநுபவித்தன்றி வேறெவ் வகையா னும் மாற்றிப் போக்கற் கியலாத வண் ணம் அமைந்துள்ள கேடும் பெருக்க மும் குறிதது அஞ்சுதலும் அகமகிழ் தலும், கேட்டை மாற்றி ஆக்கத் தையே விளைப்போமென முயற்சித்த லும் பயனில் செயலே யாமென வுண்மை தேறி, அவ்வக்காலங்களிற் றத்தங் கடப்பாடுகளை ஒழுங்குறப் புரிந்து செல்லத் துணிவுறும் செப்ப மும் திட்பமுமுடைய மன அமைதி யொன்றே நம்பாலிதுகாறுமில்லாதது. ஆகலின் அதனையே தேடற்குப் பல் லாற்றானு முயற்சிப்பா மெனக் கருது தலே சான்றோர்க்கணியாம் எனக் கூறினர் என்க.

இம்மைக்கும் மறுமைக்கும் ஏற்ற பெரும்பயன் இவ்வுள்ளச் செம்மை ஒன்றாலேயே விளையுமாகலின் இஃது முதலில் வைத்தோதப்பட்டது.

சான்றோ ரியல்பு ஈதேயாம் எனப் பெரியபுராணத்தில் அருண்மொழித் தேவரும் அடியார் பெருமை கூறு மிடத்தில்,"கேடும் செல்வமும்கெட்ட திருவினார்" எனவும், பிரபுலிங்கலீலை ஆசிரியரும,

'கேடும் செல்வமும் கீர்த்தியும் நிந்தையும்
வேறற நோக்குதல்.................
கூடுந்தனமை கொளுமனம் நன்மனம்'

என்றுங் கூறிப்போந்தனர்.

சைவ சித்தாநதத்தில

ஒப்பு எனக் கூறப்படும் சிறந்த பக்கு வமு மிஃதே. இவ் விருவினையொப்பு உண்டாய வழியே மலபரிபாகம், சத் திநிபாதம் முதலிய வீடுபேற்றிற்கு முன் றோன்றும் காரண காரியங்கள் ஒருதலையா னெய்துவன. ஆசிரியர் கருத்திதுவா யின்மையானே, ஒரு பாற் கோடாது வழக்குரைக்கும் அவ ரதுலக ஒழுக்கம் பிற்கூறப்பட்டது.

துறவற நெறிக்குரிய இருவினை ஒப் புத் தன்மையை நடுவுநிலைமை கூறும் இல்லற வியலில் ஓதியது சாலாதெ னின், நன்று சொன்னாய்! 'ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல்' என் னும் உத்திகொண்டு ஆசிரியர் அங்ங னங் கூறுதல் இயல்பென்க. இங் ஙனமே,

"ஒருமையு ளாமைபோல் ஐந்தடக்க லாற்றின்
எழுமையு மேமாப் புடைத்து"

எனவும்,

"நிலையிற் றிரியா தடங்கியான் றோற்றம்
மலையினு மாணப் பெரிது"

என்றும், துறவுக்குரிய ஐந்தவித்

தொழுகு முறையினையும் அடக்க முடைமை அதிகாரப்பட்ட வழி இல்லற வியலில் வைத்தோதியதூஉங் காண்க.

முறைப்பட இல்லற நெறியில் வழா தொழுகுவோர்க்கே துறவு நெறியுங் கைவந்து பயன் பெறுதல் கூடுமெனக.

"காமஞ் சான்ற கடைக்கோட் காலை......
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே"

என்ற தொல்காப்பியனாருக்கு மிதுவே கருத்தாதலாலு மறிக. ஆதலின், இல்லற நெறிக்கே புரிந்தெனவரையறை செய்யப் படாதனவாய்த் துறவு நெறிக்கும பயன் படும் பொதுவாய அறங்கள், இவ் விரண்டையும் தனித் தனிக் கூறும இயல்களுள் அமயம் நேர்ந்துழி எவ் விடத்தேனுங் கூறுதற் குரியவெனக் கண்டோம். இனி இதில ஐயுறவில்லை. இவ்வாறு கேடும பெருக்கமும் ஒரு நிகரனவென வுண்மை கண்டோருள் ளம் என்றும் துன்பங்காணுது இன் பத்தையே துய்க்குமாற்றல் அவர்க் கும் கேடு ஒரு குறைவாகத் தோன் ருது. உயர்ந்தோரும் அவரது தகுதி யின் மேன்மையை நன்குணர்ந்து நன்கு மதிப்பார்களாதலின் பிறர்க்கும் இழிவுகாட்டாது பெரும் பேருகவே முடியும். நடுவு நிலைமையிற் றிறம்பி ஆக்கம்பெறற்கு முயல்வார்க்குஊழின் உதவி யில்வழி அது கூட்டாமையே யன்றி அத்தீய பண்பால கேடும வரு விக்கப் படுதல் ஒருதலையே யாகலின் நல்லோர்க்கும் அல்லோர்க்கும் நடுவு நிலைமை விழுமிய பயனை வருவிக்கு மெனத் தெரிவித்தற்கே,

"கெடுவல் யான் என்பதறிக......"

"கெடுவாக வையாது லகம்......"

என்னும் இரு குறட்களையும் இடைப் பெய்தமைத்தனெனக.

உண்மை இவ்வாறுதலின் இல்லறம பற்றி ஒழுகுந தலைமைப் பாடுடை யோர், இருவர் வாதிகளின் வழக்கி னும நீதி நேர்நதுண்மை கூறுக. பரி தனை முதலியன வேட்டோ அன்றித் தமர் தம நண்பர்க்கு நண்பர், தீமக்கு வேண்டியோரால் கண்ணோட்ட முடை யர் எனப் பல காரணஙகளில் ஒன்று கொண்டே, வழககல்லா வழக்கை யுரைத்தல் ஆடாது எனக் கூறியது "சமன் செய்து என்னுங் குற ளென்க.

இதுகாறுங் கூறிப்போநத வாற்றால் நறகுணங்களெல்லாம் நிரமபிய சான் றோர்க்கு அழகும மதிப்புநதரும் பேரணிகள் இரண்டுள. ஒன்று இருவி னைப்பயனைத் துன்பஇன்பங்கள் முன் அமைநதபடி எய்துவன வெனப் புறக் கணித்து அவற்றைக் குறித்துத் துன் புறலும இனபமடைதலுமிலராய் ஒரு நிலைமைப் பட்ட உள்ளத்தினராதல், மற்றொன்று, உலகியல்புகளில், கோடி கொடுப்பினும் தம்முடைய நாக்கோடா மல் உண்மை ஒதி வழக்குத் தீர்த்தல் என்றும, இவ்வாறன்றி ஓரங் கூறிப் பொருளீட்டுவானேல் அத்தீவினை தீய பயனதே விடுமாகலின் தப்பாது கேடு தருதலானும, ஒருகால் நடு நிலைமை யுடையார்க்கும் கேடு வருமே எனின் அது கேடாக அவரும கொள்ளார். உயர்நதோரும இகழாது செல்வத்தோ டொக்கு மென மதிப்பர் ஆகலானும் இல்லற துறவறங்கட்குப் பொதுப்பட நிற்கும நடுவு நிலைமையின் முன் னோதிய அணி சாலச் சிறப்புடைய தென்றும், பின்னது இல்லறப்பாங்கிற் குரித்தாய் மறுமைக்கும் பயன்றரும் காரணமாய் அமைவதா மென்றும் அறிகின்றோம.

# திருவிழாவில் சமயபோதனை

1. திருநாவுக்கரசு 'வாமிகள் திருவவதாரத் தலமாகிய திருவாமூரில் சித்திரைச் சதயத்தன்று ஒரு பெருங் கூட்டம திரு வி. கலியாணசுந்தர முதலியாரவர்கள் தலைமையில் கூடிற்று. சமாஜக் காரியதரிசியும், திரு. ச சச்சிதாநந்தம் பிள்ளையவர்களும் அப்பா சுவாமிகள் சரித்திரம், தேவாரம் முதலியவற்றைப்பற்றிச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினர் அப்பர் சுவாமிகள் தேவாரம் சமாஜத்தின் புதிய சுத்தப்பதிப்பு ஊர்வலமாகக் கொண்டுவரப்பட்டு வெளியிடப்பட்டது.

2. காஞ்சீபுரம் என வழங்கும் திருக்கச்சியேகம்பத்தில் நடைபெற்ற பிரஹ்மோத்ஸவத்தில் நமது சமாஜத்தின் சாரபில் எழாந்திருநாள் ஒன்பதாந்திருநாள் ஆகிய இரண்டு நாட்களிலும் முறையே "சேக்கிழார் கவிநயம்" "பதிபுண்ணியம்" எனும் பொருள்கள்பற்றி சமாஜத்து வெளியூர் நிர்வாக சபையினருள் ஒருவராகிய காவித்தண்டலம் - சைவத்திருவாளர் வேதாசல முதலியாரவாகள சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள்.

3. கூவம் என வழங்கும் திருவிற்கோலத்தில் நடைபெற்ற திருவிழாவில் நான்காம் நாள் ஐந்தாம் நாள் (4, 5–5–30) உத்ஸவங்களில் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள் தலைமையில் சமாஜக் காரியதரிசியார், திரு. பா. கந்தநரசிம்ஹம், திரு. கே. வைத்தியநாத முதலியார், திரு. அ. முத்துச்சாமி முதலியார், திரு. விஜய கந்தசாமி முதலியார், திரு. சு. வை. துரைசாமி முதலியார், திரு. சு. ரா. அண்ணாமலை முதலியாரவர்கள் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள். சமாஜத்தின் கிளைச்சபை யொன்று தாபிக்கப்பட்டது.

---

# அப்பர் சுவாமிகள் தேவாரம்

## சமாஜத்தின் சுத்தப்பதிப்பு வெளிவந்து விட்டது

பிரதி ஒன்றின் விலை அணு பத்து

ஐம்பது பிரதிகட்குக் குறையாமல் முன் பணம் கொடுத்து வாங்குவோருக்கு ரூபாய் ஒன்றுக்கு இரண்டணு வீதம் கழிவு தரப்படும். வி. பி.யில் பிரதிகளை அனுப்ப இயலாது. புத்தகங்களைப் பெற விரும்புவோர் புத்தகக் கிரயம், தபாற்கூலி, ரிஜிஸ்தர் செலவு, பார்சல் செலவு முதலியவற்றிற்குத் தேவையான தொகையைக் கீழ்க்குறித்த வண்ணம் முன் பண மாகவே அனுப்ப வேண்டும்.

கிரயம், தபாற்கூலி, ரிஜிஸ்தர், பார்சல் செலவுள்பட

| | | | |
|---|---|---|---|
| ஒரு புத்தகம் பெறுவதற்கு | ரூபா 1—0—0 | 5 புத்தகங்கள் பெறுவதற்கு | ரூபா 4 4 0 |
| 2 புத்தகங்கள் ,, | ,, 1 13 0 | 10 புத்தகங்கள் ,, | ,, 8 2 0 |

பத்து புத்தகங்கட்குமேலாயின் ரயில்வே பார்சலாகப் பெற்றுக்கொள்வதுதான் இலகுவான வழியாகும்.

இங்ஙனம் :

150, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை.
10—5—1930

ம. பாலசுப்ரஹ்மண்யம், காரியதரிசி.
சைவ சித்தாந்த மகா சமாஜம்.

---

சைவ சித்தாந்த மகா சமாஜத்தில்

## விற்பனைக்குரிய புத்தகங்களின் அட்டவணை

| | ரூ. | அ. |
|---|---|---|
| "சித்தாந்தம்" மலர் ஒன்று (பைண்டு பிரதி) ... | 2 | 0 |
| "சித்தாந்தம்" மலர் இரண்டு (பைண்டு பிரதி) ... | 2 | 0 |
| சுந்தரர் தேவாரம் ... ... | 0 | 4 |
| அப்பர் தேவாரம் ... ... | 0 | 10 |
| திருவாசகம் (கலிக்கா) ... ... | 0 | 4 |
| திருக்குறள் விளக்கம் - அறத்துப்பால். | 3 | 4 |
| ௸ பொருட்பால். | 4 | 8 |
| ௸ காமத்துப்பால். | 1 | 12 |
| ௸ தொகுப்புரை. | 0 | 8 |
| புலால்மறுத்தலுக்கு 50 காரணங்கள்... | 0 | 2 |
| சர்வமத சம்மதம் ... ... | 0 | 2 |
| திருநாளைப்போவார் தீக்குளித்ததேன். | 0 | 2 |
| நள்ளிரவில் நகர்க்காட்சி ... | 0 | 2 |
| கடவுள் ... ... | 0 | 2 |
| பண்மயத்த மொழிப்பாவை ... | 0 | 2 |
| சமயத்தின் சாரம் ... ... | 0 | 2 |
| சமய வளர்ச்சி ... ... | 0 | 2 |
| சுயமரியாதை சம்பாஷணை ... | 0 | 2 |
| திருஞானசம்பந்தர் (நாடகம்) ... | 0 | 8 |
| சைவப் பெரியார் தனிக்கூட்டத் தீர்மானங்கள் ... ... | 0 | 2 |
| சங்க நூல்களும் சைவமும் ... | 0 | 2 |
| சைவர் மகாநாடு, திருப்பாதிரிப்புலியூர். | 0 | 8 |
| அறுசமயப் பகுதி ... ... | 0 | 2 |
| அறுபத்துமூன்று நாயன்மார் சரித்திர உண்மை ... ... | 0 | 4 |
| சிவஞானபோதம் ... ... | 0 | 2 |
| அஷ்டப்பிரகரணம் ... ... | 3 | 0 |
| சிவார்ச்சனு சந்திரிகை ... ... | 1 | 8 |
| சைவபூஷணம் ... ... | 1 | 0 |
| சைவ சித்தாந்த பரிபாஷை ... | 0 | 8 |
| சிவஞான சித்தியார் மூலமும் பொழிப்புரையும் ... ... | 2 | 8 |
| சிவஞான போதச் சிற்றுரை விளக்கம் | 3 | 8 |
| சர்வஞானோத்தரம் ... ... | 1 | 8 |
| தசகாரிய விளக்கம் ... ... | 0 | 8 |
| The Grace of Lord Siva (ஆங்கிலத்தில்) ... ... | 0 | 4 |
| திருக்குறட் சாரம் ... ... | 0 | 8 |
| ௸ (கலிக்கோ) ... | 0 | 10 |
| ஆசார ஒழுக்கமுறை ... ... | 0 | 4 |
| சிவார்ச்சனைத் திருமந்திரம் ... | 0 | 1½ |

சுந்தரர் தேவாரம் மொத்தமாக வாங்குவோர்க்கு ரூபாய் ஒன்றுக்கு ஐந்து பிரதிகள் வீதம் கொடுக்கப்படும். மேற்கண்ட விலைகள் புத்தகக் கிரயம் மட்டுந்தான். தபாற்கூலி வேறு. பார்சல் செலவு, தபாற்கூலி, வி. பி. செலவு முதலியன வாங்குவோரே செலுத்தவேண்டும்.

மேலேகண்ட அட்டவணையிலுள்ள புத்தகங்கள் தேவையாயின், சமாஜ ஆண்டுவிழா முதலிய கூட்டங்கள் நடக்குமிடங்களிலும் பெறலாம்; கீழ்வரும் விலாசத்துக்கு முன்பணம் அனுப்பியும் பெற்றுக்கொள்ளலாம்.

ம. பாலசுப்ரஹ்மண்ய முதலியார், காரியதரிசி,
சைவ சித்தாந்த மகா சமாஜம்,
150, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை.

Printed at the Sadhu Press, 12, Ganapathi Mudali Street, Royapettah and Published by M. Balasubramania Mudaliar (Editor-in-charge) for the Saiva Siddhanta Maha Samajam, 150, Govindappa Naicken Street, G. T. Madras.